உ

கடவுள் துணை.

பிங்கலமுனிவர் இயற்றிய

பிங்கலந்தை என்னும்

# பிங்கல நிகண்டு

## மூலமும் உரையும்.

இதில்

வான் வகை, வானவர் வகை, ஐயர் வகை, அவனி வகை, ஆடவர் வகை, அநுபோக வகை, பண்பிற் செயலின் பகுதி வகை, மாப்பெயர் வகை, மரப்பெயர் வகை, ஒருசொற் பல்பொருள் வகை ஆகப் பத்துத் தொகுதிகள் அடங்கியுள்ளன.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1917

விலை ரூபா 2-8-0

உ

சிவமயம்.

# முகவுரை.

பிங்கல நிகண்டு என்பது பிங்கல முனிவர் என்னும் வித்வ சிரேஷ்டரால் இயற்றப்பட்ட நூல். இவர் ஆதி திவாகர மியற்றிய திவாகர முனிவர் புத்திரர். இப் பிங்கல முனிவர் சோழவம்சத்தில் உதித்தவரே யாயினும், துறவுபூண்டு தமிழ் நூல் ஆராய்ச்சியிலேயே தமது காலத்தைப் போக்கியவர். இவர் காலம் நச்சினார்க்கினியர் காலத்துக்கு முந்தியதென்பர்.

திவாகர முனிவர் இயற்றிய ஆதி திவாகரமானது மிக விரிவாய் அளவின்றிப் பரந்து கிடத்தலின், அவர் புத்திரராகிய ஷ்ரீ பிங்கல முனிவர் அதனைச் சுருக்கி வரையறுத்து இப் பிங்கல நிகண்டை இயற்றினர். இப் பிங்கல நிகண்டு சங்கமருவிய நூலா யிருப்பதோடு, ஏனைய நிகண்டுகளிலுள்ள பதங்களும், அவற்றிற்கு மேற்பட்ட பதங்களும், பல நூல்களாலும் உணரப்படும் பொருள்களும் அடங்கப்பெற்றது.

தொல்காப்பியம் நிலைபெற்றபின் அகத்தியம் இறந்து சிற்சில பகுதிகள் அருகி வழங்குதல்போல, இப் பிங்கலம் நிலைபெற்றபின் ஆதி திவாகரம் இறந்து சிற்சில தொகுதி குறைந்தும், அவற்றுள் சிற்சில பகுதிகள் இன்றியும் சிற்சில இடங்களில் அருகி வழங்குகின்றது.

இப் பிங்கல நிகண்டு தொல்காப்பியம் வழங்கிய காலத்து வழங்கி வந்ததென்பதும், நன்னூல் முதலிய நூல்கள் இதற்குப் பிற்பட்டு வந்தன வென்பதும் இந்நூலாலும், நன்னூலாலும் உணரப்பெறும்.

சேந்தன் திவாகரம் என்பது இடையிற் றோன்றிய ஓர் நூல்; இது ஆதி திவாகரமல்ல. சேந்தன் என்பவன் அம்பர் நகரத்து ஓர் சிற்றரசன். இவ்வரசன் விருப்பின்படி ஆதி திவாகரத்தை முதனூலாகக் கொண்டு செய்யப்பட்டமையால், இதற்குச் சேந்தன் திவாகரமெனப் பெயர் வழங்கி வருகிறது.

நிற்க, தமிழில் இலக்கிய இலக்கணம் கற்கப்புகுவோர் முன்பு கற்கவேண்டிய கருவிநூல் நிகண்டே. இந் நிகண்டுகள் பலவுள. அவை: திவாகர முனிவர் இயற்றிய ஆதி திவாகரம், கயாகரர் இயற்றிய கயாகரம், சேந்தன் இயற்றுவித்த சேந்தன் திவாகரம், பிங்கல முனிவர் இயற்றிய பிங்கல நிகண்டு, ஆண்டிப்புலவர் ஆசிரியப்பாவால் இயற்றிய ஆசிரிய நிகண்டு, மண்டலபுருடன் இயற்றிய சூடாமணி நிகண்டு, காங்கேயர் இயற்றிய உரிச்சொல் நிகண்டு முதலியன.

இவற்றுள், இப்போது அச்சிட்டு வழங்குவன சேந்தன் திவாகரம், சூடாமணி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு என்பனவே. பிங்கல நிகண்டு என்பது வெகு காலத்துக்குமுன் அச்சிடப்பட்டு, இப்போது அவ்வச்சுப் பிரதிகள் கிடைக்கக்கூடாமல் இருப்பதால், இந்நூலைப் பல திருத்தப்பாடுகளுடன் இப்போது அச்சிடலாயிற்று.

பிங்கல நிகண்டின்

# வகையறிதல்.

பிங்கல நிகண்டின்

# சூத்திர அட்டவணை.

| வகையின் எண். | வகையின் பெயர். | சூத்திரத் தொகை. |
|---|---|---|
| 1 | வான் வகை ... ... ... | 92 |
| 2 | வானவர் வகை ... ... | 220 |
| 3 | ஐயர் வகை ... ... ... | 135 |
| 4 | அவனி வகை ... ... | 278 |
| 5 | ஆடவர் வகை ... ... | 376 |
| 6 | அநுபோக வகை ... ... | 657 |
| 7 | பண்பிற் செயலின் பகுதி வகை ... | 552 |
| 8 | மாப் பெயர் வகை ... ... | 339 |
| 9 | மரப் பெயர் வகை ... ... | 381 |
| 10 | ஒரு சொற் பல் பொருள் வகை ... | 1091 |
| ஆ மொத்தம் வகை 10-க்குச் சூத்திரம் ... | | **4121** |

## குறிப்பு

இப்போது நடந்துவரும் ஐரோப்பிய யுத்தம் காரணமாகச் சீமையிலிருந்து அச்சுப்போடும் காகிதம் வராமையால் இதனை ரப் காகிதத்தில் அச்சிடும்படி நேர்ந்தது. இப் பதிப்பு விற்று முடிந்த பிறகு, அடுத்த பதிப்பு நல்ல கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்படும்.

மவர்திறத் தமைந்த வனுபோக வகையு
மவையவத் தடைத்த வாறு வியல்பிற்
பண்பிற் செயலிற் பகுதி வகையு
மாப்பெயர் வகையு மாப்பெயர் வகையு
மொருசொற் பல்பொரு ளோங்கிய வகையுமென்
றிருளற வீரைந் தாக்கி
மருளற வகுத்தனன் மதியினின் விரைந்தே.

(இதன் பொருள்.) இருங்கடல் உடுத்த இ மா நிலம் விளங்க அரும் பொருள் தெரித்த அகன் தமிழ் வரைப்பு இன் - மிக்க கடல் நீர் புடை சூழ்ந்த இந்தப் பெரிய நிலவுலகு விளங்கப் பெறுதற்கரிய அறம் - பொருள் - இன்பம் - வீடு என்னும் நான்கு பொருள்களையும் ஆன்மாக்களுக்குப் புலப்படுத்திய இடம் (பரந்த) தமிழ் வழங்கு மெல்லையின்கண்,

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்ற அனைத்து ஏ உரிச்சொற்கிளவி-இயற்சொலென்றும் திரிசொல்லென்றும் திசைச்சொல்லென்றும் வடசொலென்றுஞ் சொல்லப்பட்ட அவ்வளவினதே யுரிச்சொல்,

செய்யுட்கு அணிகலன் ஆதலின் - அது புலவரால் தொடுக்கப் படுஞ் செய்யுளுக்கு ஓராணிகலமாதலால்,

செந்தமிழ் நிலத்து வழக்கு ஒடு சிவணி தம் பொருள் வழாமல் இசைக்கும் இயற்சொல் - உரிச்சொல்லின் பாகுபாடாய்ச் செந்தமிழ் நிலத்தில் வழங்கும் வழக்காதற்குப் பொருந்திக் கொடுந்தமிழ் நிலத்துந் தம் பொருள் வழுவாம லுணர்த்து மியற்சொல்லும்,

ஒருபொருள் குறித்த வேறு சொல் ஆகியும் வேறுபொருள் குறித்த ஒருசொல் ஆகியும் இருபாற்று என்ப திரிசொல் கிளவி-ஒரு பொருளைக் கருதிய வேறுபெயர்ப் பல சொல்லும் பல பொருளைக் கருதிய ஒரு சொல்லுமா யிருவகைப்படுந் திரிசொல்லும்,

செந்தமிழ் சேர்ந்த திசைதொறும் திசைதொறும் தம் குறிப்பின திசைச்சொல்கிளவி-செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலந்தோறும் தாங்குறித்த பொருளை விளக்குந் திசைச்சொல்லும்,

வடவெழுத்து ஒருவி எழுத்து ஒடு புணர்ந்த சொல் தாமும் இதைந்தன வரின் உம் இயைந்தன வரையார் வடசொல் கிளவி - வடசொல்லுக்கே யுரியவெனப்படுஞ் சிறப்பெழுத்தினீங்கி யிருவகைப் படு மொழிகளுக்கும் பொதுவாகிய எழுத்தாலியன்ற சொல்லும் வட

வெழுத்தாலியன்ற வடசொல் சிதைந்து வந்தாலும் செய்யுளிடத்துப் பொருத்த முடையனவென்று களையாது புலவர் கொள்ளுஞ் சொல்லு மாகிய வடசொல்லுமென்ற,

அ நாற்சொல் திறம் அரில்தப முழுதும் - அந்த நான்கு சொற் களின் பாகுபாட்டிலுள்ள குற்றங்கள் நீங்க அச்சொற்கள் முற்றும் (அவ் வுரிச்சொல் ஆதலால்),

செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த பிங்கல முனிவன் என்னை தன் பெயர் நிறுவி விருப்புடன் விரிக்கும் காலை - சூரியன் வரத்தால் வந்த திவாகரமுனிவர் பெற்ற பிங்கலமுனிவனுனவன் பிங்கலம் என்று தன் பெயரைத் தன்னூலுக்குத் தந்து மக்களிடத்து அன்பு கூர்ந்து நூல் செய்யுங் காலத்தில்,

நிலைஇய வீறுசால் சிறப்பின் வான் வகையும் வானவர் வகையும் வானினும் மண்ணினும் வழங்கல் வழாத ஈனம் இல் ஐயர் இயல்புளி வகையும்-நிலைபெற்ற பெருமை மிக்க சிறப்பினையுடைய வான் வகை யும் வானவர் வகையும் வானுலகிலும் நிலவுலகிலும் தத்த நெறியி னின்று வழுவாத குற்றத்தினின்று நீங்கிய ஐயர் வகையும்,

அவனி வகையும் ஆடவர் வகையும் அவர் திறத்து அமைந்த அநுபோக வகையும் அவையவத்து அடைத்த ஆகுை இயல்பின் பண்பின் செயலின் பகுதி வகையும் மாப்பெயர் வகையும் மரப்பெயர் வகையும் ஒருசொல் பல்பொருள் ஓங்கிய வகையும் என்று இருள் அற ஈரைந்து ஆக்கி - அவனி வகையும் ஆடவர் வகையும் அவ் வாடவர் பாகுபாட்டி லமைந்த அநுபோக வகையும் தன தகத்து உள்ள நல் வகையும் முதலிய உறுப்புகளாகச் செறித்தலினின்று நீங்காத இயல் பினையுடைய பண்பிற் செயலிற் பகுதி வகையும் மாப்பெயர் வகை யும் மரப்பெயர் வகையும் ஒருசொற் பல்பொருள் வகையுமென்று ஐயமறப் பத்து வகைகளாகப் பகுத்து அமைத்து,

மதியினின் விரைந்து மருள் அற வகுத்தனன் - தனது நுண் ணறிவால் விரைந்து ஆராய்வோர்க்குத் திரிபற இந்நூலை வகுத் தமைத்தனன் என்க.

(விசேஷ உரை.) உலகு புறப்பாட் டெல்லையாதலால் 'இம்மா நிலம்' எனவும், ஆன்மாக்க ளடைதற்குரிய பொருள்கள் அற முத லிய பொருள்கள் ஆதலால் 'அரும்பொருள்' எனவும், கிழக்கே கட லும் தெற்கே குமரியாறும் மேற்கே குடகநாடும் வடக்கே திருவேங் கடமுமாகிய இந்நான்கும் தமிழ் வழங்குதற்குரிய அகப்பாட் டெல்

லைகளாதலால் தொகுத்துத் 'தமிழ் வரைப்பின்' எனவும், இயற்சொல்
முதலிய நான்கும் செய்யுட்கு உரிமைபூண்டு நிற்றலால் 'உரிச்சொல்
கிளவி' எனவும், செய்யுளீட்டுதற்குரிய சொல் அதுவாதலால் 'அனை
த்தே செய்யுட் கணிகல னாதலின்' எனவும், வையையாற்றின் வடக்
கும் மருதயாற்றின் றெற்கும் கருவூரின் மேற்கும் தமிழ் வழங்கும்
நிலங்களாதலால் 'செந்தமிழ் நிலத்து' எனவும், கொடுந்தமிழ் நிலத்
துஞ் சென்று தத்தம் பொருள்களை அந்நிலத்தி லுள்ளோர்க்கு
வழுவா துணர்த்துதலால் 'தம்பொருள் வழாம லிசைக்கும்' எனவும்,
திரிசொற்போலாது கற்றோர்க்கன்றி யேனையோர்க்கும் பொருள்
விளங்கிநிற்றலால் 'இயற்சொல்' எனவும், ஒரு பொருள் கருதியும்
வேறு பொருள் கருதியும் வருந் திரிசொல்: கிளி - கிள்ளை, மயில் -
மஞ்ஞையெனத் திரியும் உறுப்புத்திரியும், மலை - விண்டு, விலங்கல்
எனத் திரியும் முழுதுந் திரியும் என இருவகைப்படுதலால் இவற்
றைத் 'திரிசொற் கிளவி' எனவும், கொடுந்தமிழ் வழங்கும் நிலம் செந்
தமிழ் வழங்கும் நிலத்தைச் சேர்ந்ததாதலால் 'செந்தமிழ் சேர்ந்த' என
வும், கொடுந்தமிழ் வழங்கு நிலங்கள்: பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்
பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு,
பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவாவடதலை யெனப் பன்னிர
ண்டு வகைப்படுதலால் 'திசைதொறுந் திசைதொறும்' எனப் பன்மைப்
பொருள்பட வடுக்கியும், எழுத்து என்றது ஆரியத்திற்குந் தமிழிற்
கும் பொதுவெழுத்தெனவும், அது - மேரு, மணி முதலிய போல்
வனவும் என்பார் 'வடவெழுத் தொரீஇ, எழுத்தொடு புணர்ந்த' என
வும், வடசொற் சிதைந்து வருதலுமன்றிப் பாகதமாய்ச் சிதைந்து
வருவனவும் உளவாதலால் 'சிதைந்தன வரினும்' எனவும், பிங்கலனாற்
செய்யப்பட்டது பிங்கலமாதலால் 'பிங்கல முனிவனெனத் தன்பெ
யர் நிறீஇ' எனவும், ஏனைப் பூதங்கள் தோன்ற நிலைபெறுதலால்
'நிலைஇய வீறுசால் சிறப்பின்' எனவும், இவ்வகைகள் ஒன்றோ
டொன் றியையுடைமையில் இடைநிலைத் தீவகமாக 'இயல்புளி'
எனவும், முன்னுள்ள திவாகரம் பாகுபாடில்லாமல் கற்போர்க்கு ஐய
முந் திரிபும் விளைத்தலால் 'இருளற மருளற' எனவும், எந்நிகண்
டின் பொருளும் இந்நிகண்டினுட்பட வகுத்தமையால் 'மதியினின்
வகுத்தனன்' எனவுங் கூறினார்.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

உ

பரமபதி துணை.

# பிங்கல நிகண்டு

## மூலமும் உரையும்.

---

முதலாவது

## வான்வகை.

---

### சுவர்க்கத்தின் பெயர்.

1. பொன்னுலகுந் துறக்கமும் புத்தே ளுலகும்
விண்ணுலகு மேலை யுலகும் விசும்பு
மன்னுலகு நாகமுங் கற்பமும் வானுலகும்
வியனுலகுந் தானமு முவணையுஞ் சுவவுஞ்
சுரிடமு முயர்நிலையுஞ் சுவர்க்கப் பெயரே.

சுவர்க்கத்தின் பெயர்:—பொன்னுலகு, துறக்கம், புத்தேளுலகு, விண்ணுலகு, மேலையுலகு, விசும்பு, மன்னுலகு, நாகம், கற்பம், வானுலகு, வியனுலகு, தானம், உவணை, சுவவு, சுரிடம், உயர்நிலை. (கசு)

### மேலேழுலகத்தின் பெயர்.

2. * பூலோகம் புவலோகஞ் சுவர்க்க லோகம்
மாலோகந் தவலோகம் பிரம லோகம்
சிவலோக மித்திறத்த மேலே ழுலகே.

மேலேழுலகத்தின் பெயர்:—பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், மாலோகம், தவலோகம், பிரமலோகம், சிவலோகம். (எ)

### மோக்ஷத்தின் பெயர்.

3. கேவலங் கைவலங் கதிசித்தி மோக்கம்.

மோக்ஷத்தின் பெயர்:—கேவலம், கைவலம், கதி, சித்தி. (ச)

---

* "பூலோகம் புவலோகம் சுவலோகம் மகாலோகம், சன லோகந் தவலோகம் சத்திய லோகமென, இத்திறத் தினவா மேலே ழுலகே" என்னும் பாடமும் உண்டு.

இதுவுமது.

4. அமுதம் பரஞ்சிவ முத்தியு மாகும்.

வீடு மோக்ஷத்தின் பெயர்:—அமுதம், பரம், சிவம், முத்தி. (௪) ஆக (அ)

ஆகாயத்தின் பெயர்.

5. வேணி விசும்பு வெளியும் பரிடம்
வானங் கோவிண் மண்டில மாசினி
மீமா கங்கம் வியோமம் புட்கரம்
வான்ககன நாக மங்குல் குண்டல
மண்ட முலக மம்பரங் குழைகுடி-
லந்தா மகல மாகாயப் பெயரே.

ஆகாயத்தின் பெயர்:—வேணி, விசும்பு, வெளி, உம்பர், இடம், வானம், கோ, விண், மண்டிலம், ஆசினி, மீ, மாகம், கம், வியோமம், புட்கரம், வான், ககனம், நாகம், மங்குல், குண்டலம், அண்டம், உலகம், அம்பரம், குழை, குடில், அந்தரம், அகலம். (உஎ)

வெளியின் பெயர்.

6. வெடிவயல் வெள்ளிடை விடியலும் வெளியே.

வெளியின் பெயர்:—வெடி, வயல், வெள்ளிடை, விடியல். (௪)

பகிரண்டத்தின் பெயர்.

7. அண்ட ரண்டம் பகிரண்ட மாகும்.

பகிரண்டத்தின் பெயர்:—அண்டரண்டம். (க)

அண்டகோளகையின் பெயர்.

8. கூடங் கடாக மண்டகோ ளகைப்பெயர்.

அண்டகோளகையின் பெயர்:—கூடம், கடாகம். (உ)

அண்டமுகட்டின் பெயர்.

9. மூதண்ட மண்ட முகட்டின் பெயரே.

அண்டமுகட்டின் பெயர்:—மூதண்டம். (க)

அண்டச்சுவரின் பெயர்.

10. பித்திகை யண்டச் சுவரின் பெயரே.

அண்டச்சுவரின் பெயர்:—பித்திகை. (க)

### திக்கின் பெயர்.

**11.** மாதிரந் திசைதிசை வம்பல் விசும்பே
யாசை புலமே யுலகுகோ காட்டை
யரிதம்ம் பரங்குப மனைத்துந் திக்கே.

திக்கின் பெயர்:—மாதிரம், திசை, திசை, வம்பல், விசும்பு, ஆசை, புலம், உலகு, கோ, காட்டை, அரிதம், அம்பரம், ககுபம். (கரு)

### எண்டிக்கின் பெயர்.

**12.** கிழக்குத் தென்கிழக்குத் தெற்குத் தென்மேற்கு
மேற்கு வடமேற்கு வடக்கு வடகிழக்கென்
றுகத் திக்கெட் டாகு மென்ப.

எண்டிக்கின் பெயர்:—கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு. (அ)

### கிழக்கின் பெயர்.

**13.** குணக்கே பூருவ மைந்திரம் பிராசி
கிழக்கின் பெயரே கீழ்த்திசையு மாகும்.

கிழக்கின் பெயர்:—குணக்கு, பூருவம், ஐந்திரம், பிராசி, கீழ்த்திசை. (ஐ)

### தெற்கின் பெயர்.

**14.** அவாசி தக்கண மியாமினியந் தெக்குச்
சிவேதை தென்னிவை தெற்கென லாகும்.

தெற்கின் பெயர்:—அவாசி, தக்கணம், யாமினியம், தெக்கு, சிவேதை, தென். (சு)

### மேற்கின் பெயர்.

**15.** மேக்குப் பச்சிமங் குடக்கிவை மேற்கே.

மேற்கின் பெயர்:—மேக்கு, பச்சிமம், குடக்கு. (௩)

### இதுவுமது.

**16.** வாருணம் பிரத்தி யக்கு மதுவே.

ஷை மேற்கின் பெயர்:—வாருணம், பிரத்யக்கு. (உ) ஆ (ஐ)

### வடக்கின் பெயர்.

**17.** உதக்கே யுதீசி யுத்தரம் பிங்கலம்
வடக்கின் பெயரே மதிதிசையு மாகும்.

வடக்கின் பெயர்:—உதக்கு, உதீசி, உத்தரம், பிங்கலம், மதிதிசை. (ஐ)

திசைநாற்கோணத்தின் பெயர்.

18. அந்தரா ளந்திசை நாற்கோண மாகும்.

திசைநாற்கோணத்தின் பெயர்:—அந்தராளம். (க)

எண்டிசைப்பாலர் பெயர்.

19. இந்திர னக்கினி யியம னிருதி
வருணன் வாயு குபேர னீசான
னென்றுகு மெண்டிசைப் பாலர் பெயரே.

எண்டிசைப்பாலர் பெயர்:—இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன். (அ)

எண்டிசையானைப் பெயர்.

20. ஐராவதம் புண்டரீகம் வாமனங் குமுத
மஞ்சனம் புட்பதந்தஞ் சார்வ பூமஞ்
சுப்பிரதீப மெண்டிசை யானைப் பெயரே.

எண்டிசையானைப் பெயர்:—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீபம். (அ)

அட்டமாநாகப் பெயர்.

21. அனந்தன் வாசுகி தக்கன் கார்க்கோடகன்
பதுமன் மகாபதுமன் சங்க பாலன்
குளிக னட்டமா நாகப் பெயரே.

அட்டமாநாகப் பெயர்:—அனந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன். (அ)

எண்டிசையோனிப் பெயர்.

22. கொடிபுகை சிங்கநா யிடபங் கழுதை
யானை காகமிவை யெண்டிசை யோனி.

எண்டிசையோனிப் பெயர்:—கொடி, புகை, சிங்கம், நாய், இடபம், கழுதை, யானை, காகம். (அ)

காற்றின் பெயர்.

23. அநிலம் வங்கூ ழரிபவ மானன்
சமீரணன் மருத்துச் சதாகதி சலனன்
வாடை வளியே மாருதம் வாயு
கோதை வாதங் கூதை வேற்றலங்
காலொலி பவன முயிர்கந்த வாகன்
பிரபஞ் சனன்மா பலனே பரிசன

ஆசுகன் கந்தவக னூதை காலிலி
விண்டு நீளி வந்து வுலவை
கொண்டல் கோடை யென்றிவை காற்றே.

காற்றின் பெயர்:—அநிலம், வங்கூழ், அரி, பவமானன், சமீரணன், மருத்து, சதாகதி, சலனன், வாடை, வளி, மாருதம், வாயு, கோதை, வாதம், கூதை, வேற்றலம், கால், ஒலி, பவனம், உயிர், கந்தவாகன், பிரபஞ்சனன், மாபலன், பரிசனன், ஆசுகன், சுந்தவகன், ஊதை, காலிலி, விண்டு, நீளி, வந்து, உலவை, கொண்டல், கோடை. (௩௪)

இதுவுமது.

**24.** நீலு மாலு நிழலியு முயிர்ப்புங்
கூதிரு மென்றே கூறற் பாற்றே.

ஷெ காற்றின் பெயர்:—நீல், மால், நிழலி, உயிர்ப்பு, கூதிர். (டு) ஆ (௩௯)

பனிக்காற்றின் பெயர்.

**25.** கூதிரு மூதையுங் குளிர்பனிக் காற்றே.

பனிக்காற்றின் பெயர்:—கூதிர், ஊதை, குளிர். (௩)

வடகாற்றின் பெயர்.

**26.** வாடை வடந்தை வடகாற் றாகும்.

வடகாற்றின் பெயர்:—வாடை, வடந்தை. (உ)

மேல்காற்றின் பெயர்.

**27.** கோடை மேல்காற்றே.

மேல்காற்றின் பெயர்:—கோடை. (க)

கீழ்காற்றின் பெயர்.

**28.** கொண்டல் கீழ்காற்றே.

கீழ்காற்றின் பெயர்:—கொண்டல். (க)

தென்றலின் பெயர்.

**29.** மந்தா நிலமே மலயக் காலே
தென்கால் வசந்தன் றென்றிசைத் தென்றல்.

தென்றலின் பெயர்:—மந்தாநிலம், மலயக்கால், தென்கால், வசந்தன். (ச)

சுழல்காற்றின் பெயர்.

**30.** சூறை வளியே சுழன்றெழு காற்றே.

சுழல்காற்றின் பெயர்:—சூறை, வளி. (உ)

இதுவுமது.

31. சூறா வளிசா ரிகையுஞ் சொல்லும்.
ஷை சுழல்காற்றின் பெயர்:—சூறாவளி, சாரிகை. (௨) ஆக (௬)

தசவாயுவின் வகைப்பெயர்.

32. பிராண னபான னுதானன் வியானன்
சமான னாகன் கூர்மன் கிருகரன்
றேவ தத்தன் றனஞ்சய னென்று
வாயு வீரைந் தாகு மிவைதாம்.

தசவாயுவின் வகைப்பெயர்:—பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன். (என்று - எண்ணிடைச்சொல்.) (௧0)

பிராணனென்பது.

33. இருதய மண்டலத் தியங்கும் பிராணன்.
பிராணனென்பது:—இருதயத்தியங்குவது.

அபானனென்பது.

34. உச்சத் தலத்திடை நிற்ப தபானன்.
அபானனென்பது:—* உச்சத்தலத்தில் நிற்பது.

உதானனென்பது.

35. நாபியி னின்றங் கோவாத துதானன்.
உதானனென்பது:—நாபியி னிலைபெற்று நிற்பது.

வியானனென்பது.

36. வியான னெங்கும் வியாபியா நிற்கும்.
வியானனென்பது:—சரீரமுழுதும் வியாபித்து நிற்பது.

சமானனென்பது

37. கந்தரசக் குழியிற் சந்திடைச் சமானன்.
சமானனென்பது:—கந்தரசக்குழியிற் சந்திடை நிற்பது.

நாகனென்பது.

38. முடக்கலு நீட்டலுங் கிளப்பது நாகன்.
நாகனென்பது:—முடக்கலு நீட்டலுங் † கிளக்கலுஞ் செய்விப்பது.

* உச்சம் - உச்சி. † கிளக்கல் - பேசுதல்.

கூர்மனென்பது.

39. உரோமம் புளகித் திமைப்பது கூர்மன்.
கூர்மனென்பது:—உரோமம் புளகித்து இமைப்பது.

கிருகரனென்பது.

40. கிருகர னென்பது முகத்திடைச் செழுமித்
தும்மலுஞ் சினமும் வெம்மையும் விளைக்கும்.
கிருகரனென்பது:— முகத்திடை நின்று தும்மலுஞ் சினமும் வெம்மையும் விளைப்பது.

தேவதத்தனென்பது.

41. ஒட்டமு மிளைப்பும் வியர்ப்புந் தேவதத்தன்.
தேவதத்தனென்பது:—ஒட்டமு மிளைப்பும் வியர்த்தலும் விளைப்பது.

தனஞ்சயனென்பது.

42. ஒல்கா வன்பி னல்லவர் கேண்மையி
னுயிருடல் விடினுந் தானுடல் விடாது
தொக்க நின்றங் குடலினை வீக்கித்
தலைகிழித் தகல்வது தனஞ்சய னாகும்.
தனஞ்சயனென்பது:—உயிர்களிடத்து நீங்காத அன்பினையுடைய நல்லவரோடு கொண்ட நட்பால் உயிர்போகினும் போகாது உடலினை வீக்கித் தலைகிழித் தகல்வது.

சத்தமருத்துக்களின் பெயர்.

43. குணக்குந் தெற்குங் குடக்கும் வடக்கு
மேலுங் கீழும் பலயோனி யுயிரு
மாகுஞ் சத்த மருத்துப் பெயரே.
சத்தமருத்துக்களின் பெயர்:—கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல், கீழ், பலயோனியுயிர். (எ)

நெருப்பின் பெயர்.

44. அழலு தாசன னங்கி தேயு
தழல்வசு வுதகவன் றனஞ்சயன் றழலி
கனலி யெழுநா வனலே முளரி
யனலெரி பாவகி கனலி கருநெறி
சுசி யாளி தபனன் சுடர்சிகி சோதி
தூம கேது வன்னி கனலன்

*பாவகன் சித்திர பானுவங் காரகன்*
*ஞெகிழிதீ யார னெருப்பின் பெயரே.*

*நெருப்பின் பெயர்:—அழல், உதாசனன், அங்கி, தேயு, தழல், வசு, உதகவன், தனஞ்சயன், சழலி, கனலி, எழுநா, அனலி, முளரி, அனல், எரி, அழலி, கனல், அரி, கருநெறி, சுசி, ஒளி, தபனன், சுடர், சிகி, சோதி, தூமகேது, வன்னி, சுவலன், பாவகன், சித்திரபானு, அங்காரகன், ஞெகிழி, தீ, ஆரல்.* (௩௪)

வடவாக்கினியின் பெயர்.

**45.** *வடவை தீத்திரண் மடங்கலூ ழித்தீ*
*கடையன லுத்தரம் வடவாக் கினிப்பெயர்.*

*வடவாக்கினியின் பெயர்:—வடவை, தீத்திரள், மடங்கல், ஊழித்தீ, கடையனல், உத்தரம்.* (௬)

விளக்கின் பெயர்.

**46.** *சுடருந் தீபமு மொளியும் விளக்கே.*

*விளக்கின் பெயர்:—சுடர், தீபம், ஒளி.* (௩)

அனற்பொறியின் பெயர்.

**47.** * *புலிங்கம் பொறியனல்.*

*அனற்பொறியின் பெயர்:—புலிங்கம்.* (௧)

அனற்றிரளின் பெயர்.

**48.** *உற்க மனற்றிரள்.*

*அனற்றிரளின் பெயர்:—உற்கம்.* (௧)

காட்டேரியின் பெயர்.

**49.** *தாவங் காட்டெரி வரையன லாகும்.*

*காட்டெரியின் பெயர்:—தாவம், வரையனல்.* (௨)

தீக்கடைகோலின் பெயர்.

**50.** *அரணி ஞெலிகோல் ஞெகிழிதீக் கடைகோல்.*

*தீக்கடைகோலின் பெயர்:—அரணி, ஞெலிகோல், ஞெகிழி.* (௩)

புகையின் பெயர்.

**51.** *தூமமு மரியுந் தூபமு மாவியு*
*மாகும் பெயரே புகையெண லாகும்.*

*புகையின் பெயர்:—தூமம், அரி, தூபம், ஆவி.* (௪)

---

* *"ஞெகிழி புலிங்கம் கங்கம் அனற்பொறி" எனவும் பாடம்.*

நறும்புகையின் பெயர்.

52. நறைகுய் வெடியே நறும்புகை யாகும்.

நறும்புகையின் பெயர்:—நறை, குய், வெடி. (௩)

அக்கினிதேவன் பெயர்.

53. சாத வேதா மைவா கனனே
தீபதி சித்திர பானு தனஞ்சயன்
றென்கீழ்த் திசையோன் றேயுவா யுசகன்
பாவக னக்கினிப் பண்ணவன் பெயரே.

அக்கினிதேவன் பெயர்:—சாதவேதா, மைவாகனன், தீபதி, சித்திர பானு, தனஞ்சயன், தென்கீழ்த்திசையோன், தேயு, வாயுசகன், பாவகன். (௯)

அக்கினிதேவன் பாரியின் பெயர்.

54. பாரி சுவாகா தேவி யாகும்.

அக்கினிதேவன் பாரியின் பெயர்:—சுவாகாதேவி. (க)

முத்தீயின் பெயர்.

55. காருக பத்திய மாகவ னீயந்
தக்கணாக் கினிய மிக்கமுத் தீயே.

முத்தீயின் பெயர்:—காருகபத்தியம், ஆகவனீயம், தக்கணாக்கினியம். (௩)

பஞ்சாக்கினியின் பெயர்.

56. இராகம் வெகுளி காமஞ் சடமே
தீபனம் பஞ்சாக் கினியின் பெயரே.

பஞ்சாக்கினியின் பெயர்:—இராகம், வெகுளி, காமம், சடம், தீபனம். (ரு)

நீரின் பெயர்.

57. ஆலமுஞ் சலமு மம்பு மறனும்
பாணியு மப்பும் பயமு முதகமும்
வயமு மயமும் வாரியும் விகடியும்
புனலுஞ் சலிலமும் புவனமு மளகமுஞ்
சீவனமும் பானியமுஞ் சிந்துமாங் குசமும்
வருணமு மம்பு மழையுங் கவந்தமுங்
கீலாலமு மேகமும் * மகிலமு மிகடியும்

* "வனமுங் கடியும்" எனவும் பாடம்.

2

நீரமுந் தோயமும் வாரும் பதமுங்
காரு மாரியுங் கமலமும் பயசுங்
கயமுஞ் சம்பரமுங் கம்மும் புட்கரமுஞ்
சீதமும் வசியுங் கோவுங் காண்டமுங்
கனவிர தமுஞ்சீ வனீயமு மலரு
நாரமு மமுதமு நீரென லாகும்.

நீரின் பெயர்:—ஆலம், சலம், அம், அறல், பாணி, அப்பு, பயம், உதகம், வயம், அயம், வாரி, விகடி, புனல், சலிலம், புவனம், அளகம், சீவனம், பானீயம், சிந்து, ஆம், குசம், வருணம், அம்பு, மழை, கவந்தம், கீலாலம், மேகம், அகிலம், இதடி, நீரம், தோயம், வார், பதம், கார், மாரி, கமலம், பயசு, கயம், சம்பரம், கம், புட்கரம், சீதம், வசி, கோ, காண்டம், கனவிரதம், சீவனீயம், அலர், நாரம், அமுது. (௫௰)

## மேகத்தின் பெயர்.

58. மாரியு மழையு மஞ்சு மாசுங்
காரும் புயலுங் கனமுங் கொண்டலும்
* வானுந் தாரா தரமுமையுஞ் சீதமுஞ்
சீவதமுஞ் செல்லுங் குயினுஞ் சீமூதமு
மெழிலியுங் கொண்மூவும் விளைவு முகிலும்
விண்ணுங் கந்தரமுஞ் சலதரமும் விசும்பு
மங்குலு மிளையு மாலுமம் புதமும்
விண்டுவு மென்றிவை மேகப் பெயரே.

மேகத்தின் பெயர்:—மாரி, மழை, மஞ்சு, மாசு, கார், புயல், கனம், கொண்டல், வான், தாராதரம், மை, சீதம், சீவதம், செல், குயின், சீமூதம், எழிலி, கொண்மூ, விளைவு, முகில், விண், கந்தரம், சலதரம், விசும்பு, மங்குல், இளை, மால், அம்புதம், விண்டு. (௨௯)

## இதுவுமது.

59. மூதிரம் பயோதரம் கதம்ப மெய்ப்பிரம்
அப்பிர மாயமு மப்பெயர்க் குரித்தே.

ஷை மேகத்தின் பெயர்:—மூதிரம், பயோதரம், கதம்பம், மெய்ப்பிரம், அப்பிரம், ஆயம். (௬) ஆக (௩௫)

## இடியேற்றின் பெயர்.

60. † வெடியொலி யுருமுகோ விண்ணே றசனி
செல்லிகுளி யிடியேறு மடங்கலு மாகும்.

---

* "வானும் நாரதமும்" எனவும், † "இருள்சத கோடிசென் மடங்கலு மிடியே" எனவும் பாடம்.

இடியின் பெயர்:—வெடி, ஒலி, உரும், கோ, விண்ணேறு, அசனி, செல், இகுளி, மடங்கல். (கூ)

மின்னலின் பெயர்.

61. சம்பை வித்துரு சபலை தடித்துச்
சஞ்சலை கனருசி தடியொளி மின்னல்.

மின்னலின் பெயர்:—சம்பை, வித்துரு, சபலை, தடித்து, சஞ்சலை, கனருசி, தடி, ஒளி. (அ)

மழையின் பெயர்.

62. மாரி வானம் வருட மழையெனல்.

மழையின் பெயர்:—மாரி, வானம், வருடம். (௩)

பெருமழையின் பெயர்.

63. ஆசாரம் பெருமழை யாகு மென்ப.

பெருமழையின் பெயர்:—ஆசாரம். (க)

விடாமழையின் பெயர்.

64. சோனையும் பனித்தலும் விடாது சொரிதல்.

விடாமழையின் பெயர்:—சோனை, பனித்தல். (உ)

தலைப்பெய்மழையின் பெயர்.

65. தளியுறை யாலி தலையல் தலைப்பெயல்.

தலைப்பெய்மழையின் பெயர்:—தளி, உறை, ஆலி, தலையல். (சு)

இதுவுமது.

66. * தலைப்பெயல் சோதகமும்.

ஷை தலைப்பெய்மழையின் பெயர்:—சோதகம். (க)

ஆலாங்கட்டியின் பெயர்.

67. ஆலி கரோபல மாலாங் கட்டி.

ஆலாங்கட்டியின் பெயர்:—ஆலி, கரோபலம். (உ)

இதுவுமது.

68. காகமு மாகும் மென்மனர் புலவர்.

ஷை ஆலாங்கட்டியின் பெயர்:—கரகம். (க) ஆ (௩)

* "துளியின் பெயரே சோதக மாகும்." எனவும் பாடம்.

மழைத்துவலையின் பெயர்.

69. சிதாம் பிதிரே சீகரஞ் சிதரே
தூவல் துமிதந் திவலை யும்மழைத்
துவலையின் பெயரெனச் சொல்ல லாகும்.

மழைத்துவலையின் பெயர்:—சிதரம், பிதிர், சீகரம், சிதர், தூவல், துமிதம், திவலை. (எ)

மழைவிடலின் பெயர்.

70. தூறலுந் தலையலுஞ் சோதகமு மழைவிடல்.

மழைவிடலின் பெயர்:—தூறல், தலையல், சோதகம். (ங)

ஏழு மேகவகைப் பெயர்.

71. சம்வர்த்த மாவர்த்தம் புட்கலா வர்த்தஞ்
சங்கா ரித்தந் துரோணங் காளமுகி
நீல வருண மேழ் மேகப் பெயரே.

ஏழுமேகவகைப் பெயர்:—சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம். (எ)

ஏழு மழைவகைப் பெயர்.

72. மணிநீர் பொன்பூ மண்கற் றீயென்
றெழுவகை மேகம் பொழிமாரி யேழே.

ஏழுமழைவகைப் பெயர்:—மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ. (எ)

வருணன் பெயர்.

73. சலபதி பாச தானதி கேள்வன்
வருபுனற் செல்வன் வருணன் பெயரே.

வருணன் பெயர்:—சலபதி, பாசதான், நதிகேள்வன், புனற்செல்வன். (ச)

வெள்ளத்தின் பெயர்.

74. பிரளய நீத்தம் வாரி வெள்ளம்.

வெள்ளத்தின் பெயர்:—பிரளயம், நீத்தம், வாரி. (ங)

இதுவுமது.

75. ஓதமும் பெருக்கு மாகலு மிரித்தே.

ஷை வெள்ளத்தின் பெயர்:—ஓதம், பெருக்கு. (உ) ஆக (கு)

பனியின் பெயர்.

76. இமமுந் துகினமு மஞ்சுநீ காரமும்
பனியின் பெயரே மந்தமும் பகரும்.

பனியின் பெயர்:— இமம், துகினம், மஞ்சு, நீகாரம், எமந்தம். (ரு)

நிறைபுனலின் பெயர்.

77. வழாறும் பிராறும் வாரியு நிறைபுனல்.

நிறைபுனலின் பெயர்:—வழாறு, பிராறு, வாரி. (௩)

நீந்துபுனலின் பெயர்.

78. அகாத மென்பது நீந்து புனலே.

நீந்துபுனலின் பெயர்:—அகாதம். (க)

தெளிந்தநீரின் பெயர்.

79. சற்சல மென்பது தெளிந்த நீரே.

தெளிந்தநீரின் பெயர்:—சற்சலம். (க)

கலங்கனீரின் பெயர்.

80. ஆவிலங் கலுழி யுடம்பை கலங்கற்புனல்.

கலங்கனீரின் பெயர்:—ஆவிலம், கலுழி, உடம்பை. (௩)

நீரோட்டத்தின் பெயர்.

81. கோல மென்பது கொடுநீ ரோட்டம்.

நீரோட்டத்தின் பெயர்:—கோலம். (க)

நீர்த்திரையின் பெயர்.

82. அறலுந் தரங்கமு மலையுங்கல் லோலமும்
புனலின் றிரைக்குப் பொதுப்பெய ராகும்.

நீர்த்திரையின் பெயர்:—அறல், தரங்கம், அலை, கல்லோலம். (ச)

இதுவுமது.

83. சிகர மென்பதுந் திரையின் பொதுவே.

ஷை நீர்த்திரையின் பெயர்:—சிகரம். (க) ஆ (ரு)

நீர்க்குமிழியின் பெயர்.

84. கொப்புள் மொக்குள் புற்புதங் குமிழி.

நீர்க்குமிழியின் பெயர்:—கொப்புள், மொக்குள், புற்புதம். (௩)

ஆழநீரின் பெயர்.

85. அழுந்துங் குண்டுங் கயமு மாழநீர்.
ஆழநீரின் பெயர்:—அழுந்து, குண்டு, கயம். (௩)

நீர்ச்சுழியின் பெயர்.

86. உந்தியுஞ் சுரியலு நீர்ச்சுழி யாகும்.
நீர்ச்சுழியின் பெயர்:—உந்தி, சுரியல். (௨)

நுரையின் பெயர்.

87. பேனமும் பேவு நுரையின் பெயரே.
நுரையின் பெயர்:—பேனம், பே. (௨)

பரிவேடத்தின் பெயர்.

88. ஊர்கோள் வட்ட மொளிகொண் மண்டிலம்
பரிதி விசயம் பரிவேட மாகும்.
பரிவேடத்தின் பெயர்:—ஊர்கோள், வட்டம், மண்டிலம், பரிதி, விசயம். (௫)

இந்திரவில்லின் பெயர்.

89. வானவில் லிந்திர வில்லென வைப்பர்.
இந்திரவில்லின் பெயர்:—வானவில். (௧)

காமகாண்டத்தின் பெயர்.

90. இரட்டைவில் காம காண்ட மாகும்.
காமகாண்டத்தின் பெயர்:—இரட்டைவில். (௧)

இருளின் பெயர்.

91. அல்லுந் திமிரங் கருளே கருவரி
கச்சள மந்த காரந் துவாந்த
நத்தந் தமமொடு துணங்கற விருளே.
இருளின் பெயர்:—அல், திமிரம், கருள், கருவரி, கச்சளம், அந்தகாரம், துவாந்தம், நத்தம், தமம், துணங்கறல். (௰)

பதினெண்கணத்தின் பெயர்.

92. அமரர் சித்த ரசுரர் தைத்தியர்
கருடர் கின்னரர் நிருதர் கிம்புருடர்
காந்தருவ ரியக்கர் விஞ்சையர் பூதர்
பசாச ரந்தரர் முனிவ ருரக

ஆகாய வாசியர் போகபூ மியரெனப்
பாகு பட்டன பதினெண் கணமே.

பதினெண்கணவகைப் பெயர்:—அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர். நிருதர், கிம்புருடர், காந்தருவர் இயக்கர், விஞ்சையர், பூதர், பசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசியர், போகபூமியர். (கஅ)

முதலாவது
வான்வகை முற்றிற்று.

ஆ சூத்திரம் கஉ.

இரண்டாவது

## வானவர்வகை.

### கணபதியின் பெயர்.

1. ஏக தந்த னிறைமக னேரம்ப
னாகு வாகன னைங்கரன் முக்கணன்
பார்ப்பதி புதல்வன் பாசாங் குசதர
னத்தி முகத்தோ னரிதிரு மருகன்
றந்திக் கடவு டான மும்மதன்
கங்கைசுதன் விநாயகன் கணபதி பெயரே.

கணபதியின் பெயர்:—ஏகதந்தன், இறைமகன், ஏரம்பன், ஆகுவாகனன், ஐங்கரன், முக்கண்ணன், பார்ப்பதிபுதல்வன், பாசாங்குசதரன், அத்திமுகத்தோன், அரிதிருமருகன், தந்திக்கடவுள், மும்மதன், கங்கைசுதன், விநாயகன். (கச)

### சிவன் பெயர்.

2. அரன்சிவ னரூபி யனந்த னுருத்திரன்
பரன்கறை மிடற்றோன் பார்ப்பதி கொழுநன்
கால காலன் பசுபதி கண்ணுத
லுணு வெண்குணன் சங்கர னந்தி
யாதி சசிதர னைம்முகன் பிஞகி
சோதி சம்பு சூலி பிஞ்ஞகன்
முக்கணன் விடையோன் முன்னவன் பிறப்பிலி
நக்கன் சடையோ னுயகன் சயம்பு
காம நாசன் பிதாகரு ணலயன்

றேவ தேவன் றிரிபு ராந்தகன்
மானிட மேந்தி பேயோ டாடி
மூத்தன் முதல்வன் சுத்தன் யோகி
வேத முதல்வ னாரி பாக
னாலமர் கடவுள் பவனே யநாதி
நீல கண்ட னிருத்தன் பூதேசன்
கங்கா தரன்மழு வாளி கபாலி
யங்கணன் கைலை யாளிகங் காள
னக்கா வார்த்தோ னழலாடி தற்பர
னித்த னிமல னீறணி கடவுள்
யானை யுரித்தோ னமலனா னந்தன்
வாம தேவன் மகேச்சுரன் சதாசிவன்
றிரியம்பகன் விமலன் சந்திர சேகரன்
மாலயற் கரியோ னாதனெண் டோளன்
ஞான மூர்த்தி நம்பன் பகவன்
வாமன் கிரீசன் வானு மாபதி
பூதபதி புண்ணியன் புலித்தோ லுடையோன்
மாதேவன் கொன்றை மாலையன் பித்த
னீச்சு ரனாச மில்லோ னிறைவன்
பாசுபதன் குன்ற வில்லிபாண் டரங்க
னீசன் பரமனு மெம்பிரான் பெயரே.

சிவன் பெயர்:—அரன், அரூபி, அனந்தன், உருத்திரன், பரன், கறைமிடற்றோன், பார்ப்பதிகொழுநன், காலகாலன், பசுபதி, கண்ணுதல், சாணு, எண்குணன், சங்கரன், நந்தி, ஆதி, சசிதரன், ஐம்முகன், பினாகி, சோதி, சம்பு, சூலி, பிஞ்ஞகன், முக்கண்ணன், விடையோன், முன்னவன், பிறப்பிலி, நக்கன், சடையோன், நாயகன், சயம்பு, காமநாசன், பிதா, கருணாலயன், தேவதேவன், திரிபுராந்தகன், மானிடமேந்தி, பேயோடாடி, மூத்தன், முதல்வன், சுத்தன், யோகி, வேதமுதல்வன், நாரிபாகன், ஆலமர்கடவுள், பவன், அநாதி, நீலகண்டன், நிருத்தன், பூதேசன், கங்காதரன், மழுவாளி, கபாலி, அங்கணன், கைலையாளி, கங்காளன், அக்கவார்த்தோன், அழலாடி, தற்பரன், நித்தன், நிமலன், நீறணிகடவுள், யானையுரித்தோன், அமலன், ஆனந்தன், வாமதேவன், மகேச்சுரன், சதாசிவன், திரியம்பகன், விமலன், சந்திரசேகரன், மாலயற்கரியோன், நாதன், எண்டோளன், ஞானமூர்த்தி, நம்பன், பகவன், வாமன், கிரீசன், வான், உமாபதி, பூதபதி, புண்ணியன், புலித்தோலுடையோன், மாதேவன், கொன்றைமாலையன், பித்தன், ஈச்சுரன், நாசமில்லோன், இறைவன், பாசுபதன், குன்றவில்லி, பாண்டரங்கன், ஈசன், பரமன், பிரான். (௩௫)

இதுவுமது.

3. அந்தி வண்ணன் காமாரி புராரி
யந்தகா ரிபர்க்கனென் றனந்தமீ சன்பெயர்.

ஈசன் பெயர்:—அந்திவண்ணன், காமாரி, புராரி, அந்தகாரி, பர்க்கன். (ரு) ஆ (௧00)

சிவனூர்திகோடியின் பெயர்.

4. ஊர்தியுங் கொடியு மிடபமென் றுரைப்பர்.

சிவனூர்திகொடிவகைப் பெயர்:—இடபம். (௧)

சிவன் படையின் பெயர்.

5. பாசஞ் சூலமும் பினாகவில் லும்படை.

சிவன் படையின் பெயர்:—பாசு, சூலம், பினாகவில். (௩)

சிவனெண்குணத்தின் பெயர்.

6. பவமின்மை யிறவின்மை பற்றின்மை பெயரின்மை
உவமை யின்மை யொருவினை யின்மை
குறைவிலறி வுடைமை கோத்திர மின்மையென்
றிறைவ னிடத்தி லெண்குண மிவையே.

சிவனெண்குணத்தின் பெயர்:—பவமின்மை, இறவின்மை, பற்றின்மை, பெயரின்மை, உவமையின்மை, ஒருவினையின்மை, குறைவிலறிவுடைமை, கோத்திரமின்மை. (அ)

சிவனைம்முகத்தின் பெயர்.

7. ஈசானந் தற்புருட மகோரம் வாமஞ்
சத்தியோ சாதஞ் சங்கர னைம்முகம்.

சிவனைம்முகத்தின் பெயர்:—ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம். (ரு)

சிவனிருப்பு முதலியவகைப் பெயர்.

8. இருப்பது கைலை தரிப்பது கங்கை
முடிப்பது கொன்றை யுடுப்பது சருமம்.

சிவனிருப்பு முதலியவகைப் பெயர்:—இருப்பது கைலை, தரிப்பது கங்கை, முடிப்பது கொன்றை, உடுப்பது சருமம்.

சிவபதநான்கின் பெயர்.

9. தானு ளுலகிருத் தறன்பா டிருத்தல்
தானும் பதம்பெற லுறு குதலென
நாலே சிவன்ற னல்லருட் பதமே.

சிவபதநான்கின் பெயர்:— * தானுலகிருத்தல், தன்பாடிருத்தல், தானும்பதம்பெறல், தானாகுதல். (ச)

சிவபூஜையியல்பின் பெயர்.

10. சரியை கிரியை யோக ஞானமென்
றிவையொரு நான்குஞ் சிவபூசை யியல்பே.

சிவபூசையியல்பின் பெயர்:—சரியை, கிரியை, யோகம், ஞானம். (ச)

சிவாகமநூற்பயன் பெயர்.

11. தர்மார்த்த காம மோக்கஞ் சிவாகமம்.

சிவாகமநூற்பயன் பெயர்:—தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம். (ச)

நந்தியின் பெயர்.

12. எருது விடையே றிடபம் புங்கவ
மிறைவா கனஞ்சிவ கணமுத னந்தி.

நந்தியின் பெயர்:—எருது, விடை, ஏறு, இடபம், புங்கவம், இறைவாகனம், சிவகணமுதல். (எ)

சிவனழித்த முப்புரத்தின் பெயர்.

13. பொன்னினும் வெள்ளியி னும்புக லிரும்பினு
மன்னமும் மதில்சிவ னழித்தமுப் புரமே.

சிவனழித்தமுப்புரத்தின் பெயர்:—பொன்மதில், வெள்ளிமதில், இருப்புமதில். (ந)

உமையின் பெயர்.

14. ஆரியை காமக் கோட்டி யம்பிகை
நாரி சத்தி நாயகி கௌரி
தேவி சாம்பவி தருமச் செல்வி
மலைமகள் சங்கரி மாதா வையை
பரையே யுருத்திரை பார்ப்பதி யந்தரி
நீலி கன்னி நிமலி குமரி
வேத முதல்வி விமலைமுக் கண்ணி
யமலை யிமய வதியபி ராணி
சமய முதல்வி தற்பரை மனோன்மணி
சிவையுமை யம்மை திருநாம மென்ப.

உமையின் பெயர்:—ஆரியை, காமக்கோட்டி, அம்பிகை, நாரி, சத்தி, நாயகி, கௌரி, தேவி, சாம்பவி, தருமச்செல்வி, மலைமகள்,

* இவற்றைச் சாலோக முதலிய முத்திகளாகக் கொள்க.

சங்கரி, மாதா, ஐயை, பரை, உருத்திரை, பார்ப்பதி, அந்தரி, நீலி, கன்னி, நிமலி, குமரி, வேதமுதல்வி, விமலை, முக்கண்ணி, அமலை, இமயவதி, அயிராணி, சமயமுதல்வி, தற்பரை, மனோன்மனி, சிவை, அம்மை. (நரு)

இதுவுமது.

15. அரனிடத் தவள்சக மீன்றவள் பவானி
யெமதன்னை புண்ணிய முதல்வி பெயரே.

ஷ உமையின் பெயர்:—அரனிடத்தவள், சகமீன்றவள், பவானி, அன்னை, புண்ணியமுதல்வி. (ரு)ஆ_(௧அ)

கங்கையின் பெயர்.

16. வரநதி சுரநதி மந்தா கினியுமை
கரநதி தசமுக நதிகங் காநதி
சிரநதி சிவன்சடை சேர்தெய்வ நதியே.

கங்கையின் பெயர்:—வரநதி, சுரநதி, மந்தாகினி, உமைகரநதி, தசமுகநதி, சிரநதி, தெய்வநதி. (எ)

முப்பத்திரண்டறத்தின் பெயர்.

17. ஆதுலர் சாலை யோதுவார்க் குணவறு
சமயத் தோர்க் குண்டி பசுவிற்கு வாயுறை
சிறைச்சோ றைய நடைதின் பண்ட
மறவைச் சோறு மகப்பெறு வித்தன்
மகவு வளர்த்தன் மகப்பால் வார்த்த
லறவைப் பிணஞ்சுடுத லறவைத் தூரியஞ்
சுண்ண நோய் மருந்து வண்ணார் நாவிதர்
கண்ணாடி காதோலை கண்மருந்து தலைக்கெண்ணெய்
பெண்போக மற்றும் பிறர்துயர் காத்த
றண்ணீர்ப் பந்தர் மடந்தடக் காவே
யாவுரிஞ் சுதறி விலங்கிற் குணவோ
டேறு விடுத்தல் விலைகொடுத் துயிர்விடுத்த
றன்னிலை யுயர்ந்த கன்னிகா தான
மிந்நான் கெட்டு மிறைவிசெய் தருமம்.

முப்பத்திரண்டறத்தின் பெயர்: — ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தோர்க்குண்டி, பசுவிற்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்

ணைய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தர், மடம், தடம், காவு, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கன்னிகாதானம். (௧௨)

### அறுமுகக்கடவுள் பெயர்.

18. குமரன் றெய்வ குஞ்சரி மணாளன்
சிலம்பன் முருகன் சேயே செவ்வேள்
கடம்பன் சாமி கார்த்தி கேயன்
சேந்தன் குறிஞ்சிக் கிழவன் செட்டி
காங்கேயன் கௌரி மைந்தன் கந்தன்
வேலன் வள்ளி கேள்வன் விசாகன்
தாரகாரி குகன்சர வணபவன்
மயில்வா கனனே வன்னிப் பூக்குமர
னாறிரு கரத்தோ னரிதிரு மருகன்
குழகன் கங்கை மைந்தன்குன் றெறிந்தோ
னறுமீன் காதல னசுரற் றடிந்தோன்
சேவலங் கொடியோன் றேவசே னாபதி
பாவகி யாசான் கலையறி புலவ
னரன்மகன் யானை முகவற் கிளையோ
னிளைய வறுமுகக் கடவுள் பெயரே.

அறுமுகக்கடவுள் பெயர்:—குமரன், தெய்வகுஞ்சரிமணாளன், சிலம்பன், முருகன், சேய், செவ்வேள், கடம்பன், சாமி, கார்த்திகேயன், சேந்தன், குறிஞ்சிக்கிழவன், செட்டி, காங்கேயன், கௌரிமைந்தன், கந்தன், வேலன், வள்ளிகேள்வன், விசாகன், தாரகாரி, குகன், சரவணபவன், மயில்வாகனன், வன்னிப்பூக்குமரன், ஆறிருகரத்தோன், அரிதிருமருகன், குழகன், கங்கைமைந்தன், குன்றெறிந்தோன், அறுமீன்காதலன், அசுரற்றடிந்தோன், சேவலங்கொடியோன், தேவசேனாபதி, பாவகி, ஆசான், கலையறிபுலவன், அரன்மகன், யானைமுகவற்கிளையோன். (௩௭)

### அறுமுகக்கடவுளூர்தியின் பெயர்.

19. ஆடும் யானையு மயிலு மூர்தி.

அறுமுகக்கடவுளூர்தியின் பெயர்:—ஆடு, யானை, மயில். (௩)

### அறுமுகக்கடவுள் படைகொடியின் பெயர்.

20. அயில்வே லரும்படை கொடிசேவ லாகும்.

அறுமுகக்கடவுள் படைகொடியின் பெயர்:—படை-வேல், கொடி-சேவல். (௨)

அறுமுகக்கடவுள் மாலையின் பெயர்.

21. நீபமுஞ் செச்சையு மாலை யாகும்.

அறுமுகக்கடவுள் மாலையின் பெயர்:—நீபம், செச்சை. (உ)

வீரபத்திரன் பெயர்.

22. உக்கிர னழற்கண் வந்தோ னுமைமகன்
முக்கணன் றக்கன் வேள்வி முனிந்தோ
னேக வீரியன் சடாதரன் வில்லி
யீசன் மைந்தன் கணபதிக் கிளையோ
னாயிர முகத்தோன் சிம்பு ளானோன்
பத்திரை கேள்வன் வீரபத் திரன்பெயர்.

வீரபத்திரன் பெயர்:—உக்கிரன், அழற்கண்வந்தோன், உமைமகன், முக்கணன், தக்கன்வேள்விமுனிந்தோன், ஏகவீரியன், சடாதரன், வில்லி, ஈசன்மைந்தன், கணபதிக்கிளையோன், ஆயிரமுகத்தோன், சிம்புளானோன், பத்திரைகேள்வன். (கங)

வைரவன் பெயர்.

23. கஞ்சுகன் மூவிலை வேலோன் காரி
முத்தன் கேத்திர பாலனிரு வாணி
சித்தன் ஞாளி யூர்தி கபாலி
வடுக னின்னவை வயிரவன் பெயரே.

வைரவன் பெயர்:—கஞ்சுகன், மூவிலைவேலோன், காரி, முத்தன், கேத்திரபாலன், நிருவாணி, சித்தன், ஞாளியூர்தி, கபாலி, வடுகன். (கo)

வைரவன் ஊர்தி, படையின் பெயர்.

24. வைரவ னூர்தி ஞமலிசூ லம்படை.

வைரவன் ஊர்தி-ஞமலி; வைரவன் படை-சூலம். (உ)

ஐயனார் பெயர்.

25. சாதவா கனன் கோழிக் கொடியோன்
சாத்தன் வெள்ளை யானை வாகனன்
காரிசெண் டாயுதன் கடனிற வண்ணன்
பூரணை கேள்வன் புட்கலை மணாள
னாரிய னறத்தைக் காப்போன் யோகி
யரிகா புத்திர னையன் பெயரே.

ஐயனார் பெயர்:—சாதவாகனன், கோழிக்கொடியோன், சாத்தன், வெள்ளையானைவாகனன், காரி, செண்டாயுதன், கடனிறவண்ணன்,

ணன், பூரணைகேள்வன், புட்கலைமணாளன், ஆரியன், அறத்தைக்காப்போன், யோகி, அரிகரபுத்திரன். (௩௩)

ஐயனார் ஊர்தி, கொடியின் பெயர்.

26. காரி யூர்தி காரிக் குதிரை
கோழிக் கொடியு மாகு மென்ப.

ஐயனார் ஊர்தி - காரிக்குதிரை; ஐயனார் கொடி - கோழிக்கொடி.

மாகாளியின் பெயர்.

27. குமரி சண்டிகை குண்டலி நீலி
வலவை பைரவி கௌமாரி மாதரி
மாயை வீரி மதங்கி யாமளை
சூரிவே தாளி கங்காளி யோகினி
சூலிசா முண்டி தார காரி
யாரியை தேவி வல்லணங் கையை
யலகைக் கொடியாண் மாலினி முக்கண்ணி
பதுமையெண் டோளி பத்திரி யாரணி
யாளி யூர்திமா காளி பெயரே.

மாகாளியின் பெயர்:—குமரி, சண்டிகை, குண்டலி, நீலி, வலவை, பைரவி, கௌமாரி, மாதரி, மாயை, வீரி, மதங்கி, யாமளை, சூரி, வேதாளி, கங்காளி, யோகினி, சூலி, சாமுண்டி, தாரகாரி, ஆரியை, தேவி, வல்லணங்கு, ஐயை, அலகைக்கொடியாள், மாலினி, முக்கண்ணி, பதுமை, எண்டோளி, பத்திரி, ஆரணி, யாளியூர்தி. (௩௧)

மாகாளி ஊர்தி, கொடி, படையின் பெயர்.

28. ஊர்தி சிங்க முயர்கொடி யலகை
சூலம் படையெனச் சொல்லப் படுமே.

மாகாளியின் ஊர்தி - சிங்கம்; மாகாளியின் கொடி - அலகை; மாகாளியின் படை - சூலம். (௩)

இடாகினியின் பெயர்.

29. வஞ்சனி மாயவள் வலவை யிடாகினி.

இடாகினியின் பெயர்:—வஞ்சனி, மாயவள், வலவை. (௩)

யோகினியின் பெயர்.

30. சன்மினி சூர்மகள் யோகினி பெயரே.

யோகினியின் பெயர்:—சன்மினி, சூர்மகள். (௨)

யோகினியின் கொடி, ஊர்தியின் பெயர்.

31. பேய்கொடி வாகன மோரி யாகும்.

யோகினியின் கொடி - பேய்; யோகினியின் ஊர்தி - ஓரி. (உ)

துர்க்கையின் பெயர்.

32. அந்தரி மகிடற் காய்ந்தா ளையை
விந்தையம் பணத்தி விசயையெண் டோளி
மாலுக் கிளையாள் பகவதி சயமகள்
பாலைக் கிழத்தி வீரச் செல்வி
கௌரிகாத் தியாயனி சக்க ராயுதி
யமரி குமரி யருங்கலை யூர்தி
சமரி கன்னி சயைவாட் படையாள்
சூலி யாரியை நீலி சண்டிகை
வெற்றி மேதித் தலைமிசை நின்றாள்
கொற்றவை நாரா யணிதுர்க்கை பெயரே.

துர்க்கையின் பெயர்:—அந்தரி, மகிடற்காய்ந்தாள், ஐயை, விந்தை, அம்பணத்தி, விசயை, எண்டோளி, மாலுக்கிளையாள், பகவதி, சயமகள், பாலைக்கிழத்தி, வீரச்செல்வி, கௌரி, காத்தியாயனி, சக்கராயுதி, அமரி, குமரி, கலையூர்தி, சமரி, கன்னி, சயை, வாட்படையாள், சூலி, ஆரியை, நீலி, சண்டிகை, மேதித்தலைமிசைநின்றாள், கொற்றவை, நாராயணி. (உக)

துர்க்கையின் படை, ஊர்தியின் பெயர்.

33. கைவாள் படைவா கனங்கலை யாகும்.

துர்க்கையின் படை-கைவாள்; துர்க்கையின் ஊர்தி - கலை. (உ)

காடுகாள் பெயர்.

34. காடுகாண் மோடி காரிதாய் கொற்றி
மாரி சூரி வடுகிமூ தணங்கே.

காடுகாள் பெயர்:— மோடி, காரிதாய், கொற்றி, மாரி, சூரி, வடுகி, மூதணங்கு. (எ)

சத்தமாதர்கள் பெயர்.

35. பிரமாணி நாரா யணிமா யேசுரி
கௌமாரி வாராகி யுருத்தி ராணி
யிந்தி ராணியென் றெழுவகை மாதர்.

சத்தமாதர்கள் பெயர்:—பிரமாணி, நாராயணி, மாயேசுரி, கௌமாரி, வாராகி, உருத்திராணி, இந்திராணி. (எ)

சத்தமாதர்கள் ஊர்தியின் பெயர்.

36. அன்ன மேறு விடையே யலகை
மஞ்ஞை களிறு கலுழ னூர்தி.

சத்தமாதர்கள் ஊர்தியின் பெயர்:—பிரமாணிக்கு அன்னம், வாராகிக்கு ஏறு, மாயேசுரிக்கு விடை, உருத்திராணிக்கு அலகை, கௌமாரிக்கு மஞ்ஞை, இந்திராணிக்குக் களிறு, நாராயணிக்குக் கலுழன். (எ)

சத்தமாதர்கள் படையின் பெயர்.

37. மறைதண்டு சூலம் பிஞகமெஃகம்
வச்சிர மாழி வன்படை யாகும்.

சத்தமாதர்கள் படையின் பெயர்:—பிரமாணிக்கு வேதம், வாராகிக்குத் தண்டு, உருத்திராணிக்குச் சூலம், மாயேசுரிக்குப் பிஞகம், கௌமாரிக்கு வேல், இந்திராணிக்கு வச்சிராயுதம், நாராயணிக்குச் சக்கரம். (எ)

விட்டுணுவின் பெயர்.

38. மாதவ னெடியோன் மாயவன் சநார்த்தனன்
சீதரன் பதும நாபன் றிருமால்
கொண்டல் வண்ணன் கோவிந்தன் முகுந்தன்
விண்டுவன மாலி வாமன் வாமனன்
றிரிவிக் கிரமன் றிருமறு மார்பன்
கேசவன் வரதன் முராரி யனந்தன்
காவற் கடவுள் காகுத்த னச்சுத
னரவணைச் செல்வ னறிதுயி லமர்ந்தோன்
சக்கரா யுதனே சார்ங்க பாணி
தண்கடல் வண்ணன் சலச விலோசன
னுலகினை யளந்தோ னுலக முண்டோன்
படிமுழு திடந்தோ னலகைமுலை யுண்டோன்
றமோ தரனே சௌரிமது சூதன
னாதி பீதாம் பரனே வராகன்
றிருமகள் பூமி கொழுநன் கண்ண
னுவண வூர்தி யுவண முயர்த்தோன்
பஞ்சா யுதன்பரந் தாமன் பகவன்
பூவை வண்ணன் புணரியிற் றுயின்றோன்
பிரமன் றந்தை பின்னை கேள்வன்
சங்க மேந்தி நார சிங்க
னிருடி கேசன் றசவவ தாரன்

குறள னெடுமால் வலவன் கரியோ
னுந்தி பூத்தோ னந்தகோ பாலன்
வாசு தேவன் றுளப மௌலிய
னனந்த சயனன் வைகுந்த நாத
னாயிரம் பெயரோ னரிமா லென்றிவை
நாரா யணன்றிரு நாம மாகும்.

விட்டுணுவின் பெயர்:—மாதவன், நெடியோன், மாயவன், சனார்த்தனன், சிதரன், பதுமநாபன், திருமால், கொண்டல்வண்ணன், கோவிந்தன், முகுந்தன், விண்டு, வனமாலி, வாமன், வாமனன், திரிவிக்கிரமன், திருமறுமார்பன், கேசவன், வரதன், முராரி, அனந்தன், காவற்கடவுள், காகுத்தன், அச்சுதன், அரவணைச்செல்வன், அறிதுயிலமர்ந்தோன், சக்கராயுதன், சார்ங்கபாணி, கடல்வண்ணன், சலசவிலோசனன், உலகினையளந்தோன், உலகமுண்டோன், படிமுழுதிடந்தோன், அலைகடலையுண்டோன், தாமோதரன், சௌரி, மதுசூதனன், ஆதி, பீதாம்பரன், வராகன், திருமகள்கொழுநன், பூமிகொழுநன், கண்ணன், உவணவூர்தி, உவணமுயர்த்தோன், பஞ்சாயுதன், பரந்தாமன், பகவன், பூவைவண்ணன், புணரியிற்றுயின்றோன், பிரமன்றந்தை, பின்னைகேள்வன், சக்கிரமேந்தி, நரசிங்கன், இருடிகேசன், தசவதாரன், குறளன், நெடுமால், வலவன், கரியோன், உந்திபூத்தோன், நந்தகோபாலன், வாசுதேவன், துளபமௌலியன், அனந்தசயனன், வைகுந்தநாதன், ஆயிரம்பெயரோன், அரி, மால், நாராயணன். (௬௧)

இதுவுமது.

39. அருந்தம னென்பது மாங்கவன் பெயரே.

ஷை விட்டுணுவின் பெயர்:—அருந்தமன். (௧)ஆ_(௭௦)

விட்டுணுவின் ஊர்தி, கொடியின் பெயர்.

40. ஊர்தி கருடனுங் கொடியு மதுவே.

விட்டுணுவின் ஊர்தி-கருடன்; விட்டுணுவின் கொடி-கருடன். (௧)

விட்டுணுவின் பஞ்சாயுதத்தின் பெயர்.

41. சக்கரந் தனுவா டண்டு சங்கம்
பற்றலர் மேல்விடும் பஞ்சா யுதமே.

விட்டுணுவின் பஞ்சாயுதத்தின் பெயர்:—சக்கரம், தனு, வாள், தண்டு, சங்கம். (௫)

அவற்றுள், விட்டுணுவின் சக்கரத்தின் பெயர்.

42. சக்கரஞ் சுதரிசனம்.

அவற்றுள், விட்டுணுவின் சக்கரத்தின் பெயர்:—சுதரிசனம். (௧)

### விட்டுணுவின் தனுவின் பெயர்.

43. தனுவே சார்ங்கம்.

விட்டுணுவின் தனுவின் பெயர்:—சார்ங்கம். (க)

### விட்டுணுவின் வாளின் பெயர்.

44. சயவா ணுந்தகம்.

விட்டுணுவின் வாளின் பெயர்:—நாந்தகம். (க)

### விட்டுணுவின் தண்டின் பெயர்.

45. தண்டுகௌ மோதகி.

விட்டுணுவின் தண்டின் பெயர்:—கௌமோதகி. (க)

### விட்டுணுவின் சங்கின் பெயர்.

46. சங்கு பாஞ்ச சன்னிய மாகும்.

விட்டுணுவின் சங்கின் பெயர்:—பாஞ்சசன்னியம். (க)

### அரியின் தசாவதாரத்தின் பெயர்.

47. மச்சங் கூர்மம் வராக நரசிங்கம்
வாமனன் பரசு ராம னிராமன்
பலபத் திரனே கண்ணன்வரு கற்கியென்
றிவையொரு பத்து மரியவ தாரம்.

அரியின் தசாவதாரத்தின் பெயர்:—மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி. (கo)

### ௸ மூவைந்தவதாரத்தின் பெயர்.

48. சனகன் சனந்தனன் சனாதன் சனற்குமார
னரநா ராயணன் கபில னிடப
னாரத னயக்கிரீவன் றத்தாத் திரேயன்
மோகினி வேள்வியின் பதியே வியாதன்
றன்வந் திரியே பௌத்த னென்றுங்
கின்னமூ வைந்து மரியவ தாரம்.

௸ மூவைந்தவதாரத்தின் பெயர்:—சனகன், சனந்தனன், சனாதன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, வேள்வியின்பதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன். (கரு)

பலராமனொழிய மற்ற மூர்த்தங்களின் பெயர்.

49. வெற்றிக் கலப்பைப் படையோ னொழியப்
புத்த னென்று புகலப் படுமே.

பலராமனொழிய மற்ற மூர்த்தங்களின் பெயர்:—புத்தன். (க)

திருமகளின் பெயர்.

50. பொருளின் செல்வி பொறியரிப் பிரியை
மலர்மக ளிந்திரை மாவே யிலக்குமி
கமலை யாக்கம் பதுமைசீ தேவி
தாக்கணங் கிளையா டண்கடற் பிறந்தாண்
மாறிரு மார்பினண் மாமறைத் தலைவி
செய்யாள் பூமக டிருமகள் பெயரே.

திருமகளின் பெயர்:—பொருளின்செல்வி, பொறி, அரிப்பிரியை, மலர்மகள், இந்திரை, மா, இலக்குமி, கமலை, ஆக்கம், பதுமை, சீதேவி, தாக்கணங்கு, இளையாள், கடற்பிறந்தாள், மாறிருமார்பினள், மறைத்தலைவி, செய்யாள், பூமகள். (கஅ)

பலபத்திரன் பெயர்.

51. இரேவதி கொழுநன் குண்டல னுரோகணி
தநய னீலாம் பரனலா யுத
னச்சுதன் முன்னோன் காம பால
னநந்தன் வெள்ளை காளிந்தி மர்த்தனன்
பனந்துசன் முசலி கருந்துகி லுடையன்
பலதே வன்பல பத்திரன் பெயரே.

பலபத்திரன் பெயர்:—இரேவதிகொழுநன், குண்டலன், உரோகணிதநயன், நீலாம்பரன், அலாயுதன், அச்சுதன்முன்னோன், காமபாலன், அநந்தன், வெள்ளை, காளிந்திமர்த்தனன், பனந்துசன், முசலி, கருந்துகிலுடையன், பலதேவன். (கசு)

பலபத்திரன் படை, கொடியின் பெயர்.

52. படையே கலப்பை கொடிபனை யாகும்.

பலபத்திரன் படை - கலப்பை; பலபத்திரன் கொடி - பனை. (உ)

காமன் பெயர்.

53. மான்மகன் மதனன் மகரக் கொடியோன்
வேனி லாளி வில்வேள் வசந்த
னங்கச னநங்க னைங்கணைக் கிழவன்

திங்கட் குடையோன் றென்றற் றேரோன்
வனசன் வில்லி மோகன் மாமலர்க் கணையோன்
மதிசக னிரதி காந்தன் மாரன்
மனோபவன் மனோசன் மனோபு மன்மதன்
திருமகன் மைந்தன் சம்பா சூதன
னுருவிலி கடன்முர சோன்கைதைச் சுரிகையன்
கந்தர்ப்பன் சித்தசன் பூவாளி பூமன்
கருப்பு வில்லி காமன் பெயரே.

காமன் பெயர்:—மான்மகன், மதனன், மகரக்கொடியோன், வேனிலாளி, வேள், வசந்தன், அங்கசன், அநங்கன், ஐங்கணைக்கிழவன், திங்கட்குடையோன், தென்றற்றேரோன், வனசன், வில்லி, மோகன், மலர்க்கணையோன், மதிசகன், இரதிகாந்தன், மாரன், மனோபவன், மனோசன், மனோபு, மன்மதன், திருமகன் மைந்தன், சம்பாசூதனன், உருவிலி, கடன்முரசோன், கைதைச் சுரிகையன், கந்தர்ப்பன், சித்தசன், பூவாளி, பூமன், கருப்பு வில்லி. (௧௨)

### காமன் ஊர்தி, கோடியின் பெயர்.

54. வாகனந் தென்றன் மகரங் கொடியே.

காமன் ஊர்தி - தென்றல்; காமன் கொடி - மகரம். (௨)

### காமன் வில், கணையின் பெயர்

55. கழையே வில்லுக் கணைமல ரைந்தே.

காமன் வில் - கழை; காமன் கணை - ஐவகைமலர். (௨)

### காமன் ஐங்கணையின் பெயர்.

56. வனசஞ் சூத மசோக முல்லை
குவளை காமன் கொளுங்கணை யே.

காமன் ஐங்கணையின் பெயர்:—தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, குவளை. (௫)

### காமன் ஐங்கணையின் செயலின் பெயர்.

57. உன்மத்த மதன மோகனஞ் சந்தாபம்
வசீகர ணம்மிவை மதன்கணைச் செயலே.

காமன் ஐங்கணையின் செயலின் பெயர்:—பெருமயக்கு, சிந்தாகுலம், புணர்ச்சிக்கிணங்குதல், மோகனம், சந்தாபம், வசீகரணம். (௬)

காமன் ஐங்கணையின் அவத்தையின் பெயர்.

58. சுப்பிர யோகமும் விப்பிர யோகமுஞ்
சோகமு மோகமு மரணமு மென்றிவை
யாகு மலர்க்கணை யைந்தி னவத்தை.

காமன் ஐங்கணையின் அவத்தையின் பெயர்:—சுப்பிரயோகம், விப்பிர யோகம், சோகம், மோகம், மரணம். (ரு)

அவற்றுள், சுப்பிரயோக மென்பது.

59. சுப்பிர யோகஞ் சொல்லா நினைவும்.

அவற்றுள், சுப்பிரயோகமென்பது:—பேசாதொழியாநினைவு.

விப்பிரயோக மென்பது.

60. விப்பிர யோகம் வெய்துயிர்த் திரங்கல்.

விப்பிரயோகமென்பது:—பெருமூச்செறிந்து வருந்துதல்.

சோக மென்பது.

61. சோகம் வெதுப்புத் துய்ப்பன தெவிட்டல்.

சோகமென்பது:—வெதும்பி யுணவு வெறுத்தல்.

மோக மென்பது.

62. மோக மழுங்கலு மொழிபல பிதற்றலும்.

மோகமென்பது:—அழுதலும் பிதற்றுதலும்.

மரண மென்பது.

63. மரண மயர்ப்பு மயக்கமு மாகும்.

மரணமென்பது:—உயிர்சோர்தலு மயங்குதலும்.

பிரமன் பெயர்.

64. அந்தணன் மலரோ னயனுன் முகத்தோ
னுந்தியில் வந்தோ னேதிம வாகனன்
பாரதி கொழுநன் படைப்போன் பகவ
னாரண னிரணிய கருப்பன் விரிஞ்சன்
வேதா விதாதா விதிசதா னந்தன்
றாதா பிதாமகன் சம்பு மான்மக
னெண்கணன் கமல யோனி பிரசாபதி
வேதன் கம்மிறை சூதன் பரமேட்டி
திசைமுகன் வானவர் முதுவன் போதன்
வானை யூரவன் மண்பொதுத் தந்தை
யனந்தன் ஞான னன்ன மூயர்த்தோ
னிறைவன் மறையோன் பிரமன் பெயரே.

பிரமன்பெயர்:—அந்தணன், மலரோன், அயன், நான்முகத்தோன், உந்தியில்வந்தோன், ஓதிமவாகனன், பாரதிகொழுநன், படைப்போன், பகவன், ஆரணன், இரணியசருப்பன், விரிஞ்சன், வேதா, விதாதா, விதி, சதானந்தன், தாதா, பிதாமகன், சம்பு, மான்மகன், எண்கணன், கமலயோனி, பிரசாபதி, வேதன், கம், இறை, சூதன், பரமேட்டி, திசைமுகன், வானவர்முதுவன், போதன், வரன், சுரவன், மண்பொதுத்தந்தை, அனந்தன், ஞானன், அன்னமுயர்த்தோன், இறைவன், மறையோன். (நக)

பிரமன் ஊர்தி, படை, கொடியின் பெயர்.

65. அன்ன மூர்தி யருட்படை பாச
மன்னிய கதைபடை கொடிமறை யாகும்.

பிரமன் ஊர்தி - அன்னம்; பிரமன் படை - பாசம், தண்டம்; பிரமன் கொடி - மறை. (௩)

நாமகளின் பெயர்.

66. பாரதி துய்யாள் பனுவ லாட்டி
வேத முதல்வி பிராமி விமலை
வாணி வெள்ளை நிறத்தினள் வாக்கா
ணான்முகன் கிழத்தி ஞானத் திறைவி
காயத் திரியே சாவித் திரியே
நற்பா மடந்தை நன்னூன் மடந்தை
யுலக மாதா நாமக ளிசைமகள்
கலைமகள் வெண்டா மரைமகள் கண்ணு
டொலையா வென்னுயிர்த் துணைவி பெயரே.

நாமகள் பெயர்:—பாரதி, துய்யாள், பனுவலாட்டி, வேதமுதல்வி, பிராமி, விமலை, வாணி, வெள்ளைநிறத்தினள், வாக்காள், நான்முகன்கிழத்தி, ஞானத்திறைவி, காயத்திரி, சாவித்திரி, பாமடந்தை, நூன்மடந்தை, உலகமாதா, இசைமகள், கலைமகள், வெண்டாமரைமகள், கண்ணுள், உயிர்த்துணைவி. (உக)

நாமகள் ஊர்தியின் பெயர்.

67. ஊர்தி பூர மாகு மென்ப.

நாமகள் ஊர்தியின் பெயர்:—பூரம். (க)

இந்திரன் பெயர்.

68. அமரா வதியோ னாயிரங் கண்ணன்
சதமகன் கோடரி போகிசங் கிரந்தனன்
பாக சாதனன் வச்சிரப் படையோன்

மேக வாகனன் விண்முழு தாளி
வாசவன் மகவான் வானவன் கௌசிக
னாகண் டலனயி ராவதன் வலாரி
புருகூதன் சக்கிரன் புரந்தரன் மருத்துவன்
மருகக் கிழவன் வரைசிற கரிந்தோ
னரிசசி வல்லவன் றிருமலி சுவர்க்கன்
வேள்வி நாயகன் புலவன் வேந்தன்
புரோகிதன் சுனாசி கரியவன் புனிதன்
காண்டா வனன்மால் வெள்ளை வாரணன்
றேவர் வேந்தன் பொன்னகர்ச் செல்வ
னைந்தரு நாத னிந்திரன் பெயரே.

இந்திரன் பெயர்:—அமராவதியோன், ஆயிரங்கண்ணன், சதமகன், கோபதி, போகி, சங்கிரந்தனன், பாகசாதனன், வச்சிரப்படையோன், மேகவாகனன், விண்முழுதாளி, வாசவன், மகவான், வானவன், கௌசிகன், ஆகண்டலன், அயிராவதன், வலாரி, புருகூதன், சக்கிரன், புரந்தரன், மருத்துவன், மருகக்கிழவன், வரைசிறகரிந்தோன், அரி, சசிவல்லவன், திருமலிசுவர்க்கன், வேள்விநாயகன், புலவன், வேந்தன், புரோகிதன், சுனாசி, கரியவன், புனிதன், காண்டாவனன், மால், வெள்ளைவாரணன், தேவர்வேந்தன், பொன்னகர்ச்செல்வன், ஐந்தருநாதன். (௩௯)

இந்திரன் தேவி பெயர்.

69. சுந்தரி சசியயி ராணிபு லோமசை
யைந்தருச் செல்வி யிந்திரன் றேவிபெயர்.

இந்திரன்தேவி பெயர்:—சுந்தரி, சசி, அயிராணி, புலோமசை, ஐந்தருச்செல்வி. (௫)

இந்திரன் மகன் பெயர்.

70. சயந்த னிந்திரன் றன்மக னாகும்.

இந்திரன் மகன் பெயர்:—சயந்தன். (க)

இந்திரன் நகரின் பெயர்.

71. ஆங்கவன் றிருநக ரமரா வதியே.

இந்திரன் நகரின் பெயர்:—அமராவதி. (க)

இந்திரன் யானையின் பெயர்.

72. ஓங்கிய வூர்தி வெள்ளையயி ராவதம்.

இந்திரன் யானையின் பெயர்:—அயிராவதம். (க)

இந்திரன் குதிரையின் பெயர்.

73. மெச்சிய பரிமா வுச்சைச் சிரவம். (க)
இந்திரன் குதிரையின் பெயர்:—உச்சைச்சிரவம்.

இந்திரன் படை, கொடியின் பெயர்.

74. வச்சிரம் படையே வண்கொடி யிடியாம். (உ)
இந்திரன் படை-வச்சிரம்; இந்திரன் கொடி-இடி.

இந்திரன் மண்டபத்தின் பெயர்.

75. மண்டபஞ் சயந்தம். (க)
இந்திரன் மண்டபத்தின் பெயர்:—சயந்தம்.

இந்திரன் மாளிகையின் பெயர்.

76. மாளிகை வசந்தம். (க)
இந்திரன் மாளிகையின் பெயர்:—வசந்தம்.

இந்திரன் பண்டாரத்தின் பெயர்.

77. பண்டா ரப்பெயர் பகரிற் சுதன்மம். (க)
பண்டாரத்தின் பெயர்:—சுதன்மம்.

இந்திரன் நந்தனவனத்தின் பெயர்.

78. அந்தண் கற்பகச் சோலைநந் தனவனம். (க
இந்திரன் நந்தனவனத்தின் பெயர்:—கற்பகச்சோலை.

இந்திரன் சேமநிதிப் பெயர்.

79. சேம நவநிதி. (க
இந்திரன் சேமநிதிப் பெயர்:—நவநிதி.

இந்திரன் கோவின் பெயர்.

80. கோக் காமதேனு. (
இந்திரன் கோவின் பெயர்:—காமதேனு.

இந்திரன் உணவின் பெயர்.

81. உணவ தமுதம். (
இந்திரன் உணவின் பெயர்:—அமுதம்.

இந்திரன் புனைவதின் பெயர்.

82. புனைவது கற் பகமலர். (
இந்திரன் புனைவதின் பெயர்:—கற்பகமலர்.

இந்திரன் அணிவதின் பெயர்.

83. அணிவது சிந்தா மணிசூ ளாமணி.

இந்திரன் அணிவதின் பெயர்:—சிந்தாமணி, சூளாமணி. (உ)

நாடகத்து அரம்பையர் பெயர்.

84. மேனகை யரம்பை யுருப்பசி திலோத்தமை
யான நால்வரு நாடகத் தரம்பையர்.

நாடகத்து அரம்பையர் பெயர்:—மேனகை, அரம்பை, உருப்பசி, திலோத்தமை. (௪)

தேவர் பொதுப்பெயர்.

85. வானவ ரமுதர் வரர்புத் தேளிர்
மேலவ ரிமையவர் விண்ணவர் கடவுள
ரமரர் புங்கவ ரைய ரிலேகர்
விபுதர் தீர்த்த ரசுரர்க் கமித்திர
ருயர்நிலை யோர்சுர ருமபர் புலவ
ரண்டர் முதல்வ ராதித்தர் சுவர்க்கர்
பொன்னுல குடையோர் தேவர் பொதுப்பெயர்.

தேவர் பொதுப்பெயர்:—வானவர், அமுதர், வரர், புத்தேளிர், மேலவர், இமையவர், விண்ணவர், கடவுளர், அமரர், புங்கவர், ஐயர், இலேகர், விபுதர், தீர்த்தர், அசுரர்க்கமித்திரர், உயர்நிலையோர், சுரர், உம்பர், புலவர், அண்டர், முதல்வர், ஆதித்தர், சுவர்க்கர், பொன்னுலகுடையோர். (உ௪)

முப்பத்துமுத்தேவர் பெயர்.

86. ஆதித்தர் பன்னிருவ ரச்சுவினிக ளிருவ
ரீசர் பதினொருவ ரெண்மர் வசுக்க
ளாக முப்பத்து மூவர்தம் பெயரே.

முப்பத்துமுத்தேவர் பெயர்:—ஆதித்தர் பன்னிருவர்; அச்சுவினிகள் இருவர்; ஈசர் பதினொருவர்; வசுக்கள் எண்மர். (ரு ரு)

அவற்றுள், ஆதித்தர் பன்னிருவர் பெயர்.

87. வைகத்தன் விவச்சுதன் வாசன்மார்த் தாண்டன்
பாற்கர னிரவி யுலோகப் பிரகாச
னுலோக சாட்சி திரிவிக் கிரம
னாதித்தன் திவாகரன் அங்கிச மாலி
யாகச் சூரியர் பன்னிரண் டென்ப.

அவற்றுள், ஆதித்தர் பன்னிருவர் பெயர்:—வைகத்தன், விவச்சுதன், வாசன், மார்த்தாண்டன், பாற்கரன், இரவி, உலோகப்பிரகா-

சன், உலோகசாட்சி, திரிவிக்கிரமன், ஆதித்தன், திவாகரன், அங்கிசமாலி. (௧௰)

அச்சுவினிகள் இருவர் பெயர்.

88. அச்சுவினி தேவ ரிருவர்தம் பெயரே
யாக முப்பத்து மூவர்தம் பெயரே.

அச்சுவினிகள் இருவர் பெயர்:—அச்சுவினிதேவர். (௨)

உருத்திரர் பதினொருவர் பெயர்.

89. மாதேவ னரனே யுருத்திரன் சங்கர
னீல லோகித னீசானன் விசயன்
வீம தேவன் பவோற்பவன் கபாலி
சௌமிய னேகா தசருருத் திரர்பெயர்.

உருத்திரர் பதினொருவர் பெயர்:—மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன். (௧௧)

அட்டவசுக்கள் பெயர்.

90. தரன்றுருவன் சோம னாபச் சைவ
னனல னணிலன் பிரத்தி யூசன்
பிரபாச னட்ட வசுக்கள் பெயரே.

அட்டவசுக்கள் பெயர்:—தரன், துருவன், சோமன், ஆபச்சைவன், அனலன், அணிலன், பிரத்தியூசன், பிரபாசன். (அ)

கடவுளர் பொதுப்பெயர்.

91. பண்ணவர் பகவர் தீர்த்தர்பட் டாரகர்
புங்கவ ரென்பவுங் கடவுளர் பொதுப்பெயர்.

கடவுளர் பொதுப்பெயர்:—பண்ணவர், பகவர், தீர்த்தர், பட்டாரகர், புங்கவர். (௫)

தெய்வத்தின் பெயர்.

92. சூரே யணங்கு கடவு டெய்வதந்
தேவுபுத் தேளியவு டெய்வ மாகும்.

தெய்வத்தின் பெயர்:—சூர், அணங்கு, கடவுள், தெய்வதம், தே, புத்தேள், இயவுள். (எ)

சுரர்மகளிர் பெயர்.

93. அரமகளிர் சூரர மகளி ரரம்பையர்
சுரர்மக ளிராமெனச் சொல்லப் பெறுமே.

சுரர்மகளிர் பெயர்:—அரமகளிர், சூரரமகளிர், அரம்பையர். (௩)

### தெய்வப்பெண் பெயர்.

94. அணங்குசூர் வஞ்சனை மாயவள் கன்னி
யிணங்கிய தெய்வப் பெண்பெய ராகும்.

தெய்வப்பெண் பெயர் :— அணங்கு, சூர், வஞ்சனை, மாயவள், கன்னி. (ரு)

### மூதேவியின் பெயர்.

95. கழுதை யூர்தி காக்கைக் கொடியாண்
முகடி தௌவை கலதிமூ தேவி.

மூதேவியின் பெயர்:—கழுதையூர்தி, காக்கைக்கொடியாள், முகடி, தௌவை, கலதி. (ரு)

### இதுவுமது.

96. சீர்கேடி கேட்டை கெடலணங் கேக
வேணி சேட்டை யென்ன விளம்புவர்.

ஃடி மூதேவியின் பெயர்:—சீர்கேடி, கேட்டை, கெடலணங்கு, ஏகவேணி, சேட்டை. (ரு)

### மூதேவி ஊர்தி, படை, கொடியின் பெயர்.

97. வாகனங் கழுதை வன்படை துடைப்பங்
காகங் கொடியெனக் கழறல் வேண்டும்.

மூதேவி ஊர்தி - கழுதை; மூதேவி படை - துடைப்பம்; மூதேவி கொடி - காகம். (௩)

### தருமதேவதையின் பெயர்.

98. மரகத வல்லி பூக நிழலினள்
பரம சுந்தரி யியக்கி பகவதி
யருகனைத் தரித்தா ளறத்தின் செல்வி
தருமதே வதையம் பாலிகை பெயரே.

தருமதேவதையின் பெயர்: — மரகதவல்லி, பூகநிழலினள், பரமசுந்தரி, இயக்கி, பகவதி, அருகனைத்தரித்தாள், அறத்தின்செல்வி, அம்பாலிகை. (அ)

### அருகன் பெயர்.

99. புண்ணிய னெண்குணன் பொன்னெயி லாதன்
பண்ணவன் பட்டா ரகனே முனைவ
னசோக மர் கடவுள் பகவன்முக் குடையோ
னறவாழி வேந்த னரியணைச் செல்வன்

பூமிசை நடந்தோன் வாதன் சினேந்திர
னென பிறவு மருகன் பெயரே.

அருகன் பெயர்:—புண்ணியன், எண்குணன், பொன்னெயிலுாதன், பண்ணவன், பட்டாரகன், முனிவன், அசோகமர்கடவுள், பகவன், முக்குடையோன், அறவாழிவேந்தன், அரியணைச்செல்வன், பூமிசைநடந்தோன், வாதன், சினேந்திரன். (கச)

அருகன் ஊர்தி, படையின் பெயர்.

100. அருக னூர்தி யம்புயம் படையே.

அருகன் ஊர்தி அம்புயம்; அருகன் படை-அம்புயம். (க)

அருகன் கொடியின் பெயர்.

101. நாடகக் காட்சி ஞானசீ லங்கொடி.

அருகன் கொடியின் பெயர்:—காட்சி, ஞானம், சீலம். (௩)

புத்தன் பெயர்.

102. பார்மிசை நடந்தோன் பகவன் புங்கவன்
றருமன் சாந்தன் முனிவன் வாமன்
புனிதன் சினன்வா னறிவன் பிடகன்
போதி வேந்தன் புத்தன் பெயரே.

புத்தன் பெயர்:—பார்மிசைநடந்தோன், பகவன், புங்கவன், தருமன், சாந்தன், முனிவன், வாமன், புனிதன், சினன், வான், அறிவன், பிடகன், போதிவேந்தன். (கங)

குபேரன் பெயர்.

103. இருநிதிக் கிழவ னியக்கர் வேந்தன்
வடதிசைத் தலைவ னரவா கனனே
யளகை யாளி யதிதனச் செல்வன்
சிரகத் தாரோன் வைச்சிர வணனே
யானுடைத் தோழன் கின்னரர் பிரானே
மாகதன் புட்பக வூர்தி பிங்கலன்
மந்திரி தனபதி குபேரன் றன்பெயர்.

குபேரன் பெயர்:—இருநிதிக்கிழவன், இயக்கர்வேந்தன், வடதிசைத்தலைவன், நரவாகனன், அளகையாளி, அதிதனச்செல்வன், சிரகத்தாரோன், வைச்சிரவணன், ஆனுடைத்தோழன், கின்னரர்பிரான், மாகதன், புட்பகவூர்தி, பிங்கலன், மந்திரி, தனபதி. (கரு)

குபேரன் வாகனத்தின் பெயர்.

104. நரவா கனமும் புட்பகத் தேரு
மவன்வா கனமா மறியுங் காலே.

குபேரன் வாகனத்தின் பெயர்:—நரவாகனம், புட்பகத்தேர். (உ)

இயமன் பெயர்.

105. இயமனரி யந்தகன் றென்றிசைக் கிழவன்
சமனே சண்டன் சண்பன் றருமன்
நமனே மறலி தண்ட தாரனே
சைமினி நகரோன் வைதரணி நதியோன்
செங்கோற் கடவு ளாசவ னடுவ
னிங்கிவை யமன்பெயர் கூற்று மிசைக்கும்.

இயமன் பெயர்:—இயமன், அரி, அந்தகன், தென்றிசைக்கிழவன், சமன், சண்டன், சண்பன், தருமன், நமன், மறலி, தண்டதரன், சைமினிநகரோன், வைதரணிநதியோன், செங்கோற்கடவுள், நாசவன், நடுவன், கூற்று. (கக)

இயமன் ஊர்தி, படையின் பெயர்.

106. எருமை யூர்தி யெறியு மொண்படை
தண்டு பாசந் தானு மாமே.

இயமன் ஊர்தி - எருமை; இயமன்படை - தண்டு, பாசம். (ங)

காலன் பெயர்.

107. சண்டன் மறலி கூற்றுச் சமனே
வந்த மடங்கல் கான்மறலு மிசைக்கும்.

காலன் பெயர்:—சண்டன், மறலி, கூற்று, சமன், மடங்கல், கால் மறல். (எ)

காலன் படையின் பெயர்.

108. துணிக்கும் வெம்படை கணிச்சி யாகும்.

காலன் படையின் பெயர்:—கணிச்சி. (ச)

அசுரர் பெயர்.

109. தானவர் அவுணர் தயித்தியர் கண்டகர்
மேனி காப்போர் தகுவர்கார் வண்ணர்
தேவர் பகைவர் திதிபுதல்வ ரசுரர்.

அசுரர் பெயர்:—தானவர், அவுணர், தயித்தியர், கண்டகர், மேனி காப்போர், தகுவர், கார்வண்ணர், தேவர்பகைவர், திதிபுதல்வர். (கூ)

மாவலியின் பெயர்.

110. வயிரோ சனனே மாவலி யவுணன்.

மாவலியின் பெயர்:—வயிரோசனன். (க)

நிருதர் பெயர்.

111. நிசாசரர் சால கடங்கடர் நிருதர்.

நிருதர் பெயர்:—நிசாசரர், சாலகடங்கடர். (உ)

அரக்கர் பெயர்.

112. அரக்க ரிராக்கதர் யாது தானவர்
நிசாசரர் பிசிதா சனரென நிகழ்த்துப.

அரக்கர் பெயர்:—இராக்கதர், * யாதுதானவர், நிசாசரர், பிசிதாச
னர். (ச)

கந்தருவர் பெயர்.

113. கந்தருவ ரியக்கர் யாழோர் காந்தருவர்
தந்திரர் கின்னர ரென்னச் சாற்றுவர்.

கந்தருவர் பெயர்: — இயக்கர், யாழோர், காந்தருவர், தந்திரர், கின்
னரர். (ரு)

வித்தியாதரர் பெயர்.

114. விஞ்சையர் கேசரர் வித்தியா தரர்பெயர்.

வித்தியாதரர் பெயர்:—விஞ்சையர், கேசரர். (உ)

வித்தியாதரர் இடத்தின் பெயர்.

115. சேணியும் விஞ்சைப் பதியுஞ் சேடியும்
யாணர் நகரும் வித்தியா தரரிடம்.

வித்தியாதரர் இடத்தின் பெயர்:—சேணி, விஞ்சைப்பதி, சேடி,
யாணர்நகர். (ச)

பூதத்தின் பெயர்.

116. சாதகம் பாரிடங் குறள்கூளி சாரதம்
மகோதரம் கிருத்திமங் கணம்பூ தப்பெயர்.

பூதத்தின் பெயர்:—சாதகம், பாரிடம், குறள், கூளி, சாரதம், மகோ
தரம், கிருத்திமம், கணம். (அ)

---

* யாது தானவர் எனச் சொல்வகை செய்து இருபெயராகக் கொள்ளலும் ஒன்று.

### பேயின் பெயர்.

117. கடிவே தாளங் கழுது கூளி
வெறியே யலகை பிசாசு மண்ணை
மயலே சோகு மருளே வியந்தரம்
பிரேத மழனே குணங்கு குணபாசி
பாசஞ் சாவு சவமே யள்ளை
குணபமும் பிணமும் பேய்பெயர் கூறும்.

பேயின் பெயர்:—கடி, வேதாளம், கழுது, கூளி, வெறி, அலகை, பிசாசு, மண்ணை, மயல், சோகு, மருள், வியந்தரம், பிரேதம், அழன், குணங்கு, குணபாசி, பாசம், சாவு, சவம், அள்ளை, குணபம், பிணம். (உஉ)

### சூரியன் பெயர்.

118. இரவி யினன்மணி யென்றூழ் செஞ்சுடர்
பரிதி தேரோ னெல்லோன் பானு
சண்ட னருக்கன் றபன னாதவ
னண்ட யோனி யாயிரங் கதிரோன்
கனலி திவாகரன் கனலோன் பாற்கர
னனலி யொளியோ னலரிமார்த் தாண்டன்
றினகரன் செங்கதி ரரிதிமி ராரி
யருணன் சூரன் ஞாயிறு சவிதா
பகலே பர்க்கன் வெயிலோ னாதித்தன்
விரிச்சிகன் விரோசனன் விகர்த்தனன் மித்திரன்
வெய்யோன் கதிரோன் வெஞ்சுடர் சோதி
பகலவ னெல்லை பதங்க னாதப
னழலவ னுதய னிருள்வலி பொழுது
பகவன் சான்றோன் வேந்தன் றபநன்
றரணி யெல்லி சாயா பதியே
பகலோன் விண்மணி பணிப்பகை கதிரவன்
சுடரோன் மாலி சூரியன் பெயரே.

சூரியன் பெயர்:—இரவி, இனன், மணி, என்றூழ், செஞ்சுடர், பரிதி, தேரோன், எல்லோன், பானு, சண்டன், அருக்கன், தபனன், ஆதவன், அண்டயோனி, ஆயிரங்கதிரோன், கனலி, திவாகரன், கனலோன், பாற்கரன், அனலி, ஒளியோன், அலரி, மார்த்தாண்டன், தினகரன், செங்கதிர், அரி, திமிராரி, அருணன், சூரன், ஞாயிறு, சவிதா, பகல், பர்க்கன், வெயிலோன், ஆதித்தன், விரிச்சிகன், விரோசனன், விகர்த்தனன், மித்திரன், வெய்யோன், கதிரோன், வெஞ்சுடர், சோதி, பகலவன், எல்லை, பதங்கன், ஆதபன், அழலவன், உதயன், இருள்வலி,

பொழுது, பகவன், சான்றோன், வேந்தன், தாபநன், தரணி, எல்லி, சாயாபதி, பகலோன், விண்மணி, பனிப்பகை, கதிரவன், சுடரோன், மாலி. (கூ௬)

சூரியமண்டிலத்தின் பெயர்.

119. விசய மென்பது வெங்கதிர் மண்டிலம்.

சூரியமண்டிலத்தின் பெயர்:—விசயம். (க)

சூரிய கிரணத்தின் பெயர்.

120. கரமே தீவிரங் கோகி ரணங்கதிர்.

சூரிய கிரணத்தின் பெயர்:—கரம், தீவிரம், கோ, கதிர். (ச)

வெயிலின் பெயர்.

121. கோடை யென்றா ழெல்லொளி வெயிலெனல்.

வெயிலின் பெயர்:—கோடை, என்றாழ், எல், ஒளி. (ச)

இதுவுமது.

122. ஆதவ மென்பது மப்பெயர்க் குரித்தே.

அடி வெயிலின் பெயர்:—ஆதவம். (க)

உதயத்தின் பெயர்.

123. விடியல் வைகறை புலரி யுதயம்.

உதயத்தின் பெயர்:—விடியல், வைகறை, புலரி. (ங)

கழிவுநாளின் பெயர்.

124. கழிவு நாளே காலி வைகல்.

கழிவுநாளின் பெயர்:—காலி, வைகல். (உ)

அந்தியின் பெயர்.

125. சந்தி மாலை சாய மென்றிவை
யந்தியின் பெயர்கோ தூழியு மாகும்.

அந்தியின் பெயர்:—சந்தி, மாலை, சாயம், கோதூழி. (ச)

நடுப்பகலின் பெயர்.

126. மத்தி யான நண்பக னடுப்பகல்.

நடுப்பகலின் பெயர்:—மத்தியானம், நண்பகல். (உ)

இதுவுமது.

**127.** உச்சியு முருமமு மப்பெயர்க் குரித்தே.
ஷை நடுப்பகலின் பெயர்:—உச்சி, உருமம். (உ)

சாமத்தின் பெயர்.

**128.** யாம மென்பது சாம மாகும்.
சாமத்தின் பெயர்:—யாமம். (க)

பகலின் பெயர்.

**129.** எல்லுந் திவசந் தினந்திவா வும்பகல்.
பகலின் பெயர்:—எல், திவசம், தினம், திவா. (ச)

அருக்கன் ஊர்தியின் பெயர்.

**130.** தனிக்காற் பொற்றே ரருக்க னூர்தி.
அருக்கன் ஊர்தியின் பெயர்:—ஒற்றையாழித்தேர், பொற்றேர். (உ)

அருக்கன் தேர்ப்புரவியின் பெயர்.

**131.** ஓரேழ் புரவி யுடையன வதற்கே.
அருக்கன் தேர்ப்புரவியின் பெயர்:—எழ்புரவி. (க)

அருக்கன் தேர்ப்பாகன் பெயர்.

**132.** ஆதித்தன் பாக னருண னாகும்.
அருக்கன் தேர்ப்பாகன் பெயர்:—அருணன். (க)

சந்திரன் பெயர்.

**133.** இந்து சசியிம கிரணன் றண்சுட
ருடுபதி தாரா பதியே யம்புலி
யமுத கதிரோன் சீதன் குரங்கி
விதுநிலவு வல்லோன் வேந்தன் றண்ணவன்
கலையோன் மதியே களங்கன் குபேர
ணலோன் பனிக்கதிர் குமுத சகாய
னலவன் கலாநிதி நிசாகா னிசாபதி
யிரவோ னிராக்கதிர் தானவன் சுதாகர
னுடுவேந்தன் பிறைமுயற் கூடு பசுங்கதிர்
சந்திரன் றிங்கள் சோமன் றன்பெயர்.

சந்திரன் பெயர்:—இந்து, சசி, இமகிரணன், தண்சுடர், உடுபதி, தாராபதி, அம்புலி, அமுதகதிரோன், சீதன், குரங்கி, விது,

நிலவு, அல்லோன், வேந்தன், தண்ணவன், கலையோன், மதி, களங்கன், குபேரன், ஆலோன், பனிக்கதிர், குமுதசகாயன், அலவன், கலாநிதி, நிசாகரன், நிசாபதி, இரவோன், இராக்கதிர், தானவன், சுதாகரன், உடுவேந்தன், பிறை, முயற்கூடு, பசுங்கதிர், திங்கள், சோமன். (௩௬)

நிலவின் பெயர்.

134. நிலவின் பெயர் சந்திரிகை யென்ப.

நிலவின் பெயர்:—சந்திரிகை. (க)

பிறை நிரம்பலின் பெயர்.

135. கலைபிறை நிரம்பல் கருதுங் காலே.

பிறை நிரம்பலின் பெயர்:—கலை. (க)

சந்திரன் ஊர்தியின் பெயர்.

136. வெண்மதி யூர்தி விமான மாகும்.

சந்திரன் ஊர்தியின் பெயர்:—விமானம். (க)

இரவின் பெயர்.

137. யாம நத்தம் யாமினி வகுஞ்சஞ்
சாமங் கங்கு னிசாநிசி திமிரம்
எல்லியு மல்லு மிரவின் பெயரே.

இரவின் பெயர்:—யாமம், நத்தம், யாமினி, வகுஞ்சம், சாமம், கங்குல், நிசா, நிசி, திமிரம், எல்லி, அல். (கக)

செவ்வாயின் பெயர்.

138. அழலவன் பௌம னங்கா ரகனே
குருதி வக்கிரன் குசனே மங்கல
னார னுதிர னாரத்த னறிவ
னழலே யுலோகிதன் செந்தீ வண்ணன்
சேயிவை செவ்வாய் சிறந்த பெயரே.

செவ்வாயின் பெயர்:—அழலவன், பௌமன், அங்காரகன், குருதி, வக்கிரன், குசன், மங்கலன், ஆரல், உதிரன், அரத்தன், அறிவன், அழல், உலோகிதன், செந்தீவண்ணன், சேய். (கரு)

புதன் பெயர்.

139. அருணன் கணக்க னறிஞன் சாமன்
மதிமகன் மேதை மாலோற்ப் பாகன்
புந்தி தூதன் பச்சை புதனே.

புதன் பெயர்:—அருணன், கணக்கன், அறிஞன், சாமன், மதிமகன், மேதை, மால், தேர்ப்பாகன், புந்தி, தூதன், பச்சை. (கக)

வியாழன் பெயர்.

140. ஆசான் மந்திரி யாண்டளப் பான்பொன்
பீதகன் சுரகுரு பிரகற்பதி சீவன்
றேவ மந்திரி சித்தன் சிகண்டிசன்
மேவிய வந்தண னரசனும் வியாழன்.

வியாழன் பெயர்:—ஆசான், மந்திரி, ஆண்டளப்பான், பொன், பீதகன், சுரகுரு, பிரகற்பதி, சீவன், தேவமந்திரி, சித்தன், சிகண்டிசன், அந்தணன், அரசன். (கங)

வெள்ளியின் பெயர்.

141. தைத்திய மந்திரி சல்லியன் சைத்தியன்
மழைக்கோள் சுங்கன் கவிபுகர் பிரசுரன்
பார்க்கவன் சுக்கிர னொள்ளியோன் பளிங்கு
காப்பியன் சிதனே யுசனன்வெள் ளியின்பெயர்.

வெள்ளியின் பெயர்:—தைத்தியமந்திரி, சல்லியன், சைத்தியன், மழைக்கோள், சுங்கன், கவி, புகர், பிரசுரன், பார்க்கவன், சுக்கிரன், ஒள்ளியோன், பளிங்கு, காப்பியன், சிதன், உசனன். (கச)

சனியின் பெயர்.

142. கதிர்மக னீலன் சாவகன் காரி
முதுமகன் மேற்கோண் மந்தன் முடவன்
சௌரி பங்கு சந்தில் சனிப்பெயர்.

சனியின் பெயர்:—கதிர்மகன், நீலன், சாவகன், காரி, முதுமகன், மேற்கோள், மந்தன், முடவன், சௌரி, பங்கு, சந்தில். (கக)

இராகுவின் பெயர்.

143. தமமே கரும்பாம் பேயிராகு வாகும்.

இராகுவின் பெயர்:—தமம், கரும்பாம்பு. (உ)

கேதுவின் பெயர்.

144. செம்பாம் பேசிகி கொடிகேது வாகும்.

கேதுவின் பெயர்:—செம்பாம்பு, சிகி, கொடி. (ங)

அனந்தன் பெயர்.

145. அனந்தன் போக வதிக்கிறை சேடன்.

அனந்தன் பெயர்:—போகவதிக்கிறை, சேடன். (உ)

வாரத்தின் பெயர்.

**146.** வாசரங் கிழமை வார மாகும்.

வாரத்தின் பெயர்:—வாசரம், கிழமை. (உ)

அச்சுவினியின் பெயர்.

**147.** இரலை யைப்பசி யாழே றுதலைநாள்
புரவி மருத்துவ நாளச் சுவினி.

அச்சுவினியின் பெயர்:—இரலை, ஐப்பசி, யாழ், ஏறு, தலைநாள், புரவி, மருத்துவநாள். (எ)

பரணியின் பெயர்.

**148.** காடு கிழவோன் பூத மடுப்புத்
தாழி பெருஞ்சோறு தருமனுண் முக்கூட்டுப்
போதம்ப ரணிப்பெயர் தாசியு மாகும்.

பரணியின் பெயர்:—காடு, கிழவோன், பூதம், அடுப்பு, தாழி, சோறு, தருமனுள், முக்கூட்டு, போதம், தாசி. (கO)

கார்த்திகையின் பெயர்.

**149.** அறுமீ னங்கி நாளே யளக்க
ரெரிநா ளளகிரு ளுவிதன் வாணன்
றழலை யாரல் கார்த்திகை தன்பெயர்.

கார்த்திகையின் பெயர்:—அறுமீன், அங்கிநாள், அளக்கர், எரிநாள், அளகு, இருள், நாவிதன், வாணன், தழல், ஆரல். (கO)

உரோகிணியின் பெயர்.

**150.** சகடு விமானஞ் சதியே யூற்று
லயனுள் வைய முரோகிணி யாகும்.

உரோகிணியின் பெயர்:—சகடு, விமானம், சதி, ஊற்றுல், அயனுள், வையம். (அ)

மிருகசீரிடத்தின் பெயர்.

**151.** மாழ்கு மான்றலை மார்கழி நரிப்புற
மதிநாண் மும்மீன் பாலை வெய்யோன்
மிருகசீ ரிடமைந் தானமும் விளம்பும்.

மிருகசீரிடத்தின் பெயர்:—மாழ்கு, மான்றலை, மார்கழி, நரிப்புறம், மதிநாள், மும்மீன், பாலை, வெய்யோன், ஐந்தானம். (கூ)

### திருவாதிரையின் பெயர்.

**152.** அரனாள் செங்கை மூதிரை யாதிரை.

திருவாதிரையின் பெயர்:—அரனாள், செங்கை, மூதிரை. (௩)

### புனர்பூசத்தின் பெயர்.

**153.** அதிதி நாள்கழை யாவண மெரியே
புனர்தங் கரும்பிவை புனர்பூச மாகும்.

புனர்பூசத்தின் பெயர்:—அதிதிநாள், கழை, ஆவணம், எரி, புனர்தம், கரும்பு. (௬)

### பூசத்தின் பெயர்.

**154.** குருநாள் காற்குளங் கொடிறு வண்டு
புணர்தை யாகும் பூசநாட் பெயரே.

பூசத்தின் பெயர்:—குருநாள், காற்குளம், கொடிறு, வண்டு, புணர்தை. (௫)

### ஆயிலியத்தின் பெயர்.

**155.** அரவினாள் கௌவை யாயிலா யிலியம்.

ஆயிலியத்தின் பெயர்:—அரவினாள், கௌவை, ஆயில். (௩)

### மகத்தின் பெயர்.

**156.** வேள்வி கொடுநுகம் வேட்டுவன் வாய்க்கா
லாதி யெழுஞ்சனி பிதிர்நாண் மாக
மாசி யெழுவா யெழுஞ்சனி மகப்பெயர்.

மகத்தின் பெயர்:—வேள்வி, கொடுநுகம், வேட்டுவன், வாய்க்கால், ஆதியெழுஞ்சனி, பிதிர்நாள், மாகம், மாசி, எழுவாயெழுஞ்சனி. (௯)

### பூரத்தின் பெயர்.

**157.** இடைய தெழுஞ்சனி யெலியே தூர்க்கை
பகவதி நாள்கணை நாவிதன் பூரம்.

பூரத்தின் பெயர்:—இடையெழுஞ்சனி, எலி, தூர்க்கை, பகவதிநாள், கணை, நாவிதன். (௬)

### உத்தரத்தின் பெயர்.

**158.** பங்குனி கடைய தெழுஞ்சனி பாற்குனி
மானே றுகதிர்நாண் மாரிநா ளுத்தரம்.

உத்தரத்தின் பெயர்:—பங்குனி, கடையெழுஞ்சனி, பாற்குனி, மானேறு, கதிர்நாள், மாரிநாள். (௬)

அத்தத்தின் பெயர்.

159. கைம்மீன் கைனி கனலி நாளே
ஐம்மீன் காமரங் களிறிவை யத்தம்.

அத்தத்தின் பெயர்:—கைம்மீன், கைனி, கனலிநாள், ஐம்மீன், காமரம், களிறு. (சு)

சித்திரையின் பெயர்.

160. நெய்மீ னறுவை நேர்வான் பயறு
நடுநா டுவட்டா நாளே தச்சன்
றெரியி னின்னவை சித்திரைப் பெயரே.

சித்திரையின் பெயர்:—நெய்மீன், அறுவை, நேர்வான், பயறு, நடுநாள், துவட்டாநாள், தச்சன். (எ)

சோதியின் பெயர்.

161. விளக்கே மரக்கால் வெறுநுகம் வீழ்க்கை
துளக்கங் காற்றி னாளே சோதி.

சோதியின் பெயர்:—விளக்கு, மரக்கால், வெறுநுகம், வீழ்க்கை, துளக்கம், காற்றினாள். (சு)

விசாகத்தின் பெயர்.

162. அனிலநாண் முற்றின் முறம்வை காசி
சுளகுவி சாகத் தொல்பெய ராகும்.

விசாகத்தின் பெயர்:—அனிலநாள், முற்றில், முறம், வைகாசி, சுளகு. (ரு)

அனுடத்தின் பெயர்.

163. பனைதேள் பெண்ணை புற்றாளி போந்தை
யினையவை மித்திர நாளு மனுடம்.

அனுடத்தின் பெயர்:—பனை, தேள், பெண்ணை, புல், தாளி, போந்தை, மித்திரநாள். (எ)

கேட்டையின் பெயர்.

164. துளங்கொளி வல்லாரை வேதி யெரியழல்
இளந்தவிர் திரனாள் சேட்டையுங் கேட்டை.

கேட்டையின் பெயர்:—துளங்கொளி, வல்லாரை, வேதி, எரி, அழல், இந்திரனாள், சேட்டை. (எ)

மூலத்தின் பெயர்.

165. கொக்கே தேட்கடை குருகுவி றன்றின்
முற்று மாணி யசுரநாண் மூலம்.

மூலத்தின் பெயர்:—கொக்கு, தேட்கடை, குருகு, வில், அன்றில், ஆணி, அசுரநாள். (எ)

பூராடத்தின் பெயர்.

166. உடைகுள முற்குள மாரி நீர்நாள்
புகலிற் பூராட நீரும் புகலும்.

பூராடத்தின் பெயர்:—உடைகுளம், முற்குளம், மாரி, நீர்நாள், நீர். (ரு)

உத்திராடத்தின் பெயர்.

167. ஆடி விச்சுவ நாளே கடைக்குள
மோதிய வாணியோ டுத்திரா டப்பெயர்.

உத்திராடத்தின் பெயர்:—ஆடி, விச்சுவநாள், கடைக்குளம், ஆணி. (ச)

திருவோணத்தின் பெயர்.

168. சோணைமா யோனுண் முக்கோல் சிரவண
மோண மென்ப வுலக்கையு மாகும்.

திருவோணத்தின் பெயர்:—சோணை, மாயோனுள், முக்கோல், சிரவணம், உலக்கை. (ரு)

அவிட்டத்தின் பெயர்.

169. காகப் புள்ளே வசுக்க ணுளே
யாவணி பறவை யவிட்டப் பெயரே.

அவிட்டத்தின் பெயர்:—காகப்புள், வசுக்கணுள், ஆவணி, பறவை. (ச)

சதயத்தின் பெயர்.

170. குன்று வருண ணுள்பெருஞ் செக்குச்
சுண்டன் போரிவை சதய நாளே.

சதயத்தின் பெயர்:—குன்று, வருணனுள், செக்கு, சுண்டன், போர். (ஓ)

பூரட்டாதியின் பெயர்.

171. புரட்டாதி முற்கொழுங் கோலே நாழி
புரைப்பர் பாதநாள் பூரட் டாதி.

பூரட்டாதியின் பெயர்:—புரட்டாதி, முற்கொழுங்கோல், நாழி, பாதநாள். (ச)

### உத்திரட்டாதியின் பெயர்.

**172.** முரசுபிற் கொழுங்கோன் மன்ன னீப
முறைசெயி லறிவனு ளுத்திரட் டாதி.

உத்திரட்டாதியின் பெயர்:—முரசு, பிற்கொழுங்கோல், மன்னன், நீபம், அறிவனுள். (௫)

### இரேவதியின் பெயர்.

**173.** தொழுவே நாவாய் தோணி சூலம்
பஃறி புருடநாள் கடைமீ னிரேவதி.

இரேவதியின் பெயர்:—தொழு, நாவாய், தோணி, சூலம், பஃறி, புருடநாள், கடைமீன். (௭)

### அருந்ததியின் பெயர்.

**174.** அருந்ததி சாலி வடமீ னாகும்.

அருந்ததியின் பெயர்:—சாலி, வடமீன். (௨)

### விடிமீனின் பெயர்.

**175.** விடிமீன் பெயரே வெடியென லாகும்.

விடிமீனின் பெயர்:—வெடி. (௧)

### வான்மீனின் பெயர்.

**176.** வான்மீன் பெயரே புச்சமென லாகும்.

வான்மீனின் பெயர்:—புச்சம். (௧)

### வான்மீனின் பொதுப்பெயர்.

**177.** சிதமும் பம்முஞ் சுக்கையுங் கணமு
முடுவுந் தாரகையு மொளியும்வான் மீனே.

வான்மீனின் பொதுப்பெயர்:—சிதம், பம், சுக்கை, கணம், உடு, தாரகை, ஒளி. (௭)

### இராசியின் பெயர்.

**178.** மேடமு மிடபமு மிதுனமுங் கடகமுஞ்
சிங்கமுங் கன்னியுந் துலாமுந் தேளுந்
தனுவு மகரமுங் கும்பமு மீனமு
மென்னும் பெயரிவை யீரா றுள்ளு
மொப்புடை மிதுன மொழித்தல் லாதன
வப்பெயர்க் கப்பெய ரனைத்து மாகும்.

இராசியின் பெயர்:—மேடம், இடபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பன்னிரண் டிராசிகளுள் மிதுனமொழிந்த வேனைய விராசிகட்கு அவ்வப் பெயர்க்குரியனவாய் வரும் பெயரனைத்தும் அவ்வவ் இராசிகட்குக் கொள்க. (௧௨)

மிதுனத்தின் பெயர்.

179. யாழே பாடவை யிரட்டை சவைமகன்
விழவு தண்டொடு மிதுன மாமே.

மிதுனத்தின் பெயர்:—யாழ், பாடவை, இரட்டை, சவைமகன், விழவு, தண்டு. (௬)

இராசியின் பொதுப்பெயர்.

180. இல்லு மோரையும் பவனமு மிராசி.

இராசியின் பொதுப்பெயர்:—இல், ஓரை, பவனம். (௩)

சூரிய சந்திரர்க்குரிய திசையின் பெயர்.

181. கீழ்த்திசை யருக்கற்கும் வடதிசை சோமற்குஞ்
சார்ந்தி யாகச் சாற்றினர் புலவர்.

சூரிய சந்திரர்க்குரிய திசையின் பெயர்:—அருக்கன்றிசை கீழ்த் திசை; சோமன்றிசை வடதிசை. (௨)

மூவகை வீதியின் பெயர்.

182. மேட வீதி யிடப வீதி
மிதுன வீதி யெனவொரு மூன்றே
அவைதாம்,
இருசுடர் முதலிய வியங்கு நெறியே.

மூவகை வீதியின் பெயர்:—மேடவீதி, இடபவீதி, மிதுனவீதி; அவை சூரிய சந்திரர் முதலிய கிரகங்கள் சஞ்சரிக்கும் வழி. (௩)

மேடவீதியாவது.

183. இடபஞ் சிங்க மிதுனங் கடக
மினைய நான்கு மேட வீதி.

மேடவீதியாவது:—இடபம், சிங்கம், மிதுனம், கடகம். (௪)

இடபவீதியாவது.

184. மீன மேடங் கன்னி துலாமு
மான விடப வீதிக் கமைந்தன.

இடபவீதியாவது:—மீனம், மேடம், கன்னி, துலாம். (௪)

மிதுனவீதியாவது.

185. வில்லு மகரங் கும்பமே விருச்சிகஞ்
சொல்லிய மிதுன வீதித் துறையே.

மிதுனவீதியாவது:—தனுசு, மகரம், கும்பம், விருச்சிகம், (௪)

இவற்றுள்,

186. சொன்ன விராசி தொகுத்த மாதங்கண்
மன்னிய கதிர்முதற் கோள்வரு நெறியே.

இவற்றுள், முற்கூறிய மூன்றிராசிகளுள் இடபமுதல் விருச்சிகம் ஈறாகத் தொகுத்த மாதங்களில் சூரியன் முதலிய கிரகங்கள் வரும் வழி.

காலத்தின் பெயர்.

187. போழ்துங் கொன்னும் பொழுதுஞ் செவ்வியும்
எல்லையும் வேலையு மமையமுங் காலையுங்
காலும் பதமுங் கால மாகும்.

காலத்தின் பெயர்:—போழ்து, கொன், பொழுது, செவ்வி, எல்லை, வேலை, அமையம், காலை, கால், பதம். (௧0)

கால நுட்பத்தின் பெயர்.

188. கலையுந் துடியுங் கணமுமாத் திரையும்
நொடியும் பிதிரு நுட்பமுந் திட்பமு
நிமிடமுங் கால நுட்ப மாகும்.

காலநுட்பத்தின் பெயர்:—கலை, துடி, கணம், மாத்திரை, நொடி, பிதிர், நுட்பம், திட்பம், நிமிடம். (௯)

காலவிரைவின் பெயர்.

189. கணமுமாத் திரையுங் கால விரைவே.

காலவிரைவின் பெயர்:—கணம், மாத்திரை. (௨)

நாழிகையின் பெயர்.

190. கடிகை விகலை கன்ன லிருத்தை
பதமே நாழி நாழிகை யாகும்.

நாழிகையின் பெயர்:—கடிகை, விகலை, கன்னல், இருத்தை, பதம், நாழி. (௬)

நாளின் பெயர்.

191. அல்க லிவாப்பக லானியந் திவச
மேல்லை யெல்லைக றினமிவை நாளே.

நாளின் பெயர்:—அல்கல், இரா, பகல், ஆனியம், திவசம், எல்லை, எல், வைகல், தினம். (கூ)

முன்னைநாளின் பெயர்.

192. நென்னலு நெருநலு முன்னைநா ளாகும்.
முன்னைநாளின் பெயர்:—நென்னல், நெருநல். (உ)

பின்னைநாளின் பெயர்.

193. பிற்றையும் பின்றையும் பின்னைநா ளாகும்.
பின்னைநாளின் பெயர்:—பிற்றை, பின்றை. (உ)

திதியின் பெயர்.

194. திதியே பக்கம்.
திதியின் பெயர்:—பக்கம். (க)

மாதத்தின் பெயர்.

195. மதியே திங்கள் மாத மாகும்.
மாதத்தின் பெயர்:—மதி, திங்கள். (உ)

ஒருகலைவரு மதிநாளின் பெயர்.

196. ஒருகலை வருமதி நாள்சினீ வாலி.
ஒருகலைவரு மதிநாளின் பெயர்:—சினீவாலி. (க)

அமாவாசையின் பெயர்.

197. குருவமா வாசை.
அமாவாசையின் பெயர்:—குரு. (க)

முதற்பக்கத்தின் பெயர்.

198. பக்க முதலது நந்தை யாகும்.
முதற்பக்கத்தின் பெயர்:—நந்தை. (அது வருமாறு: க. சு. கக. நந்தை.)

இரண்டாம் பக்கத்தின் பெயர்.

199. பத்திரை யென்பது இரண்டாம் பக்கம்.
இரண்டாம் பக்கத்தின் பெயர்:—பத்திரை. (உ. எ. கஉ. பத்திரை.)

மூன்றாம் பக்கத்தின் பெயர்.

200. மூன்றே சயை பக்கம்.
மூன்றாம் பக்கத்தின் பெயர்:—சயை. (௩. அ. க௩. சயை.)

நான்காம் பக்கத்தின் பெயர்.

201. நான்கே யிருத்தை.
நான்காம் பக்கத்தின் பெயர்:—இருத்தை. (ச. கூ. கச. இருத்தை.)

ஐந்தாம் பக்கத்தின் பெயர்.

202. ஐந்தாம் பூரணை யாகும்.
ஐந்தாம் பக்கத்தின் பெயர்:—பூரணை. (ரு. கo. கரு. பூரணை.)

பூரணையின் பெயர்.

203. அனுமதி பவ்வம் பூரணை யிடையுவா.
பூரணையின் பெயர்:—அனுமதி, பவ்வம், இடை, உவா. (ச)

கார்காலத்தின் பெயர்.

204. நவங்கார் காலம்.
கார்காலத்தின் பெயர்:—நவம். (க)

கூதிர் காலத்துக்குங் கோடைப்பனிக் காலத்துக்கும் பெயர்.

205. கூதிர் காலமுங் கொடும்பனிக் காலமு
மிரண்டு காலமுஞ் சிசிர மாகும்.
கூதிர்காலத்துக்குங் கொடும்பனிக்காலத்துக்கும் பெயர்:—சிசிரம்.(க)

இளவேனிலின் பெயர்.

206. மாதவம் வசந்த மதுவிள வேனில்.
இளவேனிலின் பெயர்:—மாதவம், வசந்தம், மது. (ஙூ)

கொடிய வேனிலின் பெயர்.

207. கோடை சமஞ்சுசி கொடிய வேனில்.
கொடியவேனிலின் பெயர்:—கோடை, சமம், சுசி. (ஙூ)

208. பருவமு மிருதுவும் பகரி லொன்றே.
பருவமும் இருதுவு மொருபொருட் கிளவி. (க)

அறுவகைப் பருவகாலப் பெயர்.

209. காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் முதுவேனி லென்றாங்
கிருமூன் றுவகைப் பருவந் தானே.
அறுவகைப் பருவகாலப் பெயர்:—கார், கூதிர், முன்பனி, பின்பனி,
இளவேனில், முதுவேனில். (சூ)

அவைதாம்,

210. ஆவணி முதலா வீரண்டி ரண்டாக
மேவிய திங்க ளெண்ணினர் கொளலே.

அவைதாம்:—ஆவணி, புரட்டாதி-கார்; ஐப்பசி, கார்த்திகை - கூதிர்; மார்கழி, தை-முன்பனி; மாசி, பங்குனி - பின்பனி; சித்திரை, வைகாசி-இளவேனில்; ஆனி, ஆடி-முதுவேனில். (சு)

அறுவகை இருதுவின் பேயர்.

211. வசந்தங் கிரீடம் வருடஞ் சரமே
யேமந்தஞ் சிசிரமென விருதுவா றாகும்.

அறுவகை இருதுவின் பெயர்:—வசந்தம், கிரீடம், வருடம், சரம், ஏமந்தம், சிசிரம். (சு)

அவைதாம்,

212. சித்திரை முதலாச் சென்மாத மிரண்டா
வைத்தன வெண்ணிக் கொள்க வென்ப.

அவைதாம்:—சித்திரை, வைகாசி - வசந்தம்; ஆனி, ஆடி - கிரீடம்; ஆவணி, புரட்டாதி - வருடம்; ஐப்பசி, கார்த்திகை-சரம்; மார்கழி, தை-ஏமந்தம்; மாசி, பங்குனி-சிசிரம். (சு)

ஆண்டின் பேயர்.

213. ஆய னஞ்சமை யயனந் தெய்வதம்
வருடம் வற்சர மாண்டின் பெயரே.

ஆண்டின் பெயர்:—ஆயனம், சமை, அயனம், தெய்வதம், வருடம், வற்சரம். (சு)

வாழ்நாளின் பேயர்.

214. ஆயுக மாயுள் வாழ்நா ளென்ப.

வாழ்நாளின் பெயர்:—ஆயுகம், ஆயுள். (உ)

உகமுடிவின் பேயர்.

215. ஊழியு மடங்கலு முகமுடி வாகும்.

உகமுடிவின் பெயர்:—ஊழி, மடங்கல். (உ)

நால்வகை யுகத்தின் பேயர்.

216. கிரேதா திரேதா துவாபரங் கலியென
வொருநான் கென்ப வுகத்தின் பெயரே.

நால்வகை யுகத்தின் பெயர்:—கிரேதா, திரேதா, துவாபரம், கலி. (ச)

அமுதின் பெயர்.

217. அமரியுஞ் சுதையு மருந்து மமுதே.
அமுதின் பெயர்:—அமரி, சுதை, மருந்து. (ந)

தெய்வ வுணவின் பெயர்.

218. சருவும் பலியுநி வேத்தியமு மமுது
மவியுந் தெய்வ வுணவா கும்மே.
தெய்வ வுணவின் பெயர்:—சரு, பலி, நிவேத்தியம், அமுது, அவி. (ரு)

ஆலகாலவிடத்தின் பெயர்.

219. காள கூட மாலகால விடமே.
ஆலகாலவிடத்தின் பெயர்:—காளகூடம். (க)

ஆன்மாவின் பெயர்.

220. பசுவுயிர் சீவன் புற்கலன் சேதன
னணுவிய மான னாதன் செந்து
வாவி பூத னுறவி கூத்த
னென வின்னவை யான்மா வாகும்.
ஆன்மாவின் பெயர்:—பசு, உயிர், சீவன், புற்கலன், சேதனன், அணு,
இயமானன், ஆதன், செந்து, ஆவி, பூதன், உறவி, கூத்தன். (கந)

இரண்டாவது
வானவர்வகை முற்றிற்று.

ஆ சூத்திரம் உகஉ.

மூன்றாவது

# ஐயர் வகை.

இருடிகள் பெயர்.

1. முனிவர் மாதவ ரிஷிங்கிகண் முனைவர்
படிவ ருறுவர் பண்ணவ ரைய
ரறவோர் தபோதன ரறிஞ ரந்தணர்
துறவோர் கடிந்தோர் மோனியர் யோகியர்
கோபங் காய்ந்தோர் நீத்தோர் மெய்யர்
தாபத ரிருடிக டம்பெய ராகும்.

இருடிகள் பெயர்:—முனிவர், மாதவர், இலிங்கிகள், மூனிவர், படிவர், உறுவர், பண்ணவர், ஐயர், அறவோர், தபோதனர், அறிஞர், அந்தணர், துறவோர், கடிந்தோர், மோனியர், யோகியர், கோபங்காய்ந்தோர், நீத்தோர், மெய்யர், தாபதர். (உ०)

சத்தவிருடிகளின் பெயர்.

2. அகத்தியன் புலத்திய னங்கிரா கௌதமன்
வசிட்டன் காசிபன் மார்க்கண் டேயனென்
றிசைத்த விவர்தா மேழிரு டிகளே.

சத்தவிருடிகளின் பெயர்:—அகத்தியன், புலத்தியன், அங்கிரா, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டேயன். (எ)

அகத்தியன் பெயர்.

3. குறுமுனி கும்ப யோனி யகத்தியன்.

அகத்தியன் பெயர்:—குறுமுனி, கும்பயோனி. (உ)

சைவதவப்பாலோர் பெயர்.

4. மாவிர தியருங் காளா முகரும்
பாசு பதருஞ் சைவதவப் பாலோர்.

சைவதவப்பாலோர் பெயர்:—மாவிரதியர், காளாமுகர், பாசுபதர். (ங)

நாராயண சமயத்தார் பெயர்.

5. வைணவர் * பாகவதர் நாராயண சமயத்தோர்.

நாராயண சமயத்தார் பெயர்:—வைணவர், பாகவதர். (உ)

சமணர் பெயர்.

6. சாவக ரருகர் சமண ரமணர்.

சமணர் பெயர்:—சாவகர், அருகர், அமணர். (ங)

சமண்டவத்தோர் பெயர்.

7. ஆசீவகர் தாபத ரத்தவத் தோரே.

சமண்டவத்தோர் பெயர்:—ஆசீவகர், தாபதர். (உ)

புத்தர் பெயர்.

8. புத்தர் சாக்கியர் தேரர் பௌத்தர்.

புத்தர் பெயர்:—சாக்கியர், தேரர், பௌத்தர். (ங)

---

* "பாகவதர் நாராயண சமயத்தோர்." எனவும் பாடம்.

புத்த தவத்தோர் பெயர்.

9. வைத்த சீவக ரத்தவத் தோரே. (க)
புத்த தவத்தோர் பெயர்:—சீவகர்.

சடைமுடியோர் பெயர்.

10. முனிவர் தாபதர் சடைமுடி யோரே. (உ)
சடைமுடியோர் பெயர்:—முனிவர், தாபதர்.

ஒருமையின் பெயர்.

11. ஒருமை யென்ப திறையுணர் வாகும். (க)
ஒருமையின் பெயர்:—இறையுணர்வு.

ஒன்றென்னும் பெயர்.

12. ஒன்றெனப் படுவது வீடு பெறலே. (க)
ஒன்றின் பெயர்:—வீடுபெறுகை.

இருமையின் பெயர்.

13. இருமை யென்ப திம்மையு மறுமையும். (உ)
இருமையின் பெயர்:—இம்மை, மறுமை.

இருவினையின் பெயர்.

14. இருவினை புண்ணிய பாவ மென்ப. (உ)
இருவினையின் பெயர்:—புண்ணியம், பாவம்.

இருவகைத் தோற்றத்தின் பெயர்.

15. இருவகைத் தோற்றஞ் சராசர மென்ப. (உ)
இருவகைத் தோற்றத்தின் பெயர்:—சரம், அசரம்.

இருசுடரின் பெயர்.

16. இருசுட ரிரவி மதிய மாகும். (உ)
இருசுடரின் பெயர்:—சூரியர், சந்திரர்.

இருமரபின் பெயர்.

17. இருமரபு தாய்வழி தந்தைவழி யென்ப. (உ)
இருமரபின் பெயர்:—தாய்வழி, தந்தைவழி.

இருவகைக் கந்தத்தின் பெயர்.

18. இருவகைக் கந்த நற்கந்தந் துர்க்கந்தம்.
இருவகைக் கந்தத்தின் பெயர்:—நற்கந்தம், துர்க்கந்தம். (உ)

இருவகை அறத்தின் பெயர்.

19. இல்லறந் துறவற மிருவகை யறமே.
இருவகை அறத்தின் பெயர்:—இல்லறம், துறவறம். (உ)

இருவகைப் பொருளின் பெயர்.

20. கல்வியுஞ் செல்வமு மிருவகைப் பொருளே.
இருவகைப் பொருளின் பெயர்:—கல்வி, செல்வம். (உ)

இருவகைக் கூத்தின் பெயர்.

21. இருவகைக் கூத்து மார்க்கந் தேசிகம்.
இருவகைக் கூத்தின் பெயர்:—மார்க்கம், தேசிகம். (உ)

மும்மையின் பெயர்.

22. மும்மை யும்மைய மிம்மையு மறுமையும்.
மும்மையின் பெயர்:—* உம்மை, இம்மை, மறுமை. (ங)

முப்பொறியின் பெயர்.

23. மனமும் வாக்குங் காயமு முப்பொறி.
முப்பொறியின் பெயர்:—மனம், வாக்கு, காயம். (ங)

முச்செயலின் பெயர்.

24. படைத்தலுங் காத்தலு மழித்தலு முச்செயல்.
முச்செயலின் பெயர்:—படைத்தல், காத்தல், அழித்தல். (ங)

முக்காலத்தின் பெயர்.

25. இறந்த காலமெதிர் காலநிகழ் காலமெனச்
சிறந்த கால மூன்றெனச் செப்புவர்.
முக்காலத்தின் பெயர்:—இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம். (ங)

மூவிடத்தின் பெயர்.

26. முன்னிலை படர்க்கை தன்மை மூவிடம்.
மூவிடத்தின் பெயர்:—முன்னிலை, படர்க்கை, தன்மை. (ங)

முக்குற்றத்தின் பெயர்.

27. காமம் வெகுளி மயக்கமுக் குற்றம்.
முக்குற்றத்தின் பெயர்:—காமம், வெகுளி மயக்கம். (ங)

---

* உம்மை - கழிபிறப்பு.

மூவகை மொழியின் பெயர்.

28. பட்டாங்கு பேசல் பழித்தல் புகழ்தன்
முட்டின் றுரு மூவகை மொழியே.

மூவகை மொழியின் பெயர்:—உண்மைகூறல்,பழித்தல்,புகழ்தல்(

முக்குணத்தின் பெயர்.

29. சாத்துவிக மிராசதந் தாமத முக்குணம்.

முக்குணத்தின் பெயர்:—சாத்துவிகம், இராசதம், தாமதம். (

அவற்றுள், சாத்துவிக குணம்.

30. ஞானந்தவ மேன்மை நல்லருண் மோனம்
வாய்மை பொறைபுல னடக்கல் சாத்துவிகம்.

அவற்றுள், சாத்துவிக குணம்:—ஞானம், தவம், மேன்மை, அ
மோனம், வாய்மை, பொறுமை, புலனடக்கல்.

இராசத குணம்.

31. தானந் தவமே தருமம் பேணல்
ஞானங் கல்வி நலனிலைவ தெரித
லீன மில்லா விராசத குணமே.

இராசத குணம்:—தானம், தவம், தருமம், பேணல், ஞானம், க
நலன், கேள்வி.

தாமத குணம்.

32. நிறைபே ருண்டி நீதிகே டுறக்க
மறவி பொய்சோம் பொழுக்கம் வழுவுதல்
கொலையே வஞ்ச மிவைதா மதகுணம்.

தாமத குணம்:—பேருண்டி, நீதிகேடு, உறக்கம், மறதி, பொய்,
ம்பு, ஒழுக்கம்வழுவுதல், கொலை, வஞ்சம்.

மூவகைத் தானத்தின் பெயர்.

33. முதலிடை கடையென மூவகைத் தானம்.

மூவகைத் தானத்தின் பெயர்:—முதல், இடை, கடை.

அவற்றுள், உத்தம தானம்.

34. அறத்தி னீட்டி வரும்பொருள் புறத்துறைக்
குற்ற மூன்று மறுத்தநற் றவர்க்குக்
கொள்கெனப் பணிந்து குறையிரந் தவர்வயி
னுள்ளமுவந் தீவ துத்தம தானம்.

அவற்றுள், உத்தம தானம்:—அறத்தானீட்டிய பொருளை முக்குற்ற மற்ற நற்றவத்தோரைக் கொள்கெனப் பணிந்து, குறையிரந்து, மனமகிழ்ந்து கொடுத்தல்.

மத்திம தானம்.

35. ஆதுல ரந்தக ருறுப்பறைக ளாதர்
மாதர்க் கீவது மத்திம தானம்.

மத்திம தானம்:—* ஆதுலர், அந்தகர், † உறுப்பறைகள், ‡ ஆதர், மாதர், இவர்களுக்குக் கொடுப்பது. (௬)

கடைப்படு தானம்.

36. ஆர்வம் புகழே யச்சங் கைம்மாறு
காரணங் கண்ணோட்டங் கடப்பா டென்றிவை
யேழுங் கடைப்படு தான மென்ப.

கடைப்படு தானம்:—§ ஆர்வம், புகழ், அச்சம், கைம்மாறு, காரணம், கண்ணோட்டம், ¶ கடப்பாடு இவற்றைப்பற்றி யீவது. (௭)

மூவகைப் பாவ புண்ணிய வழக்கத்தின் பெயர்.

37. செய்தல் செய்வித்த லுடன்பா டென்று
வருமுறை பாவ புண்ணிய வழக்கம்.

மூவகைப் பாவ புண்ணிய வழக்கத்தின் பெயர்:—செய்தல், செய்வித்தல், உடன்பாடு. (௮)

மூவுலகின் பெயர்.

38. பூமி யந்தாஞ் சுவர்க்க மென்ன
வருமூன் றுலகின் பெயரென வறைவர்.

மூவுலகின் பெயர்:—பூமி, அந்தரம், சுவர்க்கம். (௯)

முச்சுடரின் பெயர்.

39. திங்கள் வெய்யோ னக்கினி யென்றிவை
மூன்றுஞ் சுடரென மொழிகுவர் புலவர்.

முச்சுடரின் பெயர்:—சந்திரன், சூரியன், அக்கினி. (௰)

திரிகடுகத்தின் பெயர்.

40. திரிகடுகஞ் சுக்குத் திப்பிலி மிளகு.

திரிகடுகத்தின் பெயர்:—சுக்கு, திப்பிலி, மிளகு. (௰௧)

* ஆதுலர் - இரப்போர். † உறுப்பறைகள் - அவயவமிழந்தவர் ‡ ஆதர்-பற்றுக்கோடில்லாதவர். § ஆர்வம் - விருப்பம். ¶ கடப்பாடு-முறைமை.

திரிபலையின் பெயர்.

41. திரிபலை நெல்லி கடுக்காய் தான்றி.
திரிபலையின் பெயர்:— நெல்லி, கடுக்காய், தான்றி. (௩)

நாற்கதியின் பெயர்.

42. தேவகதி மிருககதி மக்கள் கதியே
மேவு நரக கதியென நான்கே.
நாற்கதியின் பெயர்:—தேவகதி, மிருககதி, மக்கள்கதி, நரககதி. (௪)

நால்வகை வேதத்தின் பெயர்.

43. இருக்கு வேத மெசுரு வேதஞ்
சாம வேத மதர்வண வேதமென
நால்வகை வேத நாம மாகும்.
நால்வகைவேதத்தின் பெயர்:—இருக்கு, எசுர், சாமம், அதர்வணம். (௪)

நால்வகை இழிச்சொல்லின் பெயர்.

44. குறளை கடுஞ்சொல் பயனில் சொல்லே
மருள்கொள் சொல்லென விழிச்சொ னான்கே.
நால்வகை இழிச்சொல்லின் பெயர்:—குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், பொய்சொல்லல். (௪)

ஆடவர் நாற்குணத்தின் பெயர்.

45. அறிவு நிறையோர்ப்புக் கடைப்பிடி யென்னத்
தகுமிவை யாடவர் தங்குண நான்கே.
ஆடவர் நாற்குணத்தின் பெயர்:—அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி. (௪)

பெண்கள் நாற்குணத்தின் பெயர்.

46. நாணமட மச்சம் பயிர்ப்பென் றின்ன
மாணிழை யவர்க்கு வருங்குண நான்கே.
பெண்கள் நாற்குணத்தின் பெயர்:—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு. (௪)

நால்வகைப் புண்ணியத்தின் பெயர்.

47. தானங் கல்வி தவமே யொழுக்க
நால்வகைப் புண்ணிய நாம மாகும்.
நால்வகைப் புண்ணியத்தின் பெயர்:—தானம், கல்வி, தவம், ஒழுக்கம். (௪)

### உயிர்த் தோற்ற நால்வகையின் பெயர்.

48. குடல்போற் பையினு முட்டையினுந் தோன்றியும்
மெய்க்கண் வியர்வினு மிக்க நிலத்தினும்
ஒக்க நால்வகை யுயிர்த்தோற் றம்மே.

உயிர்த் தோற்ற நால்வகையின் பெயர்:—பை, முட்டை, வியர்வை, நிலம். (௪)

### நால்வகைப் புலமையின் பெயர்.

49. கவியே கமகன் வாதி வாக்கியென்
றிவையொரு நான்கும் புலமைக் கியல்பே.

நால்வகைப் புலமையின் பெயர்:—கவி, கமகன், வாதி, வாக்கி. (௫)

### அவற்றுள், கவியின் வகை.

50. ஆசு மதுரஞ் சித்திரம்வித் தாரமெனப்
பாவகை பாடுவோன் கவியெனப் படுமே.

அவற்றுள், கவியின் வகை:—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளைப் பாடுவோன் கவி என்று சொல்லப்படுவான்.

### கமகன் வகை.

51. ஞாபகஞ் செம்பொரு ணடையினைப் பொருளுங்
காசின் றுரைப்போன் கமக னாகும்.

கமகன் வகை:—அரும்பொருளைச் செம்பொருணடையாகக் காட்டி விவகரிப்போன் கமகன்.

### வாதி வகை.

52. ஏதுவு மேற்கோளு மெடுத்துக் காட்டித்
தன்கோ ணிறீஇப் பிறர்கோண் மறுப்போன்
மன்பதை மதித்த வாதி யாகும்.

வாதி வகை:—காரணமு மேற்கோளு மெடுத்துக் காட்டிப் பிறர் மதத்தை மறுத்துத் தன்மத நிறுத்துவோன் வாதி.

### வாக்கி வகை.

53. அறம்பொரு ளின்பம் வீடெனுந் திறங்கள்
கேட்க வேட்க வினியன கூறு
மாற்ற லுடையான் வாக்கி யாகும்.

வாக்கி வகை:—அறம் பொரு ளின்பம் வீடெனு நான்குறுதிகளைக் கேட்கவும் விரும்பவும் இனியனவாக விரித்துக் கூறுவோன் வாக்கி.

## ஆசுகவி வகை.

54. கொடுத்த பொருளிற் றொடுத்த வினத்தி
னடுத்த பொழுதிற் பாடுவ தாசுகவி.

ஆசுகவி வகை:—பொருள், அடி, பா, அணி முதலிய கொடுத்து மற்
றொருவன் பாடுகவென்றவுடனே பாடுவது ஆசுகவி.

## மதுரகவி வகை.

55. பொருளின் பொலிவுஞ் சொல்லின் றிறனுந்
தொடையுந் தொடைக்கண் விகற்பமுந் துதைந்தங்
குருவக முதலா மலங்கா ரங்களை
யுட்கொண் டோசை பொலிவுடைத் தாகி
யுய்த்துணர் வோர்த முள்ளங் கட்கு
மால்கட லமிழ்தம்போற் பாடுவது மதுரகவி.

மதுரகவி வகை:—பொருட்செல்வம், சொல்லாற்றல், தொடை,
தொடைவிகற்பஞ் செறிய வுருவகமுதலிய வலங்காரத்தோடின்
னோசைத்தா யாராய்வோர் மனங்கட்கு அமுதம்போ லினிமை
பயப்பப் பாடுவது மதுரகவி.

## சித்திரகவி வகை.

56. மாலை மாற்றே சக்கரஞ் சுழிகுள
மேக பாத மெழுகூற் றிருக்கை
காதை கரப்பே கரந்துறைப் பாட்டே
தூசங் கொளலே வாவன் ஞாற்றே
பாத மயக்கே பாவின் புணர்ப்பே
கூட சதுக்கங் கோமூத் திரியே
யோரெழுத் தினத்தா னுயர்ந்த பாட்டே
யொற்றுப் பெயர்த்த வொருபொருட் பாட்டே
சித்திரப் பாவே விசித்திரப் பாவே
விகற்ப நடையே வினாவுத் தரமே
சருப்பதோ பத்திரஞ் சார்ந்த வெழுத்தே
வருக்கமு மற்றும் வடநூற் கடலு
ளொருக்குடன் வைத்த வுதாரண நோக்கி
விரித்து நிறைத்து மிறைக்கவிப் பாட்டுத்
தெரித்துப் பாடுவது சித்திர கவியே.

சித்திரகவி வகை:—மாலைமாற்று, சக்கரம், சுழிகுளம், ஏகபாதம், எழு
கூற்றிருக்கை, காதைகரப்பு, கரந்துறை, தூசங்கொளல், வா
வன்ஞாற்று, பாதமயக்கு, பாவின்புணர்ப்பு, கூடசதுக்கம், கோ
மூத்திரி, ஓரெழுத்தினம், ஒற்றெழுத்துத்தீர்ந்த வொருபொருட்

நால்வகைப் பொன்னின் பெயர்.

62. சாத ரூபங் கிளிச்சிறை யாடகஞ்
சாம்பூ நதமிவை நால்வகைப் பொன்னே.

நால்வகைப் பொன்னின் பெயர்:—சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம். (௪)

நால்வகைப் பூவின் பெயர்.

63. கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ வோடு
புதற்பூ வென்றிவை நால்வகைப் பூவே.

நால்வகைப் பூவின் பெயர்:—கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, புதற்பூ. (௪)

நால்வகைப் புசிப்பின் பெயர்.

64. உண்ப தின்ப நக்குவ பருகுவ
நால்வகைப் புசிப்பி னாம மாகும்.

நால்வகைப் புசிப்பின் பெயர்:—உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன. (௪)

நால்வகை யூறுபாட்டின் பெயர்.

65. குத்தல் வெட்ட லெய்த லெறித
னால்வகை யூறு பாடென நவில்வர்.

நால்வகை யூறுபாட்டின் பெயர்:—குத்தல், வெட்டல், எய்தல், எறிதல். (௪)

நால்வகை உபாயத்தின் பெயர்.

66. சாம பேத தான தண்டமென
நெறிபடு முபாய நான்கா கும்மே.

நால்வகை உபாயத்தின் பெயர்:—சாமம், பேதம், தானம், தண்டம். (௪)

நால்வகை நிலையின் பெயர்.

67. பைசாச மாலீட மண்டிலம் பிரத்தி
யாலீட நால்வகை நிலையா கும்மே.

நால்வகை நிலையின் பெயர்:— * பைசாசம், ஆலீடம், மண்டிலம், பிரத்தியாலீடம். (௪)

பஞ்சபாதவகைப் பெயர்.

68. கொலையே களவு கள்குரு நிந்தை
பகரும் பொய்யுடன் பஞ்சபா தகமே.

* பைசாச முதலியவற்றின் விரிவைப் பின்னர்க் காண்க.

பஞ்சபாதகவகைப் பெயர்:— கொலை, களவு, கள், குருநிந்தை, பொய். (ரு)

## ஐவகை வினாவின் பெயர்.

69. அறியான் வினாவ லறிவொப்புக் காண்ட
லைய மறுத்த லவனறிவு தான்கோடன்
மெய்யவற்குக் காட்டலோ டைவகை வினாவே.

ஐவகை வினாவின் பெயர்:—அறியான்வினாவல், அறிவொப்புக்காண்டல், ஐயமறுத்தல், அவனறிவுதான்கோடல், மெய்யவற்குக் காட்டல். (ரு)

## பஞ்சாங்கவகைப் பெயர்.

70. திதியே வாரநாள் யோகங் கரணமெனப்
பகருஞ் சோதிடப் பஞ்சாங் கம்மே.

பஞ்சாங்கவகைப் பெயர்:—திதி, வாரம், நாள், யோகம், கரணம். (ரு)

## பஞ்ச சயனவகைப் பெயர்.

71. மயிர்ச்சேணம் பஞ்சுமெத்தை வண்படாந் தூவி
பயிற்றுந்தண் வீப்பாய் பஞ்ச சயனம்.

பஞ்ச சயனவகைப் பெயர்:—மயிர்ச்சேணம், பஞ்சுமெத்தை, வண்படாம், அன்னத்தின்றூவி, * வீப்பாய். (ரு)

## பஞ்ச வாசவகைப் பெயர்.

72. தக்கோல மேல மிலவங்கஞ் சாதிக்காய்
கர்ப்பூர மென்றிவை கமழ்பஞ்ச வாசம்.

பஞ்ச வாசவகைப் பெயர்:—தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கர்ப்பூரம். (ரு)

## பஞ்ச பூதவகைப் பெயர்.

73. நிலநீர் தேயு வாயுவா காயமென்
றிவைபுல னறிந்தோ ரோத்துமைம் பூதம்.

பஞ்ச பூதவகைப் பெயர்:—நிலம், நீர், தேயு, வாயு, ஆகாயம். (ரு)

## பஞ்சபுலன் பஞ்சேந்திரியங்களின் வகைப் பெயர்.

74. சுவையொளி யூறோசை நாற்ற மறியுங்
கருவி நாகண் மெய்செவி மூக்கே.

பஞ்சபுலன்களின் பெயர்:—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். (ரு)
பஞ்சேந்திரியங்களின் பெயர்:—நா, கண், மெய், செவி, மூக்கு. (ரு)

---

* வீப்பாய் - மலர்ப்பாய்.

இந்திரியத்தின் பெயர்.

75. காரணம் பொறிவாயில் கந்தமிந் திரியம்.

இந்திரியத்தின் பெயர்:—காரணம், பொறி, வாயில், கந்தம். (௪)

ஐவகைக் குசலவித்தையின் பெயர்.

76. எண்ண லெழுத லிலைகிள்ளல் பூத்தொடுத்தல்
பண்ணமைந்த யாழினொடு குசல மைந்தே.

ஐவகைக் குசலவித்தையின் பெயர்:—எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல், யாழ்வாசித்தல். (௫)

ஐவகை மெய்க்குற்றத்தின் பெயர்.

77. கொட்டாவி நெட்டை குறுகுறுப்புக் கூன்கிடை
நட்டு விழலைந்து மெய்ந்நவைக் குறியே.

ஐவகை மெய்க்குற்றத்தின் பெயர்:—கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, கூன்கிடை, நட்டுவிழல். (௫)

ஐவகை விரையின் பெயர்.

78. கோட்டந் துருக்கந் தகரமகி லார
மொட்டிய வைந்தும் விரையென வுரைப்பர்.

ஐவகை விரையின் பெயர்:—கோட்டம், துருக்கம், தகரம், அகில், ஆரம். (௫)

ஐவகைத் தந்தையர் பெயர்.

79. அரசன் றலைவன் றந்தை முன்னோன்
குரவனோ டைவருங் குறிப்பினிற் றந்தை.

ஐவகைத் தந்தையர் பெயர்:—அரசன், தலைவன், தந்தை, முன்னோன், குரவன். (௫)

ஐம்பால்வகைப் பெயர்.

80 ஐம்பா லென்ப தொருவ னொருத்தி
பலரொன்று பலவெனப் பகுத்தனர் புலவர்.

ஐம்பால்வகைப் பெயர்:—ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல. (௫)

ஐவகை யுணவின் பெயர்.

81. கடித்த னக்கல் பருகல் விழுங்கன்
மெல்ல லென்றிவை யைவகை யுணவே.

ஐவகையுணவின் பெயர்:—கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல். (௫)

பஞ்ச சத்தகருவியின் பெயர்.

82. தோறுளை நரம்பு கஞ்சம் பாடல்
பல்பேத பஞ்ச சத்த மாகும்.

பஞ்ச சத்தகருவிவகைப் பெயர்:—தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி. (ரு)

ஐவகை வேள்வியின் பெயர்.

83. கடவுள் பிரமம் பூத மானிடந்
தென்புலத் தாரென் றைவகை வேள்வி.

ஐவகை வேள்வியின் பெயர்:—கடவுள்வேள்வி, பிரமவேள்வி, பூதவேள்வி, மானிடவேள்வி, தென்புலத்தார் வேள்வி. (ரு)

ஐவகைத் தாயர் பெயர்.

84. ஈன்றதா யூட்டுந்தாய் முலைத்தாய் கைத்தாய்
செவிலித் தாயென வைவகைத் தாயர்.

ஐவகைத்தாயர் பெயர்:—ஈன்றதாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய். (ரு)

கான்படு திரவியம் ஐந்தின் பெயர்.

85. அரக்கிரு லின்றே னணிமயிற் பீலி
நாவி கான்படு திரவிய மைந்தே.

கான்படு திரவியம் ஐந்தின் பெயர்:—அரக்கு, இறல், தேன், மயிற்பீலி, நாவி. (ரு)

கடல்படு திரவியம் ஐந்தின் பெயர்.

86. பவள முத்துச் சங்கொக் கோலை
யுப்புக் கடல்படு திரவிய மைந்தே.

கடல்படு திரவியம் ஐந்தின் பெயர்:—பவளம், முத்து, சங்கு, ஒக்கோலை, உப்பு. (ரு)

நாடுபடு திரவியம் ஐந்தின் பெயர்.

87. செந்நெல் செவ்விள நீர்சிறு பயறு
கன்னற் கதலி யெனப்பெயர் பெற்ற
வைந்து நன்னாட் டமைந்த திரவியம்.

டுபடு திரவியம் ஐந்தின் பெயர்:—செந்நெல், செவ்விளநீர், சிறுபயறு, கரும்பு, வாழை. (ரு)

### நகர்படு திரவியம் ஐந்தின் பெயர்.

88. கண்ணாடி பித்தன் கருங்குரங்கு காட்டானை
மண்ணாளும் வேந்தனோ டைந்து திரவியம்.

நகர்படு திரவியம் ஐந்தின் பெயர்:—கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, யானை, வேந்தன். (ரு)

### மலைபடு திரவியம் ஐந்தின் பெயர்.

89. அகில்கறி கோட்ட மொடுதக் கோலங்
குங்கும மைந்து மலைபடு திரவியம்.

மலைபடு திரவியம் ஐந்தின் பெயர்:—அகில், மிளகு, கோட்டம், தக்கோலம், குங்குமம். (ரு)

### ஆறங்கத்தின் பெயர்.

90. மந்திரஞ் சூத்திர வியாகரண நிகண்டு
சந்தோ பிசித நிருத்தஞ் சோதிட
மென்றன வேதத் தாறங்க மென்ப.

ஆறங்கத்தின் பெயர்:—மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம். (சு)

### நன்னாட்டமைதி அறுவகைப் பெயர்.

91. செல்வம் விளையுள் பல்வளஞ் செங்கோல்
கொல்குறும் பின்மை கொடும்பிணி யின்மையென்
றிவ்வகை யாறு நன்னாட் டமைதி.

நன்னாட்டமைதி அறுவகைப் பெயர்:—செல்வம், விளையுள், பல்வளம், செங்கோல், குறும்பின்மை, பிணியின்மை. (சு)

### போகபூமி அறுவகைப் பெயர்.

92. ஆதியரி வஞ்ச நல்லரி வஞ்ச
மேமத வஞ்ச மேம வஞ்சந்
தேவ குருவ முத்தா குருவமெனப்
போக பூமி யறுவகைப் படுமே.

போகபூமி அறுவகைப் பெயர்:—ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், ஏமவஞ்சம், தேவகுருவம், உத்தாகுருவம். (சு)

### உட்பகை ஆறின் பெயர்.

93. காமங் குரோத மோக முலோப
மதமாச் சரியமுட் பகையா றென்ப.

உட்பகை ஆறின் பெயர்:—காமம், குரோதம், மோகம், உலோபம், மதம், மாச்சரியம். (சு)

அறுவகைச் சுவையின் பெயர்.

94. தித்தித்தல் கூர்த்த றுவர்த்தல் கார்த்தல்
கைத்தல் புளித்தலோ டறுவகைச் சுவையே.

அறுவகைச் சுவையின் பெயர்:—தித்தித்தல், கூர்த்தல், துவர்த்தல், கார்த்தல், கைத்தல், புளித்தல். (சு)

அறுவகைப் புறச்சமயத்தின் பெயர்.

95. உலகாயதம் புத்தஞ் சமண மீமாஞ்சை
பாஞ்ச ராத்திரம் பாட்டா சாரிய
மிவ்வகை யாறும் புறச்சமய மாகும்.

அறுவகைப் புறச்சமயத்தின் பெயர்:—உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம். (சு)

உட்சமயம் ஆறின் பெயர்.

96. வைரவம் வாமங் காளாமுக மாவிரதம்
பாசுபதஞ் சைவமென் றுட்சமய மாறே.

உட்சமயம் ஆறின் பெயர்:—வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம். (சு)

பெரியோர் எழுவகைப் பெற்றியின் பெயர்.

97. அறமும் பொருளு மின்பமும் மன்பும்
பொறுமையும் புகழு மதிப்பு மென்றிவை
எழுவகைப் பெற்றி பெரியோ ரியல்பே.

பெரியோர் எழுவகைப் * பெற்றியின் பெயர்:—அறம், பொருள், இன்பம், அன்பு, பொறுமை, புகழ், மதிப்பு. (எ)

எழுவகைத் தாதின் பெயர்.

98. இரதமு முதிரமு மென்புந் தோலும்
தசையு மூளையுஞ் சுக்கிலமு மென்றிவை
எழுவகைத் தாது வெனப்பெயர் பெறுமே.

எழுவகைத் தாதின் பெயர்:— † இரதம், உதிரம், என்பு, தோல், தசை, மூளை, சுக்கிலம். (எ)

எழுவகை நதியின் பெயர்.

99. கங்கை யமுனை நருமதை சரச்சுவதி
பொங்குகா விரிகுமரி கோதா வரியென்
றேழு பெருவகை நதியென வுரைப்பர்.

* பெற்றி - தன்மை. † இரதம் - மச்சை.

எழுவகை நதியின் பெயர்:—கங்கை, யமுனை, நருமதை, சரச்சுவதி, காவிரி, குமரி, கோதாவரி. (எ)

## எழுவகை நரகத்தின் பெயர்.

100. பெருங்களிற்று வட்டம் பெருமணல் வட்ட
மெரிபரல் வட்ட மரிபடை வட்டம்
புகையின் வட்டம் பெருங்கீழ் வட்டம்
இருளின் வட்டமென வெழுவகை நரகம்.

எழுவகை நரகத்தின் பெயர்:—பெருங்களிற்றுவட்டம், பெருமணல்வட்டம், எரிபரல்வட்டம், அரிபடைவட்டம், புகைவட்டம், பெருங்கீழ்வட்டம், இருள்வட்டம். (எ)

## எழுவகைப் பிறப்பின் பெயர்.

101. தேவு மாவுந் தாபரமும் பறவையு
மேவிய மக்க ளூர்வநீ ரனவும்
பேசி னெழுவகைப் பிறப்பென மொழிப.

எழுவகைப் பிறப்பின் பெயர்:—* தே, † மா, தாபரம், பறவை, மக்கள், ஊர்வன, நீர்வாழ்வன. (எ)

## எழுவகை யோனிபேத விரிவின் பெயர்.

102. அவற்றுள்,
‡ தேவ ரீரேழ் மக்க ளொன்பான்
றாப ரிருபா னூர்வன பன்னொன்று
நீரன விலங்கு புள்ளிரல் பப்பத்தா
மாகவெண் பத்தினு விலக்க பேத
மேவும் யோனி யாமென் றுரைப்பர்.

எழுவகை யோனிபேத விரிவின் பெயர்:—தேவர் பதினான்கு நூறாயிரம், மக்கள் ஒன்பது நூறாயிரம், தாபரம் இருபது நூறாயிரம், ஊர்வன பதினொரு நூறாயிரம், நீர்வாழ்வன பத்து நூறாயிரம், விலங்கு பத்து நூறாயிரம், புள் பத்து நூறாயிரம், ஆக எண்பத்தினான்கு நூறாயிரம்.

---

* தே-தெய்வம்; † மா-மிருகம்.

‡ ஊர்வன பன்னொன்று மொன்பதா மானிடவர்
நீர்பறவை நாற்கா லிரல்பத்தாம்—சீரிய
தெய்வம் பதினாலாம் தாபரங்க ளிருபதென்
றெய்தும் பிறப்பிவைக ளேழு.

அவற்றுள், தன்னை அறிந்தவர், அறியாதவரின் பெயர்.

103. தன்னை யறிந்தவர் சாயுச்சி யத்தர்
பின்னையர் மீண்டு பிறப்போ ரென்ப.

அவற்றுள், தன்னை அறிந்தவர் பெயர்:—சாயுச்சியத்தர்;
தன்னை அறியாதவர் பெயர் - பிறப்போர்.

நாட்டேழ் குற்றத்தின் பெயர்.

104. வெட்டில் கிளியே நாவா யேனந்
தொட்டியர் கள்வர் சோனைப் பெரும்புய
லட்ட நாட்டேழ் குற்ற மாகும்.

நாட்டேழ் குற்றத்தின் பெயர்:—* வெட்டில், கிளி, நாவாய், ஏனம்,
தொட்டியர், கள்வர், பெருப்புயல். (எ)

அட்ட மூர்த்தவகைப் பெயர்.

105. பார்நீர் தேயு வாயுவா காயஞ்
சூரியன் சந்திர னியமான னென்ன
வாராய்ந் துரைத்த வட்ட மூர்த்தம்.

அட்ட மூர்த்தவகைப் பெயர்:—பார், நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரி
யன், சந்திரன், இயமானன். (அ)

அட்டமாசித்தியின் பெயர்.

106. அணிமா மகிமா கரிமா விலகிமா
பிராத்தி பிராகாமிய மீசத்துவம் வசித்துவமென்
றோதற் கரிய வட்டமா சித்தி.

அட்டமாசித்தியின் பெயர்:—அணிமா, மகிமா, கரிமா, இலகிமா,
பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம். (அ)

அட்டாங்க யோகத்தின் பெயர்.

107. இயம நியம மாதனம் பிராணா
யாமம் பிரத்தியா காரந் தாரணை
தியானஞ் சமாதியென் றட்டாங்க யோகம்.

அட்டாங்க யோகத்தின் பெயர்:—இயமம், நியமம், ஆதனம், பிராணா
யாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி. (அ)

அவற்றுள், இயமம் ஆவது.

108. கொல்லா விரத மெய்ம்மை கூறல்
கள்ளாமை பிறர்பொருட் காத லின்மை
மெய்வகை யிந்திய மடக்கலு மியமம்.

---

* விட்டில் எனவும் வழங்கும்.

அவற்றுள், இயமம் ஆவது:—கொல்லாமை, மெய்ம்மைகூறல், கள்ளாமை, பிறர்பொருட்காதலின்மை, இந்திரியமடக்கல். (ரு)

நியமம் ஆவது.

109. தவமே சௌசந் தத்துவநூ லோர்தன்
மனமுவந் திருத்த றெய்வம் வழிபட
னினையுங் காலை நியம மாகும்.

நியமம் ஆவது:—தவம், சௌசம், தத்துவநூலோர்தல், பெற்றதுகொண்டு மகிழ்தல், தெய்வம் வழிபடல். (ரு)

ஆதனம் ஆவது.

110. பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி
சுவத்திகஞ் சுகாதன மென்ப வாதனம்.

ஆதனம் ஆவது:—பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சுவத்திகம், சுகாதனம். (சு)

பிராணாயாமம் ஆவது.

111. இரேசக பூரக கும்பக மேற்றி
வாயுவை யடக்கல் பிராணா யாமம்.

பிராணாயாமம் ஆவது:—பிராணவாயுவை யிரேசக பூரக கும்பகஞ் செய்தல்.

பிரத்தியாகாரம் ஆவது.

112. உரையா துபாதியை நீக்கி யுபாதியைப்
பிரியா துண் ணோக்கல் பிரத்தியா காரம்.

பிரத்தியாகாரம் ஆவது:—சீலவுபாதியை நீக்கிப் பிரபஞ்சவுபாதியைச் சிவசொரூபமாகப் பார்த்தல்.

தாரணை ஆவது.

113. உற்றுயிர் பூத மனைத்தி லொடுக்கித்
தற்பர னாடுத றாரணை யாகும்.

தாரணை ஆவது:—முழங்கால், குதம், இதயம், கண்டம், கபாலமாகிய இத்தானங்களிற் பிருதிவி முதலிய பஞ்சபூதங்களை யொடுக்கி, அத்தானங்களில் பிரமன் முதலிய பஞ்சமூர்த்திகளையும் பாவித்தல்.

தியானம் ஆவது.

114. அவமாம் புலத்தை யடக்கி மனத்தி
சிவயோகஞ் சேர்த றியான மாகும்.

தியானம் ஆவது:—ஐம்புலத்தையும் அந்தக்கரணத்தையு மடக்கிச் சிவயோகஞ் சேர்தல்.

## சமாதி ஆவது.

115. இந்துவும் பானுவும் விந்துவு நாதமுஞ்
சந்தியில் வைத்தல் சமாதி யாகும்.

சமாதி ஆவது:— ஆதாரதரிசனத்தையும் நிராதாரதரிசனத்தையுங் கடந்து மீதானத்து நிற்றல்.

## எண்வகைக் காட்சியின் பெயர்.

116. அறமையப் படாமை யவாவொன் றின்மை
யறிவுவர்ப் பின்மை மூட மறுத்த
லறப்பழி மறுத்த லழிந்தோரை நிறுத்த
லறத்தை விளக்க லறுசமயத் தவர்க்கன்
பெவற்றிய லாகு மெண்வகைக் காட்சி.

எண்வகைக் காட்சியின் பெயர் :— அறத்தை ஐயப்படாது செய்தல், அவா சிறிதுமில்லாமை, உவர்ப்பில்லாத அறிவுடைமை, மூட மறுத்தல், மிகவும் பழிமறுத்தல், அழிந்தோரை நிறுத்தல், அறத்தை விளக்கல், அறுசமயத்தவர்க்கன்பு. (அ)

## அருகன் எண்குணத்தின் பெயர்.

117. அநந்த ஞான மநந்த தரிசனம்
அநந்த வீரிய மநந்த சுகமே
நாம மின்மை கோத்திர மின்மை
யாயு வின்மை யழியா வியல்பென்
றேயுந் தகையவா மருகனெண் குணமே.

அருகன் எண்குணத்தின் பெயர்:— அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு. (அ)

## எண்வகைக் குற்றத்தின் பெயர்.

118. ஞான வாணியந் தரிசன வாணியம்
வேத நீய மோக நீய
மாயு நாமங் கோத்திர நாமங்
காயவந் தாயம் வாயுவந் தாயமென்
றேயு மெண்வகைக் குற்ற மென்ப.

எண்வகைக் குற்றத்தின் பெயர்:— ஞானவாணியம், தரிசனவாணியம், வேதநீயம், மோகநீயம், ஆயுநாமம், கோத்திரநாமம், காயவந்தாயம், வாயுவந்தாயம். (அ)

அட்ட மங்கலத்தின் பெயர்.

119. கவரி நிறைகுடங் கண்ணாடி தோட்டி
முரசு விளக்குப் பதாகை யிணைக்கய
லளவில் சிறப்பி னட்டமங் கலமே.

அட்ட மங்கலத்தின் பெயர்:—கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை, இணைக்கயல். (அ)

சிறப்பில்லா எண்வகைப் பெயரெச்சத்தின் பெயர்.

120. சிறப்பில் சிதடு முறுப்பில் பிண்டமும்
கூனுங் குறளு மூமையுஞ் செவிடு
மாவு மருளு மென்ப மக்கட்
கேயுஞ் சிறப்பிலா வெண்பெய ரெச்சம்.

சிறப்பில்லா எண்வகைப் பெயரெச்சத்தின் பெயர்:—* சிதடு, உறுப்பில்பிண்டம், கூன், குறள், ஊமை, செவிடு, † மா ‡ மருள். (அ)

அட்ட கிரியின் பெயர்.

121. இமய மந்தரங் கைலை விந்த
நிடத மேமகூட நீலங் கந்தமென்
றெண்வகை வெற்புக் கியன்ற பெயரே.

அட்ட கிரியின் பெயர்:—இமயம், மந்தரம், கைலை, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தம். (அ)

அட்ட கணிதத்தின் பெயர்.

122. சங்கலி தம்விப கலிதம் குணனம்
பாகாரம் வர்க்கங் கனமூல மெட்டே.

அட்ட கணிதத்தின் பெயர்:—§ சங்கலிதம், ¶ விபகலிதம், $ குணனம், || பாகாரம், ** வர்க்கம், வர்க்கமூலம், †† கனம், கனமூலம். (அ)

அட்ட பரிசத்தின் பெயர்.

123. தட்டல் பற்ற றடவ றீண்டல்
குத்தல் வெட்டல் கட்ட லூன்ற
லெட்டு முடம்பின் பரிச மாகும்.

அட்ட பரிசத்தின் பெயர்:—தட்டல், பற்றல், தடவல், தீண்டல், குத்தல், வெட்டல், கட்டல், ஊன்றல். (அ)

---

* சிதடு-குருடு. † மா-மிருகத்தன்மை. ‡ மருள் - உறுப்புமயக்கம். § சங்கிலிதம்-கூட்டல். ¶ விபகலிதம் - கழித்தல். $ குணனம் - பெருக்கல். || பாகாரம் - பங்கிடல். ** வர்க்கம் - சமமாகிய ஈரெண்ணின் பெருக்கம். †† கனம் - சமமாகிய மூவெண்ணின் பெருக்கம்.

### நவ மணியின் பெயர்.

வைர முத்த மாணிக்கம் பவளம்
மரகதங் கோமே தகம்வை டூரியம்
நீலம் புருட ராக மென்ன
நானிலம் புகழு நவமணிப் பெயரே.

ணியின் பெயர்:—வைரம், முத்து, மாணிக்கம், பவளம், மரக ம், கோமேதகம், வைடூரியம், நீலம், புருடராகம். (க)

### நவ புண்ணியத்தின் பெயர்.

எதிர்கொளல் பணித லிருத்தல்கால் கழுவல்
விரைமலர் தூவல் தூபம் விளக்கிகே
யறுசுவை யுண்டி யமைத்தோர்க் குதவுதல்
புகழ்தனவ புண்ணியத் தினமை மாகும்.

ண்ணியத்தின் பெயர்:—எதிர்கொளல், பணிதல், இருத்தல், ல்கழுவல், அருச்சித்தல், தூபங்கொடுத்தல், தீபங்காட்டல், றுசுவையுண்டி யமைத்தோர்க் குதவுதல், புகழ்தல். (க)

### நவ தாரணையின் பெயர்.

நாம தாரணை வச்சிர தாரணை
மாயா தாரணை சித்திர தாரணை
சத்த தாரணை வத்துத் தாரணை
சதுரங்க தாரணை செய்யுட் டாரணை
நிறைவுகுறை வாகிய வெண்பொருட் டாரணை
நவதா ரணையி னமை மாகும்.

ணையின் பெயர்:—நாமதாரணை, வச்சிரதாரணை, மாயாதாரணை, த்திரதாரணை, சத்ததாரணை, வத்துத்தாரணை, சதுரங்கதாரணை, ய்யுட்டாரணை, நிறைவுகுறைவாகிய வெண்பொருட்டா ணை. (க)

### நவ தாளத்தின் பெயர்.

சமதாள மருமதாளமட தாளம்
படிம தாளஞ் சயதா ளம்மே
மட்டிய தாளம் விடதாள நிவிர்த
தாளந் துருவ தாள மென்ன
நவதா ளத்தி னமை மாகும்.

த்தின் பெயர்:—சமதாளம், அருமதாளம், அடதாளம், படிம ளம், சயதாளம், மட்டியதாளம், விடதாளம், நிவிர்ததாளம், ருவதாளம். (க)

நாடக நவரதப் பெயர்.

128. சிருங்காரம் வீரியம் பெருநகை கருணை
இரௌத்திரங் குற்சை சாந்தமற் புதம்பய
நாடகத் தியலு நவரத மாகும்.

நாடக நவரதப் பெயர்:—சிருங்காரம், வீரியம், பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம், பயம். (கூ)

சிற்பத்தொழிலின் பத்துறுப்பின் பெயர்.

129. கல்லு முலோகமுஞ் செங்கலு மரமு
மண்ணுஞ் சுதையுந் தந்தமும் வண்ணமுங்
கண்ட சருக்கரையு மெழுகு மென்றிவை
பத்தே சிற்பத் தொழிற்குறுப் பாகும்.

சிற்பத்தொழிலின் பத்துறுப்பின் பெயர்:—கல், உலோகம், செங்கல், மரம், மண், சுதை, தந்தம், வண்ணம், கண்டசருக்கரை, மெழுகு. (கo)

உயிர்வேதனை பன்னிரண்டின் பெயர்.

130. அனலுஞ் சீதமும் வாதமு மசனியும்
புனலுமா யுதமும் விடமு மருந்தும்
பசியுந் தாகமும் பிணியுமுனி வுறுமையு
முயிரின் வேதனை யோரீ ராறே.

உயிர்வேதனை பன்னிரண்டின் பெயர்:—அனல், சீதம், வாதம், அசனி, புனல், ஆயுதம், விடம், மருந்து, பசி, தாகம், பிணி, முனிவுறுமை. (கஉ)

பதினெண் யாகங்களின் பெயர்.

131. சோதிட் டோம மங்கிட் டோம
முத்தியஞ் சோடசி வாச பேய
மத்தி ராத்திரஞ் சோம யாகஞ்
சாதுர் மாசியம் பவுத்திர மேதஞ்
மணிபுண் டரீக மங்கி சயனே
யிராச சூய மச்சுவ மேதம்
விச்சுவ தித்துப் பிரம மேதம்
பிராணவ மேதம் பாசுபந் தம்மெனப்
பாற்படு பதினெண் யாக மென்ப.

பதினெண் யாகங்களின் பெயர்:—சோதிட்டோமம், அங்கிட்டோமம், உத்தியம், சோடசி, வாசபேயம், அத்திராத்திரம், சோமயாகம், சாதுர்மாசியம், பவுத்திரமேதம், சௌத்திராமணி, புண்டரீகம்,

அங்கிசயம், இராசசூயம். அச்சுவமேதம், விச்சுவஜித்து, பிரம மேதம், பிராணவமேதம், பசுபந்தம். (கஅ)

## பதினெண் புராணங்களின் பெயர்.

132. * மச்சங் கூர்மம் வராகம் வாமனம்
பதுமம் வைணவம் பாகவதம் பிரமஞ்
சைவ மிலிங்கம் பௌடிய நாரதியங்
காருடம் பிரம கைவர்த்தங் காந்த
மார்க்கண் டேயமாக் கினேயம் பிரமாண்டம்
பாற்படு பதினெண் புராண மாகும்.

பதினெண் புராணங்களின் பெயர்:—† மச்சம், கூர்மம், வராகம், வாமனம், பதுமம், வைணவம், பாகவதம், பிரமம், சைவம், இலிங்கம், பௌடியம், நாரதீயம், காருடம், பிரமகைவர்த்தம், காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமாண்டம். (கஅ)

## உபபுராணம் பதினெட்டின் பெயர்.

133. நாரசிங்கஞ் சநற்கு மாரம்
நாரதீயம் சிவதன்மந் துருவாசம்
நந்தி கேச்சுர மவுசனங் காளிகம்
வாருணஞ் சாம்பேசம் பாராசரம் பார்க்கவம்
காபில மானவம் வாசிட்ட லைங்கம்
சவுர மாரீச பிரமாண்ட மென்னும்
ஈரொன் பானுப புராண மென்ப.

---

* மச்சம், கூர்மம், வராகம், வாமனம், சைவம், இலிங்கம், பௌடியம், காந்தம், மார்க்கண்டேயம், பிரமாண்டம் இப்பத்துஞ் சிவபுராணங்கள்; வைணவம், பாகவதம், காருடம், நாரதீயம் இந்நான்கும் விட்டுணு புராணங்கள்; பிரமம், பதுமம் இவ்விரண்டும் பிரம புராணங்கள்; ஆக்கினேயம் அக்கினிபுராணம்; பிரமகைவர்த்தம் சூரியபுராணம்.

† மச்சம் பதினாலாயிரங் கிரந்தம். கூர்மம் ஆறாயிரங் கிரந்தம். வராகம் இருபத்து நாலாயிரங் கிரந்தம். வாமனம் பதினாலாயிரங் கிரந்தம். பதுமம் ஐம்பத்தையாயிரம் கிரந்தம். வைணவம் ஆறாயிரங் கிரந்தம். பாகவதம் பதினெண்ணாயிரங் கிரந்தம். பிரமம் பதினாயிரங் கிரந்தம். சைவம் இருபத்துநாலாயிரங் கிரந்தம். இலிங்கம் பதினோராயிரங் கிரந்தம். பௌடியம் முப்பத்தோராயிரங் கிரந்தம். நாரதீயம் இருபத்தையாயிரங் கிரந்தம். காருடம் ஆறாயிரங் கிரந்தம். பிரமகைவர்த்தம் பன்னீராயிரங் கிரந்தம். காந்தம் இலட்சங் கிரந்தம். மார்க்கண்டேயம் முப்பத்திராயிரங் கிரந்தம். ஆக்கினேயம் எண்ணாயிரங் கிரந்தம். பிரமாண்டம் பன்னீராயிரங் கிரந்தம்.

உபபுராணம் பதினெட்டின் பெயர்:— நாரசிங்கம், சநற்குமாரம், நாரதீயம், சிவதன்மம், துருவாசம், நந்திகேச்சுரம், அவுசனம், காளீகம், வாருணம், சாம்பேசம், பராசரம், பார்க்கவம், காபிலம், மானவம், வாசிட்டலிங்கம், சவுரம், மாரீசம், பிரமாண்டம். ()

தருமநூல் பதினெட்டின் பெயர்.

134. மநுவே யத்திரி விண்டு வாசிட்டம்
யமமா பத்தம்பம் யாஞ்ஞ வற்கியம்
பாராசர மாங்கிர சமுச னம்மே
காத்தி யாயனம் சமவர்த்தம் வியாசம்
பிரகற் பதிசங் கலிதஞ் சாதான்மம்
கௌதமந் தக்க மீரொன் பானும்
தரும நூலின் பெயரெனச் சாற்றுவர்.

தருமநூல் பதினெட்டின் பெயர்:—மநு, அத்திரி, விட்டுணு, வாசிட்டம், யமம், ஆபத்தம்பம், யாஞ்ஞவற்கியம், பராசரம், ஆங்கிரசம், உசனம், காத்தியாயனம், சமவர்த்தம், வியாசம், பிரகற்பதி, சங்கலிதம், சாதான்மம், கௌதமம், தக்கம். (கஅ)

யாக்கையின் பதினேண் குற்றத்தின் பெயர்.

135. பசியுநீர் வேட்டலும் பயமும் வெகுளியு
முவகையும் வேண்டலு நினைப்பு முறக்கமு
நரையுநோய் படுதலு மரணமும் பிறப்பு
மதமு மின்பமு மதிசயமும் வியர்த்தலுங்
கேத முங்கை யறவு மென்றிவை
மாயயாக் கைக்குப் பதினெண் குற்றம்
இக்குற்ற நீக்கியோர் வச்சிர காயர்.

யாக்கையின் பதினெண் குற்றத்தின் பெயர்:—பசி, நீர்வேட்டல், பயம், வெகுளி, * உவகை, † வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, நோய்படுதல், மரணம், பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், ‡ கேதம், § கையறவு. (கஅ)

மூன்றாவது
ஐயர்வகை முற்றிற்று.

ஆக சூத்திரம் ௧௩௫.

* உவகை - மகிழ்கூர்தல் † வேண்டல் - குறையிரத்தல். ‡ கேதம் - துன்பம் § கையறவு - செயலறுதல்.

நான்காவது

# அவனி வகை.

## மண்ணுலகின் பெயர்.

1. அவனி வைய மகலிடங் காசினி
புவனி புடவி பூதலம் பூமி
புவனம் படிபுவி பொழிலே பூவே
சகமே தினிதரை தாலஞ் சாந்தை
யுகம்பார் தரணி யுலோகந் தாரணி
தலநீர் வரைப்புத் தராதல மகாதல
நிலம்பிரு திவிதரா நிலையே ஞால
மசலைபூ வலய மளக்கர் மண்டலம்
பவன மகநடு பாலம் விபுலங்
கோத்திரை குவலயங் குவ்வே கோநேமி
தாத்திரி வேலா வலயந் தரித்திரி
திணைமகி சக்கரம் பொறைநகம் பாரி
வசுந்தரை வசுமதி வசுதைமண் ணுலகே.

மண்ணுலகின் பெயர்:—அவனி, வையம், அகலிடம், காசினி, புவனி, புடவி, பூதலம், பூமி, புவனம், படி, புவி, பொழில், பூ, சகம், மேதினி, தரை, தாலம், சாந்தை, யுகம், பார், தரணி, உலோகம், தாரணி, தலம், நீர்வரைப்பு, தராதலம், மகாதலம், நிலம், பிருதிவி, தரம், நிலை, ஞாலம், அசலை, பூவலயம், அளக்கர், மண்டலம், பவனம், அகம், நடு, பாலம், விபுலம், கோத்திரை, குவலயம், கு, கோ, நேமி, தாத்திரி, வேலாவலயம், தரித்திரி, திணை, மகி, சக்கரம், பொறை, நகம், பாரி, வசுந்தரை, வசுமதி, வசுதை. (௫௮)

## இதுவுமது.

2. பூதிய மகிலம் புரையே பாரமென்
றோதிய பிறவு மப்பெயர்க் குரித்தே.

ஷெ. மண்ணுலகின் பெயர்:—பூதியம், அகிலம், புரை, பாரம். (௪)

## நவ கண்டத்தின் பெயர்.

3. வடபால் விதேகந் தென்பால் விதேகங்
கீழ்பால் விதேக மேல்பால் விதேகம்
வடபா லிரேவதந் தென்பா லிரேவதம்

வடபாற் பாதந் தென்பாற் பாதம்
மத்திம கண்ட மென்ன வருபவை
நற்பெரு நாவலந் தீவி னவகண்டம்.

நவ கண்டத்தின் பெயர்:—வடபால்விதேகம், தென்பால்விதேகம், கீழ்பால்விதேகம், மேல்பால்விதேகம், வடபாலிரேவதம், தென்பாலிரேவதம், வடபாற்பாதம், தென்பாற்பாதம், மத்திமகண்டம். (௯)

## பூவலயத்தின் பெயர்.

4. பூகோளம் பூகண்டம் பூவலய மென்ப.

பூவலயத்தின் பெயர்:—பூகோளம், பூகண்டம். (௨)

## ஏழு தீவின் பெயர்.

5. முதலது நாவலந் தீவே யுடைய
இறலியின் றீவே கிரவுஞ்சத் தீவே
குசையின் றீவே யிலவந் தீவே
தெங்கந் தீவே புட்கரத் தீவென்
றோத்திய பெருந்தீ வேழிற்கும் பெயரே.

ஏழு தீவின் பெயர்:—நாவல், இறலி, கிரவுஞ்சம், குசை, இலவம், தெங்கு, புட்கரம். (௭)

## ஏழ் பொழிலின் பெயர்.

6. ஏழ்பெருந் தீவுமேழ் பொழிலெனப் படுமே.

ஏழ் பொழிலின் பெயர்:—ஏழ்பெருந்தீவு. (௧)

## கீழேழுலகின் பெயர்.

7. அதலம் விதலம் சுதலம் நிதலம்
தராதலம் ரசாதலம் பாதல வுலகம்
என்றிவை கீழே ழுலகெனப் படுமே.

கீழேழுலகின் பெயர்:—அதலம், விதலம், சுதலம், நிதலம், தராதலம், ரசாதலம், பாதலம். (௭)

## நரகத்தின் பெயர்.

8. நிரயமும் பவர்க்கமுங் கும்பியும் புலவு
மூழ்த்தலு மபாரமு மள்ளலு மளறு
மதோகதி பாவ மவாந்த மருஞ்சிறை
யிருளு மென்ப விவைநர கப்பெயர்.

நரகத்தின் பெயர்:—நிரயம், பவர்க்கம், கும்பி, புலவு, ஊழ்த்தல், அபாரம், அள்ளல், அளறு, அதோகதி, பாவம், அவாந்தம், அருஞ்சிறை, இருள். (௧௫)

### ஏழு நரகங்களின் பெயர்.

9. கூட சாலங் கும்பி பாக
மள்ள லதோகதி யார்வம் பூதி
செந்துவென் றேழுந் தீநர கப்பெயர்.

ஏழு நரகங்களின் பெயர்:—கூடசாலம், கும்பிபாகம், அள்ளல், அதோகதி, ஆர்வம், பூதி, செந்து. (எ)

### நாட்டின் பெயர்.

10. பைதிர மண்டிலம் பாடி தேயந்
தண்ணடை நீவரங் கோட்டஞ் சனபதஞ்
சும்மை யகலுள் கண்ட மேணியென்
றின்ன விராச்சிய முலகுநா டென்ப.

நாட்டின் பெயர்:—பைதிரம், மண்டிலம், பாடி, தேயம், தண்ணடை, நீவரம், கோட்டம், சனபதம், சும்மை, அகலுள், கண்டம், ஏணி, இராச்சியம், உலகு. (கச)

### உலகின் பொதுப்பெயர்.

11. புவன நாடு பொழிறலம் புடவி
பவன மிராச்சிய முலகின் பொதுப்பெயர்.

உலகின் பொதுப்பெயர்:—புவனம், நாடு, பொழில், தலம், புடவி, பவனம், இராச்சியம். (எ)

### காசியின் பெயர்.

12. காசிவா ராணசி.

காசியின் பெயர்:—வாராணசி. (க)

### காஞ்சியின் பெயர்.

13. கச்சி காஞ்சி.

காஞ்சியின் பெயர்:—கச்சி. (க)

### சிதம்பரத்தின் பெயர்.

14. மன்றஞ் சிதம்பரம்.

சிதம்பரத்தின் பெயர்:—மன்றம். (க)

### திருவாரூரின் பெயர்.

15. கமலை திருவாரூர்.

திருவாரூரின் பெயர்:—கமலை.

உறையூரின் பெயர்.

16. கோழி யுறையூர்.
உறையூரின் பெயர்:—கோழி. (க)

மதுரையின் பெயர்.

17. கூடன் மதுரை.
மதுரையின் பெயர்:—கூடல். (க)

கருவூரின் பெயர்.

18. கருவூர் வஞ்சி.
கருவூரின் பெயர்:—வஞ்சி. (க)

கடாரத்தின் பெயர்.

19. காழகங் கடாரம்.
கடாரத்தின் பெயர்:—காழகம். (க)

சிங்களத்தின் பெயர்.

20. ஈழஞ் சிங்களம்.
சிங்களத்தின் பெயர்:—ஈழம். (க)

மிதிலையின் பெயர்.

21. மிதிலை விதேகை.
மிதிலையின் பெயர்:—விதேகை. (க)

அவந்திநகரின் பெயர்.

22. அவந்தி யுஞ்சை.
அவந்திநகரின் பெயர்:—உஞ்சை. (க)

அரித்துவாரத்தின் பெயர்.

23. அரித்து வார மாயா புரியே.
அரித்துவாரத்தின் பெயர்:—மாயாபுரி. (க)

காவிரிப்பூம்பட்டினத்தின் பெயர்.

24. காக நதிபுகார் காவிரிப்பூம் பட்டினம்.
காவிரிப்பூம்பட்டினத்தின் பெயர்:—காகநதி, புகார். (உ)

புரத்தின் பெயர்.

25. புரியென் கிளவி புரமென் றுரும்.
புரத்தின் பெயர்:—புரி. (க)

சேரியின் பெயர்.

26. பாடி யென்பது சேரி யாகும்.

சேரியின் பெயர்:—பாடி. (க)

முனைமேற் சென்றோர் உறைபதியின் பெயர்.

27. பாசறை முனைமேற் சென்றோ ருறைபதி.

முனைமேற் சென்றோர் உறைபதியின் பெயர்:—பாசறை. (க)

ஊரின் பெயர்.

28. பூக்கம் கேடகம் பூரியம் பூண்டி
பாக்கம் புரிகெடி பதிநகர் சும்மை
சேரி மண்டிலம் சேர்வு குப்பங்
காடு குடிக்காடு வேலி யகலுள்
வைப்புக் கிராமம் வசதி யருப்ப
மாதர மில்லிடம் புகலிடம் புரமே
பாழி நத்தங் கோசர மொக்க
முறையு ளிருக்கை யூரின் பெயரே.

ஊரின் பெயர்:—பூக்கம், கேடகம், பூரியம், பூண்டி, பாக்கம், புரி, கெடி, பதி, நகர், சும்மை, சேரி, மண்டிலம், சேர்வு, குப்பம், காடு, குடிக்காடு, வேலி, அகலுள், வைப்பு, கிராமம், வசதி, அருப்பம், ஆதாரம், இல்லிடம், புகலிடம், புரம், பாழி, நத்தம், கோசரம், ஒக்கம், உறையுள், இருக்கை. (௩௨)

சிற்றூரின் பெயர்.

29. பேடுங் குடியும் பெருந்தண் ணடையும்
பட்டு நொச்சியும் பள்ளியு மென்றிவை
சிற்றூர் தனக்குச் சிறந்த பெயரே.

சிற்றூரின் பெயர் :— பேடு, குடி, தண்ணடை, பட்டு, நொச்சி, பள்ளி. (௬)

நிலத்தின் பெயர்.

30. மாவுந் திணையும் வேலியு நிலமெனல்.

நிலத்தின் பெயர்:—மா, திணை, வேலி. (௩)

இதுவுமது.

31. பூவு மப்பெயர் புகலப் பெறுமே.

ஷ நிலத்தின் பெயர்:—பூ. (க)

வழியின் பெயர்.

32. அதரு மயனமு மாறு மடைவும்
பதவையும் வதியு மத்தமு மார்க்கமுங்
கடவையுங் கிறியு நடையும் போக்கு
மிடவையுந் தாரியுந் தாரையு மியவையுந்
தெருவு மொழுக்கமுஞ் செப்பமுஞ் சுரமுஞ்
சரியு நெறியுஞ் செலவுந் தரங்கும்
பட்டமும் வணமுங் காலும் பதமும்
வட்டையும் வகிரும் வாரியும் வழியெனல்.

வழியின் பெயர்:—அதர், அயனம், ஆறு, அடைவு, பதவை, வதி, அத்தம், மார்க்கம், கடவை, கிறி, நடை, போக்கு, இடவை, தாரி, தாரை, இயவை, தெரு, ஒழுக்கம், செப்பம், சுரம், சரி, நெறி, செலவு, தரங்கு, பட்டம், வணம், கால், பதம், வட்டை, வகிர், வாரி. (௩௧)

அருநெறியின் பெயர்.

33. அத்தமுங் கடமுஞ் சுரமு மருநெறி.

அருநெறியின் பெயர்:—அத்தம், கடம், சுரம். (௩)

யானை செல்வழியின் பெயர்.

34. தண்டம் யானை சென்ற வழியே.

யானை செல்வழியின் பெயர்:—தண்டம். (௧)

இழிந்தேறும் வழியின் பெயர்.

35. படுக ரென்ப திழிந்தே றும்வழி.

இழிந்தேறும் வழியின் பெயர்:—படுகர். (௧)

சிறுவழியின் பெயர்.

36. விடங்கர் சிறுவழி.

சிறுவழியின் பெயர்:—விடங்கர். (௧)

நீள்வழியின் பெயர்.

37. நீள்வழி யளக்கர்.

நீள்வழியின் பெயர்:—அளக்கர். (௧)

கவர் வழியின் பெயர்.

38. கவலை கவர்வழி யின்கட் டுரையாம்.

கவர் வழியின் பெயர்:—கவலை. (௧

முதுவரம்பு வழியின் பெயர்.

39. மஞ்சின் முதிய வரம்பின் வழியே.

முதுவரம்பு வழியின் பெயர்:—மஞ்சில். (க)

புதுவரம்பு வழியின் பெயர்.

40. மரிசி புதிய வரம்பின் வழியே.

புதுவரம்பு வழியின் பெயர்:—மரிசி. (க)

பள்ளத்தின் பெயர்.

41. ஞெள்ள றாழ்வு படுக ரவல்குழி
பள்ள மிழிவு பயம்புதாழ் நிலமே.

பள்ளத்தின் பெயர்:—ஞெள்ளல், தாழ்வு, படுகர், அவல், குழி, இழிவு, பயம்பு. (எ)

மேட்டின் பெயர்.

42. உயர்நிலந் திடர்சுவ லோங்க றிட்டை
மிசையே மோடு மேடென் றாகும்.

மேட்டின் பெயர்:—உயர்நிலம், திடர், சுவல், ஓங்கல், திட்டை, மிசை, மோடு. (எ)

சிறு திட்டையின் பெயர்.

43. பாறை மேடு முரம்பு பதுக்கை
யாகு முயர்சிறு திட்டை யதன்பெயர்.

சிறு திட்டையின் பெயர்:—பாறை, மேடு, முரம்பு, பதுக்கை. (ச)

குப்பை மேட்டின் பெயர்.

44. குப்பை மேடு கருகுவை யென்ப
கொம்மைதிட ரென்றுங் கூறப் படுமே.

குப்பை மேட்டின் பெயர்:—கரு, குவை, கொம்மை, திடர். (ச)

நடுவின் பெயர்.

45. நனந்தலை நாப்பண் மத்திய நள்ளு
வொத்த நாவே ரணவு வயங்கிடை
நலந்திகழ் கூழை நடுவென் றாகும்.

நடுவின் பெயர்:—நனந்தலை, நாப்பண், மத்தியம், நள், ஒத்தல், நா, அணவு, இடை, கூழை. (கூ)

ஐந்திணையின் பெயர்.

46. குறிஞ்சி பாலை முல்லை மருத
நெய்த லைந் திணைக் கெய்திய பெயரே.

ஐந்திணையின் பெயர்:—குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல். (ரு)

அவற்றுள், குறிஞ்சி நிலத்தின் பெயர்.

47. புறணி துருக்கம் புறவம் வன்பால்
குறும்பொறை புறம்பணை குறிஞ்சி நிலப்பெயர்.

அவற்றுள், குறிஞ்சி நிலத்தின் பெயர்:— புறணி, துருக்கம், புறவம், வன்பால், குறும்பொறை, புறம்பணை. (சு)

மலையின் பெயர்.

48. விலங்கல் சயிலம் விண்டு வெற்புச்
சிலம்பு சிமயஞ் சிகரிசி லோச்சயம்
பொருப்புப் பொங்கர் பொறைகோ பூதரம்
பருப்பதம் பதலை பறம்பு பாதவம்
அத்திரி நகமே யடுக்க னவிரங்
குத்திரங் குவடு கோத்திரங் குன்று
தாணு வசலஞ் சானு மேரு
வோதிவீ ரங்கிரி காண்ட மோங்கல்
பீலி திகிரி யரியே பிறங்கல்
மாதிரங் கல்லே வரையே பொருட்டுத்
தாணி சிமிலஞ் சையம் பத்திரம்
வேதண்ட மிரவி மேதாஞ் சாரல்
பொற்றைநா கஞ்சிலை போதிபு மலைப்பெயர்.

மலையின் பெயர்:—விலங்கல், சயிலம், விண்டு, வெற்பு, சிலம்பு, சிமயம், சிகரி, சிலோச்சயம், பொருப்பு, பொங்கர், பொறை, கோ, பூதரம், பருப்பதம், பதலை, பறம்பு, பாதவம், அத்திரி, நகம், அடுக்கல், நவிரம், குத்திரம், குவடு, கோத்திரம், குன்று, தாணு, அசலம், சானு, மேரு, ஓதி, வீரம், கிரி, காண்டம், ஓங்கல், பீலி, திகிரி, அரி, பிறங்கல், மாதிரம், கல், வரை, பொருட்டு, தாணி, சிமிலம், சையம், பத்திரம், வேதண்டம், இரவி, மேதாம், சாரல், பொற்றை, நாகம், சிலை, போதி. (டுச)

சிறுமலையின் பெயர்.

49. குன்று பொற்றை குவடு குறும்பொறை
யென்றிவை சிறுமலை யிறும்பு மாகும்.

சிறுமலையின் பெயர்:—குன்று, பொற்றை, குவடு, குறும்பொறை, இறும்பு. (டு)

மலைப்பக்கத்தின் பெயர்.

50. சாரல் சரிகடம் தடமே சானு
வார நிதம்ப மிவைமலைப் பக்கம்.

மலைப்பக்கத்தின் பெயர்:—சாரல், சரி, கடம், தடம், சானு, வாரம், நிதம்பம். (7)

மலை முகட்டின் பெயர்.

51. குவடு கோடு கூடங் கொடுமுடி
சிகர மலையஞ் சேண்முக டாகும்.

மலை முகட்டின் பெயர்:—குவடு, கோடு, கூடம், கொடுமுடி, சிகரம், மலையம், சேண். (எ)

பாறையின் பெயர்.

52. அறையே பாறை.

பாறையின் பெயர்:—அறை. (க)

துறுகல்லின் பெயர்.

53 பொறையே துறுகல்.

துறுகல்லின் பெயர்;— பொறை. (க)

விடரின் பெயர்.

54. விடரே கல்லளை விடரின் பெயரே.

விடரின் பெயர்:—விடர், கல்லளை. (உ)

* கற்பாழியின் பெயர்.

55. காண்டை கற்பாழி.

கற்பாழியின் பெயர்:—காண்டை. (க)

கீழறையின் பெயர்.

56. பிலமே கீழறை.

கீழறையின் பெயர்—பிலம். (க)

மலை முழையின் பெயர்.

57. முடுக்கர் கந்தரம் பிலங்குகை குகரம்
கற்புழை நிகுஞ்சம் வங்குமலை முழையே.

மலை முழையின் பெயர்:—முடுக்கர், கந்தரம், பிலம், குகை, குகரம், கற்புழை, நிகுஞ்சம், வங்கு. (அ)

* கற்பாழி - கற்புழை.

பெருங்கல்லின் பெயர்.

58. கேளிதம் பெருங்கல்.

பெருங்கல்லின் பெயர்:—கேளிதம். (க)

சிறு கல்லின் பெயர்.

59. உபலஞ் சிறுகல்.

சிறு கல்லின் பெயர்:—உபலம். (க)

திரண்ட கல்லின் பெயர்.

60. உலங்குங் குண்டு முலமுந் திரண்டகல்.

திரண்ட கல்லின் பெயர்:—உலங்கு, குண்டு, உலம். (ந)

எழுமலையின் பெயர்.

61. கைலை யிமய மந்தாம் விந்தம்
நிடத மேமகூட நீலகிரி யேழ்மலை.

எழுமலையின் பெயர்:—கைலை, இமயம், மந்தாம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி. (எ)

இமயமலையின் பெயர்.

62. பூதா மாதிமலை பொன்மலை சிமயம்
ஏமந் தாசல மிமய மலைப்பெயர்.

இமயமலையின் பெயர் : — பூதாம், ஆதிமலை, பொன்மலை, சிமயம், ஏமந்தாசலம். (ஞ)

இதுவுமது.

63. மேருவும் புள்ளியும் விளம்புவ ரதற்கே.

அஃதி இமயமலையின் பெயர்:—மேரு, புள்ளிமலை. (உ)

மகமேருவின் பெயர்.

64. தேவ ராலயம் பெருமலை வடமலை
மூவாமலை மந்தாம் பொன்மலை மகமேரு.

மகமேருவின் பெயர்:—தேவாலயம், பெருமலை, வடமலை, மூவாமலை, மந்தாம், பொன்மலை. (சு)

கைலாயகிரியின் பெயர்.

65. வெள்ளி யங்கிரி சயிலாதி வேதண்டங்
கண்ணுதன் மலைநொடித் தான்மலை கைலாயம்.

கைலாயகிரியின் பெயர்:—வெள்ளியங்கிரி, சயிலாதி, வேதண்டம், கண்ணுதல்மலை, நொடித்தான்மலை. (கு)

போதியமலையின் பெயர்.

66. தென்மலை மலயந் தென்றல் வருமலை.

பொதியமலையின் பெயர்:—தென்மலை, மலயம். (உ)

கொல்லிமலையின் பெயர்.

67. வல்லியம் பொருப்பே கொல்லிமலை யாகும்.

கொல்லிமலையின் பெயர்:—வல்லியம். (க)

மலையரையன் பெயர்.

68. மலையரை யன்கிரி ராசனிறை பாகத்
துமையாட் பெற்ற வரவோ னிமவான்.

மலையரையன் பெயர்:—கிரிராசன், உமையாட்பெற்றோன், இமவான். (௩)

மலைமேற் றருக்கத்தின் பெயர்.

69. அருப்ப மலைமேற் றருக்க மாகும்.

மலைமேற் றருக்கத்தின் பெயர்:—அருப்பம். (க)

மலைச்சாரல் வீழ்புனலின் பெயர்.

70. அருவி மலைச்சாரல் வீழ்புன லாகும்.

மலைச்சாரல் வீழ்புனலின் பெயர்:—அருவி. (க)

அருவிப்புனல் வீழிடத்தின் பெயர்.

71. அருவிப்புனல் வீழிடந் தூவான மாகும்.

அருவிப்புனல் வீழிடத்தின் பெயர்:—தூவானம். (க)

மலைக் கணவாயின் பெயர்.

72. மலையின் கணவாய்ப் பெயர்பூழை யாகும்.

மலைக் கணவாயின் பெயர்:—பூழை. (க)

தினைப்புனத்தின் பெயர்.

73. ஏனலும் வளாகமுந் தினைப்புன மென்ப.

தினைப்புனத்தின் பெயர்:—ஏனல், வளாகம். (உ)

குறிஞ்சிநிலத்தூரின் பெயர்.

74. குறும்பொறை சீறூர் சிறுகுடி குறிஞ்சியூர்.

குறிஞ்சிநிலத்தூரின் பெயர்:—குறும்பொறை, சீறூர், சிறுகுடி. (௩)

குறிஞ்சிநிலப் பறையின் பெயர்.

75. தொண்டக முருகியந் துடியந் நிலப்பறை.

குறிஞ்சிநிலப் பறையின் பெயர்:—தொண்டகம், முருகியம், துடி (௩)

குறிஞ்சிநில மாக்களின் பெயர்.

76. கானவர் குறவ றந்நில மாக்கள்.

குறிஞ்சிநில மாக்களின் பெயர்:—கானவர், குறவர். (௨)

குறிஞ்சிநிலப் பெண்கள் பெயர்.

77. குறத்தியர் கொடிச்சியர் மறத்தியர் பெண்டிர்.

குறிஞ்சிநிலப் பெண்கள் பெயர்:—குறத்தியர், கொடிச்சியர், மறத்தியர். (௩)

குறிஞ்சித் தலைமகன் பெயர்.

78. பொருநன் சிலம்பன் வெற்பன் றலைமகன்.

குறிஞ்சித் தலைமகன் பெயர்:—பொருநன், சிலம்பன், வெற்பன். (௩)

குறிஞ்சிக் கடவுளின் பெயர்.

79. கந்த னந்நிலக் கடவு ளாகும்.

குறிஞ்சிக் கடவுளின் பெயர்:—கந்தன். (௧)

பாலைத்திணையின் பெயர்.

80. மறுபுலஞ் செம்புலம் வன்பால் பாலை.

பாலைத் திணையின் பெயர்:—மறுபுலம், செம்புலம், வன்பால். (௩)

நிலப் பிளப்பின் பெயர்.

81. விடருங் கமரும் விட்புநிலப் பிளப்பே

நிலப் பிளப்பின் பெயர்:—விடர், கமர். (௨)

பரலடுத்துயர் நிலத்தின் பெயர்.

82. பரலடுத் துயர்நில முரம்பே பதுக்கை.

பரலடுத்துயர் நிலத்தின் பெயர்:—முரம்பு, பதுக்கை. (௨)

பாலைநிலத்தூரின் பெயர்.

83. முனையிடங் குறும்பு முதுபாலை நிலத்தூர்.

பாலைநிலத்தூரின் பெயர்:—முனையிடம், குறும்பு. (௨)

பாலைநிலப் பறையின் பெயர்.

84. அந்நிலப் பறைதுடி யாகு மென்ப.
பாலைநிலப் பறையின் பெயர்:—துடி. (க)

பாலைநில மாக்கள் பெயர்.

85. மறவ ரெயினர் சவரர் கிராதர்
கானவர் குறவர் புளினர் வேடர்.
பாலைநில மாக்கள் பெயர்:—மறவர், எயினர், சவரர், கிராதர், கானவர்,
குறவர், புளினர், வேடர் (அ)

பாலைநிலப் பெண்கள் பெயர்.

86. எயிற்றியர் பேதையர் மறத்தியர் பெண்டிர்.
பாலைநிலப் பெண்கள் பெயர்:—எயிற்றியர், பேதையர், மறத்தியர். (ங)

பாலைநிலத் தலைமகன் பெயர்.

87. விடலையுங் காளையு மீளியுந் தலைமகன்.
பாலைநிலத் தலைமகன் பெயர்:—விடலை, காளை, மீளி. (ந)

பாலைநிலக் கடவுளின் பெயர்.

88. பாலைக் கடவு டுர்க்கை யென்ப.
பாலைநிலக் கடவுளின் பெயர்:—துர்க்கை. (க)

முல்லைத் திணையின் பெயர்.

89. புறவம் புறம்பணை புறவணி முல்லை.
முல்லைத் திணையின் பெயர்:—புறவம், புறம்பணை, புறவணி. (ந)

காட்டின் பெயர்.

90. கானங் கடறு கான்காந் தாரந்
தாவம் புறவஞ் சங்கிரங் கட்சி
யடவி காண்டகம் விந்தங் கானகங்
கவனங் குறும்பொறை யாரணியங் குப்பங்
கோட்டை யரணம் வல்லை துருக்க
மூயவைசுரங் கானனங் கடம்பழுவம் பொச்சை
கண்டகந் தில்லங் களரி மூளரி
ககனமத் தம்வனங் காடெனப் புகல்வர்.
காட்டின் பெயர்:—கானம், கடறு, கான், காந்தாரம், தாவம், புறவம்,
சங்கிரம், கட்சி, அடவி, காண்டகம், விந்தம், கானகம், கவனம்,

குறும்பொறை, ஆரணியம், குப்பம், கோட்டை, அரணம், வல்லை, துருக்கம், உயவை, சுரம், கானனம், கடம், பழுவம், பொச்சை, கண்டகம், தில்லம், களரி, முளரி, ககனம், அத்தம், வனம். (௩௩)

காட்டுத் துருக்கத்தின் பெயர்.

91. அருப்பங் கோட்டை வல்லை யாரணியம்
அரணமுந் துருக்கமு மாகு மென்ப.

காட்டுத் துருக்கத்தின் பெயர்:—அருப்பம், கோட்டை, வல்லை, ஆரணியம், அரணம். (௫)

முல்லைநிலக் கான்யாற்றின் பெயர்.

92. கலுழி யுயவை முல்லைக் கான்யாறு.

முல்லைநிலக் கான்யாற்றின் பெயர்:—கலுழி, உயவை. (௨)

பழங் கொல்லையின் பெயர்.

93. முதைப்புனம் பழங்கொல்லை.

பழங் கொல்லையின் பெயர்:—முதைப்புனம். (௧)

புதுக் கொல்லையின் பெயர்.

94. இதைப்புனம் புதுக்கொல்லை.

புதுக் கொல்லையின் பெயர்:—இதைப்புனம். (௧)

இதுவுமது.

95. தில்லிய மென்னச் சொல்லுப வந்நிலம்.

அஃதி புதுக் கொல்லையின் பெயர்:—தில்லியம். (௧)

முல்லைநிலத்தூரின் பெயர்.

96. அந்நிலத் தூர்ப்பெயர் பாடி யென்ப.

முல்லைநிலத்தூரின் பெயர்:—பாடி. (௧)

முல்லைநிலப் பறையின் பெயர்.

97. அந்நி லப்பறை யேறுகோள் பம்பை.

முல்லைநிலப் பறையின் பெயர்:—ஏறுகோள், பம்பை. (௨)

முல்லைநில மாக்கள் பெயர்.

98. இடைய ரண்டர் பொதுவர் கோபாலர்
குடவ ரமுதர் கோவல ராயர்
தொறுவர் விந்தர் முல்லைநில மாக்கள்.

முல்லைநில மாக்கள் பெயர்:—இடையர், அண்டர், பொதுவர், கோபாலர், குடவர், அமுதர், கோவலர், ஆயர், தொறுவர், வித்தர். (௧௦)

## முல்லைநிலப் பெண்டிர் பெயர்.

99. இடைச்சியர் தொறுத்தியர் பொதுவியர் குடத்தியர்.

முல்லைநிலப் பெண்டிர் பெயர்:—இடைச்சியர், தொறுத்தியர், பொதுவியர், குடத்தியர். (௪)

## முல்லைநிலத் தலைவன் பெயர்.

100. கானக நாடன் குறும்பொறை நாடன்
தோன்ற லண்ணன் முல்லைத் தலைவன்.

முல்லைநிலத் தலைவன் பெயர்:—கானகநாடன், குறும்பொறைநாடன், தோன்றல், அண்ணல். (௪)

## முல்லைக் கடவுளின் பெயர்.

101. திருமா லந்நிலக் கடவுள் பெயரே.

முல்லைநிலக் கடவுளின் பெயர்:—திருமால். (௧)

## மருதத் திணையின் பெயர்.

102. பழனமுந் தொடுவும் பணையுமென் பாலுங்
கழனியும் பண்ணையு மிவைமரு தத்திணை.

மருதத் திணையின் பெயர்:— பழனம், தொடு, பணை, மென்பால், கழனி, பண்ணை. (௬)

## யாற்றின் பெயர்.

103. ஒலிய லுந்திபுன லோணங் குடிஞை
சிந்து தீர்த்திகை தியவதியே
தடினியா பகை யாறெனச் சாற்றுவர்.

யாற்றின் பெயர்:—ஒலியல், உந்தி, புனல், ஓணம், குடிஞை, சிந்து, தீர்த்திகை, தியவதி, தடினி, ஆபகை. (௧௦)

## யாற்றிடைக் குறையின் பெயர்.

104. இலங்கை யரங்கந் துருத்தியாற் றிடைக்குறை.

யாற்றிடைக் குறையின் பெயர்:—இலங்கை, அரங்கம், துருத்தி. (௩)

## வெண்மணலின் பெயர்.

105. வாலுகம் வெண்மணல்.

வெண்மணலின் பெயர்:—வாலுகம். (௧)

### கருமணலின் பெயர்.

106. அறலுங் கருமணல். (க)
கருமணலின் பெயர்:—அறல்.

### நுண்மணலின் பெயர்.

107. அதரு மயிரு மெக்கரு நுண்மணல். (௩)
நுண்மணலின் பெயர்:—அதர், அயிர், எக்கர்.

### புழுதியின் பெயர்.

108. பொடிமண் புழுதி. (உ)
புழுதியின் பெயர்:—பொடி, மண்.

### மணற்குன்றின் பெயர்.

109. புளின மணற்குன்றே. (க)
மணற்குன்றின் பெயர்:—புளினம்.

### ஊறலின் பெயர்.

110. அஃக முறவியு மசும்பு மூறல். (௩)
ஊறலின் பெயர்:—அஃகம், உறவி, அசும்பு.

### கங்கையின் பெயர்.

111. வானதி பகீரதி மந்தா கினியே
சானவி வரநதி சுரநதி விமலை
திரிபதகை தெய்வ நதிகங் காநதி.
கங்கையின் பெயர்:—வானதி, பகீரதி, மந்தாகினி, சானவி, வரநதி, சுரநதி, விமலை, திரிபதகை, தெய்வநதி. (௯)

### யமுனையின் பெயர்.

112. கதிரவன் புதல்வி காளிந்தி யமுனை. (உ)
யமுனையின் பெயர்:—கதிரவன்புதல்வி, காளிந்தி.

### சரச்சுவதி நதியின் பெயர்.

113. சோணை சரச்சுவதி. (க)
சரச்சுவதி நதியின் பெயர்:—சோணை.

### கௌதமை நதியின் பெயர்.

114. கௌதமை கோதை. (க)
கௌதமை நதியின் பெயர்:—கோதை.

நருமதை நதியின் பெயர்.

115. சோமன் புத்திரி இரேவை நருமதை.

நருமதை நதியின் பெயர்:—சோமன்புத்திரி, இரேவை. (உ)

காவிரியின் பெயர்.

116. பொன்னி காவிரி.

காவிரியின் பெயர்:—பொன்னி. (க)

பொருநையின் பெயர்.

117. பொருநைதண் பொருந்தம்.

பொருநையின் பெயர்:—பொருந்தம். (க)

கன்னிநதியின் பெயர்.

118. கன்னி குமரி.

கன்னிநதியின் பெயர்:—குமரி. (க)

ஆன்பொருந்த நதியின் பெயர்.

119. ஆனி வானி யான் பொருநை
சூத நதியான் பொருந்த மாகும்.

ஆன்பொருந்த நதியின் பெயர்:—ஆனிவானி, ஆன்பொருநை, சூத நதி. (௩)

வைகை நதியின் பெயர்.

120. வேகவதி வைகை.

வைகை நதியின் பெயர்:—வேகவதி. (க)

கோதாவரியின் பெயர்.

121. விமலை கோதாவரி.

கோதாவரியின் பெயர்:—விமலை. (க)

மருதநிலத்தூரின் பெயர்.

122. மடப்பந் தண்ணடை மருத நிலத்தூர்.

மருதநிலத்தூரின் பெயர்:—மடப்பம், தண்ணடை. (உ)

மருதநிலப் பறையின் பெயர்.

123. அரிகிணை முரசம் பணைமரு தப்பறை.

மருதநிலப் பறையின் பெயர்:—அரி, கிணை, முரசம், பணை. (ச)

வயலின் பெயர்.

124. கழனியும் புலமுங் கைதையுந் தடியும்
மருதமும் வரப்புளு மாவுஞ் செறுவும்
பண்ணையும் பானலும் பழனமும் விளையுளும்
பணையுஞ் செய்யும் வயலா குமே.
வயலின் பெயர்:—கழனி, புலம், கைதை, தடி, மருதம், வரப்புள், மா, செறு, பண்ணை, பானல், பழனம், விளையுள், பணை, செய். (கச)

சிறு செய்யின் பெயர்.

125. குண்டிலும் பாத்தியுஞ் சிறுசெய் யாகும். (உ)
சிறு செய்யின் பெயர்:—குண்டில், பாத்தி.

வரம்பின் பெயர்.

126. மரிசுங் கோடுங் கூலமும் வரம்பே. (ந)
வரம்பின் பெயர்:—மரிசு, கோடு, கூலம்.

வரம்பருகின் பெயர்.

127. கங்கு மரிசும் வரம்பரு காகும். (உ)
வரம்பருகின் பெயர்:—கங்கு, மரிசு.

செந்நெல் விளைநிலத்தின் பெயர்.

128. செந்நெ றருவது சாலேய மாகும். (க)
செந்நெல் விளைநிலத்தின் பெயர்:—சாலேயம்.

அனைத்தும் உண்டாகும் நன்னிலத்தின் பெயர்.

129. நன்னில முருவரை நடைபெற் றியலும். (க)
அனைத்தும் உண்டாகும் நன்னிலத்தின் பெயர்:—உருவரை.

பாழ்நிலத்தின் பெயர்.

130. காப்பு களரி பெரும்பாழ் நிலமே. (உ)
பாழ்நிலத்தின் பெயர்:—காம்பு, களரி.

விளையா நிலத்தின் பெயர்.

131. களருஞ் சவரும் விளையா நிலமே. (உ)
விளையா நிலத்தின் பெயர்:—களர், சவர்.

மருதநில மாக்களின் பெயர்.

132. களம ருழவர் கடைஞர் சிலதர்
மள்ளர் மேழியர் மருத மாக்கள்.

மருதநில மாக்களின் பெயர்:—களமர், உழவர், கடைஞர், சிலதர், மள்ளர், மேழியர். (க)

மருதநிலப் பெண்கள் பெயர்.

133. உழத்தியர் கடைசிய ரந்நிலப் பெண்டிர்.

மருதநிலப் பெண்கள் பெயர்:—உழத்தியர், கடைசியர். (உ)

மருதநிலத் தலைமகன் பெயர்.

134. மகிழ்ந னூரன் கிழவன் றலைமகன்.

மருதநிலத் தலைமகன் பெயர்:—மகிழ்நன், ஊரன், கிழவன். (ங)

மருதநிலக் கடவுள் பெயர்.

135. அந்நிலக் கடவு ளமரர் பதியே.

மருதநிலக் கடவுள் பெயர்:—அமரர்பதி. (ச)

நெய்தற் றிணையின் பெயர்.

136. அருங்கட னெய்த னிலப்பெய ராகும்.

நெய்தற் றிணையின் பெயர்:—கடல். (க)

கடலின் பெயர்.

137. அம்பர மார்கலி யளக்கர் தோய
மம்பு ராசிமக ராலயம் பரவை
சலதி பௌவ மகோததி சலநிதி
வீரை வேலா வலயநீர் வெள்ளம்
வாரி வேலை வாருணம் புணரி
சிந்து முந்நீர் தொன்னீர் நரலை
சக்கர முந்தி சலராசி யுப்பு
உததி சாகரஞ் சமுத்திர நேமி
நதிபதி பாரா வாரம் பயோததி
வாரிதி வாரணம் வலைய மத்தி
யாழி பெருநீ ரலையு வாவே
உவரி சிந்து வார மோத
மரியே குரவை யழுவந் தெண்டிரை
கார்கோ ளனைத்துங் கடலின் பெயரே.

கடலின் பெயர்:—அம்பரம், ஆர்கலி, அளக்கர், தோயம், அம்புராசி, மகராலயம், பரவை, சலதி, பௌவம், மகோததி, சலநிதி, வீரை, வேலாவலயம், நீர், வெள்ளம், வாரி, வேலை, வாருணம், புணரி, சிந்து, முந்நீர், தொன்னீர், நரலை, சக்கரம், உந்தி, சலராசி, உப்பு,

உததி, சாகரம், சமுத்திரம், நேமி, நதிபதி, பாராவாரம், பயோ ததி, வாரிதி, வாரணம், வலயம், அத்தி, ஆழி, பெருநீர், அலை, உவா, உவரி, சிந்துவாரம், ஓதம், அரி, குரவை, அழுவம், தெண் டிரை, கார், கோள். (௩௧)

எழுகடலின் பெயர்.

138. உப்புத் தேனிக்கு வெண்டயிர் நெய்பா
லப்புக் கடலே ழாகு மென்ப.

எழுகடலின் பெயர்:—உப்பு, தேன், கருப்பஞ்சாறு, தயிர், நெய், பால், அப்பு. (எ)

கழிமுகத்தின் பெயர்.

139. அதோமுகம் புகாரோ டழிவு கூடல்
கழிமுக மென்றனர் காயலு மாகும்.

கழிமுகத்தின் பெயர்—அதோமுகம், புகார், அழிவு, கூடல், காயல். (௫)

இதுவுமது.

140. அருவியுங் கயவுங் கழிமுக மென்ப.

ஷை கழிமுகத்தின் பெயர்:—அருவி, கயவு. (உ) ஆ_ (எ)

கடற்றிரையின் பெயர்.

141. ஓதம் புணரி சீகரம் வேலை
யாகுங் கடற்றிரை யலையு மாகும்.

கடற்றிரையின் பெயர்:—ஓதம், புணரி, சீகரம், வேலை, அலை. (௫)

உவர் நீரின் பெயர்.

142. உறையென் றுரைப்ப துவர்நீ ராகும்.

உவர் நீரின் பெயர்:— உறை. (க)

கடற்கரையின் பெயர்.

143. வேலையும் பாரா வாரமுங் கடற்கரை.

கடற்கரையின் பெயர்:—வேலை, பாராவாரம். (உ)

தோணுமுகத்தின் பெயர்.

144. தோணு முகமே சூழ்கழி யிருக்கை.

தோணுமுகத்தின் பெயர்:—சூழ்கழியிருக்கை. (க)

உப்பளத்தின் பெயர்.

145. அளமே கான வளக்க ருவளகங்
கழிநில முப்பள மாக்கால் கருதும்.

உப்பளத்தின் பெயர்:—அளம், கானல், அளக்கர், உவளகம், கழி
லிலம், மாக்கால். (௬)

கழியின் பெயர்.

146. காயலு முகமுங் கழியெனப் படுமே.
கழியின் பெயர்:—காயல், முகம். (௨)

உவர்த்தரையின் பெயர்.

147. இருணை முவர்த்தரை.
உவர்த்தரையின் பெயர்:—இருணம். (௧)

மணற்குவையின் பெயர்.

148. புளின மணற்குவை.
மணற்குவையின் பெயர்:—புளினம். (௧)

உவர்க்களத்தின் பெயர்.

149. உவளக முவர்க்களம்.
உவர்க்களத்தின் பெயர்:—உவளகம். (௧)

உப்பமைப்போர் பெயர்.

150. உமண ரளவ ருப்பருப் பமைப்போர்.
உப்பமைப்போர் பெயர்:—உமணர், அளவர், உப்பர். (௩)

நெய்தனிலத்தூரின் பெயர்.

151. பாக்கம் பட்டின நெய்தனிலத் தூரே.
நெய்தனிலத்தூரின் பெயர்:—பாக்கம், பட்டினம். (௨)

நெய்தனிலப் பறையின் பெயர்.

152. சாபறை மீன்கோட் பறைநெய் தற்பறை.
நெய்தனிலப் பறையின் பெயர்:—சாபறை, மீன், கோட்பறை. (௩)

நெய்தனில மாக்கள் பெயர்.

153. கடலர் திமிலர் சலவர் நுளையர்
பரதர் வலைய ரந்நில மாக்கள்.
நெய்தனில மாக்கள் பெயர்:—கடலர், திமிலர், சலவர், நுளையர், பர
தர், வலையர். (௬)

நெய்தனிலப் பெண்கள் பெயர்.

154. பரத்தியர் நுளைச்சிய ரந்நிலப் பெண்டிர்.
நெய்தனிலப் பெண்கள் பெயர்:—பரத்தியர், நுளைச்சியர். (௨)

### நெய்தற் றலைமகன் பெயர்.

155. மெல்லன் புலம்பன் றண்கடற் சேர்ப்பன்
துறைவன் கொண்க னெய்தற் றலைமகன்.

நெய்தற் றலைமகன் பெயர்:—மெல்லன், புலம்பன், தண்கடற்சேர்ப்பன், துறைவன், கொண்கன். (௬)

### நெய்தனிலக் கடவுளின் பெயர்.

156. அந்நிலக் கடவுள் வருண னாகும். (௧)

நெய்தனிலக் கடவுளின் பெயர்:—வருணன்.

### நீர் நிலையின் பெயர்.

157. இலஞ்சி பண்ணை யேல்வை குண்ட
மலந்தை பொய்கை வலயஞ் சுனைசிறை
பட்ட முடுவை பயம்பு படுகர்
குட்டந் தாங்கல் கோட்டக மேரி
யுவளக மடுவே யோடை படுவே
தடமே வாவி தடாக மாவி
சூழி கிடங்கு சலதரங் கேணி
பணைகயம் பல்வளம் நளினி யிலந்தை
மூழி குழிகுள நீர்நிலைப் பெயரே.

நீர்நிலையின் பெயர்:—இலஞ்சி, பண்ணை, ஏல்வை, குண்டம், அலந்தை, பொய்கை, வலயம், சுனை, சிறை, பட்டம், உடுவை, பயம்பு, படுகர், குட்டம், தாங்கல், கோட்டகம், ஏரி, உவளகம், மடு, ஓடை, படு, தடம், வாவி, தடாகம், ஆவி, சூழி, கிடங்கு, சலதரம், கேணி, பணை, கயம், பல்வலம், நளினி, இலந்தை, மூழி, குழி, குளம். (௩௭)

### புனற்கரை வரம்பு இவற்றின் பெயர்.

158. கூலமுந் தீரமும் வாரமுங் கோடும்
வார்புனற் கரைக்கும் வரம்புக்கும் பெயரே.

புனற்கரை வரம்பு இவற்றின் பெயர்:—கூலம், தீரம், வாரம், கோடு. (௪)

### சேற்றின் பெயர்.

159. அளறு பூழி யளக்கர் சேதகம்
அசறு பங்க மள்ளல் குழைதொளி
கொள்ளஞ் செய்யல் கும்பி குழப்பு
தொள்ளி சகதி தொய்ய லாம்பே

அசும்பு சேதும்போ டங்கணம் பூதி
யிசைந்த யிருபத் தொன்றுஞ் சேறே.

சேற்றின் பெயர்:—அளறு, பூழி, அளக்கர், சேதகம், அசறு, பங்கம், அள்ளல், குழை, தொளி, கொள்ளம், செய்யல், கும்பி, குழம்பு, தொள்ளி, சகதி, தொய்யல், நாம்பு, அசும்பு, சேதும்பு, அங்கணம், பூதி. (உக)

அருவருப்புறு சேற்றின் பெயர்.

160. நொளிலு மூழிலு மருவருப் புறுசேறே.
அருவருப்புறு சேற்றின் பெயர்:—கொளில், ஊழில். (உ)

சேற்றில் எழும் குமிழியின் பெயர்.

161. கொப்புள் பொருட்டுச் சேற்றெழு குமிழி.
சேற்றில் எழும் குமிழியின் பெயர்:—கொப்புள், பொருட்டு. (உ)

ஊறலின் பெயர்.

162. உறவி யசும்பு ஊற்று ஊறல்.
ஊறலின் பெயர்:—உறவி, அசும்பு, ஊற்று. (௩)

செய்கரையின் பெயர்.

163. சேதுவு மணையுங் குரம்புங் குலையுஞ்
செய்கரை யெனவே செப்பப் படுமே.
செய்கரையின் பெயர்:—சேது, அணை, குரம்பு, குலை. (௪)

கிணற்றின் பெயர்.

164. உறவியுங் கூவலுங் கூபமுங் கிணறெனல்.
கிணற்றின் பெயர்:—உறவி, கூவல், கூபம். (௩)

ஊரிலுள்ளார் உண்ணும் நீரின் பெயர்.

165. ஊருணி யூருளோ ருண்ணீ ராமே.
ஊரிலுள்ளார் உண்ணும் நீரின் பெயர்:—ஊருணி. (க)

சுடுகாட்டின் பெயர்.

166. ஈமம் மயானஞ் சுடலை சுடுநில
மிடுகாடு புறங்காடு பிதிர்வனஞ் சுடுகாடே.
சுடுகாட்டின் பெயர்:—ஈமம், மயானம், சுடலை, சுடுநிலம், இடுகாடு, புறங்காடு, பிதிர்வனம். (எ)

சாம்பரின் பெயர்.

167. அடலை வெண்பலி சாம்ப ராகும். (உ)
சாம்பரின் பெயர்:—அடலை, வெண்பலி.

பொடியின் பெயர்.

168. துகளு நீறுஞ் சுண்ணமுங் குறுமலுஞ்
சிதரும் பராகமுஞ் சின்னமும் பிதிரும்
நுணுங்குஞ் சன்னமு நூறுந் தாதும்
பூதியுந் தூளும் புழுதியு மணுவும்
பொடியின் பெயரெனப் புகலப் பெறுமே.
பொடியின் பெயர்:—துகள், நீறு, சுண்ணம், குறுமல், சிதர், பராகம், சின்னம், பிதிர், நுணுங்கு, சன்னம், நூறு, தாது, பூதி, தூள், புழுதி, அணு. (கசு)

புற்றின் பெயர்.

169. வன்மீகம் புற்றே. (க)
புற்றின் பெயர்:—வன்மீகம்.

புற்றுஞ்சோற்றின் பெயர்.

170. குறும்பிய தன்சோறே. (க)
புற்றுஞ்சோற்றின் பெயர்:—குறும்பி.

ஒதுக்கிடத்தின் பெயர்.

171. துச்சி லொதுக்கிடம். (க)
ஒதுக்கிடத்தின் பெயர்:—துச்சில்.

வேறிடத்தின் பெயர்.

172. ஒருசிறை வேறிடம். (க)
வேறிடத்தின் பெயர்:—ஒருசிறை.

பசும்புற்றரையின் பெயர்.

173. அரிதஞ்சாட் டுவலம் பசும்புற் றரையே. (உ)
பசும்புற்றரையின் பெயர்:—அரிதம், சாட்டுவலம்.

களர் நிலத்தின் பெயர்.

174. களரே முதுநிலம். (க)
களர் நிலத்தின் பெயர்:—முதுநிலம்.

யுத்தகளத்தின் பெயர்.

175. களமே பறந்தலை போர்க்களங் களரி
யாகவ பூமி விளாகஞ் செருக்கள
மடுகளஞ் செங்கள மமர்க்கள மொய்யே
படுகளம் யுத்தம் பண்ணுங் களமே.

யுத்தகளத்தின் பெயர்:—களம், பறந்தலை, போர்க்களம், களரி, ஆகவபூமி, விளாகம், செருக்களம், அடுகளம், செங்களம், அமர்க்களம், மொய், படுகளம். (கஉ)

பிணம்படு நிலத்தின் பெயர்.

176. பறந்தலை செம்புலம் பிணம்படு நிலமே.

பிணம்படு நிலத்தின் பெயர்:—பறந்தலை, செம்புலம். (உ)

பகைமேற் சென்றோர் உறைபதியின் பெயர்.

177. பாசறை முனைப்பதி பாடி பாளையம்
பாளி பகைமேற் சென்றோ ருறைபதி.

பகைமேற் சென்றோர் உறைபதியின் பெயர்:—பாசறை, முனைப்பதி, பாடி, பாளையம், பாளி. (ரு)

இதுவுமது.

178. கேடகங் கடவை யென்பவுங் கிளக்கும்.

ஷடி பகைமேற் சென்றோர் உறைபதியின் பெயர்:—கேடகம், கடவை. (உ) ஆக (எ)

நகரத்தின் பொதுப் பெயர்.

179. ஆலய நிகாயம் புரியா வாசந்
தாமஞ் சாதனந் தாவளஞ் சரணம்
பதியே பள்ளி பாழி பாடி
நிலய நிகேதன நியம நிசாதன
முறையுள் வசதி யுசஞ்சம் வாகங்
குடமே வேசனங் கோட்ட மகரம்
புரமே நகரப் பொதுப்பெய ராகும்.

நகரத்தின் பொதுப்பெயர்:—ஆலயம், நிகாயம், புரி, ஆவாசம், தாமம், சாதனம், தாவளம், சரணம், பதி, பள்ளி, பாழி, பாடி, நிலயம், நிகேதனம், நியமம், நிசாதனம், உறையுள், வசதி, உசம், சம்வாகம், குடம், வேசனம், கோட்டம், அகரம், புரம். (உரு)

அகழின் பெயர்.

180. ஓடை கிடங்கு கேணி யுடுவே
அகப்பா பரிக மகழி யகழெனல்.

அகழின் பெயர்:—ஓடை, இடங்கு, கேணி, உடு, அகப்பா, பரிகம், அகழி. (எ)

### மதிலின் பெயர்.

181. ஆரை புரிசை யரணஞ் சாலம்
வேலி பாவை புவளக மிஞ்சி
யோதை வேணகை யெயில்சிறை கடகந்
தருக்க மகப்பா சுற்றுக் காப்பு
வரைப்புச் சக்கரம் வாரி காவ
லரண்புற நொச்சி யுரமதிற் பெயரே.

மதிலின் பெயர்:—ஆரை, புரிசை, அரணம், சாலம், வேலி, பாவை, உவளகம், இஞ்சி, ஓதை, வேணகை, எயில், சிறை, கடகம், அருக்கம், அகப்பா, சுற்று, காப்பு, வரைப்பு, சக்கரம், வாரி, காவல், அரண், புறம், நொச்சி, உரம். (உ௫)

### இதுவுமது.

182. ஆரல் பிரகாரம் பந்தமு மாகும்.
ஷை மதிலின் பெயர்:—ஆரல், பிரகாரம். (உ) ஆ (உஅ)

### மதில் உறுப்பின் பெயர்.

183. ஞாயி லெந்திர நாஞ்சில் கோசம்
விதப்பு நாலை பதப்பாடு தோணி
கொத்தளம் பொறிமதி லுறுப்பெனக் கூறும்.

மதில் உறுப்பின் பெயர்:—ஞாயில், எந்திரம், நாஞ்சில், கோசம், விதப்பு, நாலை, பதப்பாடு, தோணி, கொத்தளம், பொறி. (௧0)

### மதிலுள் உயர்நிலத்தின் பெயர்.

184. அகப்பா பரிக மதிலுயர் நிலமே.
மதிலுள் உயர்நிலத்தின் பெயர்:—அகப்பா, பரிகம். (உ)

### வாரியுள் உயர்நிலத்தின் பெயர்.

185. பரிகை கற்பா வாரியு ளுயர்நிலம்.
வாரியுள் உயர்நிலத்தின் பெயர்:—பரிகை, கற்பா. (உ)

### ஆழ்வாரி நிலத்தின் பெயர்.

186. ஓதையாழ் வாரி நிலமென் றுரைக்கும்.
ஆழ்வாரி நிலத்தின் பெயர்:—ஓதை. (௧)

### கோபுர வாயிலின் பெயர்.

187. கோட்டியும் வாரியுங் கோபுர வாயில்.

*கோபுர வாயிலின் பெயர்:—கோட்டி, வாரி.* (௨)

### இதுவுமது.

188. ஆத்தான முமரி கூடமு மதுவே.

*௸ கோபுர வாயிலின் பெயர்:—ஆத்தானம், அரிகூடம்.* (௨)

### கோபுரவாயிலிற் புகும் புழையின் பெயர்.

189. புதவே வாயிற் புக்குறும் புழையே.

*கோபுரவாயிலிற் புகும் புழையின் பெயர்:—புதவு.* (௧)

### கோபுரவாயிற் றிண்ணையின் பெயர்.

190. அவ்வழித் திண்ணை யளிந்தமென் றாகும்.

*கோபுரவாயிற் றிண்ணையின் பெயர்:—அளிந்தம்.* (௧)

### வதுவைத் திண்ணையின் பெயர்.

191. மணையே வேதிகை வதுவையின் றிண்ணை.

*வதுவைத் திண்ணையின் பெயர்:—மணை, வேதிகை.* (௨)

### கடைத்தெருவின் பெயர்.

192. ஆவணம் பீடிகை கூலமங் காடி
சேனை நியமங் கடைத்தெரு வென்ப.

*கடைத்தெருவின் பெயர்:—ஆவணம், பீடிகை, கூலம், அங்காடி, சேனை, நியமம்.* (௬)

### தெருவின் பெயர்.

193. விச்சை யாவணம் வீதி மறுகு
சேனை நியமஞ் சிறகு ஞெள்ளல்
வாடை கோசு மார்க்க மொலியல்
பாடகந் தெருவின் பெயரா கும்மே.

*தெருவின் பெயர்:—விச்சை, ஆவணம், வீதி, மறுகு, சேனை, நியமம், சிறகு, ஞெள்ளல், வாடை, கோசு, மார்க்கம், ஒலியல், பாடகம்.* (௧௩)

### இதுவுமது.

194. செப்பம் வேணி சிரேணியுந் தெருவே.

*௸ தெருவின் பெயர்:—செப்பம், வேணி, சிரேணி.* (௩) ஆ. (௧௬)

### சந்தியின் பெயர்.

195. அந்தியுங் கவலையும் வரியு மரியும்
கோடகமுஞ் சிராகமுஞ் சந்தியெனக் கூறுப.
சந்தியின் பெயர்:—அந்தி, கவலை, வரி, அரி, கோடகம், சிராகம். (௬)

### முச்சந்தியின் பெயர்.

196. அந்திமுச் சந்தி.
முச்சந்தியின் பெயர்:—அந்தி. (௧)

### நாற்சந்தியின் பெயர்.

197. கோடகஞ் சிருங்கா டகம்வரி சந்தி
சதுக்க மென்றிவை நாற்சந்தி யாகும்.
நாற்சந்தியின் பெயர்: — கோடகம், சிருங்காடகம், வரிசந்தி, சதுக்கம். (௪)

### சேரியின் பெயர்.

198. பாடமும் வேணியும் வாடையு முறியுஞ்
சேரி யென்ப சிரேணியு மதற்கே.
சேரியின் பெயர்:—பாடம், வேணி, வாடை, முறி, சிரேணி. (௫)

### அரசர் வீதியின் பெயர்.

199. பூரிய மரசர் வீதியைப் புகலும்.
அரசர் வீதியின் பெயர்:—பூரியம். (௧)

### வைசியர் சேரியின் பெயர்.

200. வாசிகை யென்பது வைசியர் சேரி.
வைசியர் சேரியின் பெயர்:—வாசிகை. (௧)

### இடைச்சேரியின் பெயர்.

201. ஆவிரம் வல்லிய முவளக மிடைச்சேரி.
இடைச்சேரியின் பெயர்:—ஆவிரம், வல்லியம், உவளகம். (௩)

### வேடர் வீதியின் பெயர்.

202. பக்கணம் வேடர் வீதி யாகும்.
வேடர் வீதியின் பெயர்:—பக்கணம். (௧)

### அக்கசாலையர் தெருவின் பெயர்.

203. அக்க சாலையர் தெருவா வேசனமே.
அக்கசாலையர் தெருவின் பெயர்:—ஆவேசனம். (௧)

அம்பலத்தின் பெயர்.

204. பொதியின் மன்றம் பொதுசபை யம்பலம்.

*அம்பலத்தின் பெயர்:—பொதியில், மன்றம், பொது, சபை.* (௪)

அரசர் கோயிலின் பெயர்.

205. மாளிகை சாலை மந்திரம் பவனங்
கோயி லென்ப குலமு மதற்கே.

*அரசர் கோயிலின் பெயர்: — மாளிகை, சாலை, மந்திரம், பவனம், குலம்.* (௫)

அரசிருக்கையின் பெயர்.

206. அத்தாணி பூரிய மாசா ரம்மே
வேத்தவை யென்பதோ டரசிருப் பென்ப.

*அரசிருக்கையின் பெயர்:—அத்தாணி,பூரியம்,ஆசாரம்,வேத்தவை.* (௪)

சித்திரகூடத்தின் பெயர்.

207. தெற்றி யம்பலஞ் சித்திர கூடம்.

*சித்திரகூடத்தின் பெயர்:—தெற்றி, அம்பலம்.* (௨)

மண்டபத்தின் பெயர்.

208. மானமுஞ் சமித்தமு மண்டப மாகும்.

*மண்டபத்தின் பெயர்:—மானம், சமித்தம்.* (௨)

மன்னன்றேவி யில்லத்தின் பெயர்.

209. அந்தப் புரங்கந்த வார மரண்மனை
யென்ப மன்ன ரில்வாழ் கட்டே.

*மன்னன்றேவி யில்லத்தின் பெயர்:—அந்தப்புரம், கந்தவாரம், அரண்மனை.* (௩)

கோபுரத்தின் பெயர்.

210. கூடஞ் சிகரி சிகரங் கோபுரம்.

*கோபுரத்தின் பெயர்:—கூடம், சிகரி, சிகரம்.* (௩)

மாடத்தின் பெயர்.

211. மாட மாளிகை சூளிகை தெற்றி.

*மாடத்தின் பெயர்:—மாளிகை, சூளிகை, தெற்றி.* (௩)

உபரிகையின் பெயர்.

212. மேனிலை யுபரிகை.

*உபரிகையின் பெயர்:—மேனிலை.* (௧)

### நிலவறையின் பெயர்.

213. கீழ்நிலை நிலவறை.

நிலவறையின் பெயர்:—கீழ்நிலை. (க)

### நாடகசாலையின் பெயர்.

214. நாடக சாலை நவாங்க மாகும்.

நாடகசாலையின் பெயர்:—நவாங்கம். (க)

### ஆடலிடத்துக்கும், வட்டாடிடத்துக்கும் பெயர்.

215. ஆடலிட மும்வட்டா டிடமு மரங்கம்.

ஆடலிடத்துக்கும், வட்டாடிடத்துக்கும் பெயர்:—அரங்கம். (க)

### பாடல் பயிலிடத்தின் பெயர்.

216. பாடல் பயிலிடம் பட்டிமண் டபமே.

பாடல் பயிலிடத்தின் பெயர்:—பட்டிமண்டபம். (க)

### தேவர் கோவிலின் பெயர்.

217. சிநகரஞ் சேதிமஞ் சிதேத்திரங் கோட்டம்
நிலைய மந்திரம் நிகேதன மாலயம்
கோயி னகரந் தளிதே வாலயம்.

தேவர் கோவிலின் பெயர்:—சிநகரம், சேதிமம், சிதேத்திரம், கோட்டம், நிலையம், மந்திரம், நிகேதனம், ஆலயம், நகரம், தளி. (௰)

### மல், படை, சூது, கல்வி பயிலிடத்தின் பெயர்.

218. மல்லும் படையுஞ் சூது மற்றுங்
கல்வி பயிலிடங் கழக மாகும்.

மல், படை, சூது, கல்வி பயிலிடத்தின் பெயர்:—கழகம். (க)

### வீட்டின் பெயர்.

219. மனைநகர் சேர்பு வசதி யகமில்
புரையுள் பாத்தி புக்கி லில்லம்
பவன முறையுள் பதிமா டங்குல
மிடவகை யில்லிட மிவைவீ டென்ப.

வீட்டின் பெயர்:—மனை, நகர், சேர்பு, வசதி, அகம், இல், புரையுள், பாத்தி, புக்கில், இல்லம், பவனம், உறையுள், பதி, மாடம், குலம், இடவகை, இல்லிடம். (௧௭)

சிற்றிலின் பெயர்.

220. குரம்பை சிற்றில் குடில்குடிசை யாகும்.
சிற்றிலின் பெயர்:—குரம்பை, குடில், குடிசை. (ரு)

வீட்டிறப்பின் பெயர்.

221. இறையும் வளவியு மிறப்பின் பெயரே.
வீட்டிறப்பின் பெயர்:—இறை, வளவி. (உ)

முகட்டின் பெயர்.

222. விடங்கமுங் கொடைக்கையு மஞ்ச முகடே.
முகட்டின் பெயர்:—விடங்கம், கொடைக்கை, மஞ்சு. (ரு)

கல்லூரியின் பெயர்.

223. கல்வி சுற்றுவாரி கல்லூரி யாகும்.
கல்லூரியின் பெயர்:—கல்வி, சுற்றுவாரி. (உ)

வேயுளின் பெயர்.

224. வேயுள் வேய்த லாகு மென்ப.
வேயுளின் பெயர்:—வேய்தல். (க)

தாழ்வாரத்தின் பெயர்.

225. ஆரோகணஞ் சோபானந் தாழ்வார மாகும்.
தாழ்வாரத்தின் பெயர்:—ஆரோகணம், சோபானம். (உ)

முற்றத்தின் பெயர்.

226. முன்றி லங்கண முற்ற மாகும்.
முற்றத்தின் பெயர்:—முன்றில், அங்கணம். (உ)

நிலா முற்றத்தின் பெயர்.

227. அரமிய நிலாமுற்ற மாகு மென்ப.
நிலா முற்றத்தின் பெயர்:—அரமியம் (க)

தூம்புவாயின் பெயர்.

228. அங்கணந் தூம்புவாய்.
தூம்புவாயின் பெயர்:—அங்கணம். (க)

பொல்லா நிலத்தின் பெயர்.

229. சகதிபொல் லாநிலம்.
பொல்லா நிலத்தின் பெயர்:—சகதி. (க)

சலதாரையின் பெயர்.

230. சுருங்கும் புழலுஞ் செலுஞ்சல தாரை.
சலதாரையின் பெயர்:—சுருங்கு, புழல். (உ)

இதுவுமது.

231. அங்கண மென்று மறைய லாகும்.
ஷ்டி சலதாரையின் பெயர்:—அங்கணம். (க) ஆக (௩)

நீர்தகை கதவின் பெயர்.

232. ஓவென் கிளவி நீர்தகை கதவெனல்.
நீர்தகை கதவின் பெயர்:—ஓ. (க)

சாளரவாயிலின் பெயர்.

233. சாலேகம் வாதா யனஞ்சால நுழைஇயே.
சாலகங் காலதர் சாளர வாயில்.
சாளரவாயிலின் பெயர்:—சாலேகம், வாதாயனம், சாலம், நுழை, சாலகம், காலதர். (௬)

மனை வாயிலின் பெயர்.

234. துவாரம் வாரி தோட்டி யுவளகம்
புகுதி கோட்டி புதவு கடைதடம்
அருநெறி தூம்புசித மனைவாயி லாகும்.
மனை வாயிலின் பெயர்:—துவாரம், வாரி, தோட்டி, உவளகம், புகுதி, கோட்டி, புதவு, கடை, தடம், அருநெறி, தூம்பு, சிதம். (கஉ)

கதவின் பெயர்.

235. ஓபு கிளர்வி யுதைபு நிகுத்தை
காப்பு வாரி கபாடம் தோட்டி.
கதவின் பெயர்:—ஓபு, கிளர்வி, உதைபு, நிகுத்தை, காப்பு, வாரி, கபாடம், தோட்டி. (அ)

தாழின் பெயர்.

சீப்புங் கடிகையுந் தாழாம்.
ழ், சீப்பு, கடிகை. (௨)

துறப்பின் பெயர்.

237. அள்ளுங் கொல்லும் பறலிகையும் வலிப்பற்றும்
பூட்டும் வீகமுந் துறப்பெனப் புகல்வர்.

துறப்பின் பெயர்:— அர், கொல், பறலிகை, வலிப்பற்று, பூட்டு வீகம். (சா)

### யானைக் கூடத்தின் பெயர்.

238. ஆலய மோளியும் யானைக் கூடம்.

யானைக் கூடத்தின் பெயர்:—ஆலயம், ஒளி. (உ)

### யானை துயிலிடத்தின் பெயர்.

293. சேவகஞ் சாலை சேக்கையது துயிலிடம்.

யானை துயிலிடத்தின் பெயர்:—சேவகம், சாலை, சேக்கை. (௩)

### குதிரைப் பந்தியின் பெயர்.

240. மந்திரஞ் சாலை பணைலாய மாப்பந்தி.

குதிரைப் பந்தியின் பெயர்:—மந்திரம், சாலை, பணை, லாயம். (௪)

### தொழுவின் பெயர்.

241 தொழுகு பட்டி தொறுவிட ந் தொழுவே
தோழம் வேலி யானிலையுஞ் சொல்லும்.

தொழுவின் பெயர்:— தொழுகு, பட்டி, தொறுவிடம், தொழுவு, தோழம், வேலி, ஆனிலை. (எ)

### கற்படுத்த தரையின் பெயர்.

242. குட்டிமம் படுத்த தரையெனக் கூறுப.

கற்படுத்த தரையின் பெயர்:— குட்டிமம். (க)

### சுவர்த்தலத்தின் பெயர்.

243. உவமா நிலம்பித் திகைசுவர்த் தலமென்ப.

சுவர்த்தலத்தின் பெயர்:—உவமாநிலம், பித்திகை. (உ)

### திண்ணையின் பெயர்.

244 திட்டை குறடு தெற்றி வேதிகை
திண்ணை மண்ணீ டென்றுஞ் செப்புப.

திண்ணையின் பெயர்:—திட்டை, குறடு, தெற்றி, வேதிகை, மண்ணீடு. (௫)

### அடுக்களையின் பெயர்.

245. அட்டில் மடைப்பள்ளி யடுக்களை யாகும்.

அடுக்களையின் பெயர்:—அட்டில், மடைப்பள்ளி. (உ)

அடுப்பின் பெயர்.

246. காமரஞ் சுல்லி குமுதமுத் தான
மான பிறவு மடுப்பின் பெயரே.

அடுப்பின் பெயர்:—காமரம், சுல்லி, குமுதம், உத்தானம். (௪)

அக்கினிட்டியின் பெயர்.

247. ஞெகிழி யிந்தன நெருப்பிடு கலமே
யனற்குவை யின்ன * அக்கினிட் டிப்பெயர்.

அக்கினிட்டியின் பெயர்:—ஞெகிழி, இந்தனம், நெருப்பிடுகலம், அனற்குவை. (௪)

கடைக்கொள்ளியின் பெயர்.

248. அலாதமு மிராதமு ஞெகிழியுங் கடைக்கொள்ளி.

கடைக்கொள்ளியின் பெயர்:—அலாதம், இராதம், ஞெகிழி. (௩)

இதுவுமது.

249. மூளரியு † முற்கையு மொழியப் பெறுமே.

இ-டி கடைக்கொள்ளியின் பெயர்:—மூளரி, உற்கை. (௨)

வேள்விக் குண்டத்தின் பெயர்.

250. வேதியு நித்தமும் வேள்விக் குண்டம்.

வேள்விக் குண்டத்தின் பெயர்:—வேதி, நித்தம். (௨)

மட்கலஞ் சுடுமிடத்தின் பெயர்.

251. சுள்ளை சூளை மட்கலஞ் சுடுமிடம்.

மட்கலஞ் சுடுமிடத்தின் பெயர்:—சுள்ளை, சூளை. (௨)

உலைக்களத்தின் பெயர்.

252. உறவி யென்ப துலைக்கள மாகும்.

உலைக்களத்தின் பெயர்:—உறவி. (௧)

உலை மூக்கின் பெயர்.

253. குருகு சிவையுலை மூக்கெனக் கூறும்.

உலை மூக்கின் பெயர்:—குருகு, சிவை. (௨)

* அக்கினிட்டி - தூபக்கால்.

† 'உற்கமு மொழியப் பெறுமே' என்றும் பாடம்.

கரியின் பெயர்.

254. கந்துளு மிருந்தையு நல்லமுங் கரியே.
கரியின் பெயர்:—கந்துள், இருந்தை, நல்லம். (௩)

குதிரின் பெயர்.

255. புகலென் கிளவி குதிரெனப் புகலும்.
குதிரின் பெயர்:—புகல். (௧)

தவத்தோர் இருக்குமிடத்தின் பெயர்.

256. பாழி காண்டை பள்ளி மடங்குகை
தாபதந் தவத்தோர் தம்மிட மாகும்.
தவத்தோர் இருக்குமிடத்தின் பெயர்:—பாழி, காண்டை, பள்ளி, மடம், குகை, தாபதம். (௬)

கூட்டின் பெயர்.

257. குடம்பை கட்சி குலாயங் கூடே.
கூட்டின் பெயர்:—குடம்பை, கட்சி, குலாயம். (௩)

பண்ணுங் கூட்டின் பெயர்.

258. பஞ்சரங் குலாயம் பண்ணுங் கூடே
பண்ணுங் கூட்டின் பெயர்:—பஞ்சரம், குலாயம். (௨)

கல்வி பயில் களத்தின் பெயர்.

259. கழகம் பட்டிமங் கல்வி பயில்களம்.
கல்வி பயில் களத்தின் பெயர்:—கழகம், பட்டிமம். (௨)

துயிலிடத்தின் பெயர்

260. ஆய்வை கிடக்கை யணைபரி யங்கம்
பாயல் சேக்கை பள்ளி தளிமஞ்
சாய றட்டந் தற்பஞ் சயன
மம்பரஞ் சேர்விடந் துயிலிட மாகும்.
துயிலிடத்தின் பெயர்:—ஆய்வை, கிடக்கை, அணை, பரியங்கம், பாயல், சேக்கை, பள்ளி, தளிமம், சாயல், தட்டம், தற்பம், சயனம், அம்பரம், சேர்விடம். (௧௪)

விலங்கு துயிலிடத்தின் பெயர்.

261. பாழி பண்ணை பணைபட்டம் போத்துச்
சேக்கை விலங்கின் சேர்துயி லிடமே.

விலங்கு துயிலிடத்தின் பெயர்:—பாழி, பண்ணை, பணை, பட்டம், போத்து, சேக்கை. (சு)

தோட்டத்தின் பெயர்.

262 பாதவந் துடவை படப்பை தோட்டம்.
தோட்டத்தின் பெயர்:—பாதவம், துடவை, படப்பை. (ந)

இதுவுமது.

263. ஆரமுந் தொடுவு மதன்பாற் படுமே.
ஷை தோட்டத்தின் பெயர்:—ஆரம், தொடு. (உ)

வேலியின் பெயர்.

264. வீர்தி காவல் வேலியின் பெயரே.
வேலியின் பெயர்:—வீர்தி, காவல். (உ)

நுழை வாயிலின் பெயர்.

265. நூழைசு ருங்கை நுழைவாயி லாகும்.
நுழை வாயிலின் பெயர்:—நூழை, சுருங்கை. (உ)

பரணின் பெயர்.

266. பணவை யிதணங் கழுது பரணே.
பரணின் பெயர்:—பணவை, இதணம், கழுது. (க)

கவரிறுக்கியின் பெயர்.

267. கடவை நடவை மடவை * கவரிறுக்கி.
கவரிறுக்கியின் பெயர்:—கடவை, நடவை, மடவை. (ந)

காதவழியின் பெயர்.

268. காவத மென்பது காத வழியே.
காதவழியின் பெயர்:—காவதம். (க)

கூப்பிடு தூரத்தின் பெயர்.

269 குரோசமு மெல்லையுங் கூப்பிடு தூரம்.
கூப்பிடு தூரத்தின் பெயர்:—குரோசம், எல்லை. (உ)

யோசனையின் பெயர்.

270. யோசனை யென்ப புகையெனப் புகலுவர்.
யோசனையின் பெயர்:—புகை. (க)

* கவரிறுக்கி கடவைமாவழி.

## கோழிப்பறவை யளவின் பெயர்.

271. கிரவுஞ்சங் கோழிப் பறவையள வாகும்.

கோழிப்பறவை யளவின் பெயர்:—கிரவுஞ்சம். (க)

## இடத்தின் பெயர்.

272. வாசம் பாடு மாடு கடைசிறை
சாதனம் பக்கந் தாபரம் வாய்புல
மருங்கு பாங்கு நத்தம் வைப்பு
மருதல மடிவயின் மதர்வு களம்வழி
வளாக முழைபட்டி வகைதிணை சூழல்
தலையிட மருகு தானங் கண்ணிடை
சார்கால் பின்முத ருவளம் பாலுளி
பாழி நிலமில் பள்ளி ஞாங்கர்
நிலைபதி யுறையுணி சாதன முன்னர்
நியமம் வசதி நிகாயந் தேயம்
புடையயல் மராட்டங் கோட்டங் கீழ்மேல்
மடமிவை யெல்லா மிடமெனப் படுமே.

இடத்தின் பெயர்:—வாசம், பாடு, மாடு, கடை, சிறை, சாதனம், பக்கம், தாபரம், வாய், புலம், மருங்கு, பாங்கு, நத்தம், வைப்பு, மரு, தலம், அடி, வயின், மதர்வு, களம், வழி, வளாகம், உழை, பட்டி, வகை, திணை, சூழல், தலை, இடம், அருகு, தானம், கண், இடை, சார், சால், பின், முதல், தாவளம், பால், உளி, பாழி, நிலம், இல், பள்ளி, ஞாங்கர், நிலை, பதி, உறையுள், நிசாதனம், முன்னர், நியமம், வசதி, நிகாயம், தேயம், புடை, அயல், மராட்டம், கோட்டம், கீழ், மேல், மடம். (சுக)

## இதுவுமது.

273. காடென் கிளவி யிடனு முணர்த்தே.

ஷை இடத்தின் பெயர்:—காடு. (க) ஆ (சுஉ)

## சபையின் பெயர்.

274. சங்கமுங் குழுவுஞ் சமுகமு மவையுங்
கோட்டியுந் தொகுதியுங் கணமுங் கூட்டமுஞ்
சமவாய மும்பலர் செறிசபைப் பெயரே.

சபையின் பெயர்:—சங்கம், குழு, சமுகம், அவை, கோட்டி, தொகுதி, கணம், கூட்டம், சமவாயம். (சு)

நால்வகை அரணின் பெயர்.

275. மலையரண் காட்டரண் மதிலா ணீரரண்
வகையுறு சிறப்பி னால்வகை யாணே.
நால்வகை அரணின் பெயர்:—மலை, காடு, மதில், நீர். (௪)

வன்பாலின் பெயர்.

276. வன்பால் குறிஞ்சி பாலையு மாகும்.
வன்பாலின் பெயர்:—குறிஞ்சி, பாலை. (௨)

மென்பாலின் பெயர்.

277. மென்பா லென்பெயர் மருத மேற்றே.
மென்பாலின் பெயர்:—மருதம். (௧)

சமப்பாலின் பெயர்.

278. முல்லையு நெய்தலு மொழிசமப் பாலே.
சமப்பாலின் பெயர்:—முல்லை, நெய்தல். (௨)

நான்காவது
அவனிவகை முற்றிற்று.

---

ஆக சூத்திரம் எஉகு.

---

ஐந்தாவது

## ஆடவர் வகை.

---

பார்ப்பார் பெயர்.

1. அறவோர் பூசுர ரறுதொழி லாள
ரிருபிறப் பாள ரெரிவளர்ப் போரே
யாதி வருணர் வேதிய ரந்தணர்
வேள்வி யாளர் மறையவர் விப்பிரர்
மேற்குலத் தோர்முற் குலத்தோ ரையர்
வேத பாரகர் முப்புரி நூலோர்
தொழுகுலர் பார்ப்பார் தொல்பெய ராகும்.

பார்ப்பார் பெயர்:—அறவோர், பூசுரர், அறுதொழிலாளர், இருபிறப்பாளர், எரிவளர்ப்போர், ஆதிவருணர், வேதியர், அந்தணர், வேள்வியாளர், மறையவர், விப்பிரர், மேற்குலத்தோர், முற்குலத்தோர், ஐயர், வேதபாரகர், முப்புரிநூலோர், தொழுகுலர். (௧௭)

இதுவுமது.

2. காருக பத்திய மாகவ னீயம்
தக்கிணைக் கினிய மெனுமுத்தி மாபினர்.

ஷை பார்ப்பார் பெயர்:—முத்திமாபினர். (க) ஆ (கஅ)

பிரமசாரியின் பெயர்.

3. மறையோர் தமக்குள் வன்னி யெனும்பெயர்
பிரம சாரியின் பெயரென் றாகும்.

பிரமசாரியின் பெயர்:—வன்னி. (க)

அந்தணர் அறுதொழிலின் பெயர்.

4. ஓத லோதுவித்தல் வேட்டல் வேட்பித்த
லீத லேற்ற லென்றிவை யாறு
மாதிக் காலத் தந்தணர் தொழிலே.

அந்தணர் அறுதொழிலின் பெயர்:—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல். (சு)

அந்தணர் மாலை, கொடியின் பெயர்.

5. மாலை கமல மறைகொடி யாகும்.

அந்தணர் மாலையின் பெயர்:—கமலம். (க)
அந்தணர் கொடியின் பெயர்:—வேதம். (க)

அந்தணர்க்குரிய பொருளின் பெயர்.

6. தருப்பையு முஞ்சியுஞ் சமித்து மவர்க்கே.

அந்தணர்க்குரிய பொருளின் பெயர்:—தருப்பை, முஞ்சிப்புல், சமித்து. (ங)

துரோணாசாரியின் பெயர்.

7. வேதக் கொடியோன் வின்னூ லாளன்
பாரத்து வாசன் கும்ப சன்னே
துரோணா சாரியின் றுல்பெய ராகும்.

துரோணாசாரியின் பெயர்:—வேதக்கொடியோன், வின்னூலாளன், பாரத்துவாசன், கும்பசன். (ச)

அரசரின் பெயர்.

8. பார்த்திப ரிறைவர் காவலர் பதிகள்
கோக்கள் வேந்தர் கொற்றவர் புரவலர்
பொருநர் மன்னர் பூபாலர் நிருபர்

முதல்வ ரேந்தல் குரிசின் மகிபாலர்
தலைவ ராசர் தம்பெய ராகும்.

அரசரின் பெயர்:—பார்த்திபர், இறைவர், காவலர், பதிகள், கோக்கள், வேந்தர், கொற்றவர், புரவலர், பொருநர், மன்னர், பூபாலர், நிருபர், முதல்வர், ஏந்தல், குரிசில், மகிபாலர், தலைவர். (கஎ)

எண்வகை மாலையின் பெயர்.

9. வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
நொச்சி யுழிஞை தும்பை வாகையென்
றித்தொடை யெட்டு மரசர்க் காமே.

எண்வகை மாலையின் பெயர்:—வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை. (அ)

அரசர்கள் படை, கொடியின் பெயர்.

10. படையறு வகைத்தானை கொடிசிங்க மாகும்.

அரசர்கள் படையின் பெயர்:—அறுவகைத்தானை. (க)
அரசர்கள் கொடியின் பெயர்:—சிங்கம். (க)

அறுவகைச் சக்கரவர்த்திகளின் பெயர்.

11. அரிச்சந் திரனளன் முசுகுந்தன் புரூரவாச்
சகரன் கார்த்த வீரிய னென்றிவர்
அறுவகைச் சக்கர வர்த்திக ளென்ப.

அறுவகைச் சக்கரவர்த்திகளின் பெயர்:—அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புரூரவா, சகரன், கார்த்தவீரியன். (ரு)

வீட்டுமன் பெயர்.

12. சந்தனுமுன் மைந்தன் றருதெய்வ விரதன்
கங்கை தனையன் வீட்டுமன் காங்கேய
னங்கவன் பிரம சாரியு மாகும்.

வீட்டுமன் பெயர்:—சந்தனுமுன்மைந்தன், தெய்வவிரதன், கங்கை தனையன், காங்கேயன், பிரமசாரி. (ஙு)

குருகுலத்து அரசர் பெயர்.

13. பௌரவர் கௌரவர் பாரத ரென்ப
குருகுல மன்னர் கொள்கைப் பெயரே.

குருகுலத்து அரசர் பெயர்:—பௌரவர், கௌரவர், பாரதர். (ரு)

தருமபுத்திரன் பெயர்.

14. தரும மைந்தன் பொறையாள னுதிட்டிரன்
முரசுயர் கொடியோன் றருமன் பெயரே.

தருமபுத்திரன் பெயர்:—தருமமைந்தன், பொறையாளன், உதிட்டிரன், முரசக்கொடியோன். (௪)

துரியோதனன் பெயர்.

15. மன்னர் மன்னவன் வணங்கா முடியோன்
பன்னக முயர்த்தோன் காந்தாரி செம்மலென்
றின்னவை துரியோ தனன்பெய ரென்ப.

துரியோதனன் பெயர்:—மன்னர்மன்னவன், வணங்காமுடியோன், பன்னகமுயர்த்தோன், காந்தாரிசெம்மல். (௫)

கன்னன் பெயர்.

16. வெங்கதிர் மதலை மிகுகொடை யாள
னங்கர் கோமான் கவச குண்டலன்
கானீனன் கச்சைக் கொடியோன் பெயரே.

கன்னன் பெயர்:—கதிர்மதலை, மிகுகொடையாளன், அங்கர்கோமான், கவசகுண்டலன், கானீனன், கச்சைக்கொடியோன். (௬)

வீமன் பெயர்.

17. வாயு மைந்தன் கதாயுதன் மாருதி
கோளரிக் கொடியோ னிடும்பி கொழுநன்
விருகோ தரனிவை வீமன் பெயரே.

வீமன் பெயர்:—வாயுமைந்தன், கதாயுதன், மாருதி, கோளரிக்கொடியோன், இடும்பிகொழுநன், விருகோதரன். (௬)

அருச்சுனன் பெயர்.

18. பற்குனன் கிரீடி பார்த்தன் வீபற்சு
சவ்விய சாசி விசயன் றனஞ்சயன்
சுவேத வாகனன் சுரேந்திரன் மைந்தன்
கிருட்டிணன் கிருட்டிண சகாயன் மாதவி
கொழுநன் வானரக் கொடியோன் காண்டீபன்
ஆண்டொழின் மைந்த னருச்சுனன் பெயரே.

அருச்சுனன் பெயர்:—பற்குனன், கிரீடி, பார்த்தன், வீபற்சு, சவ்வியசாசி, விசயன், தனஞ்சயன், சுவேதவாகனன், சுரேந்திரன்மைந்தன், கிருட்டிணன், கிருட்டிணசகாயன், மாதவிகொழுநன், வானரக்கொடியோன், காண்டீபன், ஆண்டொழின்மைந்தன். (கரு)

நகுல, சாதேவர் பெயர்.

19. மத்திரை மைந்த ரச்சுவினி மதலைய
ரிரட்டையர் நகுல சாதேவர் நாமம்.

நகுல, சாதேவர் பெயர்:—மத்திரைமைந்தர், அச்சுவினிமதலையர், இரட்டையர். (ந)

### சேரன் பெயர்.

20. பூழி யனுதியன் கொங்கன் பொறையன்
வானவன் குட்டுவன் வானவ ரம்பன்
வில்லவன் குடநாடன் வஞ்சி வேந்தன்
கொல்லிச் சிலம்பன் கோதை கேரளன்
பொருநைத் துறைவன் போந்தின் கண்ணியன்
மலையன் மலையமான் சேரன் பெயரே.

சேரன் பெயர்:—பூழியன், உதியன், கொங்கன், பொறையன், வானவன், குட்டுவன், வானவரம்பன், வில்லவன், குடநாடன், வஞ்சி வேந்தன், கொல்லிச்சிலம்பன், கோதை, கேரளன், பொருநைத் துறைவன், போந்தின்கண்ணியன், மலையன், மலையமான். (கஎ)

### சேரன் கொடி, குதிரையின் பெயர்.

21. வில்கொடி புரவி பாடல மாமே.

சேரன் கொடியின் பெயர்:—வில். (க)
சேரன் குதிரையின் பெயர்:—பாடலம். (க)

### சோழன் பெயர்.

22. சென்னி வளவன் செம்பியன் கிள்ளி
பொன்னித் துறைவன் புலிக்கொடி யோன்மால்
கோழி வேந்த னேரி வெற்ப
னாரின் கண்ணிய னேரிய னபயன்
சூரியன் புனனாடன் சோழன் பெயரே.

சோழன் பெயர்:—சென்னி, வளவன், செம்பியன், கிள்ளி, பொன்னித்துறைவன், புலிக்கொடியோன், மால், கோழிவேந்தன், நேரிவெற்பன், ஆரின்கண்ணியன், நேரியன், அபயன், சூரியன், புனனாடன். (கச)

### இதுவுமது.

23 கேசவ னென்பது மாங்கவன் மேற்றே.

ஷை சோழன் பெயர்:—கேசவன். (க) ஆ (கரு)

### சோழன் கொடி, குதிரையின் பெயர்.

24. கொடியே வயப்புலி புரவி கோரம்.

சோழன் கொடியின் பெயர்:—புலி (க)
சோழன் குதிரையின் பெயர்:—கோரம். (க)

## பாண்டியன் பெயர்.

25. செழியன் கூடற் கோமான் றென்னவன்
வழுதி மீனவன் பஞ்சவன் மாறன்
கௌரியன் வேம்பின் கண்ணியன் கைதவன்
மலையப் பொருப்பன் வைகைத் துறைவன்
குமரிச் சேர்ப்பன் கோப்பாண் டியனே.

பாண்டியன் பெயர்:—செழியன், கூடற்கோமான், தென்னவன், வழுதி, மீனவன், பஞ்சவன், மாறன், கௌரியன், வேம்பின் கண்ணியன், கைதவன், மலையப்பொருப்பன், வைகைத்துறைவன், குமரிச்சேர்ப்பன். (கங.)

## பாண்டியன் கொடி, குதிரையின் பெயர்.

26. கயலே கொடிகன வட்டம் புரவி.

பாண்டியன் கொடியின் பெயர்:—கயல். (க)
பாண்டியன் குதிரையின் பெயர்:—கனவட்டம். (க)

## சளுக்கு வேந்தர் பெயர்.

27. வேள்புல வரசர் சளுக்கு வேந்தர்.

சளுக்குவேந்தர் பெயர்:—வேள்புலவரசர். (க)

## குறுநில மன்னர் பெயர்.

28. குறும்பர் புரோசர் குறுநில மன்னர்.

குறுநில மன்னர் பெயர்:—குறும்பர், புரோசர். (உ)

## இதுவுமது.

29. வேளி ரென்பது மாங்கவர் மேற்றே.

அடி குறுநில மன்னர் பெயர்:—வேளிர். (க) ஆ. (ங.)

## வரைவின்றி யாவருக்குங் கொடுக்குந் தலைவள்ளல் எழுவர் பெயர்.

30. சகரன் காரி நளன்றுந்து மாரி
நிருதி செம்பியன் விராடன் றலைவள்ளல்.

வரைவின்றி யாவருக்குங் கொடுக்குந் தலைவள்ளல் எழுவர் பெயர்:—சகரன், காரி, நளன், துந்துமாரி, நிருதி, செம்பியன், விராடன். (எ)

இரப்போர்க்குக் கொடுக்கும் இடைவள்ளல் எழுவர் பெயர்.

31. அந்திமான் சிசுபால னக்குரான் வக்கிரன்
சந்திமான் கன்னன் சந்த னிடைவள்ளல்.

இரப்போர்க்குக் கொடுக்கும் இடைவள்ளல் எழுவர் பெயர்:—அந்திமான், சிசுபாலன், அக்குரான், வக்கிரன், சந்திமான், கன்னன், சந்தன். (எ)

புகழ்வோருக்குக் கொடுக்குங் கடைவள்ளல் எழுவர் பெயர்.

32. பாரி யெழினி நள்ளியாய் மலையன்
ஓரி பேக னிவர்கடை வள்ளல்.

புகழ்வோருக்குக் கொடுக்குங் கடைவள்ளல் எழுவர் பெயர்:—பாரி, எழிலி, நள்ளி, ஆய், மலையன், ஓரி, பேகன். (எ)

அரசியல் ஆறின் பெயர்.

33. படைகுடி கூழமைச்சு நட்பர ணென்ன
வுடைய வரசிய லாறென வுரைப்பர்.

அரசியல் ஆறின் பெயர்:—படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண். (சு)

அரசர் அறுவகைத் தானையின் பெயர்.

34. வேளற் றானை வாட்டானை விற்றானை
தேர்த் தானை பரித்தானை களித்தானை
யெனவறு வகைத்தானை யரசர்க் கென்ப.

அரசர் அறுவகைத் தானையின் பெயர்:—வேல், வாள், வில், தேர், பரி, களிறு. (சு)

அரசியல் ஆறின் பெயர்.

35. அறநிலை யறமு மறநிலை யறமு
மறநிலைப் பொருளு மறநிலைப் பொருளு
மறநிலை யின்பமு மறநிலை யின்பமு
மறுவகைப் படுவ தரசிய லென்ப.

அரசியல் ஆறின் பெயர்:—அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப்பொருள், மறநிலைப்பொருள், அறநிலையின்பம், மறநிலையின்பம். (சு)

அறநிலையறத்தினியல்.

36. வருணக் காப்பிற் பிறழா நெறிநிலை
பெறுதற் குரித்தாய்ப் பேணும் பெற்றி
யறநிலை யறமென் றறைந்தனர் புலவர்.

அறநிலையறத்தினியல்—நான்கு வருணத்தாரும், தத்தம் வருணத்திற் பிறழாது நிலைபெறப் பாதுகாத்தல் அறநிலையறம்.

மறநிலையறத்தினியல்.

37. ஆனிரை மீட்டலு மரும்பகை தெறுதலு
மானமில் செஞ்சோற் றுதவியி லோரை
யினைஞ் செய்தலு மறநிலை யறமே.

மறநிலையறத் தினியல்:—நிரை மீட்டலும் பகை வெல்லுதலுமாகிய செஞ்சோற்றுக்கடன் கழியாதாரைத் தண்டித்துக் குறைவுறச் செய்தன் மறநிலையாம்.

அறநிலைப் பொருளியல்.

38. நெறிவழி நின்று நெறியா லுழந்து
பெறுபொரு ளென்ப தறநிலைப் பொருளே.

அறநிலைப் பொருளியல்:—நெறிவழிநின்று தத்தநிலையினால் முயன்று பெறுபொரு ளறநிலைப்பொருள்.

மறநிலைப் பொருளியல்.

39. அமருழந்து கொண்டவு மருந்திறை கொண்டவுந்
தவறுசெய் தீமையோர் தண்டப் பொருளுங்
கவர்சூதில் வென்றவு மறநிலைப் பொருளே.

மறநிலைப் பொருளியல்:—பகைஞர் பொருளும், இறைப்பொருளும், குற்றஞ் செய்தோரை யொறுக்கும் பொருளும், சூதில்வெல் பொருளு மறநிலைப்பொருள்.

அறநிலை இன்பவியல்.

40. ஒத்த குலமு மொத்த வொழுக்கமு
மொத்த குணமு மொத்த வாயுளு
மத்தக வுடைய தறநிலை யின்பம்.

அறநிலை இன்பவியல்:—குலமு மொழுக்கமுங் குணமும் பருவமு மொத்த கன்னிகையைத் திவேட் டில்லத்திருத்த லறநிலை யின்பம்.

### மறநிலை இன்பவியல்.

41. ஏறு தழுவ விலக்க மெய்தல்
கூறுபொருள் கொடுத்தல் வலிதிற் கோடன்
மாறுடை நிலையின் மறநிலை யின்பம்.

மறநிலை இன்பவியல்:—ஏறு தழுவலும், வில்லாவிலக்க மெய்தலும், பொருள்கொடுத்துக் கோடலும், வலிந்து கோடலுமாகிய நெறியால் மணத்தல் மறநிலையின்பம்.

### அரசர் அறுதொழிலின் பெயர்.

42. ஓதல் பொருத லுலகு புரத்தல்
ஈதல் வேட்டல் படைபயிற லறுதொழில்.

அரசர் அறுதொழிலின் பெயர்:—ஓதல், பொருதல், உலகுபுரத்தல், ஈதல், வேட்டல், படைபயிறல். (௬)

### செங்கோல் வேந்தன் எழுவகைநிலையின் பெயர்

43. அறம்பொரு ளின்ப மிம்மை மறுமை
திறம்பாப் புகழே மதிப்பென் றேழும்
பெருஞ்செங் கோலி னெறியின் றன்னிலை.

செங்கோல் வேந்தன் எழுவகை நிலையின் பெயர்:—அறம், பொருள், இன்பம், இம்மை, மறுமை, புகழ், மதிப்பு. (௭)

### அரசர்க்கு ஐம்பெருங் குழுவின் பெயர்.

44. மந்திரியர் புரோகிதர் சேனா பதியர்
தந்திரத் தூதர் சாரண ரென்றிவ
ரந்தமி லரசர்க் கைம்பெருங் குழுவே.

அரசர்க்கு ஐம்பெருங் குழுவின் பெயர்:—மந்திரியர், புரோகிதர், சேனாபதியர், தூதர், சாரணர். (௫)

### அரசர்க்கு எண்வகைத் துணைவர் பெயர்.

45. கரணத் தியல்வோருங் கருமவதி காரரு
மகன்ற சுற்றமுங் கடைகாப் பாளரு
நகர மாக்களு நனிபடைத் தலைவரு
மிவுளி மறவரும் யானை வீரரு
மரசர்க் கெண்பெருந் துணைவ ராகும்.

அரசர்க்கு எண்வகைத் துணைவர் பெயர்:—கரணத்தியல்வோர், கரும வதிகாரர், சுற்றத்தார், கடைகாப்பாளர், நகரமாக்கள், படைத் தலைவர், இவுளிமறவர், யானைவீரர். (௮)

அரசர்க்கு ஐவகை உறுதிச் சுற்றத்தின் பெயர்.

46. அடுத்தநட் பாளரு மந்த ணாளரு
மடைத்தொழி லாளரு மருத்துவக் கலைஞரு
நிமித்திகப் புலவரு நீணில வேந்தர்க்
குரைத்த வைம்பே ருறுதிச் சுற்றம்.

அரசர்க்கு ஐவகை உறுதிச் சுற்றத்தின் பெயர்:—நட்பாளர், அந்தணாளர், மடைத்தொழிலாளர், மருத்துவக்கலைஞர், நிமித்திகப் புலவர். (ரு)

அரசர்க்குப் பதினெண்வகைத் தொழில் செய்பவர்.

47. உரைத்த முப்பாலு முயர்குடை வேந்தர்க்குப்
படைத்த பதினெண் டொழிலுடைப் பாலோர்.

ஐம்பெருங்குழு, எண்வகைத்துணைவர், ஐவகை உறுதிச்சுற்றம் ஆகிய மேற்கூறிய மூவகையோரும் வெண்கொற்றக் குடையினையுடைய அரசர்களுக்குப் பதினெண்வகைத் தொழில்செய்யும் பகுதியுடையவர்களாவார்கள்.

வைசியர் பொதுப்பெயர்.

48. தாளாள ரிப்பர் தருமக் கிழவர்
வேளா ளிளங்கோக்கள் வைசியர் பொதுப்பெயர்.

வைசியர் பொதுப்பெயர்:—தாளாளர், இப்பர், தருமக்கிழவர், வேளாளர், இளங்கோக்கள். (ரு)

வைசியர் முத்தொழிலின் பெயர்.

49. கோக்களைக் காத்தலு மாப்பொரு ளீட்டலு
மேர்த்தொழி லென் மூன்றும் வைசியர்தந் தொழிலே.

வைசியர் முத்தொழிலின் பெயர்:—கோக்களைக்காத்தல், பொருளீட்டல், ஏர்த்தொழில். (ந.)

கோவைசியர் பெயர்.

50. ஒருகுல னாகித் தொழில்வேறு படுதலிற்
றொழிறொறும் பகர்ந்த தொல்பெயர் கூறிற்
கோவல ரிப்பர் கோவர்த் தனரெனச்
சிறிய பிறவுங் கோவை சியர்க்கே.

கோவைசியர் பெயர்:— * வைசியனொருவனே அந்தணர் வேள்வியைக் குறைபாடின்றி முடித்தற்குப் பூண்டதொழில்களால் வந்த தொன்றுதொட்டுள்ள பெயர்கள் சொல்லுமிடத்தில் இவர்களுள் கோவைசியர் - கோவலர், இப்பர், கோவர்த்தனர் எனப் பெயர் பெறுவார். (ந.)

---

* இதனைத் தருமநூலிற் காண்க.

### தனவைசியர் பெயர்.

51. நாய்க ரெட்டியர் வணிகர் பாதர்
தாமும் பிறவுந் தனவை சியர்க்கே.

தனவைசியர் பெயர்:—நாய்கர், எட்டியர், வணிகர், பாதர். (ச)

### பூவைசியர் பெயர்.

52. உழவர் மேழியர் காரா ளரிளங்கோ
புகல்பூ பாலர்பூ வைசியர் பெயரே.

பூவைசியர் பெயர்:—உழவர், மேழியர், காராளர், இளங்கோ, பூபாலர். (ரு)

### பூவைசியர் அறுதொழிலின் பெயர்.

53. ஓதல் வேட்ட லுபகார மன்றியும்
வாணிகம் பசுக்காவ லுழவு தொழிலெனப்
புகன்றவை யாறும் பூவைசியர் தொழிலே.

பூவைசியர் அறுதொழிலின் பெயர்:—ஓதல், வேட்டல், உபகாரம், வாணிகம், பசுக்காவல், உழவுத்தொழில். (சு)

### வணிகர் எண்குணத்தின் பெயர்.

54. தனிமை யாற்றன் முனிவில ஞதை
யிடனறிந் தொழுகல் பொழுதொடு புணர்த
லுறுவது தெரித லிறுவதஞ் சாமை
யீட்டல் பகுத்த லென்றிவை யெட்டும்
வாட்டமில் சிறப்பின் வணிகர்தங் குணமே.

வணிகர் எண்குணத்தின் பெயர்:—தனிமையாற்றல், முனிவிலனுதல், இடனறிந்தொழுகல், பொழுதொடுபுணர்தல், உறுவதுதெரிதல், இறுவதஞ்சாமை, ஈட்டல், பகுத்தல். (அ)

### சூத்திரர் பெயர்.

55. பின்னவர் சதுர்த்தர் பெருக்காளர் வளமையர்
மன்னுமுத் தொழிலர் மண்மகள் புதல்வ
ருழவ ரேரினர் வாணர்கா ராளர்
வினைஞர் மேழியர் வேளாள ரென்றிவை
தொகுபெய ரெல்லாஞ் சூத்திரர் பெயரே.

சூத்திரர் பெயர்:— பின்னவர், சதுர்த்தர், பெருக்காளர், வளமையர், முத்தொழிலர், மண்மகள்புதல்வர், உழவர், ஏரினர், வாணர், காராளர், வினைஞர், மேழியர், வேளாளர். (கடு)

வேளாளர் பத்துவகைத் தொழிலின் பெயர்.

56. ஆணைவழி நிற்றன் மாண்வினை தொடங்கல்
கைக்கட னாற்றல் கரிலகத் தின்மை
யொக்கல் போற்ற லோவா முயற்சி
மன்னிறை தருத லொற்றுமை கோட
லிருந்திய வொழுக்கம் விருந்துபுறந் தருதல்
வேளாண் மாந்தர் செய்கையி னைந்தே.

வேளாளர் பத்துவகைத் தொழிலின் பெயர்:—ஆணைவழிநிற்றல், மாண்வினைதொடங்கல், கைக்கடனாற்றல், குற்றமனத்தின்மை, சுற்றம்போற்றல், நீங்காதமுயற்சி, மன்னிறைதருதல், ஒற்றுமைகோடல், ஒழுக்கம், விருந்துபுறந்தருதல். (௧0)

குருவின் பெயர்.

57. பட்டார கன்பதி பண்ணவன் பகவ
னத்தன் றீர்த்த னாசா னடிகள்
புங்கவன் றலைவன் சாமி யீசன்
நாத னிறைவன் கடவுள் கோமான்
குரவ னையன் கோமான் குருவே.

குருவின் பெயர்:—பட்டாரகன், பதி, பண்ணவன், பகவன், அத்தன், தீர்த்தன், ஆசான், அடிகள், புங்கவன், தலைவன், சாமி, ஈசன், நாதன், இறைவன், கடவுள், கோமான், குரவன், ஐயன், கோமான். (௧௧)

ஆசாரியன் பெயர்.

58. ஓசன் பணிக்க னுபாத்தி தேசிக
னாசா ரியன்பெய ராகு மென்ப.

ஆசாரியன் பெயர்:—ஓசன், பணிக்கன், உபாத்தி, தேசிகன். (௪)

ஆயுள்வேதியர் பெயர்.

59. மாமாத் திரரே பிடகர் மருத்துவ
ராயுள் வேதியர்க் கபிதா னம்மே.

ஆயுள்வேதியர் பெயர்:—மாமாத்திரர், பிடகர், மருத்துவர். (௩)

குயவர் பெயர்.

60. குலாலர் வேட்கோவர் கும்பகாரர் குயவர்.

குயவர் பெயர்:—குலாலர், வேட்கோவர், கும்பகாரர். (௩)

உப்புவாணிகர் பெயர்.

61. உமண ரளவ ருப்பருப் பமைப்போர்.

உப்புவாணிகர் பெயர்:—உமணர், அளவர், உப்பர். (௩)

கடிகைமாக்கள் பெயர்.

62. பெருநம் பிகளே மங்கலப் பாடகர்
கடிகை மாக்க ளெட்டரு மாகும்.
கடிகைமாக்கள் பெயர்:—பெருநம்பிகள், மங்கலப்பாடகர், எட்டர். (௩)

கம்மாளர் பெயர்.

63. கம்மியர் யவன ரோவியர் வித்தகர்
கம்மாளர் தபதியர் பொதுப்பெயர் கட்டுரை.
கம்மாளர் பெயர்:—கம்மியர், யவனர், ஓவியர், வித்தகர், தபதியர். (௫)

கொல்லர் பெயர்.

64. கருமர் மனுவர் கம்மியர் கொல்லர். (௩)
கொல்லர் பெயர்:—கருமர், மனுவர், கம்மியர்.

தச்சன் பெயர்.

65. மரவினை யாளன் தபதி தச்சன். (௨)
தச்சன் பெயர்:—மரவினையாளன், தபதி.

தட்டார் பெயர்.

66. செங்கொல்லர் பொன்வினை செய்வோர் தட்டார்.
தட்டார் பெயர்:—செங்கொல்லர், பொன்வினை செய்வோர். (௨)

இதுவுமது.

67. அக்கசா லையர்சொன்ன காரரு மாகும்.
ஷை தட்டார் பெயர்:—அக்கசாலையர், சொன்னகாரர். (௨) ஆக (௪)

கன்னார் பெயர்.

68. கன்னுவர் கஞ்ச காரர் கன்னார். (௨)
கன்னார் பெயர்:—கன்னுவர், கஞ்சகாரர்.

சிற்பாசாரியர் பெயர்.

69. கல்வினையர் சிற்பா சாரியர்கற் றொழிலோர். (௨)
சிற்பாசாரியர் பெயர்:—கல்வினையர், கற்றொழிலோர்.

நரப்புக்கருவியாளர் பெயர்.

70. குயிலுவர் நரப்புக் கருவிகொளற் குரியோர். (௧)
நரப்புக்கருவியாளர் பெயர்:—குயிலுவர்.

தோற்கருவியாளர் பெயர்.

71. இயவர் தோற்கருவி யிசைக்கு மாக்கள்.
தோற்கருவியாளர் பெயர்:—இயவர். (க)

மிலேச்சர் பெயர்.

72. மிலேச்ச ராரியர்.
மிலேச்சர் பெயர்:—ஆரியர். (க)

சோனகர் பெயர்.

73. யவனர் சோனகர்.
சோனகர் பெயர்:—யவனர். (க)

சித்திரகாரர் பெயர்.

74. ஓவியர் சித்திர கார ராகும்.
சித்திரகாரர் பெயர்:—ஓவியர். (க)

முத்தங் கோப்பார் பெயர்.

75. மணிகுயிற்று நர்முத்தங் கோப்பா ராகும்.
முத்தங் கோப்பார் பெயர்:—மணிகுயிற்றுநர். (க)

வண்ணார் பெயர்.

76. காழிய ரீரங் கொல்லியர் வண்ணார்.
வண்ணார் பெயர்:—காழியர், ஈரங்கொல்லியர். (உ)

இதுவுமது.

77. ஏகா லியர்தூச ரென்ன லு மாகும்.
ஷை வண்ணார் பெயர்:—ஏகாலியர், தூசர். (உ) ஆ (ச)

நாவிதன் பெயர்.

78. பெருமஞ் சிகனே மயிர்வினைஞ னாவிதன்.
நாவிதன் பெயர்:—பெருமஞ்சிகன், மயிர்வினைஞன். (உ)

இதுவுமது.

79. ஏனாதி சிரையன்மங் கலியனு மாகும்.
ஷை நாவிதன் பெயர்:—ஏனாதி, சிரையன், மங்கலியன். (௩) ஆ (ரு)

செக்கான் பெயர்.

80. சக்கிரி நந்தி செக்கா னாகும்.
செக்கான் பெயர்:—சக்கிரி, நந்தி. (உ).

சங்கு அறுப்போர் பெயர்.

81. ஒளிவளை போழ்நர் சங்கறுப் போரே.
சங்கு அறுப்போர் பெயர்:—வளைபோழ்நர். (க)

மீகாமன் பெயர்.

82. நீகான் மாலுமி மரக்கலன் மீகாமன்.
மீகாமன் பெயர்:—நீகான், மாலுமி, மரக்கலன். (ந)

ஆட்டு வாணிகன் பெயர்.

83. சாபல னாட்டு வாணிகன் றன்பெயர்.
ஆட்டு வாணிகன் பெயர்:—சாபலன். (க)

ஊன் விலைஞர் பெயர்.

84. சூன ரேயூன் விலைஞ ரென்ப.
ஊன் விலைஞர் பெயர்:—சூனர். (க)

தோல் வினைஞர் பெயர்.

85. பறம்பர் தோல் வினைஞர் பெயர தாகும்.
தோல் விலைஞர் பெயர்:—பறம்பர். (க)

உறைகாரர் பெயர்.

86. காரோட ருறைகாரர்.
உறைகாரர் பெயர்:—காரோடர். (க)

துன்னர் பெயர்.

87. குயினர் பொல்லர் துன்ன ராகும்.
துன்னர் பெயர்:—குயினர், பொல்லர். (உ)

கள் விலைஞர் பெயர்.

88. பழையர் துவசர் படுவர்கள் விலைஞர்.
கள் விலைஞர் பெயர்:—பழையர், துவசர், படுவர். (ந)

சண்டாளர் பெயர்.

89. குறுங்கர் புலைஞர் இழோ ரிழிஞர்
அணங்குசண் டாளர்க் கபிதா னம்மே.
சண்டாளர் பெயர்:—குறுங்கர், புலைஞர், இழோர், இழிஞர், அண ங்கு. (ரு)

பாணர் பெயர்.

90. சென்னியர் வைரியர் செயிரியர் மதங்க
ரின்னிசை காரர் பாண ரென்ப.

பாணர் பெயர்:—சென்னியர், வைரியர், செயிரியர், மதங்கர், இன்னிசைகாரர். (ரு)

பாண்டொழிற் கீழ்மக்கள் பெயர்.

91. பண்டர் ஓவர் பாண்டொழிற் கீழ்மக்கள்.

பாண்டொழிற் கீழ்மக்கள் பெயர்:—பண்டர், ஓவர். (உ)

பாண்மகள் பெயர்.

92. பாடினி விறலி பாட்டி மதங்கி
பாடன் மகடூஉ பாண்மகள் பெயரே.

பாண்மகள் பெயர்:—பாடினி, விறலி, பாட்டி, மதங்கி, பாடன் மகடூஉ. (ரு)

தேர்ப்பாகன் பெயர்.

93. சாரதி சூதன் வலவன்றேர்ப் பாகன்.

தேர்ப்பாகன் பெயர்:—சாரதி, சூதன், வலவன். (ங)

யானைப்பாகர் பெயர்.

94. ஆதோரணர் வாதுவர் யானைப் பாகர்.

யானைப்பாகர் பெயர்:—ஆதோரணர், வாதுவர். (உ)

பரிமாவடிப்போர் பெயர்.

95. வாதுவர் பரிமா வடிப்போர் பெயரே.

பரிமாவடிப்போர் பெயர்:—வாதுவர். (க)

மடையர் பெயர்.

96. வாலுவர் கூவியர் பானசிகர் மடையர்.

மடையர் பெயர்:—வாலுவர், கூவியர், பானசிகர். (ங)

இதுவுமது.

97. பாசக ரென்பது மாங்கவர் மேற்றே.

ஷை மடையர் பெயர்:—பாசகர். (க) ஆ (ச)

ஒற்றர் பெயர்.

98. சாரர்வே யரொற்றர் சாரணரு மாகும்.

ஒற்றர் பெயர்:—சாரர், வேயர், சாரணர். (ங)

கூத்தர் பெயர்.

99. நாடகர் நிருத்தர் நடரே கண்ணுளர்
கோடியர் வயிரியர் பொருநர் கூத்தர்.

கூத்தர் பெயர்:—நாடகர், நிருத்தர், நடர், கண்ணுளர், கோடியர், வயிரியர், பொருநர். (எ)

நாடகக் கணிகையின் பெயர்.

100. நாடகக் கணிகை நடியே கூத்தி.

நாடகக் கணிகையின் பெயர்:—நடி, கூத்தி. (உ)

தமிழ்க் கூத்தர் பெயர்.

101. வாயிலோர் தமிழ்க்கூத்தர்.

தமிழ்க் கூத்தர் பெயர்:—வாயிலோர். (க)

கழைக் கூத்தர் பெயர்.

102. வேழம்பர் கழைக்கூத்தர்.

கழைக் கூத்தர் பெயர்:—வேழம்பர். (க)

வெறியாட்டாளன் பெயர்.

103. வேலன் முருகன் வெறியாட் டாளன்
றேவ ராளன் படிமத் தவனே.

வெறியாட்டாளன் பெயர்:—வேலன், முருகன், தேவராளன், படிமத்தவன். (ச)

தேவராட்டியின் பெயர்.

104. சாலினி முதியாள் படிமத் தவளே
தேவ ராட்டி பெயரெனச் செப்புவர்.

தேவராட்டியின் பெயர்:—சாலினி, முதியாள், படிமத்தவள். (ங)

தூதர் பெயர்.

105. வினையுரைப் போர்வழி யுரைப்போ ருறுதியோ
ரனைய பண்புரைப் போருந் தூதர்.

தூதர் பெயர்:—வினையுரைப்போர், வழியுரைப்போர், உறுதியோர், பண்புரைப்போர். (ச)

கொலையாளன் பெயர்.

106. காதகன் சாருகன் கடுங்கொலை யாளன்.

கொலையாளன் பெயர்:—காதகன், சாருகன். (உ)

வேதனை செய்வோர் பெயர்.

107. வேதனை செய்வோன் பெயரே யருந்துதன்.
வேதனை செய்வோன் பெயர்:—அருந்துதன். (க)

ஆண்பாலின் பெயர்.

108. மானவன் மகனே யாடூஉ மைந்தன்
ஆடவன் புமான்காளை யாண்பாற் பெயரே.
ஆண்பாலின் பெயர்:—மானவன், மகன், ஆடூஉ, மைந்தன், ஆடவன், புமான், காளை. (எ)

ஆண்பாலிற் சிறந்தவன் பெயர்.

109. நம்பி யென்பது நாமச் சிறப்பே.
ஆண்பாலிற் சிறந்தவன் பெயர்:—நம்பி. (க)

முதல்வன் பெயர்.

110. ஆதிபு நாதனு முதல்வன் பெயரே.
முதல்வன் பெயர்:—ஆதி, நாதன். (உ)

உயர்ந்தோர் பெயர்.

111. உலக மென்ப துயர்ந்தோர் மாட்டே.
உயர்ந்தோர் பெயர்:—உலகம். (க)

பெருமையிற் சிறந்தோர் பெயர்.

112. பெருமகன் மல்லன் றலைவன் பெருமான்
குரிசில் செம்மல் கோமான் கோவே
யாண்டகை பொருந னண்ண லோங்க
லேந்தன் மீளி விடலை பெருந்தகை.
பெருமையிற் சிறந்தோன் பெயர்:—பெருமகன், மல்லன், தலைவன், பெருமான், குரிசில், செம்மல், கோமான், கோ, ஆண்டகை, பொருநன், அண்ணல், ஓங்கல், ஏந்தல், மீளி, விடலை. (கரு)

எப்பொருட்குந் தலைவன் பெயர்.

113. இறைவே காரண னியவு டோன்ற
லதிபன் றலைவற் கபிதா னம்மே.
எப்பொருட்குந் தலைவன் பெயர்:—இறை, காரணன், இயவுள், தோன்றல், அதிபன். (ரு)

மந்திரியர் பெயர்.

114. எண்ணர் நூலோ ரமைச்சர்மந் திரியர்.
மந்திரியர் பெயர்:—எண்ணர், நூலோர், அமைச்சர்.

மந்திரித் தலைவர் பெயர்.

115. மூதுவர் குரவர் மூத்தோர் முன்னோ
ருழையோர் சூழ்வோர் நூல்வல் லோரே
யமைச்சர் தேர்ச்சித் துணைவ ரென்றாங்
கிசைத்த மந்திரித் தலைவர்க் கெய்தும்.

மந்திரித் தலைவர் பெயர்:—முதுவர், குரவர், மூத்தோர், முன்னோர், உழையோர், சூழ்வோர், நூல்வல்லோர், அமைச்சர், தேர்ச்சித் துணைவர். (கூ)

மந்திரித் தலைவர் நட்பாளர் பெயர்.

116. இப்பெய ரவர்நட் பாளர்க் கெய்தும்.

மந்திரித் தலைவர் நட்பாளர் பெயர்:—ஷை மந்திரித்தலைவர் பெயர்கள் அம்மந்திரித்தலைவர் நட்பாளருக்கும் வரும்.

மந்திரி, தந்திரியர் பெயர்.

117. ஏனாதி காவிதி யமாத்திய ரெனும்பெயர்
ஆனா மந்திரி தந்திரிக் காகும்.

மந்திரி, தந்திரியர் பெயர்:—ஏனாதி, காவிதி, அமாத்தியர். (ங.)

கருமத்தலைவன் பெயர்.

118. வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் மன்னற்
குள்படு கருமத் தலைவற் கொன்றும்.

கருமத்தலைவன் பெயர்:—வள்ளுவன், சாக்கை. (உ)

போர்த் தலைவர் பெயர்.

119. பொருந ரென்ப பெரும்போர்த் தலைவர்.

போர்த் தலைவர் பெயர்:—பொருநர். (க)

பரிவாரத்தின் பெயர்

120. பரியாள மென்பது பரிவார மாகும்.

பரிவாரத்தின் பெயர்:—பரியாளம். (க)

ஒத்துரைப்போர் பெயர்.

121. கணக்காய ரொத்துரைப்போர்.

ஒத்துரைப்போர் பெயர்:—கணக்காயர். (க)

கலை வல்லோர் பெயர்.

122. கவிஞர் கலைவல்லோர்.

கலை வல்லோர் பெயர்:—கவிஞர். (க)

புலமையோர் பெயர்.

123. மேலோர் பண்டிதர் புலவ ராசிரியர்
புந்தியர் மேதையர் புலமை யோரே.

புலமையோர் பெயர்:—மேலோர், பண்டிதர், புலவர், ஆசிரியர், புந்தியர், மேதையர். (௬)

அறிஞர் பெயர்.

124. ஆன்றோர் சான்றோ ரறிஞர்தம் பெயரே.

அறிஞர் பெயர்:—ஆன்றோர், சான்றோர். (௨)

பாவலர் பெயர்.

125. கலைஞர் பாவலர்.

பாவலர் பெயர்:—கலைஞர். (௧)

கற்றோர் பெயர்.

126. விற்பனர் கற்றோர்.

கற்றோர் பெயர்:—விற்பனர். (௧)

நாவலர் பெயர்.

127. கவிகள் புலவர் கவிஞர் நாவலர்.

நாவலர் பெயர்:—கவிகள், புலவர், கவிஞர். (௩)

இதுவுமது.

128. சாரதி யெனவுஞ் சாடுவ ரெனவுஞ்
சூரிய ரெனவுஞ் சொல்லுவர் புலவர்.

ஷை நாவலர் பெயர்:—சாரதி, சாடுவர், சூரியர். (௩) ஆ (௬)

மிக வல்லோர் பெயர்.

129. விபுதர் நிபுணர் குசலர் மிகவல்லோர்.

மிக வல்லோர் பெயர்:—விபுதர், நிபுணர், குசலர். (௩)

இதுவுமது.

130. எழுத்தாள ரென்பது மெய்துமப் பெயர்க்கே.

ஷை மிகவல்லோர் பெயர்:—எழுத்தாளர். (௧) ஆ (௪)

அயலோர் பெயர்.

131. நொதுமலர் வம்பல ரயலோ ராகும்.

அயலோர் பெயர்:—நொதுமலர், வம்பலர். (௨)

புதியோர் பெயர்.

132. அதிதியர் வம்பலர் புதியோ ராகும்.
புதியோர் பெயர்:—அதிதியர், வம்பலர். (உ)

மூதறிவாளர் பெயர்,

133. மூதுவர் மூதறி வாள ராகும்.
மூதறிவாளர் பெயர்:—மூதுவர். (க)

குறிக்கோள்வோர் பெயர்.

134. பாரா யணரே குறிக்கோ ளாளர்.
குறிக்கொள்வோர் பெயர்:—பாராயணர். (க)

வல்லோன் பெயர்.

135. வலவை வல்லவன் வல்லுநன் வல்லோன்.
வல்லோன் பெயர்:—வலவை, வல்லவன், வல்லுநன். (ங)

மாட்டார் பெயர்.

136. வல்லார் மாட்டா தார்.
மாட்டார் பெயர்:—வல்லார். (க)

நடுச்சொல்வோன் பெயர்.

137. கள்வனென் கிளவி கரியனடுச் சொல்வோன்.
நடுச்சொல்வோன் பெயர்:—கள்வன், கரியன். (உ)

கொடையுளோன் பெயர்.

138. புரவல னீகை யாளன் றியாகி
யுபகாரி வேளாளன் கொடையுளோன் பெயரே.
கொடையுளோன் பெயர்:—புரவலன், ஈகையாளன், தியாகி, உப
காரி, வேளாளன். (ரு)

வள்ளியோன் பெயர்.

139. வள்ளல் கொடையோன் வள்ளியோன் பெயரே.
வள்ளியோன் பெயர்:—வள்ளல், கொடையோன், வள்ளியோன். (ங)

இரப்போர் பெயர்.

140. இரவலர் பரிசிலாளர் யாசக ரிரப்போர்.
இரப்போர் பெயர்:—இரவலர், பரிசிலாளர், யாசகர். (ங)

புகழ்வோர் பெயர்.

141. பூகதர் மாகதர் வந்தியர் பப்புவர்
வேதா ளியர்புகழ் விளம்பு வோரே.

புகழ்வோர் பெயர்:—பூகதர், மாகதர், வந்தியர், பப்புவர், வேதாளியர். (ரு)

தூர்த்தர் பெயர்.

142. விடரே காமுகர் தூர்த்தர் பெயரே.

தூர்த்தர் பெயர்:—விடர், காமுகர். (உ)

காதலித்தோர் பெயர்.

143. விழைந்தோ ரார்வலர் வேட்டோர் நயந்தோ
ராதரித் தோர்கா தலித்தோர் பெயரே.

காதலித்தோர் பெயர்:—விழைந்தோர், ஆர்வலர், வேட்டோர், நயந்தோர், ஆதரித்தோர். (ரு)

வல்லாளன் பெயர்.

144. வயவன் மீளி வல்லா ளன்னே.

வல்லாளன் பெயர்:—வயவன், மீளி. (உ)

திண்ணியோன் பெயர்.

145. வியவன் வண்டன் வீரன் மிண்டன்
விறலோன் பொருநன் விடலை மள்ளன்
திறலோன் பண்ணவன் றிண்ணியோன் பெயரே.

திண்ணியோன் பெயர்:—வியவன், வண்டன், வீரன், மிண்டன், விறலோன், பொருநன், விடலை, மள்ளன், திறலோன், பண்ணவன். (க0)

படைவீரர் பெயர்.

146. மறவர் கூளியர் மள்ளர் பொருந
ரிகலர் செருநர் வாளாளர் வாளுழவர்
படரே வீரர் படையாள ராகும்.

படைவீரர் பெயர்:—மறவர், கூளியர், மள்ளர், பொருநர், இகலர், செருநர், வாளாளர், வாளுழவர், படர், வீரர். (க0)

கீழோர் பெயர்.

147. பல்லவர் கயவர் பதகர் நீசர்
புல்லர் பூரியர் புள்ளுவர் கையர்

கலரே தீயோர் கண்டகர் மூடர்
அசட ரதன்மர் முசுண்டர் சுமடர்
வெளிற ரற்பர் கீழோர் பெயரே.

கீழோர் பெயர்:—பல்லவர், கயவர், பதகர், நீசர், புல்லர், பூரியர், புள்ளுவர், கையர், கலர், தீயோர், கண்டகர், மூடர், அசடர், அதன்மர், முசுண்டர், சுமடர், வெளிறர், அற்பர். (கஅ)

அறிவிலான் பெயர்.

148. மூழுமகன் சிதடன் மூடன் பேதை
யிழுதை யஞ்ஞ யாத னேழை
மடமகன் குதலை யறிவிலான் பெயரே.

அறிவிலான் பெயர்:—மூழுமகன், சிதடன், மூடன், பேதை, இழுதை, அஞ்ஞ, ஆதன், ஏழை, மடமகன், குதலை. (க0)

அடிமையின் பெயர்.

149. தொழும்பு தொண்டு தொத்துத் தாதர்
தொறுவே விருத்தி யடிமை யாகும்.

அடிமையின் பெயர்:—தொழும்பு, தொண்டு, தொத்து, தாதர், தொறு, விருத்தி. (சு)

இதுவுமது.

150. சேடர் கிணக ரென்பதுஞ் செப்பும்.

ஷை அடிமையின் பெயர்:—சேடர், கிணகர். (உ) ஆட (அ)

கள்வர் பெயர்.

151. காவடர் சோரர் புரையோர் கட்டோர்
காவர் பட்டிகர் திருடர் கள்வர்.

கள்வர் பெயர்:—காவடர், சோரர், புரையோர், கட்டோர், காவர், பட்டிகர், திருடர். (எ)

அச்சமுடையோன் பெயர்.

152. பீருவும் சிதனும் பீதனுங் கரிதனுங்
காதரனு மச்ச முடையோன் கட்டுரை.

அச்சமுடையோன் பெயர்:—பீரு, சிதன், பீதன், கரிதன், காதரன். (ரு)

வஞ்சனையாளன் பெயர்.

153. மாய னிகாதன் வஞ்சனை யாளன்.

வஞ்சனையாளன் பெயர்:—மாயன், நிகாதன். (உ)

வேகமுடையோன் பெயர்.

154. கவனன் சவனன் வேக முடையோன்.
வேகமுடையோன் பெயர்:—கவனன், சவனன். (உ)

கடினன் பெயர்.

155. கடினன் பெயராது கற்கச னாகும்.
கடினன் பெயர்:—கற்கசன். (க)

வழிச்செல்வோன் பெயர்.

156. பதிகனும் பாந்தனும் படர்வழிச் செல்வோன்.
வழிச்செல்வோன் பெயர்:—பதிகன், பாந்தன். (உ)

இதுவுமது.

157. வியவ னென்பது மாங்கவன் மேற்றே.
ஷை வழிச்செல்வோன் பெயர்:—வியவன். (உ) ஆ (ங)

ஏவுவான் பெயர்.

158 வியவ னேவுவான் றன்பெய ராகும்.
ஏவுவான் பெயர்:—வியவன். (க)

தொழில் செய்வோர் பெயர்.

159. தொழுவர் கம்மியர் தொழில்செய் வோரே.
தொழில் செய்வோர் பெயர்:—தொழுவர், கம்மியர். (உ)

தரித்திரர் பெயர்.

160. இல்லோ ராதுலர் வறியோ ரேழையர்
நல்கூர்ந் தோரே பேதையர் தரித்திரர்.
தரித்திரர் பெயர்:—இல்லோர், ஆதுலர், வறியோர், ஏழையர், நல்கூர்ந்தோர், பேதையர். (சு)

இதுவுமது.

161. அகிஞ்சன ரென்பது மப்பெயர் இளத்துப.
ஷை தரித்திரர் பெயர்:—அகிஞ்சனர். (சு) ஆ (எ)

வாயில் காப்போர் பெயர்.

162. கடைகா வலர்வாயில் காப்போர் பெயரே.
வாயில் காப்போர் பெயர்:—கடைகாவலர். (க)

தசை தின்போன் பெயர்.

163. தசைநனி தின்போன் சாடிலி கூடிலி.
தசை தின்போன் பெயர்:—சாடிலி, கூடிலி. (உ)

நோயுற்றெழுந்தோன் பெயர்.

164. உல்லாப னோயுற் றெழுந்தோன் பெயரே.
நோயுற்றெழுந்தோன் பெயர்:—உல்லாபன். (க)

மனோகரன் பெயர்.

165. சல்லாபன் மனோகரன் றன்பெய ராகும்.
மனோகரன் பெயர்:—சல்லாபன். (க)

புகழாளன் பெயர்.

166. இயவுள் புகழாளன்.
புகழாளன் பெயர்:—இயவுள். (க)

குலமுள்ளோர் பெயர்.

167. குலினு ரென்ப குலமுள் ளோரே.
குலமுள்ளோர் பெயர்:—குலினர். (க)

உரியோன் பெயர்.

168. கிழவ னுரியோன்.
உரியோன் பெயர்:—கிழவன். (க)

நிருவாணியின் பெயர்.

169. நக்க னிருவாணி.
நிருவாணியின் பெயர்:—நக்கன். (க)

கூர்மையில்லோன் பெயர்.

170. மந்தன் கூர்மை யில்லோன் பெயரே.
கூர்மையில்லோன் பெயர்:—மந்தன். (க)

நாகரிகர் பெயர்.

171. சதுரர் காமுகர் நாகரிக ராகும்.
நாகரிகர் பெயர்:—சதுரர், காமுகர். (உ)

கருணையுள்ளோன் பெயர்.

172. கருணை யுள்ளோன் காருண்ணிய னாகும்.
கருணையுள்ளோன் பெயர்:—காருண்ணியன். (க)

வரையாது கொடுப்போர் பெயர்.

173. வரையாது கொடுப்போர் வள்ளியோ ராகும்.

வரையாது கொடுப்போர் பெயர்:—வள்ளியோர். (க)

ஓர் குடியிற் கொண்டோன் பெயர்.

174. சகலனோர் குடியிற் கொண்டோ னாகும்.

ஓர் குடியிற் கொண்டோன் பெயர்:—சகலன். (க)

சுற்றத்தின் பெயர்.

175. கேளே யொக்கல் கிளையே பந்தங்
கூளி கடும்பு குடும்பஞ் சுற்றம்.

சுற்றத்தின் பெயர்:—கேள், ஒக்கல், கிளை, பந்தம், கூளி, கடும்பு, குடும்பம். (எ)

உறவின் பெயர்.

176. நண்பு தமருரியர் நட்பு நட்டோ
ரென்றிவை பற்றின ருறவென விசைப்பர்.

உறவின் பெயர்:—நண்பு, தமர், உரியர், நட்பு, நட்டோர், பற்றினர். (சு)

தங்குடித் தமரின் பெயர்.

177. தாயத்தார் ஞாதியர் தங்குடித் தமரே.

தங்குடித் தமரின் பெயர்:—தாயத்தார், ஞாதியர். (உ)

ஒரு குடியின் பெயர்.

178. ஒருகுடி யென்ப வுதாரப் பிரிவினர்.

ஒரு குடியின் பெயர்:—உதாரப்பிரிவினர். (க)

வழித்தோன்றலின் பெயர்.

179. வழியோன் வழித்தோன்ற லாகு மென்ப.

வழித்தோன்றலின் பெயர்:—வழியோன். (க)

பாட்டன் பெயர்.

180. தாதைதன் றாதை மூதாதை பாட்டன்.

பாட்டன் பெயர்:—தாதை, தன்றாதை, மூதாதை. (ங.)

இதுவுமது.

181. பிதாமக னென்றும் பேசப் படுமே.

ஷை பாட்டன் பெயர்:—பிதாமகன். (க) ஆ (ச)

### ஈன்றோன் பெயர்.

182. தாதையு மத்தனுந் தந்தையும் பிதாவு
மையனு மீன்றோன் றன்பெய ராகும்.

ஈன்றோன் பெயர்:—தாதை, அத்தன், தந்தை, பிதா, ஐயன். (ரு)

### மாமன் பெயர்.

183. மாதுல னம்மான் மாமன் பெயரே.

மாமன் பெயர்:—மாதுலன், அம்மான். (உ)

### மருமகன் பெயர்.

184. மருமான் பிறங்கடை யோங்கல் மருமகன்.

மருமகன் பெயர்:—மருமான், பிறங்கடை, ஓங்கல். (ங)

### மூத்தோன் பெயர்.

185. அண்ண றமையன் றம்முன் றோன்றன்
முன்னவன் சேட்டன் மூத்தோன் பெயரே.

மூத்தோன் பெயர்:—அண்ணல், தமையன், தம்முன், தோன்றல், முன்னவன், சேட்டன். (சு)

### இளையோன் பெயர்.

186. பின்னவ னிளவல் பின்றோன்றல் கனிட்ட
னெம்பியு மனுசனு மிளையோன் பெயரே.

இளையோன் பெயர்:—பின்னவன், இளவல், பின்றோன்றல், கனிட்டன், எம்பி, அனுசன். (சு)

### தாயின் பெயர்.

187. அம்மை யன்னையா யவ்வை தம்மனை
தருமோ யீன்றா டன்னைதா யென்ப.

தாயின் பெயர்:—அம்மை, அன்னை, ஆய், அவ்வை, தம்மனை, மோய், ஈன்றாள், தன்னை. (அ)

### முன் பிறந்தாள் பெயர்.

183. அன்னை செவிலி தௌவை சேட்டை
முன்னவள் மூத்தாண் முன்பிறந் தாள்பெயர்.

முன் பிறந்தாள் பெயர்:—அன்னை, செவிலி, தௌவை, சேட்டை, முன்னவள், மூத்தாள். (சு)

### பின் பிறந்தாள் பெயர்.

189. பின்னை கையை தங்கைபின் பிறந்தாள்.

பின் பிறந்தாள் பெயர்:—பின்னை, கையை, தங்கை. (௩)

### மைத்துனன் பெயர்.

190. சம்மதன் மைத்துனன் றன்பெய ராகும்.

மைத்துனன் பெயர்:—சம்மதன். (௧)

### மணவாளன் பெயர்.

191. கணவன் கொழுநன் காந்தன் கேள்வன்
மணமகன் காதலன் வல்லவ னுரியோன்
பதிதவன் கொண்கன் பத்தா துணைவன்
றலைமகன் றலைவன் மணவாளன் றன்பெயர்.

மணவாளன் பெயர்:—கணவன், கொழுநன், காந்தன், கேள்வன், மணமகன், காதலன், வல்லவன், உரியோன், பதி, தவன், கொண்கன், பத்தா, துணைவன், தலைமகன், தலைவன். (௧௫)

### இதுவுமது

192. கண்டன் வேட்டோன் வந்துழிக் கொளலே.

ஷை மணவாளன் பெயர்:—கண்டன், வேட்டோன். (௨) ஆ (௧௭)

### மணவாளனுக்குரிய பெயர்.

193. நாயக னென்பது நயந்தசொல் லென்ப.

மணவாளனுக்குரிய பெயர்:—நாயகன். (௧)

### மணமகள் பெயர்.

194. மணமக ளுரிமை வல்லவி தாரந்
துணைவி வாழ்க்கைத் துணைமண வாட்டி
பாரி யில்லாள் பன்னி விருந்தனை
யில்லவள் குடும்பினி களமே காந்தை
யின்மனை காதலி நாயகி பெண்பெயர்.

மணமகள் பெயர்:—உரிமை, வல்லவி, தாரம், துணைவி, வாழ்க்கைத் துணை, மணவாட்டி, பாரி, இல்லாள், பன்னி, விருந்தனை, இல்லவள், குடும்பினி, களம், காந்தை, இல், மனை, காதலி, நாயகி.

### மைந்தன் பெயர்.

195. சந்ததி மதலை தனையன் காதலன்
நந்தனன் சிறுவன் மெய்யன் மீளுன்றல்

செம்மன் முளைசுதன் கால்பொருள் புதல்வன்
புத்திரன் பிறங்கடை எச்சஞ்சேய் மைந்தன்.

மைந்தன் பெயர்:—சந்ததி, மதலை, தனையன், காதலன், நந்தனன், சிறுவன், மெய்யன், தோன்றல், செம்மல், முளை, சுதன், கால், பொருள், புதல்வன், புத்திரன், பிறங்கடை, எச்சம், சேய். (கஅ)

மகள் பெயர்.

196. புதல்வி சிறுமி புத்திரி தனையை
சுதையையை பந்தனை மகள்பெயர் சொல்லும்.

மகள் பெயர்:—புதல்வி, சிறுமி, புத்திரி, தனையை, சுதை, ஐயை, பந்தனை. (எ)

பிள்ளையின் பெயர்.

197. குழவியுங் குழந்தையு மகவும் பிள்ளை.

பிள்ளையின் பெயர்:—குழவி, குழந்தை, மகவு. (ங)

மகன் மகள் என்னும் இருபாற்குப் பொதுப்பெயர்.

198. எச்ச மென்ப திருபாற்கு முரித்தே.

மகன் மகள் என்னு மிருபாற்கும் பொதுப்பெயர்:—எச்சம். (க)

பாலர் பெயர்.

199. மகார்குறு மாக்கள் சிறாரிவை பாலர்.

பாலர் பெயர்:—மகார், குறுமாக்கள், சிறார். (ங)

இளைஞன் பெயர்.

200. மழவன் குமரன் மைந்தன் சேட
னிளவன் முருகன் காளையிளைஞ னென்ப.

இளைஞன் பெயர்:—மழவன், குமரன், மைந்தன், சேடன், இளவல், முருகன், காளை. (எ)

இதுவுமது.

201. ஆடவ னுவாவு மப்பெயர்க் குரித்தே.

ஷ இளைஞன் பெயர்:—ஆடவன், உவா. (உ) ஆ (க)

தோழன் பெயர்.

202. சிலத னெலுவன் சேட னண்பன்
பாங்கன் சகாயன் றோழன் பெயரே.

தோழன் பெயர்:—சிதலன், எலுவன், சேடன், நண்பன், பாங்கன், சகாயன். (சு)

### தோழன் முன்னிலைப் பெயர்.

**203.** *ஏடா வென்ப தோழன்முன் னிலைப்பெயர்.*

*தோழன் முன்னிலைப் பெயர்:—ஏடா.* (க)

### சங்காத்தியின் பெயர்.

**204.** *அருகன் சம்மத னண்பன் சங்காத்தி.*

*சங்காத்தியின் பெயர்:—அருகன், சம்மதன், நண்பன்.* (ந)

### தலைமைப்பெண் பெயர்.

**205.** *குரத்தி பெருமாட்டி யாசா னிறைவி*
*கோமக டலைவி யடிக ளையை*
*சாமி யத்தை தலைமைப் பெண்பெயர்.*

*தலைமைப்பெண் பெயர்:—குரத்தி, பெருமாட்டி, ஆசான், இறைவி, கோமகள், தலைவி, அடிகள், ஐயை, சாமி, அத்தை.* (௧௦)

### பெண்மகளிற் சிறந்தவள் பெயர்.

**206.** *நங்கை யென்பது நாமச் சிறப்பே.*

*பெண்மகளிற் சிறந்தவள் பெயர்:—நங்கை.* (க)

### அருந்தவப்பெண் பெயர்.

**207.** *பைம்மையுங் கௌந்தியு மருந்தவப் பெண்பெயர்.*

*அருந்தவப்பெண் பெயர்:—பைம்மை, கௌந்தி.* (உ)

### தோழியின் பெயர்.

**208.** *சிலதி பாங்கி சேடி யிணங்கி*
*துணைவி யிருளை சகியே தோழி.*

*தோழியின் பெயர்:—சிலதி, பாங்கி, சேடி, இணங்கி, துணைவி, இருளை, சகி.* (எ)

### தோழி முன்னிலைப் பெயர்.

**209.** *ஏடி யேலா தோழிமுன் னிலைப்பெயர்.*

*தோழி முன்னிலைப் பெயர்:—ஏடி, ஏலா.* (உ)

### ஏவலிற் சிறந்தவள் பெயர்.

**210.** *சேடி யேவலிற் சிறந்தவள் பெயரே.*

*ஏவலிற் சிறந்தவள்பெயர்:—சேடி.* (க)

### கைத்தாயின் பெயர்

211. *தாதி செவிலி கோடாய் பின்னனை
காதலி னமர்ந்த கைத்தாய் பெயரே.*

*கைத்தாயின் பெயர்:—தாதி, செவிலி, கோடாய், பின்னனை.* (௪)

### கன்னியின் பெயர்.

212. *குமரி யழிவில் கன்னியைக் கூறும்.*

*கன்னியின் பெயர்:—குமரி.* (௧)

### கோலம்புனை பெண்ணின் பெயர்.

213. *கோலம் புனைபெண் வண்ணமக ளென்ப.*

*கோலம்புனை பெண்ணின் பெயர்:—வண்ணமகள்.* (௧)

### நால்வகைப் பெண்பருவத்தின் பெயர்.

214. *வாலை தருணி பிரவிடை விருத்தையென்
றுய மடந்தையர்க் காம்பருவ நான்கே.*

*நால்வகைப் பெண்பருவத்தின் பெயர்:—வாலை, தருணி, பிரவிடை, விருத்தை.* (௪)

### முதியாள் பெயர்.

215. *விருத்தை மூத்தாள் முதியாள் பெயரே.*

*முதியாள் பெயர்:—விருத்தை, மூத்தாள்.* (௨)

### எழுவகைப் பெண்பருவத்தின் பெயரும், ஆண்டும்.

216. *பேதை பெதும்பை மங்கை மடந்தை
யரிவை தெரிவை பேரிளம் பெண்ணென
மற்றிவை யேழும் பொற்றொடி மாதர்க்
குருவம் பற்றிய பருவமா ண்டேழொடு
பன்னொன்று பன்மூன்று பத்தொன் பதிற்றோ
டையைந்து முப்பத் தொன்றெண் ணைந்தே.*

*எழுவகைப் பெண்பருவத்தின் பெயர்:—பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்,* (௭)

*இவற்றின் ஆண்டுகளாவன: எ, கக, கங, க௯, உ௫, ௩க, ௪௦.* (௭)

### மலடியின் பெயர்.

217. *மலடி மைம்மை வந்தி யாகும்.*

*மலடியின் பெயர்:—மைம்மை, வந்தி.* (௨

### கலன்கழி மகளிர் பெயர்.

218. கைம்மை கைனி விதவை கைம்பெ
ணமங்கலி கலன்கழி மகளிர் பெயரே.

கலன்கழி மகளிர் பெயர்:—கைம்மை, கைனி, விதவை, கைம்பெண், அமங்கலி. (ரு)

### பொதுமகளிர் பெயர்.

219. விலைமகள் சூளை வேசி பரத்தை
கணிகை பொதுமகள் கட்டுரை யென்ப.

பொதுமகளிர் பெயர்:—விலைமகள், சூளை, வேசி, பரத்தை, கணிகை. (ரு)

### பெண்ணின் பெயர்.

220. அரிவை யங்கனை மடந்தை யாடவ
டெரிவை மானினி சிறுமி யிளம்பிடி
சுரிகுழன் மகடூஉ காந்தை மாது
வனிதை நல்லாள் காரிகை தளிரிய
லணங்கு தையல் பெதும்பை பேதை
மடந்தை மங்கை மாயோள் பாவையென
விளம்பிய பிணாவும் பெண்பெயர் மேற்றே.

பெண்ணின் பெயர்:—அரிவை, அங்கனை, மடந்தை, ஆடவள், தெரிவை, மானினி, சிறுமி, இளம்பிடி, சுரிகுழல், மகடூஉ, காந்தை, மாது, வனிதை, நல்லாள், காரிகை, தளிரியல், அணங்கு, தையல், பெதும்பை, பேதை, மடந்தை, மங்கை, மாயோள், பாவை, பிணா. (உரு)

### மித்திரர் பெயர்.

221. ஒல்லுநர் துன்னுந ரொன்றுநர் நேர்ந்தார்
நண்ணுநர் நள்ளுநர் நயந்தோர் மேவினர்
சேர்ந்தோர் மித்திரர் பெயரெனச் செப்புவர்.

மித்திரர் பெயர்:—ஒல்லுநர், துன்னுநர், ஒன்றுநர், நேர்ந்தார், நண்ணுநர், நள்ளுநர், நயந்தோர், மேவினர், சேர்ந்தோர். (கூ)

### மாற்றலர் பெயர்.

222. ஒல்லார் நோனு ரொன்றலர் நண்ணலர்
இருந்தலர் மேவலர் செற்றார் செறுந
ரின்னார் கருதல ரெண்ணலர் நள்ளார்
பொருந்தலர் பற்றலர் புல்லார் சேரார்
தெவ்வ ரடையலர் தரியலர் தெறுந

ரொட்டார் பகைஞ ரரிகளென் றுரைக்கு
மிப்பெயர் பலவு மாற்றலர் பெயரே.

மாற்றலர் பெயர்:—ஒல்லார், நோனார், ஒன்றலர், நண்ணலர், திருந்தலர், மேவலர், செற்றார், செறுநர், இன்னார், கருதலர், எண்ணலர், நள்ளார், பொருந்தலர், பற்றலர், புல்லார், சேரார், தெவ்வர், அடையலர், தரியலர், தெறுநர், ஒட்டார், பகைஞர், அரிகள். (உங)

ஆடவர் கூட்டத்தின் பெயர்.

223. சவையும் பண்ணையுஞ் சங்கமுங் கோட்டியு
மவையு மாடவர் கூட்டமென் றாகும்.

ஆடவர் கூட்டத்தின் பெயர்:—சவை, பண்ணை, சங்கம், கோட்டி, அவை. (ரு)

மாதர் கூட்டத்தின் பெயர்.

224. ஓரையும் பண்ணையு மாயமுங் குழுவுந்
தேறுங் காலைத் தெரிவையர் கூட்டம்.

மாதர் கூட்டத்தின் பெயர்:—ஓரை, பண்ணை, ஆயம், குழு. (ச)

மகளிர் விளையாட்டின் பெயர்.

225. ஓரை பண்ணை கெடவரல் பொய்த
லுண்டாட்டுக் கிரீடை யுப்புக் கேளி
வண்டலங் கோதை மகளிர்விளை யாட்டே.

மகளிர் விளையாட்டின் பெயர்:—ஓரை, பண்ணை, கெடவரல், பொய்தல், உண்டாட்டு, கிரீடை, உப்பு, கேளி, வண்டல். (கூ)

மக்கட்பரப்பின் பெயர்.

226. மன்பதை பைஞ்ஞீலி மக்கட் பரப்பே.

மக்கட் பரப்பின் பெயர்:—மன்பதை, பைஞ்ஞீலி. (உ)

மக்கட் பொதுப்பெயர்.

227. மாந்தர் மானவர் மானிடர் மண்ணவர்
மனிதர் நரரே மக்கட்பொதுப் பெயரே.

மக்கட் பொதுப் பெயர்:—மாந்தர், மானவர், மானிடர், மண்ணவர், மனிதர், நரர். (சு)

குலத்தின் பெயர்.

228. குடி திணை விழுப்ப மொழுக்கங் குலமெனல்.

குலத்தின் பெயர்:—குடி, திணை, விழுப்பம், ஒழுக்கம். (ச)

### குலமுள்ளோன் பெயர்.

**229.** குலமுள் ளோன்பெயர் குலீன னாகும்.
*குலமுள்ளோன் பெயர்:—குலீனன்.* (க)

### வேட்டோர் பெயர்.

**230.** நயந்தோர் காதலர் நசையுநர் நயவர்
விழைந்தோ ரார்வலர் வேட்டோர் பெயரே.
*வேட்டோர் பெயர்:—நயந்தோர், காதலர், நசையுநர், நயவர், விழைந்தோர், ஆர்வலர்.* (சு)

### குருடன் பெயர்.

**231.** அந்தகன் சிதடன் குருட னாகும்.
*குருடன் பெயர்:—அந்தகன், சிதடன்.* (உ)

### முடவன் பெயர்.

**232.** பங்கு சூனியன் முடவ னாகும்.
*முடவன் பெயர்:—பங்கு, சூனியன்.* (உ)

### குறளன் பெயர்.

**233.** குஞ்சன் வாமனன் குறளன் பெயரே.
*குறளன் பெயர்:—குஞ்சன், வாமனன்.* (உ)

### இதுவுமது.

**234.** சிந்த னென்றுஞ் செப்புவ ரதற்கே.
*ஷை குறளன் பெயர்:—சிந்தன்.* (ங)

### செவிடன் பெயர்.

**235.** வதிரன் செவிடன்.
*செவிடன் பெயர்:—வதிரன்.* (க)

### ஊமையின் பெயர்.

**236.** மூகையு மூங்கையு மூமை யாகும்.
*ஊமையின் பெயர்:—மூகை, மூங்கை.* (உ)

### கூனன் பெயர்.

**237.** கோணன் கூன னெனக் கூறுவர்.
*கூனன் பெயர்:—கோணன்.*

அலியின் பெயர்.

238. பேட னபுஞ்சகன் பேதை பெண்டக
னுருஞ் சண்ட னலிப்பெய ராகும்.

அலியின் பெயர்:—பேடன், நபுஞ்சகன், பேதை, பெண்டகன், சண்டன். (ரு)

கொண்டோற் பிழைத்துப் பெறுமகன் பெயர்.

239. கொண்டோற் பிழைத்துப் பெறுமகன் குண்டகன்.

கொண்டோற் பிழைத்துப் பெறுமகன் பெயர்:—குண்டகன். (க)

விதவை பெற்ற மதலையின் பெயர்.

240. விதவை பயந்த மதலை கோளகன்.

விதவை பெற்ற மதலையின் பெயர்:—கோளகன். (க)

கன்னியிற் பிறந்தோன் பெயர்.

241. கன்னியிற் பிறந்தோன் கானீன னாகும்.

கன்னியிற் பிறந்தோன் பெயர்:—கானீனன். (க)

நாற்குலத்தில் உயர்ந்த ஆணும் இழிந்த பெண்ணுங்
கூடிப் பிறந்த பிள்ளைகளின் பெயர்.

242. உயர்ந்த வாணினு மிழிந்த பெண்ணினும்
வியந்த கூட்டத் தவரநு லோமர்.

நாற்குலத்தில் உயர்ந்த ஆணும் இழிந்த பெண்ணுங் கூடிப் பிறந்த பிள்ளைகளின் பெயர்:—அநுலோமர். (க)

உயர்ந்த பெண்ணும் இழிந்த ஆணுங் கூடிப்பிறந்த
பிள்ளைகளின் பெயர்.

243. உயர்ந்த பெண்ணினு மிழிந்த வாணினும்
வியந்த கூட்டத் தவர்பிர திலோமர்.

உயர்ந்த பெண்ணும் இழிந்த ஆணுங் கூடிப் பிறந்த பிள்ளைகளின் பெயர்:—பிரதிலோமர். (க)

அநுலோமத்தாணும் பிரதிலோமப் பெண்ணுங்
கூடிப் பிறந்த பிள்ளைகளின் பெயர்.

244. அநுலோ மகூட்டத் தாணினு மவ்வழி
பிரதிலோ மகுலப் பெண்ணினு மிக்க
வியந்த கூட்டத் தவரந்த ராளர்.

அநுலோமத்து ஆணும் பிரதிலோமப் பெண்ணுங் கூடிப் பிறந்த பிள்ளைகளின் பெயர்:—அந்தராளர். (க)

அநுலோமப் பெண்ணும் பிரதிலோமத்தாணுங்
கூடிப் பிறந்த பிள்ளைகளின் பெயர்.

245. பிரதிலோ மர்குலத் தாணினும் பின்ன
ரநுலோ மர்குலப் பெண்ணினு மவ்வழி
வியந்த கூட்டத் தவர்விராத் தியராகும்.

அநுலோமப் பெண்ணும் பிரதிலோமத்து ஆணுங் கூடிப்பிறந்த பிள்ளைகளின் பெயர்:—விராத்தியர். (க)

பேடி இலக்கண வகை.

246. பேடி யிலக்கணம் பேசுங் காலை
நச்சுப் பேசியு நல்லிசை யோர்ந்து
மச்சு மாறியு மாண்பெண் ணாகியுங்
கைத்தல மொன்றைக் கடுக வீசியு
மத்தகத் தொருகை மாண்புற வைத்தும்
விலங்கியு மிதித்தும் விழிவே றாகியுந்
துளங்கித் துளங்கிச் சுழன்று திரிந்தும்
நக்கு நாணியு நடம்பல பயின்றும்
பக்கம் பார்த்தும் பதுங்கித் திரிந்துங்
காரண மின்றிக் கதம்பல கொண்டும்
வாரணி கொங்கையை வலிய நலிந்து
மசக்கியு மழுது மயர்ந்தரு வருத்துங்
குறுக்கியுங் கூட்டியுங் கூர்விழி கொண்டும்
மருங்கிற் பாணியை வைத்தும் வாங்கியு
மிரங்கிப் பேசியு மெல்லெல லென்று
மின்னன பிறவு மியற்றுத லியல்பே.

பேடியிலக்கணவகை:—நச்சுப்பேசல், நல்லிசையோர்தல், அச்சுமாறல், ஆண்பெண்ணாதல், ஒருகையை வீசிநடத்தல், தலையிலொருகை வைத்தல், எதிர்ந்தோரைக்கண்டு விலகல், எதிர்ந்தோரம்மேற் செல்லுதல், பார்வைவேறுபடுதல், பிறருக்கு நடுநடுங்கிச் சுழன்று திரிதல், பிறரைக்கண்டு நகைத்தல், நாணுதல், பலநாடகஞ் செய்தல், பக்கம்பார்த்தல், பதுங்கித்திரிதல், காரணம் இல்லாமல் பலவற்றைக் கோபங்கொண்டு பேசல், தன்முலையைத் தானே வருத்தல், அசக்கல், அழுதல், சோர்ந்து அருவருத்தல், குறுக்கிக் கூட்டிக் கூர்மையாகப் பார்த்தல், இடையில் ஒருகை வைத்தல், அதனை வாங்கல், இரங்கிப்பேசல், எல்லெல் லென்று பாடுதல், இவைபோன்ற பிற செய்கைகள். (உரு)

கருவின் பெயர்.

247. சினையும் பீளுஞ் சூலும் வயாவுங்
கருவின் பெயரே கருப்பமு மாகும்.

கருவின் பெயர்:—சினை, பீள், சூல், வயா, கருப்பம். (ரு)

தோலின் பெயர்.

248. உரிவை யதளே யொலியல் புறணி
சருமம் வடகம் போர்வை பச்சை
துருத்தி துவக்குக் கிருத்திமந் தோலே.

தோலின் பெயர்:—உரிவை, அதள், ஒலியல், புறணி, சருமம், வடகம், போர்வை, பச்சை, துருத்தி, துவக்கு, கிருத்திமம். (கக)

இரத்தத்தின் பெயர்.

249. செந்நீர் சோரி நெய்த்தோர் செம்பால்
புண்ணீர் சுடுவல் புலானீர் சோணித
முதிரங் குருதி கறையிரத் தப்பெயர்.

இரத்தத்தின் பெயர்:—செந்நீர், சோரி, நெய்த்தோர், செம்பால், புண்ணீர், சுடுவல், புலால்நீர், சோணிதம், உதிரம், குருதி, கறை(கக)

ஊனின் பெயர்.

250. தசையுந் தூவுந் தடியும் விடக்கும்
புலையும் பிசிதமும் புலாலும் புண்ணும்
புரணியும் வள்ளூர மும்புலவு மூன்பெயர்.

ஊனின் பெயர்:—தசை, தூ, தடி, விடக்கு, புலை பிசிதம், புலால், புண், புரணி, வள்ளூரம், புலவு. (கக)

இதுவுமது.

251. இற்றி யிறைச்சி யென்பவு மாகும்.

ஷை ஊனின் பெயர்:—இற்றி, இறைச்சி. (உ) ஆக (கங)

பிச்சின் பெயர்.

252. ஊழை மூளை மாசுபிச் சென்ப.

பிச்சின் பெயர்:—ஊழை, மூளை, மாசு. (ங)

கருப்பம் பயிலிடத்தின் பெயர்.

253. பைசந்தி பைங்குழி கருப்பம் பயிலிடம்.

கருப்பம் பயிலிடத்தின் பெயர்:—பைசந்தி, பைங்குழி. (உ)

ஈரலின் பெயர்.

254. ஈருள் ளீரல்.

ஈரலின் பெயர்:—ஈருள். (க)

சேவ்வீரலின் பெயர்.

255. இரத்தஞ் செவ்வீரல்.
செவ்வீரலின் பெயர்:—இரத்தம். (க)

விழுக்கின் பெயர்.

256. விளரு கிணமுங் கொழுப்பும் விழுக்கென்ப.
விழுக்கின் பெயர்:—விளர், கிணம், கொழுப்பு. (௩)

இதுவுமது.

257. நெய்யும் வழும்பு நிகழ்த்தப் பெறுமே.
ஷை விழுக்கின் பெயர்:—நெய், வழும்பு. (உ) ஆக (ரு)

வழும்பின் பெயர்.

258. வழுக்கு வழும்பாம்.
வழும்பின் பெயர்:—வழுக்கு. (க)

மலக் குரம்பையின் பெயர்.

259. குடர்மலக் குரம்பை.
மலக் குரம்பையின் பெயர்:—குடர். (க)

மெய்ம்மலத்தின் பெயர்.

260. மெய்ம்மல மாசெனல்.
மெய்ம்மலத்தின் பெயர்:—மாசு. (க)

உண்மலத்தின் பெயர்.

261. உண்மலம் உபமலம்.
உண்மலத்தின் பெயர்:—உபமலம். (க)

இந்திரியத்தின் பெயர்.

262. கந்தஞ் சுக்கில மிந்திரிய மாகும்.
இந்திரியத்தின் பெயர்:—கந்தம், சுக்கிலம். (உ)

குலையின் பெயர்.

263. உடலுண் மூளை குலைகுண்டியு மாகும்.
குலையின் பெயர்:—மூளை, குண்டி. (உ)

முடையின் பெயர்.

264. பூதியூழ்த் தறசை புலவுமுடை யென்ப.
முடையின் பெயர்:—பூதி, ஊழ்த்தல், தசை, புலவு. (ச)

சோணிதத்தின் பெயர்.

265. செம்பால் சோணிதம்.
சோணிதத்தின் பெயர்:—செம்பால். (க)

நரம்பின் பெயர்.

266. நாடியுஞ் சிரையு மேதையு நரம்பே.
நரம்பின் பெயர்:—நாடி, சிரை, மேதை. (ங)

எலும்பின் பெயர்.

267. என்பத்தி யங்கங் களேவர மெலும்பே.
எலும்பின் பெயர்:—என்பு, அத்தி, அங்கம், களேவரம். (ச)

கழியுடலின் முழுவெலும்பின் பெயர்.

268. கழியுடன் முழுவெலும்பு கங்காள மாகும்.
கழியுடலின் முழுவெலும்பின் பெயர்:—கங்காளம். (க)

உடம்பின் பெயர்.

269. ஆகங் காத்திரம் யாக்கை தனுவுடல்
பூதியம் புணர்வு புகல்வியம் விம்மிதந்
தேக மங்க மூர்த்தஞ் சரீரம்
விக்கிரகம் பிண்ட மேனி தொக்குக்
காயங் குரம்பை கடமெய் சடம்புரம்
பூட்சி தாபரம் புற்கல முடம்பே.
உடம்பின் பெயர்:—ஆகம், காத்திரம், யாக்கை, தனு, உடல், பூதியம், புணர்வு, புகல், வியம், விம்மிதம். தேகம், அங்கம், மூர்த்தம், சரீரம், விக்கிரகம், பிண்டம், மேனி, தொக்கு, காயம், குரம்பை, கடம், மெய், சடம், புரம், பூட்சி, தாபரம், புற்கலம். (உஎ)

வடிவத்தின் பெயர்.

270. படிவ முருவஞ் சட்டக மேனி
வண்ணமு மாகும் வடிவின் பெயரே.
வடிவத்தின் பெயர்:—படிவம், உருவம், சட்டகம், மேனி, வண்ணம். (ரு)

காலின் பெயர்.

271. பதமே பாதஞ் சரணங் கழல்கால்.
காலின் பெயர்:—பதம், பாதம், சரணம், கழல். (ச)

இதுவுமது.

272. சலனடி யங்கிரி தாளு மாகும்.
ஷ்டி காலின் பெயர்:—சலன், அடி, அங்கிரி, தாள். (ச) ஆ (அ)

கரட்டின் பெயர்.

273. பரடே மிசைத்திரள் காலடி கரடே.
கரட்டின் பெயர்:—பரடு, மிசைத்திரள், காலடி. (ந)

கணைக்காலின் பெயர்.

274. சங்கங் கணைக்கால்.
கணைக்காலின் பெயர்:—சங்கம். (க)

முழந்தாளின் பெயர்.

275. சானு முழந்தாள்.
முழந்தாளின் பெயர்:—சானு. (க)

தொடையின் பெயர்.

276. குறங்கு வாமங் கவானூ ருத்தொடை.
தொடையின் பெயர்:—குறங்கு, வாமம், கவான், ஊரு. (ச)

அல்குலின் பெயர்.

277. கடிதட நிதம்ப மரையே யல்குல்.
அல்குலின் பெயர்:—கடிதடம், நிதம்பம், அரை. (ந)

இதுவுமது.

278. வடிவகலு பத்தமு மாகு மென்ப.
ஷ்டி அல்குலின் பெயர்:—வடிவு, அகல், உபத்தம். (ந) ஆ (சா)

பிருட்டத்தின் பெயர்.

279. பிருட்டஞ் சகனங் குய்யம் பாயுரு.
பிருட்டத்தின் பெயர்:—பிருட்டம், சகனம், குய்யம், பாயுரு. (ச)

ஆண்குறியின் பெயர்.

280. இலிங்கமுங் கோசமு மாண்குறி யாகும்.
ஆண்குறியின் பெயர்:—இலிங்கம், கோசம். (உ)

பெண்குறியின் பெயர்.

281. யோனியும் பகமும் பெண்குறி யாகும்.
பெண்குறியின் பெயர்:—யோனி, பகம். (உ)

இதுவுமது.

282. பூப்பகமும் பொன்னுஞ் சின்னமு மாகும்.
ஷை பெண்குறியின் பெயர்:—பூப்பகம், பொன், சின்னம். (ந) ஆ (ரு)

இடையின் பெயர்.

283. மத்திம நுசுப்பிடை மருங்கு மாகும்.
இடையின் பெயர்:—மத்திமம், நுசுப்பு, மருங்கு. (ந)

மருங்கின் பக்கத்தின் பெயர்.

284. ஒக்கலை மருங்கின் பக்க மாகும்.
மருங்கின் பக்கத்தின் பெயர்:—ஒக்கலை. (க)

கொப்பூழின் பெயர்.

285. இதலை யிலைஞ்சி நாபி யுந்தி
போகில் கொப்பூ ழாகு மென்ப.
கொப்பூழின் பெயர்:—இதலை, இலைஞ்சி, நாபி, உந்தி, போகில். (ரு)

மலத்தின் பெயர்.

286. அமேத்திய மலமாம்.
மலத்தின் பெயர்:—அமேத்தியம். (க)

சிறுநீரின் பெயர்.

287. அமரி சிறுநீ ருவரியு மாகும்.
சிறுநீரின் பெயர்:—அமரி, உவரி. (உ

வயிற்றின் பெயர்.

288. குக்கி துத்த மடி வயி னுதர
மோடு சடர மகடும் வயிறே.
வயிற்றின் பெயர்:—குக்கி, துத்தம், மடி, வயின், உதரம், மோடு,
சடரம், அகடு. (அ

மார்பின் பெயர்.

289. அகலமு முரமு மாகமு மார்பே.
மார்பின் பெயர்:—அகலம், உரம், ஆகம். (ங

இதுவுமது.

290. மருமமு நெஞ்சு மற்றதன் பெயரே.
ஷை மார்பின் பெயர்:—மருமம், நெஞ்சு. (உ) ஆ (

முலையின் பெயர்.

291. பயோதரஞ் சுவர்க்கங் குருக்க ணம்ம
நகிலந் தனங்குயஞ் சேக்கை கொம்மை
கொங்கை முலையெனக் கூறப் படுமே.

முலையின் பெயர்:—பயோதரம், சுவர்க்கம், குருக்கண், அம்மம், நகிலம், தனம், குயம், சேக்கை, கொம்மை, கொங்கை. (க0)

இதுவுமது.

292. பறம்பென் றுரைப்பது மப்பெயர்ப் பாலே.

ஷை முலையின் பெயர்:—பறம்பு. (க) ஆக (கக)

முலைக்கண்ணின் பெயர்.

293. சிலீமுகஞ் சூசுக மீற்றுமுலைக் கண்ணே.

முலைக்கண்ணின் பெயர்:—சிலீமுகம், சூசுகம். (உ)

கையின் பெயர்.

294. கரமத்தம் பாணிதோள் கைத்தலமுங் கையே.

கையின் பெயர்:—கரம், அத்தம், பாணி, தோள், கைத்தலம். (ரு)

முழங்கையின் பெயர்.

295. கூர்ப்பர முழங்கை.

முழங்கையின் பெயர்:—கூர்ப்பரம். (க)

மணிக்கட்டின் பெயர்.

296. கிலுத்த மணிக்கட்டே.

மணிக்கட்டின் பெயர்:—கிலுத்தம். (க)

உள்ளங்கையின் பெயர்.

297. அங்கை குடங்கை யகங்கை யுள்ளங்கை.

உள்ளங்கையின் பெயர்:—அங்கை, குடங்கை, அகங்கை. (ங)

விரலின் பெயர்.

298. அங்குலி விரலாம்.

விரலின் பெயர்:—அங்குலி. (க)

நகத்தின் பெயர்.

299. உகிர்நக மாகும்.

நகத்தின் பெயர்:—உகிர். (க)

### தோளின் பெயர்.

300. புயமு மொய்ம்பும் வாகுவுந் தோளே.
தோளின் பெயர்:—புயம், மொய்ம்பு, வாகு. (௩)

### கமுக்கட்டின் பெயர்.

301. வாகு மூலங் கைம்மூலங் கமுக்கட்டே.
கமுக்கட்டின் பெயர்:—வாகுமூலம், கைம்மூலம். (௨)

### தோண்மேலின் பெயர்.

302. சுவலுஞ் செகிலு நிகலமுந் தோண்மேல்.
தோண்மேலின் பெயர்:—சுவல், செகில், நிகலம். (௩)

### கழுத்தின் பெயர்.

303. கிரீவங் களமே கில்லங் கந்தரங்
கண்ட மிடறுங் கழுத்தா கும்மே.
கழுத்தின் பெயர்:—கிரீவம், களம், கில்லம், கந்தரம், கண்டம், மிடறு. (௬)

### முதுகின் பெயர்.

304. வெரிந்புற மபரம் வெந்நு முதுகே.
முதுகின் பெயர்:—வெரிந், புறம், அபரம், வெந். (௪)

### பிடர்த்தலையின் பெயர்.

305. சுவலும் பிடரு மெருத்தமுஞ் சிறுபுறமுங்
கயிலு நிமமும் பிடர்த்தலை யாகும்.
பிடர்த்தலையின் பெயர்:—சுவல், பிடர், எருத்தம், சிறுபுறம், கயில், நிமம். (௬)

### கதுப்பின் பெயர்.

306. கபோலங் கொடிறனு கவுள்கதுப் பாகும்.
கதுப்பின் பெயர்:—கபோலம், கொடிறு, அனு, கவுள். (௪)

### மோவாயின் பெயர்.

307. தாடி கட்ட மோவா யாகும்.
மோவாயின் பெயர்:—தாடி, கட்டம். (௨)

### இதுவுமது.

308. சுவுகந் தாழ்வா யாமெனச் செப்புவர்.
ஷை மோவாயின் பெயர்:—சுவுகம், தாழ்வாய். (௨) ஆ (௪)

முகத்தின் பெயர்.

309. ஆனனம் வதனந் துண்டம்வத் திரமுகம்.
முகத்தின் பெயர்:—ஆனனம், வதனம், துண்டம், வத்திரம். (ச)

உதட்டின் பெயர்.

310. பாலிகை முத்தம் வாயித ழுதடே.
உதட்டின் பெயர்:—பாலிகை, முத்தம், இதழ். (ங)

மேலிதழின் பெயர்.

311. மேலித ழோட்டம்.
மேலிதழின் பெயர்:—ஓட்டம். (க)

கீழிதழின் பெயர்.

312. கீழித ழதரம்.
கீழிதழின் பெயர்:—அதரம். (க)

அண்ணத்தின் பெயர்.

313. அணரி யண்ணம்.
அண்ணத்தின் பெயர்:—அணரி. (க)

பல்லின் பெயர்.

314. எயிறுந் தந்தமுந் தசனமும் பல்லே.
பல்லின் பெயர்:—எயிறு, தந்தம், தசனம். (ங)

இதுவுமது.

315. முறுவலு நகையு மூரலு மாகும்.
ஷை பல்லின் பெயர்:—முறுவல், நகை, மூரல். (ங) ஆக (சா)

நகுதலின் பெயர்.

316. நகுதற்கு மிவையே நாம மென்ப.
நகுதலின் பெயர்:—சிரித்தற்கு மேற்கூறிய முறுவல், நகை, மூரல் ஆகிய மூன்று பெயருமே கொள்க. (ங)

எயிற்றின் பெயர்.

317. எயிற்றின் பெயரே விளிம்பென வியம்பும்.
எயிற்றின் பெயர்:—விளிம்பு. (க)

நாக்கின் பெயர்.

318. *நாவே தாலுந் தாரஞ் சிகுவை*
*நாக்கா மெனவே நவிலப் படுமே.*

*நாக்கின் பெயர்:—நா, தாலு, தாரம், சிகுவை.* (௪)

வாயின் பெயர்.

319. *வைப்புப் புலனிடம் பாங்கரும் வாயெனல்.*

*வாயின் பெயர்:—வைப்பு, புலனிடம், பாங்கர்.* (௩)

உண்மிடற்றின் பெயர்.

320. *அணலுண் மிடறே.*

*உண்மிடற்றின் பெயர்:—அணல்.* (௧)

உண்ணாக்கின் பெயர்.

321. *அண்ண முண்ணாக்கே.*

*உண்ணாக்கின் பெயர்:—அண்ணம்.* (௧)

இதுவுமது.

322. *சிறுநாக் கென்று செப்பலு மாகும்.*

*ஷெ உண்ணாக்கின் பெயர்:—சிறுநாக்கு.* (௧) ஆக (௨)

கீழ்வாய்ப் புறத்தின் பெயர்.

323. *அணல்கீழ் வாய்ப்புறம்.*

*கீழ்வாய்ப் புறத்தின் பெயர்:—அணல்.* (௧)

மேல்வாய்ப் புறத்தின் பெயர்.

324. *அணரி யண்ண மேல்வாய்ப் புறமே.*

*மேல்வாய்ப் புறத்தின் பெயர்:—அணரி, அண்ணம்.* (௨)

இதுவுமது.

325. *அணலே மேல்வா யாகலு முரித்தே.*

*ஷெ மேல்வாய்ப் புறத்தின் பெயர்:—அணல்.* (௧) ஆக (௩)

மூக்கின் பெயர்.

326. *துண்டமு நாசியுங் கோணமு மூக்கே.*

*மூக்கின் பெயர்:—துண்டம், நாசி, கோணம்.* (௩)

### செவியின் பெயர்.

327. காது கேள்வி யள்ளே சுருதி
கன்னஞ் செவியே சோத்திர மாகும்.

செவியின் பெயர்:—காது, கேள்வி, அள், சுருதி, கன்னம், சோத்திரம். (சு)

### கண்ணின் பெயர்.

328. திட்டி விலோசன நேத்திர நயனந்
தாரை யம்பகம் விழியே நாட்டம்
மக்க நோக்குச் சக்குத் திருட்டி
பார்வைகோ வினன்ன பலவுங் கண்ணே.

கண்ணின் பெயர்:—திட்டி, விலோசனம், நேத்திரம், நயனம், தாரை, அம்பகம், விழி, நாட்டம், அக்கம், நோக்கு, சக்கு, திருட்டி, பார்வை, கோ. (கசு)

### கண்மணியின் பெயர்.

329. தாரை கண்மணி.

கண்மணியின் பெயர்:—தாரை. (க)

### கண்ணிமையின் பெயர்.

330. விளிம்பிமை யாகும்.

கண்ணிமையின் பெயர்:—விளிம்பு. (க)

### புருவத்தின் பெயர்.

331. புரூரம் பிருகுடி நுதலிவை புருவம்.

புருவத்தின் பெயர்:—புரூரம், பிருகுடி, நுதல். (௩)

### இதுவுமது.

332. புதலும் புகுடியும் பீருவு மாகும்.

ஷை புருவத்தின் பெயர்:—புதல், புகுடி, பீரு. (௩) ஆ (சு)

### கழுத்தின் பின்குழியின் பெயர்.

333. பனிச்சை சூறை கழுத்தின் பின்குழி.

கழுத்தின் பின்குழியின் பெயர்:—பனிச்சை, சூறை. (௨)

### தொண்டைக் குழியின் பெயர்.

334. தொண்டை கில்லந் தொண்டைக் குழியே.

தொண்டைக்குழியின் பெயர்:—தொண்டை, கில்லம். (௨)

### நெற்றியின் பெயர்.

335. நெற்றி முண்டக மத்தக நுதலே
யளிகம் பாலங் குளமி லலாடம்.

நெற்றியின் பெயர்:—முண்டகம், மத்தகம், நுதல், அளிகம், பாலம், குளம், இலலாடம். (எ)

### தலையின் பெயர்.

336. சிரமுங் கம்முஞ் சேகரமுஞ் சென்னியு
முடியு முத்த மாங்கமு நவிரமும்
உச்சியுஞ் சிகரமு முண்டமத் தகமும்
மூர்த்தமு முவ்வியுந் தலையென மொழிப.

தலையின் பெயர்:—சிரம், கம், சேகரம், சென்னி, முடி, உத்தமாங் கம், நவிரம், உச்சி, சிகரம், முண்டம், மத்தகம், மூர்த்தம், உவ்வி. (கங)

### குடுமியின் பெயர்.

337. சிமிலஞ் சிக்கஞ் சிகைசிமி குடுமி.

குடுமியின் பெயர்:—சிமிலம், சிக்கம், சிகை, சிமி. (ச)

### உச்சியின் பெயர்.

338. நவிரஞ் சுடிகை சூழி யுச்சி.

உச்சியின் பெயர்:—நவிரம், சுடிகை, சூழி. (ங)

### ஆண்பான் மயிரின் பெயர்.

339. குஞ்சி பித்தை யோரி குழல்கார்
பங்கி கேசஞ் சுரியல் கதுப்புத்
தளைநவிர் பிச்சஞ் சிகையாண் பான்மயிர்.

ஆண்பான் மயிரின் பெயர்:—குஞ்சி, பித்தை, ஓரி, குழல், கார், பங்கி, கேசம், சுரியல், கதுப்பு, தளை, நவிர், பிச்சம், சிகை. (கங)

### பெண்பான் மயிரின் பெயர்.

440. குழலே கூழை குந்தளங் கூந்த
லளக மோதி யைம்பால் கதுப்புச்
சுருளொடு விலோதம் பாரிசாரங் கேசஞ்
சுரியல் மாட்டங் கோதை குருளென்
றிணைய பெண்பான் மயிர்குரல் கூரல்.

பெண்பான் மயிரின் பெயர்:—குழல், கூழை, குந்தளம், கூந்தல், அளகம், ஓதி, ஐம்பால், கதுப்பு, சுருள், விலோதம், பாரிசாரம், கேசம், சுரியல், மாட்டம், கோதை, குருள், குரல், கூரல். (கஅ)

ஆண்மயிர்க்கும் பெண்மயிர்க்கும் பொதுப்பெயர்.

441. கதுப்பே கேசஞ் சுரியல் குழலாண்
மயிர்க்கும் பெண்பான் மயிர்க்கு முரித்தே.

ஆண்மயிர்க்கும் பெண்மயிர்க்கும் பொதுப் பெயர்:—கதுப்பு, கேசம், சுரியல், குழல். (௪)

பெண்மயிர் முடியின் பெயர்.

342. கொப்பு மிஞ்சிகங் கொண்டை தம்மில
முச்சி சிகழிகை பெண்மயிர் முடிப்பெயர்.

பெண்மயிர் முடியின் பெயர்:—கொப்பு, மிஞ்சிகம், கொண்டை, தம்மிலம், முச்சி, சிகழிகை. (௬)

மயிர்க் குழற்சியின் பெயர்.

343. குந்தள மளகம் விலோத மயிர்க்குழற்சி.

மயிர்க் குழற்சியின் பெயர்:—குந்தளம், அளகம், விலோதம். (௩)

குழற்கோத்தின் பெயர்.

344. குந்தள மென்பது குழற்கொத் தாகும்.

குழற்கொத்தின் பெயர்:—குந்தளம். (௧)

ஐம்பான் முடியின் பெயர்.

345. கூந்தன் முடியே குழலொடு தொங்கல்
வாய்ந்த பனிச்சை வார்மயிர்ச் சுருளொன்
றேந்திழை யார்முடிக் கியன்றவைம் பாலே.

ஐம்பான் முடியின் பெயர்:—முடி, குழல், தொங்கல், பனிச்சை, சுருள். (௫)

[முடி-மயிரை யுச்சியின் முடித்தல். குழல்-சுருட்டி முடித்தல். தொங்கல் - மயிரை முடிந்துவிடுதல். பனிச்சை - பின்னிவிடுதல். சுருள் - பின்னே செருகல்.]

பிறமயிரின் பெயர்.

346. ஓரி பங்கி யுளையே யுரோமங்
கேச மராட்டம் பிறமயிர் கிளத்துப.

பிறமயிரின் பெயர்:—ஓரி, பங்கி, உளை, உரோமம், கேசம், மராட்டம். (௬)

செறிமயிர்ப் பரப்பின் பெயர்.

347. சிரோருகமு முரோமமுஞ் செறிமயிர்ப் பரப்பே.

செறிமயிர்ப் பரப்பின் பெயர்:—சிரோருகம், உரோமம். (௨)

ஆண்பான் மயிர்முடியின் பெயர்.

348. பின்னகம் பந்த முடிமுச்சி கொண்டை
மன்னுஞ் சிகழிகை குழல்சுடிகை மௌலி
யின்னவை யாண்பான் மயிர்முடிக் கெய்தும்.

ஆண்பான் மயிர்முடியின் பெயர்:—பின்னகம், பந்தம், முடி, முச்சி, கொண்டை, சிகழிகை, குழல், சுடிகை, மௌலி. (கூ)

சடையின் பெயர்.

349. குடிலம் வேணி கோடீரஞ் சடிலஞ்
சடையின் பெயரே பின்னலுஞ் சாற்றும்.

சடையின் பெயர்:—குடிலம், வேணி, கோடீரம், சடிலம், பின்னல். (ஞ)

தலைமயிரின் பெயர்.

350. தலைமயிர் சிரோருகம்.

தலைமயிரின் பெயர்:—சிரோருகம். (க)

நரைமயிரின் பெயர்.

351. சரைநரை யாகும்.

நரைமயிரின் பெயர்:—சரை. (க)

இதுவுமது.

352. பலித மென்பது நரைமயிர்ப் பண்பே.

ஷெடி நரைமயிரின் பெயர்:—பலிதம். (க) ஆகெ (உ)

உறுப்பின் பெயர்.

353. அவயவங் காத்திர மங்க முறுப்பே.

உறுப்பின் பெயர்:—அவயவம், காத்திரம், அங்கம். (ந)

இதுவுமது.

354. சினையே மூர்த்தமென் றுருவழிச் சிவணும்.

ஷெடி உறுப்பின் பெயர்:—சினை, மூர்த்தம். (உ) ஆகெ (ரு)

சந்தின் பெயர்.

355. கந்துங் கொளுத்து மூட்டுஞ் சந்தாம்.

சந்தின் பெயர்:—கந்து, கொளுத்து, மூட்டு. (ந)

உடற்றழும்பின் பெயர்.

356. வடுவசி கச்சை சேக்கை யங்கிதஞ்
சுவடு செதுக்கை தழும்பெனச் சொல்லும்.

உடற்றழும்பின் பெயர்:—வடு, வசி, கச்சை, சேக்கை, அங்கிதம், சுவடு, செதுக்கை. (எ)

இறையின் பெயர்.

357. பிறங்கு வரிபொறி வரையிறை யாகும்.

இறையின் பெயர்:—பிறங்கு, வரி, பொறி, வரை. (ச)

தேமலின் பெயர்.

358. துத்தி வசந்திகை திதலை சுணங்கே
யுத்தி தேமறி தனியு முரைக்கும்.

தேமலின் பெயர்:—துத்தி, வசந்திகை, திதலை, சுணங்கு, உத்தி, திதனி. (சு)

கோழையின் பெயர்.

359. ஐயுங் காசமு மவைமுதிர் கோழை.

கோழையின் பெயர்:—ஐ, காசம். (உ)

கழலையின் பெயர்.

360. அரலை கழலை யாகு மென்ப.

கழலையின் பெயர்:—அரலை. (க)

பிணத்தின் பெயர்.

361. அழனமுஞ் சவமுங் குணபமும் பிரேதமும்
பிணமே கனேபர மென்னும் பெயரே.

பிணத்தின் பெயர்:—அழனம், சவம், குணபம், பிரேதம், கனேபரம். (டு)

உடற்குறையின் பெயர்.

362. யூபமுங் கவந்தமு மட்டையு முடற்குறை.

உடற்குறையின் பெயர்:—யூபம், கவந்தம், மட்டை. (ந)

சிரமாலையின் பெயர்.

363. அழிதலை கரோடி சிரமாலை யாகும்.

சிரமாலையின் பெயர்:—அழிதலை, கரோடி. (உ)

### தலையோட்டின் பெயர்.

364. கபாலம் வெண்டலை தலையோ டென்ப.

தலையோட்டின் பெயர்:—கபாலம், வெண்டலை. (உ)

### பஞ்சமல வகையின் பெயர்.

365. மலநீர் வாயு செந்நீர் கந்தம்
பஞ்ச மலமெனப் பகர லாகும்.

பஞ்சமல வகையின் பெயர்:—மலம், நீர், வாயு, செந்நீர், கந்தம். (ரு)

### இருபத்தைந்து தத்துவத்தின் பெயர்.

366. ஐம்பெரும் பூதமு மவையறி வாயிலு
மைம்புல னறியு மவற்றறி வைந்துங்
கைகால் குதம்வாய் மானிடக் குறியென்
றாகிய கன்மேந் திரிய மைந்து
மனம்புத்தி யாங்காரஞ் சித்த நான்கு
காரணமிய மானனுங் காயத்திற் கமைந்த
விருபத் தைந்து தத்துவ மாகும்.

இருபத்தைந்து தத்துவத்தின் பெயர்:—பூதம் (ரு), ஞானேந்திரியம் (ரு), புலன் (ரு), கன்மேந்திரியம் (ரு), அந்தக்கரணம் (ச), ஆன்மா (க).
ஆக (உரு)

### ஓரறி வுயிரின் பெயர்.

367. உற்றறி புலனை தொன்றே யுடைமையின்
மற்றைப் புல்லு மானுமோ ரறிவே.

ஓரறிவுயிரின் பெயர்:—புல், மரம். (உ)

### ஈரறி வுயிரின் பெயர்.

368. உற்றறி புலனு நாவு முடைமையி
னட்டையு நந்தும் போல்வவீ ரறிவே.

ஈரறிவுயிரின் பெயர்:—அட்டை, நந்து. (உ)

### மூவறி வுயிரின் பெயர்.

369. உற்றறி புலனு மூக்கு முடைமையின்
முற்பெறு சிதலெறும் பாதிமூ வறிவே.

மூவறிவுயிரின் பெயர்:—சிதல், எறும்பு. (உ)

நாலறி வுயிரின் பெயர்.

370. உற்றறி புலனு மூக்கொடு கண்ணும்
பெற்ற வண்டுஞெண் டாதிநா லறிவின.

நாலறிவுயிரின் பெயர்:—வண்டு, ஞெண்டு. (உ)

ஐயறி வுயிரின் பெயர்.

371. உற்றறி புலனு மூக்கொடு கண்செவி
மக்களு மாவு மையறி வினவே.

ஐந்தறிவுயிரின் பெயர்:—மக்கள், மா. [மா - விலங்கு.] (உ)

ஆறறி வுயிரின் பெயர்.

372. மனனோ டாறறி வினரே மக்க
ளொருசார் விலங்கு மதுபெறற் குரித்தே.

ஆறறிவுயிரின் பெயர்:—மக்கள், ஒருசார் விலங்கு. [ஒருசார் விலங்கு என்றது கடவுளரையும், அவர் வழிபட்டோரையும் உணர்ந்து வழிபடும் விலங்கினை.] (உ)

இருவகைத் தாதுவின் பெயர்.

373. இருவகைத் தாது சுரோணிதஞ் சுக்கிலம்.

இருவகைத் தாதுவின் பெயர்:—சுரோணிதம், சுக்கிலம். (க)

மூவடிவின் பெயர்.

374. மூவடிவு பெண்ணு ணலியென மொழிப.

மூவடிவின் பெயர்:—பெண், ஆண், அலி. (க)

முப்பிணியின் பெயர்.

375. முப்பிணி பித்த வாதஞ் சிலேட்டுமம்.

முப்பிணியின் பெயர்:—பித்தம், வாதம், சிலேட்டுமம். (க)

எண்வகை மணத்தின் பெயர்.

376. பிரமந் தெய்வம் பிரசா பத்திய
மாரிடங் காந்தருவ மாசுர மிராக்கதம்
பைசா சம்மிவை யெண்வகை மணமே.

எண்வகை மணத்தின் பெயர்:—பிரமம், தெய்வம், பிரசாபத்தியம், ஆரிடம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம். (அ)

[பிரமம் - பிரமசாரிக்குக் கன்னிகையை மணஞ் செய்வித்தல். தெய்வம் - வேள்வியாற் றோன்றிய கன்னிகையைத் தீமுன் கொடுத்தல். பிரசாபத்தியம் - தலைமகனினத்தார் வேண்டத் தலைமக

ளினத்தார் உடன்பட்டுத் தீமுன் கொடுத்தல். ஆரிடம் - பசு எருது இரண்டொன்று வாங்கிக்கொண்டு கன்னிகையைக் கொடுத்தல். காந்தருவம் - தலைவனும் தலைவியுந் தனியிடத் தெதிர்ப்பட்டுத் தாமே கூடுதல். ஆசுரம் - சுற்றத்தார்க்கு வேண்டுவன கொடுத்துக் கன்னிகையை வேட்டல். இராக்கதம் - உடன்பாடின்றி ஓர் கன்னிகையை வலிதிற் புணர்தல். பைசாசம் துயில்கின்றவளைச் சென்று கூடுதல்.]

ஐந்தாவது

ஆடவர்வகை முற்றிற்று.

ஆ சூத்திரம் ௧௧௦௧.

ஆறாவது

# அநுபோகவகை.

முதலாவது

## உணவின் வகை.

### சோற்றின் பெயர்.

1. அன்ன மயினி யடிசி லோதனம்
பொம்மல் போனக மடைபுன் கமூரல்
புழுக்கல் மிதவை யமலை புற்கை
உணவுசருப் பாளித நிமிரல் வல்சி
யசனம் துற்றுக் கவள முதாகம்
சொன்றிபாத் துக்கூழ் பதம்புகா சோறே.

சோற்றின் பெயர்:—அன்னம், அயினி, அடிசில், ஓதனம், பொம்மல், போனகம், மடை, புன்கம், மூரல், புழுக்கல், மிதவை, அமலை, புற்கை, உணவு, சரு, பாளிதம், நிமிரல், வல்சி, அசனம், துற்று, கவளம், உதாகம், சொன்றி, பாத்து, கூழ், பதம், புகா. (உஎ)

### கஞ்சியின் பெயர்.

2. கஞ்சிய வாகே காடி மோழை.

கஞ்சியின் பெயர்:—அவாகு, காடி, மோழை. (௩)

### பாற்சோற்றின் பெயர்.

3. பாயசம் பாற்சோறே.

பாற்சோற்றின் பெயர்:—பாயசம். (௧)

ததியுணவின் பெயர்.

4. தயிரிற் றிமிர றதியி னுணவே.

*ததியுணவின் பெயர்:—தயிரிற்றிமிரல்.* (க)

அவிழின் பெயர்.

5. பதமவி ழாகும்.

*அவிழின் பெயர்:—பதம்.* (க)

வழியுணவின் பெயர்.

6. பொதிதோட் கோப்புச்சம் பளம்வழி யுணவே.

*வழியுணவின் பெயர்:—பொதி, தோட்கோப்பு, சம்பளம்.* (ந)

பிட்டின் பெயர்.

7. ஆவியும் வெக்கையும் பிட்டென லாகும்.

*பிட்டின் பெயர்:—ஆவி, வெக்கை.* (உ)

மோதகத்தின் பெயர்.

8. மோதக மிலட்டுகம்.

*மோதகத்தின் பெயர்:—இலட்டுகம்.* (க)

அடையின் பெயர்.

9. அப்ப மடையே.

*அடையின் பெயர்:—அப்பம்.* (க)

உக்காரியின் பெயர்.

10. அஃகுல்லி யுக்காரி.

*உக்காரியின் பெயர்:—அஃகுல்லி.* (க)

பில்லடையின் பெயர்.

11. பில்லடை சஃகுல்லி.

*பில்லடையின் பெயர்:—சஃகுல்லி.* (க)

தினைமாவின் பெயர்.

12. நுவணை தினைமா.

*தினைமாவின் பெயர்:—நுவணை.* (க)

நென்மாவின் பெயர்.

13. இடிநென் மாவே.

*நென்மாவின் பெயர்:—இடி.* (க)

தோசையின் பெயர்.

14. கஞ்சந் தோசை.
தோசையின் பெயர்:—கஞ்சம். (௧)

பூரிகையின் பெயர்.

15. நொலையல் பூரிகை.
பூரிகையின் பெயர்:—நொலையல். (௧)

மாவின் பெயர்.

16. பிண்டியு மருப்பமு பிட்டமு நவணையு
மென்றிவை மாவென விடியு மாகும்.
மாவின் பெயர்:—பிண்டி, அருப்பம், பிட்டம், நவணை, இடி. (௫)

அப்பவருக்கத்தின் பெயர்.

17. அபூபங் கஞ்ச மிலையடை மெல்லடை
நொலையல் பூரிகை சஃகுல்லி போனக
மண்டிகை பொள்ளலு மப்ப வருக்கம்.
அப்பவருக்கத்தின் பெயர்:—அபூபம், கஞ்சம், இலையடை, மெல்லடை, நொலையல், பூரிகை, சஃகுல்லி, போனகம், மண்டிகை, பொள்ளல். (௧௦)

சிற்றுண்டியின் பெயர்.

18. அப்பம் பிட்டோ டஃகுல்லி யிடியெனச்
செப்பிய வெல்லாஞ் சிற்றுண்டி யாகும்.
சிற்றுண்டியின் பெயர்:—அப்பம், பிட்டு, அஃகுல்லி, இடி. (௪)

கறிவர்க்கத்தின் பெயர்.

19. கறிவர்க்கங் கூட்டமை.
கறிவர்க்கத்தின் பெயர்:—கூட்டமை. (௧)

கறியின் பெயர்.

20. கறிநீ டாணம்.
கறியின் பெயர்:—நீடாணம். (௧)

பொரியலின் பெயர்.

21. கருனை பொரியல்.
பொரியலின் பெயர்:—கருனை. (௧)

புளிங்கறியின் பெயர்.

22. துவையே புளிங்கறி. (க)
புளிங்கறியின் பெயர்:—துவை.

குழம்பின் பெயர்.

23. ஆணங் குழம்பாம். (க)
குழம்பின் பெயர்:—ஆணம்.

பச்சடியின் பெயர்.

24. அவித்துவையல் பச்சடி. (க)
பச்சடியின் பெயர்:—அவித்துவையல்.

வறையலின் பெயர்.

25. வறைய லோச்சை. (க)
வறையலின் பெயர்:—ஓச்சை.

பிண்ணாக்கின் பெயர்.

26. மலாவகம் பிண்ணாக்கே. (க)
பிண்ணாக்கின் பெயர்:—மலாவகம்.

சூட்டிறைச்சியின் பெயர்.

27. சூசியம் படித்திரஞ் சூட்டிறைச்சி யாகும். (உ)
சூட்டிறைச்சியின் பெயர்:—சூசியம், படித்திரம்.

மீன்முள் அரிந்திடுங் கருவியின் பெயர்.

28. அயிரி மீன்முள் ளரிந்திடுங் கருவி. (க)
மீன்முள் அரிந்திடுங் கருவியின் பெயர்:—அயிரி.

பாலின் பெயர்.

29. பயசு கீர மமிழ்துபயம் பாலே. (௪)
பாலின் பெயர்:—பயசு, கீரம், அமிழ்து, பயம்.

தயிரின் பெயர்.

30. ததியளை பெருகு தயிரென லாகும். (ங)
தயிரின் பெயர்:—ததி, அளை, பெருகு.

நெய்யின் பெயர்.

31. ஆதிரங் கிருத மாச்சிய மிழுது
நேயந் துப்பு நெய்யா கும்மே.

நெய்யின் பெயர்:—ஆதிரம், கிருதம், ஆச்சியம், இழுது, நேயம், துப்பு. (௬)

இதுவுமது.

32. அவியா காரமு மதன்பெயர் பெறுமே.

ஷ-டி நெய்யின் பெயர்:—அவி, ஆசாரம். (௨) ஆ-டி (௮)

வெண்ணெயின் பெயர்.

33. ஐயங் கவீன நவநீ தம்மெனை
வெண்ணெய் விதந்து விளம்பப் படுமே.

வெண்ணெயின் பெயர்:—ஐயங்கவீனம், நவநீதம். (௨)

மோரின் பெயர்.

34. மதிதந் தக்கிரங் காலசேய மோரே.

மோரின் பெயர்:—மதிதம், தக்கிரம், காலசேயம். (௩)

இதுவுமது.

35. அருப்ப மளைமுசர் மச்சிகையு மாகும்.

ஷ-டி மோரின் பெயர்:—அருப்பம், அளை, முசர், மச்சிகை. (௪) ஆ-டி (௭)

எண்ணெயின் பெயர்.

36. தைலமெண்ணெய் நேயமு மாகும்.

எண்ணெயின் பெயர்:—தைலம், நேயம். (௨)

தேனின் பெயர்.

37. பிரசமு மதுவுந் தேனெனப் பேசுவர்.

தேனின் பெயர்:—பிரசம், மது. (௨)

குழம்பின் பெயர்.

38. பாகு குழம்பு.

குழம்பின் பெயர்:—பாகு. (௧)

செறிகுழம்பின் பெயர்.

39. செச்சை செறிகுழம்பு.

செறிகுழம்பின் பெயர்:—செச்சை. (௧)

கண்டசருக்கரையின் பெயர்.

40. கண்டம் பாணிதங் கண்ட சருக்கரை.

கண்டசருக்கரையின் பெயர்:—கண்டம், பாணிதம். (௨)

மணற்பாகின் பெயர்.

41. கட்டியும் விசயமுங் கன்னலு மணற்பாகே.
*மணற்பாகின் பெயர்:—கட்டி, விசயம், கன்னல்.* (௩)

சருக்கரையின் பெயர்.

42. குளமக் காரங் குடமிவை சருக்கரை.
*சருக்கரையின் பெயர்:—குளம், அக்காரம், குடம்.* (௩)

வேறுருவகைச் சருக்கரையின் பெயர்.

43. உண்டே யயிர்புல் லகண்டமொரு விகற்பம்.
*வேறுருவகைச் சருக்கரையின் பெயர்:—அயிர், புல்லகண்டம்.* (௨)

கற்கண்டின் பெயர்.

44. கன்னல் கட்டி கற்கண் டாகும்.
*கற்கண்டின் பெயர்:—கன்னல், கட்டி.* (௨)

கள்ளின் பெயர்.

45. பாலி பிழியே படுமதுத் தணியல்
சாலி யாலி யாலை சாறு
மாதவஞ் சாதி சுரையே மாரி
மதுவம் வேரி தொப்பி தேற
னறவு பிரச மாம்பலி ரேயந்
தொண்டி நனை மாலி யரிட்ட மாசபங்
கௌவை சுவிகை சுலோகி சுண்டை
வெறியே யம்மியம் வாருணம் பான
மளியே மேதை முண்டகம் பாரி
மட்டுக் காலி சாயனங் காதம்
பரிவெலி வாணிதங் கொங்கு மகரந்தங்
குந்திசொல் விளம்பி யருப்பங் களியே
கல்லியஞ் சுமாலி ஞாளி தேமு
நாற்றம் வடிநறை மதுகரங் கள்ளே.

*கள்ளின் பெயர்:—பாலி, பிழி, படு, மது, தணியல், சாலி, ஆலி, ஆலை, சாறு, மாதவம், சாதி, சுரை, மாரி, மதுவம், வேரி, தொப்பி, தேறல், நறவு, பிரசம், ஆம்பல், இரேயம், தொண் நனை, மாலி, அரிட்டம், ஆசபம், கௌவை, சுவிகை, சுலே சுண்டை, வெறி, அம்மியம், வாருணம், பானம், அளி, மே. முண்டகம், பாரி, மட்டு, காலி, சாயனம், காதம். வாணிதம், கொங்கு, மகரந்தம், குந்தி, சொல்லி*

பம், களி, கல்லியம், சுமாலி, ஞாளி, தேம், நாற்றம், வடி, நறை, மதுகரம். (ருக)

இதுவுமது.

46. பழையு மந்திரமும் பகரப் படுமே.

ஷ கள்ளின் பெயர்:—பழை, மந்திரம். (உ) ஆக (சுக)

கோற்றேனின் பெயர்.

47. பிரசங் கோற்றேன்.

கோற்றேனின் பெயர்:—பிரசம். (க)

தேன்கூட்டின் பெயர்.

48. இருறேன் கூடே.

தேன் கூட்டின் பெயர்:—இறால். (க)

பலபண்டத்தின் பெயர்.

49. பண்ணியம் வளமே பட்டம் பண்டம்
பண்ணிகா ரங்கூலம் பலபண் டப்பெயர்.

பலபண்டத்தின் பெயர் :—பண்ணியம், வளம், பட்டம், பண்டம், பண்ணிகாரம், கூலம். (சு)

அரும்பண்டத்தின் பெயர்.

50. தாரமென் கிளவி யரும்பண்ட மாகும்.

அரும்பண்டத்தின் பெயர்:—தாரம். (க)

எச்சிலின் பெயர்.

51. மிச்சி லுச்சிட்ட மெச்சி லாகும்.

எச்சிலின் பெயர்:—மிச்சில், உச்சிட்டம். (உ)

உணவின் பெயர்.

52. உணாவே வல்சி யுண்டி யோதன
மசனம் பதமே யிரையா கார
முறையே யூட்ட முணவென லாகும்.

உணவின் பெயர்:—உணா, வல்சி, உண்டி, ஓதனம், அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம். (கഠ)

பேருண்டியின் பெயர்.

53. பிரப்பென் றுரைப்பது பேருண்டி யாகும்.

பேருண்டியின் பெயர்:—பிரப்பு. (க)

உண்பனவற்றின் பெயர்.

54. துற்றி யுண்பன.
உண்பனவற்றின் பெயர்:—துற்றி. (க)

தின்பனவற்றின் பெயர்.

55. திற்றி தின்பன.
தின்பனவற்றின் பெயர்:—திற்றி. (க)

பருகுவனவற்றின் பெயர்.

56. பானமுந் துவையும் பருகுவன வாகும்.
பருகுவனவற்றின் பெயர்:—பானம், துவை. (உ)

அடிசிலென்பது.

57. அடப்படுவ தடிசில்.
அடிசில் என்பது:—அடப்படுவது. (க)

புழுங்கலென்பது.

58. புழுக்குவது புழுங்கல்.
புழுங்கல் என்பது:—புழுக்குவது. (க)

தித்திப்பின் பெயர்.

59. இழுமு மதுரமு மினிமையுந் தேமு
மமுதுஞ் சுவையுந் தித்திப் பாகும்.
தித்திப்பின் பெயர்:—இழும், மதுரம், இனிமை, தேம், அமுது, சுவை. (சு)

கைப்பின் பெயர்.

60. கைத்த றித்தங் கைப்பா கும்மே.
கைப்பின் பெயர்:—கைத்தல், தித்தம். (உ)

புளிப்பின் பெயர்.

61. ஆமில மாம்பிர மாகும் புளிப்பே.
புளிப்பின் பெயர்:—ஆமிலம், ஆம்பிரம் (உ)

காழ்த்தலின் பெயர்.

62. கரிலே காயங் கடுகங் காழ்த்தல்.
காழ்த்தலின் பெயர்:—கரில், காயம், கடுகம். (ங)

துவர்ப்பின் பெயர்.

63. துவர்ப்பே துவரம்.
துவர்ப்பின் பெயர்:— துவரம். (க)

உவர்த்தலின் பெயர்.

64. உவர்த்த லுவரே.
உவர்த்தலின் பெயர்:—உவர். (க)

இரண்டாவது

பூணின் வகை.

ஆபரணத்தின் பெயர்.

65. பூணணி அணிகலம் பூடணம் வள்ளி
ஆயிழை கலமு மாபர ணம்மே.
ஆபரணத்தின் பெயர்:—பூண், அணி, அணிகலம், பூடணம், வள்ளி, இழை, கலம். (எ)

மணிமுடியின் பெயர்.

66. மகுடங் கிரீட மௌலி மணிமுடி.
மணிமுடியின் பெயர்:—மகுடம், கிரீடம், மௌலி. (கூ)

இதுவுமது.

67. சூடிகை சுடிகைசே கரமுஞ் சொல்லும்.
ஷெ மணிமுடியின் பெயர்:— சூடிகை, சுடிகை, சேகரம்.
(கூ) ஆ (சா)

முடியுறுப்பு ஐந்தின் பெயர்.

68. கோடகங் கிம்புரி முகுடந் தாமம்
பதும முடியு றுப் பிவையந் தாகும்.
முடியுறுப்பு ஐந்தின் பெயர்:—கோடகம், கிம்புரி, முகுடம், தாமம், பதுமம். (ரு)

முடிமாலையின் பெயர்.

69. பாட முடிமாலை கோடி கரோடி.
முடிமாலையின் பெயர்:—பாடம், கோடி, கரோடி. (கூ)

பதக்கத்தின் பெயர்.

70. கண்டிகை மதாணி யாரமும் பதக்கம்.
பதக்கத்தின் பெயர்:—கண்டிகை, மதாணி, ஆரம். (கூ)

தோளணியின் பெயர்.

71. அங்கதங் கேயூரந் தோளணி யாகும்.
தோளணியின் பெயர்:—அங்கதம், கேயூரம். (உ)

குண்டலத்தின் பெயர்.

72. குண்டல மஞ்சிகை குழையென லாகும்.
குண்டலத்தின் பெயர்:—மஞ்சிகை, குழை. (உ)

காதணியின் பெயர்.

73. வல்லிகை கொட்டை கடிப்பங் காதணி.
காதணியின் பெயர்:—வல்லிகை, கொட்டை, கடிப்பம். (ந)

குணுக்கின் பெயர்.

74. கடிப்பிணை குணுக்காம்.
குணுக்கின் பெயர்:—கடிப்பிணை. (க)

தோட்டின் பெயர்.

75. தாடங்கந் தோடே.
தோட்டின் பெயர்:—தாடங்கம். (க)

கங்கணத்தின் பெயர்.

76. வளையுந் தொடியுங் கடகமுங் கங்கணம்.
கங்கணத்தின் பெயர்:—வளை, தொடி, கடகம். (ந)

கைவளையின் பெயர்.

77. சரியுந் தொடியுஞ் சூடகமுஞ் சங்குங்
குருகும் வண்டுங் கன்றுங் கைவளை.
கைவளையின் பெயர்:—சரி, தொடி, சூடகம், சங்கு, குருகு, வண்டு, கன்று. (எ)

பிள்ளைக் கைவளையின் பெயர்.

78. பிள்ளைக் கைவளை பிடிக மாகும்.
பிள்ளைக் கைவளையின் பெயர்:—பிடிகம். (க)

சுட்டியின் பெயர்.

79. சுட்டி சுடிகை.
சுட்டியின் பெயர்:—சுடிகை. (

16

பட்டத்தின் பெயர்.

80. பட்ட மோடை.
பட்டத்தின் பெயர்:—ஓடை. (க)

பாத கிண்கிணியின் பெயர்.

81. பரிபுர நூபுரம் பாதகிண் கிணியே.
பாத கிண்கிணியின் பெயர்:—பரிபுரம், நூபுரம். (உ)

சதங்கையின் பெயர்.

82. பாத சதங்கை சிறுமணி கிண்கிணி.
சதங்கையின் பெயர்:—சிறுமணி, கிண்கிணி. (உ)

சிலம்பின் பெயர்.

83. அரிதளை ஞெகிழி நூபுரஞ் சிலம்பே.
சிலம்பின் பெயர்:—அரி, தளை, ஞெகிழி, நூபுரம். (ச)

இதுவுமது.

84. அரவமுஞ் சிலம்பி னபிதா னம்மே.
ஷெ சிலம்பின் பெயர்:—அரவம். (க) ஆ (ரு)

காற்சரிக்குங் கைச்சரிக்கும் பெயர்.

85. பரியகங் காற்சரி கைச்சரியு மாகும்.
காற்சரிக்குங் கைச்சரிக்கும் பெயர்:—பரியகம். (க)

காலணியின் பெயர்.

86. பாத சாலங் காலணி யாகும்.
காலணியின் பெயர்:—பாதசாலம். (க)

பாடகத்தின் பெயர்.

87. பாத கடகம் பாடக மாகும்.
பாடகத்தின் பெயர்:—பாதகடகம். (க)

ஓசைசெய் தளையின் பெயர்.

88. ஞெகிழங் குடச்சூ லோசை செய்தளை.
ஓசை செய்தளையின் பெயர்:—ஞெகிழம், குடச்சூல். (உ)

ஆடவர் கோடைவீரத்தால் அணிவதின் பெயர்.

89. ஆடவர் கொடையால் வீரத் தாலணி
பாதத் தணியே கழலணி யென்ப.

ஆடவர் கொடைவீரத்தா லணிவதின் பெயர்:—கழல். (க)

மாதர் இடையணியின் பெயர்.

90. காஞ்சி மேகலை கலாபம் பருமம்
விரிசிகை மாத ரிடையணி யெனப்படும்;
அவற்றுள்,
காஞ்சியெண் கோவை யெழுகோவை மேகலை
கலாபம் நாலுன்கு பருமம் பதினெட்டு
விரிசிகை யென்முன்கு கோவை யென்ப.

மாதர் இடையணியின் பெயர்:—காஞ்சி, மேகலை, கலாபம், பருமம், விரிசிகை. (ரு)

அவற்றுள், காஞ்சி - எண்கோவை, மேகலை - எழுகோவை, கலாபம் - பதினறுகோவை, பருமம் - பதினெட்டுக்கோவை, விரிசிகை முப்பத்திரண்டுகோவை.

சரிமணிக்கோவையின் பெயர்.

91. கலாபந் தோரை சரிமணிக் கோவை.

சரிமணிக் கோவையின் பெயர்:—கலாபம், தோரை. (உ)

அரைப்பட்டிகையின் பெயர்.

92. அத்து மறைவு மரைப்பட் டிகையே.

அரைப்பட்டிகையின் பெயர்:—அத்து, மறை. (உ)

அரைஞாணின் பெயர்.

93 இரதக மரைஞாண்.

அரைஞாணின் பெயர்:—இரதகம். (க)

செவிமலர்ப்பூவின் பெயர்.

94. கன்னவை தஞ்சந் செவிமலர்ப் பூவே.

செவிமலர்ப்பூவின் பெயர்:—கன்னவைதஞ்சம். (க)

ஆபரணத்தொங்கலின் பெயர்.

95. தொங்க லுத்தி மதலிகை தூக்கம்.

ஆபரணத் தொங்கலின் பெயர்:—உத்தி, மதலிகை, தூக்கம். (ங)

மோதிரத்தின் பெயர்.

96. வீக மாழி யிலச்சினை மோதிரம்.
மோதிரத்தின் பெயர்:—வீகம், ஆழி, இலச்சினை. (௩)

மணிவடத்தின் பெயர்

97. சரமே யாரந் தாம மணிவடம்.
மணிவடத்தின் பெயர்:—சரம், ஆரம், தாமம். (௩)

பூணுநூலின் பெயர்.

98. உபவீதம் பூணு நூலென மொழிப.
பூணுநூலின் பெயர்:—உபவீதம். (௧)

நுதலணியின் பெயர்.

99. இலம்பகம் புல்லகஞ் சூட்டு நுதலணி.
நுதலணியின் பெயர்:—இலம்பகம், புல்லகம், சூட்டு. (௩)

தெய்வவுத்தியின் பெயர்.

100. திருத்தெய்வ வுத்தி.
தெய்வவுத்தியின் பெயர்:—திரு. (௧)

தலைக்கோலத்தின் பெயர்.

101. பங்குசம் பிஞ்ஞகம் பயிறலைக் கோலம்.
தலைக்கோலத்தின் பெயர்:—பங்குசம், பிஞ்ஞகம். (௨)

தலைப்பாளையின் பெயர்.

102. தொய்யக மென்பது தலைப்பாளை யாகும்.
தலைப்பாளையின் பெயர்:—தொய்யகம். (௧)

கிம்புரியின் பெயர்.

103. தாங்கி கிம்புரி கோளகை பூணே.
கிம்புரியின் பெயர்:—தாங்கி, கோளகை, பூண். (௩)

பெருஞ்சூட்டின் பெயர்.

104. பெருஞ்சூட் டென்பது சிவளிகைப் பெயரே.
பெருஞ்சூட்டின் பெயர்:—சிவளிகை. (௧)

சரப்பணியின் பெயர்.

105. சரப்பணி வயிரச் சங்கிலி யாகும்.
சரப்பணியின் பெயர்:—வயிரச்சங்கிலி. (௧)

பேரணியின் பெயர்.

106. மதாணி யாரம் பெரும்பூண் பேரணி.
பேரணியின் பெயர்:—மதாணி, ஆரம, பெரும்பூண். (௩)

பூண்கடைப்புணர்வின் பெயர்.

107. கடையுங் கயிலும் பூண்கடைப் புணர்வே.
பூண்கடைப்புணர்வின் பெயர்:—கடை, கயில். (௨)

மாதர் அணிவடத்தின் பெயர்.

108. ஆரங் கண்டிகை தாமங் கோவை
மாலை யிழைமா தரணிவடப் பெயரே.
மாதர் அணிவடத்தின் பெயர்:—ஆரம், கண்டிகை, தாமம், கோவை, மாலை, இழை. (௬)

மூன்றாவது

## இரத்தின வகை.

மாணிக்கத்தின் பெயர்.

109. மாமணி செம்மணி மாணிக்கம் பதும
ராக மென்பது மப்பெயர்க் குரித்தே.
மாணிக்கத்தின் பெயர்:—மாமணி, செம்மணி, பதுமராகம். (௩)

வைடூரியத்தின் பெயர்.

110. வால வாயம் வயிடூ ரியமெனல்.
வைடூரியத்தின் பெயர்:—வாலவாயம். (௧)

வயிரத்தின் பெயர்.

111. வச்சிரம் வயிரம்.
வயிரத்தின் பெயர்:—வச்சிரம். (௧)

மரகதத்தின் பெயர்.

112. மரகத மரிமணி பச்சை மணியே.
மரகதத்தின் பெயர்:—அரி, பச்சை. (௨)

நீலமணியின் பெயர்.

113. நீல மணிப்பெயர் மணியென நிகழ்த்துப.
நீலமணியின் பெயர்:—மணி. (௧)

பவளத்தின் பெயர்.

114. துப்புப் பிரவாளந் துவர்துகிர் பவளம்.
பவளத்தின் பெயர்:—துப்பு, பிரவாளம், துவர், துகிர். (௪)

இதுவுமது.

115. வித்துரும மரத்த மென்னவும் விளம்புப.
ஷ பவளத்தின் பெயர்:—வித்துருமம், அரத்தம். (௨) ஆக (௬)

முத்தின் பெயர்.

116. நித்தில மாரந் தாளமு முத்தே.
முத்தின் பெயர்:—நித்திலம், ஆரம், தாளம். (௩)

கடவுள் மணியின் பெயர்.

117. நிதியு நிதானமும் கடவுண் மணிப்பெயர்.
கடவுள் மணியின் பெயர்:—நிதி, நிதானம். (௨)

மணிப் பொதுப்பெயர்.

118. மனவுங் காசு மணியின் பொதுப்பெயர்.
மணிப் பொதுப்பெயர்:—மனவு, காசு. (௨)

ஐவகைத் தெய்வமணியின் பெயர்.

119. சிந்தா மணிசூ ளாமணி சிமந்தக
மணிசூ டாமணி கௌத்துவ மணியென்
றிணையவை தெய்வ மணியைந் தென்ப.
ஐவகைத் தெய்வமணியின் பெயர்:—சிந்தாமணி, சூளாமணி, சிமந்தகமணி, சூடாமணி, கௌத்துவமணி. (௫)

சங்கநிதி என்பது.

120. சங்கநிதி சங்கின் வடிவின தாகும்.
சங்கநிதி என்பது:—சங்கின் வடிவினது. (க)

பதுமநிதி என்பது.

121. பதுமநிதி பதும வடிவின தாகும்.
பதுமநிதி என்பது:—தாமரை வடிவினது. (க)

சந்திரகாந்த மாவது.

122. சந்திர காந்த மணிநீர் கால்வது.
சந்திர காந்தமாவது:—சந்திர கிரணத்தால் நீர் கால்வது. (க)

சூரியசாந்த மாவது.

123. சூரிய காந்த மணிதீச் சுடர்வது.
சூரிய காந்தமாவது:—சூரிய னொளியால் தீக்கால்வது. (க)

இருப்புக்காந்தத்தின் பெயர்.

124. இருப்புக் காந்தஞ் சும்பக மென்ப.
இருப்புக் காந்தத்தின் பெயர்:—சும்பகம். (க)

பளிங்கின் பெயர்.

125. படிகம் பருக்கைகா ழுபலம் பளிங்கே.
பளிங்கின் பெயர்:—படிகம், பருக்கை, காழ், உபலம். (௪)

வளைமணியின் பெயர்.

126. மனவு மக்கும் வால்வளை மணியே.
வளைமணியின் பெயர்:—மனவு, அக்கு. [வளைமணி=அக்குமணி] (உ)

செங்கல்லின் பெயர்.

127. தாது செங்கல் காரிகமு மாகும்.
செங்கல்லின் பெயர்:—தாது, காரிகம். (உ)

சிந்தூரத்தின் பெயர்.

128. திலக மென்பது சிந்தூர மாமே.
சிந்தூரத்தின் பெயர்:—திலகம். (க)

சாதிலிங்கத்தின் பெயர்.

129. இங்குலிகஞ் சாதி லிங்கங் குலிகம்.
சாதி லிங்கத்தின் பெயர்:—இங்குலிகம், குலிகம். (உ)

அகன்மணிப் பொதுப்பெயர்.

130. ஆரதகஞ் சலாகை யகன்மணி யாகும்.
அகன்மணிப் பொதுப்பெயர்:—ஆரதகம், சலாகை. (உ)
[அகன்மணி=தேவமணிப்பொது]

நான்காவது

## உலோக வகை.

பொன்னின் பெயர்.

131. ஆடகம் வேங்கை யரிசெந் தாது
காணந் தேசிகங் காஞ்சனங் கர்ப் பூரம்

காரந் தொடுக்கங் கனகஞ்சா மீகர
மீழஞ் சுவண மிரணிய மேமம்
மாசை செங்கொ லாக்கங் கோவம்
பீதக மாழை யீகை சாக்குப்
பந்தந் தமனிய மத்தம் பூரி
சந்திரம் வித்த நிதியே வெறுக்கை
யிந்த வகைப்பெய ரெல்லாம் பொன்னே.

பொன்னின் பெயர்:—ஆடகம், வேங்கை, அரி, செந்தாது, காணம், தேசிகம், காஞ்சனம், கர்ப்பூரம், காரம், தொடுக்கம், கனகம், சாமீகரம், ஈழம், சுவணம், இரணியம், ஏமம், ஆசை, செங்கொல், ஆக்கம், கோவம், பீதகம், மாழை, ஈகை, சாக்கு, பந்தம், தமனியம், அத்தம், பூரி, சந்திரம், வித்தம், நிதி, வெறுக்கை. (௩௨)

இதுவுமது.

132. அனந்தமும் வசுவு மருத்தமும் பொருளுந்
தனமும் பண்டமுந் திரவியமு மதற்கே.

ஷை பொன்னின் பெயர்:—அனந்தம், வசு, அருத்தம், பொருள், தனம், பண்டம், திரவியம். (௭) ஆ (௩௯)

வெள்ளியின் பெயர்.

133. தார மிரசிதங் களதௌதம் வெள்ளி.

வெள்ளியின் பெயர்:—தாரம், இரசிதம், களதௌதம். (௩)

செம்பின் பெயர்.

134. தாமிர மெருவை வடுவே சுற்பம்
உதும்பரஞ் சீருள் சீருணஞ் செம்பே.

செம்பின் பெயர்:—தாமிரம், எருவை, வடு, சுற்பம், உதும்பரம், சீருள், சீருணம். (௭)

வெள்ளீயத்தின் பெயர்.

135. சீருளும் வங்கமும் வெள்ளீய மாகும்.

வெள்ளீயத்தின் பெயர்:—சீருள், வங்கம். (௨)

காரீயத்தின் பெயர்.

136. நாகங் காரீயம்.

காரீயத்தின் பெயர்:—நாகம். (௧)

தராவின் பெயர்.

137. மதுகந் தராவாம்.

தராவின் பெயர்:—மதுகம். (௧)

துத்தநாகத்தின் பெயர்.

138. நாகந் துத்தநாகம்.
துத்தநாகத்தின் பெயர்:—நாகம். (க)

பித்தளையின் பெயர்.

139. இரதிமாயா புரியார கூடம் பித்தளை.
பித்தளையின் பெயர்:—இரதி, மாயாபுரி, ஆரகூடம். (௩.)

வெண்கலத்தின் பெயர்.

140. கஞ்ச முறைவெண் கலமா கும்மே.
வெண்கலத்தின் பெயர்:—கஞ்சம், உறை. (உ)

இரும்பின் பெயர்.

141. கருங்கொ லகியங் கருந்தா தயிலு
மிரும்பின் பெயரே யயமு மென்ப.
இரும்பின் பெயர்:—கருங்கொல், அகி, கருந்தாது, அயில், அயம். (ரு)

உலோகக்கட்டியின் பெயர்.

142. மாழை சுவணம் வங்காரந் தகணை
யாடக முலோகக் கட்டி யாகும்.
உலோகக் கட்டியின் பெயர்:—மாழை, சுவணம், வங்காரம், தகணை, ஆடகம். (ரு)

பஞ்ச லோகங்களாவன.

143 தமனிய மிரும்பு தாமிர மீய
மிரசிதம் பஞ்ச லோக மென்ப.
பஞ்சலோகங்களாவன:—தமனியம், இரும்பு, தாமிரம், ஈயம், இரசிதம். (ரு)

நவ லோகங்களாவன.

144. இரதி மதுக நாகங் கஞ்சமென்
றுரைசெய் நாலுட னவலோ கம்மே.
நவலோகங்களாவன:—இரதி, மதுகம், நாகம், கஞ்சம் ஆக 4ம், பஞ்சலோகம் 5-ம் (௬)

பண்டாரத்தின் பெயர்.

145. கோசந் தண்டம் பண்டார மாகும்.
பண்டாரத்தின் பெயர்:—கோசம், தண்டம்.

பொற்கலனிருக்கையின் பெயர்.

146. பொற்கல னிருக்கை பொற்பண் டாரம்.

பொற்கல னிருக்கையின் பெயர்:—பொற்பண்டாரம். (க)

உண்கலத்தின் பெயர்.

147. தாலந் தட்டந் தளிகைபா சனமுண் கலம்.

உண்கலத்தின பெயர்:—தாலம், தட்டம், தளிகை, பாசனம் (ச)

வட்டிலின் பெயர்.

148. காகமுங் கோரமும் வள்ளமுஞ் சகடமுஞ்
சிகரமுஞ் சாகையும் வட்டிற் பெயரே.

வட்டிலின் பெயர் : —காகம், கோரம், வள்ளம், சகடம், சிகரம், சாகை. (சு)

சிறுவட்டிலின் பெயர்.

149. கிண்ணமும் வள்ளமுஞ் சிறுவட் டிற்பெயர்.

சிறு வட்டிலின் பெயர்:—கிண்ணம், வள்ளம். (உ)

இதுவுமது.

150. கிராண மென்பதுஞ் சிறுவட் டிற்பெயர்.

ஷை சிறுவட்டிலின் பெயர்:—கிராணம். (க) ஆ (ங.)

நாழிகைவட்டிலின் பெயர்.

151. கன்னலுங் கிண்ணமு நாழிகை வட்டில்.

நாழிகை வட்டிலின் பெயர்:—கன்னல், கிண்ணம். (உ)

கண்ணாடியின் பெயர்.

152. புளக மத்த மாடி படி மக்கல
மொளிவட்டங் கஞ்சனை தருப்பணங் கண்ணாடி.

கண்ணாடியின் பெயர்:—புளகம், அத்தம், ஆடி, படிமக்கலம், ஒளி வட்டம், கஞ்சனை, தருப்பணம். (எ)

இதுவுமது.

153. ஆதரிசன முருவங் காட்டி கஞ் சனமுமாகும்.

ஷை கண்ணாடியின் பெயர்:—ஆதரிசனம், உருவங்காட்டி, கஞ்சனம். (ங) ஆ (௧௦)

படிக்கத்தின் பெயர்.

154. படியகம் படிக்கம்.
படிக்கத்தின் பெயர்:—படியகம். (க)

கலசப்பானையின் பெயர்.

155. கஞ்சனை கலசப் பானை யாகும்.
கலசப் பானையின் பெயர்:—கஞ்சனை. (க)

துடுப்பின் பெயர்.

156. கசிதந் துடுப்பு.
துடுப்பின் பெயர்:—கசிதம். (க)

நெய்த்துடுப்பின் பெயர்.

157. சருநை நெய்த்துடுப்பே.
நெய்த் துடுப்பின் பெயர்:—சருநை. (க)

சட்டுவத்தின் பெயர்.

158. தவ்வி சிலகந் தருவி சட்டுவம்.
சட்டுவத்தின் பெயர்:—தவ்வி, சிலகம், தருவி. (ங)

கைம்மணியின் பெயர்.

159. படலிகை வட்டம் பகிற் கைம்மணி.
கைம்மணியின் பெயர்:—படலிகை, வட்டம். (உ)

பெருமணியின் பெயர்.

160. பெருமணி கண்டாமணி யானைமணி யென்ப.
பெருமணியின் பெயர்:—கண்டாமணி, யானைமணி. (உ)

எறிமணியின் பெயர்.

161. எறிமணி சேகண்டி.
எறிமணியின் பெயர்:—சேகண்டி. (க)

தூபமணியின் பெயர்.

162. தூபமணி கைம்மணி.
தூபமணியின் பெயர்:—கைம்மணி. (க)

தாளத்தின் பெயர்.

163. கிட்டி சீர் பாண்டில் கஞ்சங்கைத் தாளம்.
தாளத்தின் பெயர்:—கிட்டி, சீர், பாண்டில், கஞ்சம். (ச)

கிண்கிணி மாலையின் பெயர்.

164. குரலே தாரிவை கிண்கிணி மாலை.
கிண்கிணிமாலையின் பெயர்:—குரல், தார். (உ)

காளத்தின் பெயர்.

165. காகளங் காளம்.
காளத்தின் பெயர்:—காகளம். (க)

சிறு சின்னத்தின் பெயர்.

166. பீலி சிறுசின்னம்.
சிறு சின்னத்தின் பெயர்:—பீலி. (க)

கொம்பின் பெயர்.

167. கோடு மிரலையும் வயிருங் கொம்பே.
கொம்பின் பெயர்:—கோடு, இரலை, வயிர். (ங)

இதுவுமது.

168. ஆம்பலு மாமென் றறையப் படுமே.
ஷை கொம்பின் பெயர்:—ஆம்பல். (க) ஆகூ (சு)

பாணியின் பெயர்.

169. கோயே பாணி.
பாணியின் பெயர்:—கோய். (க)

கமண்டலத்தின் பெயர்.

170. குண்டிகை காண்டகங் காகங் கமண்டலம்.
கமண்டலத்தின் பெயர்:—குண்டிகை, காண்டகம், கரகம். (ங)

கெண்டியின் பெயர்.

171. கடிப்பங் கோடிகங் கெண்டி யாகும்.
கெண்டியின் பெயர்:—கடிப்பம், கோடிகம். (உ)

ஐந்தாவது

## ஆடை வகை.

கூறையின் பெயர்.

172. ஆடை கோடி குடி வட்டங்
காடகம் புட்டங் கலிங்கங் காழகம்

படந்தூசு புடைவை துகில்பரி வட்ட
மாவரணந் தானை யுடையா சார
மம்பர நீவி யறுவை யுடுக்கை
சம்படம் பட்டி சாடி சேலை
மடியே சீரை வட்டுடை கோசிகங்
கலையே வாசனங் கூறையெனக் கருதுவர்.

கூறையின் பெயர்:—ஆடை, கோடி, சூடி, வட்டம், காடகம், புட்டம், கலிங்கம், காழகம், படம், தூசு, புடைவை, துகில், பரிவட்டம், ஆவரணம், தானை, உடை, ஆசாரம், அம்பரம், நீவி, அறுவை, உடுக்கை, சம்படம், பட்டி, சாடி, சேலை, மடி, சீரை, வட்டுடை, கோசிகம், கலை, வாசனம். (௩௧)

சிறுதுகிலின் பெயர்.

173 கந்தை விரிபங் கண்டை பிடியல்
வேதகம் புங்கம் பங்கங் கத்தியந்
தூரியஞ் சிற்றிலிவை சிறுதுகிற் பெயரே.

சிறு துகிலின் பெயர்:—சந்தை, விரிபம், கண்டை, பிடியல், வேதகம், புங்கம், பங்கம், கத்தியம், தூரியம், சிற்றில். (௧௦)

நல்லாடையின் பெயர்.

174. நாகம் பாரிநல் லாடைப் பெயரே.

நல்லாடையின் பெயர்:—நாகம், பாரி. (௨)

பட்டுவருக்கத்தின் பெயர்.

175. பாளிதங் கோசிகம் பட்டு வருக்கம்.

பட்டு வருக்கத்தின் பெயர்:—பாளிதம், கோசிகம். (௨)

இதுவுமது.

176. காம்பு நேத்திரமுங் கருதுவ ரதற்கே.

ஷை பட்டு வருக்கத்தின் பெயர்:—காம்பு, நேத்திரம். (௨) ஆக (௪)

பணித்தூசின் பெயர்.

177. பாளிபணித் தூசு தேவாங் கென்ப.

பணித்தூசின் பெயர்:—பாளி, தேவாங்கு. (௨)

மயிர்ப்படாத்தின் பெயர்.

178. மயிரகம் வயிரிய மயிர்ப்படா மாமே.

மயிர்ப்படாத்தின் பெயர் :—மயிரகம், வயிரியம்.

அத்தவாளத்தின் பெயர்.

179. வடக முல்லாச மத்த வாளம்.
அத்தவாளத்தின் பெயர்:—வடகம், உல்லாசம். (உ)

சித்திரப்படாத்தின் பெயர்.

180. புத்தகஞ் சித்திரப் படாம தாகும்.
சித்திரப்படாத்தின் பெயர்:—புத்தகம். (க)

உத்தரீயத்தின் பெயர்.

181. உத்தரா சங்கமே காசமுத் தரீயம்.
உத்தரீயத்தின் பெயர்:—உத்தராசங்கம், ஏகாசம். (உ)

கோய்சகத்தின் பெயர்.

182. நீவி கொய்சகம்.
கொய்சகத்தின் பெயர்:—நீவி. (க)

போர்வையின் பெயர்.

183. மீக்கோள் போர்வை.
போர்வையின் பெயர்:—மீக்கோள். (க)

உடுத்தல், இறுக்கலின் பெயர்.

184. சுற்ற லுடுத்த லிறுக்க றற்றல்.
உடுத்தலின் பெயர்:—சுற்றல். (க)
இறுக்கலின் பெயர்:—தற்றல். (க)

முன்றானையின் பெயர்.

185. முன்றானை தோகை.
முன்றானையின் பெயர்:—தோகை. (க)

முகபடாத்தின் பெயர்.

186. முகபடாஞ் சூழி.
முகபடாத்தின் பெயர்:—சூழி. (க)

கம்பளிப்படாத்தின் பெயர்.

187. கம்பலங் கம்பளங் கம்பளிப் படாமே.
கம்பளிப்படாத்தின் பெயர்:—கம்பலம், கம்பளம். (உ)

செம்படாத்தின் பெயர்.

188. சிம்புளி செம்படாம்.

செம்படாத்தின் பெயர்:—சிம்புளி. (க)

மூலேக்கச்சின் பெயர்.

189. வம்புவார் விசிகைபட் டிகைமூலேக் கச்சேனல்.

மூலேக்கச்சின் பெயர்:—வம்பு, வார், விசிகை, பட்டிகை. (௪)

கச்சின் தலைப்பின் பெயர்.

190. கஞ்சகஞ் சார்வா ரங்கச்சின் றலேயே.

கச்சின் தலைப்பின் பெயர்:—கஞ்சகம், சார்வாரம். (௨)

மேற்கட்டியின் பெயர்.

191. விதானங் கம்பலம் படங்குவாணி மேற்கட்டி.

மேற்கட்டியின் பெயர்:—விதானம், கம்பலம், படங்கு, வாணி. (௪)

சட்டையின் பெயர்.

192. கஞ்சுகங் குப்பாய மெய்ப்பை காஞ்சுகி
யங்கி வாரணஞ் சட்டை யாகும்.

சட்டையின் பெயர் : — கஞ்சுகம், குப்பாயம், மெய்ப்பை, காஞ்சுகி, அங்கி, வாரணம். (௬)

இடுதிரையின் பெயர்.

193. அவிடி கஞ்சிகை யவனிகை காண்ட
மெழினி கண்டம் பாரகங் கழனி
படமிடு திரைமெய்ப் படாமு மாகும்.

இடுதிரையின் பெயர்:—அவிடி, கஞ்சிகை, அவனிகை, காண்டம், எழினி, கண்டம், பாரகம், கழனி, படம், படாம். (௧௦)

மெத்தையின் பெயர்.

194. தவிசு மணேயுந் தளிமமு மெத்தை.

மெத்தையின் பெயர்:—தவிசு, அணே, தளிமம். (௩)

இதுவுமது

195. காகுளி யென்பதுங் கருதப் பெறுமே.

டிெ மெத்தையின் பெயர்:—காகுளி. (௧) ஆ_ (௪)

தலையணையின் பெயர்.

196. உபதான மென்பது தலேயணே யாகும்.

தலையணையின் பெயர்:—உபதானம். (

பெருங் கொடியின் பெயர்.

197. படமே வானி பதாகை கேதனந்
துவசஞ் சத்தி தோகை துகிலே
படங்குவி லோதனம் படாகைபெருங் கோடியே.
பெருங்கொடியின் பெயர்:—படம், வானி, பதாகை, கேதனம், துவசம், சத்தி, தோகை, துகில், படங்கு, விலோதனம், படாகை. (கக)

இதுவுமது.

198. கிளத்தப் பெறுமே கேதுவு மிதன்பெயர்.
ஷை பெருங்கொடியின் பெயர்:—கேது. (க) ஆ (கஉ)

வீதியிற் கட்டிய கொடியின் பெயர்.

199. விடங்கம் வீதியிற் கட்டிய கொடியே.
வீதியிற் கட்டிய கொடியின் பெயர்:—விடங்கம். (க)

தேரிற் கட்டுங் கொடியின் பெயர்.

200. தேரிடைத் திகழ்கொடி கூவிர மாகும்.
தேரிற் கட்டுங் கொடியின் பெயர்:—கூவிரம். (க)

சிறு கொடியின் பெயர்.

201. கத்திகை சிறுகொடி கட்டுரை யாகும்.
சிறு கொடியின் பெயர்:—கத்திகை. (க)

மரவுரியின் பெயர்.

202. வற்கலை யிறைஞ்சி சீரை மரவுரி.
மரவுரியின் பெயர்:—வற்கலை, இறைஞ்சி, சீரை. (௩)

சும்மாட்டின் பெயர்.

203. சுடுவு சுமடு சுமையடை சும்மாடு.
சும்மாட்டின் பெயர்:—சுடுவு, சுமடு, சுமையடை. (௩)

துணியின் பெயர்.

204. சிதரே சிதலை சீரை துணியே.
ணியின் பெயர்:—சிதர், சிதலை, சீரை. (௩)

பரிவட்டத்தின் பெயர்.

205. வத்திர மாசாரம் வாசம்பரி வட்டம்.
வட்டத்தின் பெயர்:—வத்திரம், ஆசாரம், வாசம். (௩)

ஆருவது

## பூச்சு வகை.

சாந்தின் பொதுப்பெயர்.

206. கலவைச் சேறுங் காலேக வண்ணமுங்
களபமும் விரையுங் கலவையுஞ் சாந்தே.

சாந்தின் பொதுப் பெயர்:—கலவைச்சேறு, காலேகவண்ணம், களபம், விரை, கலவை. (ரு)

நால்வகைச் சாந்தின் பெயர்.

207. பீதங் கலவை வட்டிகை புலியென
நால்வகைச் சாந்தி னுமை மாகும்.

நால்வகைச் சாந்தின் பெயர்:—பீதம், கலவை, வட்டிகை, புலி. (ச)

கருப்பூரத்தின் பெயர்.

208. பாளிதங் கருப்பூரம்.

கருப்பூரத்தின் பெயர்:—பாளிதம். (க)

கத்தூரியின் பெயர்.

209. மான்மதங் கத்தூரி.

கத்தூரியின் பெயர்:—மான்மதம். (க)

புழுகின் பெயர்.

210. வாசநெய் புழுகே.

புழுகின் பெயர்:—வாசநெய். (க)

பூசுவனவற்றின் பெயர்.

211. அங்க ராகம் பூசுவன வாகும்.

பூசுவனவற்றின் பெயர்:—அங்கராகம். (க)

மயிர்ச்சாந்தின் பெயர்.

212. ஏலந் தகரங் காசறைமயிர்ச் சாந்தே.

மயிர்ச்சாந்தின் பெயர்:—ஏலம், தகரம், காசறை. (௩)

செஞ்சாந்தின் பெயர்.

213. செஞ்சாந் தென்பது செங்குங் குமமே.

செஞ்சாந்தின் பெயர்:—செங்குங்குமம். (க)

இதுவுமது.

**214.** தளமென் றுரைப்பது மதற்கே சாற்றும்.
ஷெ செஞ்சாந்தின் பெயர்:—தளம். (க) ஆ (உ)

வெண்சாந்தின் பெயர்.

**215.** தளமென் றுரைப்பது வெண்சாந்து மாகும்.
வெண்சாந்தின் பெயர்:—தளம். (க)

சந்தனத்தின் பெயர்.

**216.** சந்து சாந்தம் சந்தஞ் சந்தனம்.
சந்தனத்தின் பெயர்:—சந்து, சாந்து, சந்தம். (ங)

கலவையின் பெயர்.

**217.** கலவை களபப் பெயர தாகும்.
கலவையின் பெயர்:—களபம். (க)

பனிநீரின் பெயர்.

**218.** கந்தசா ரமிம சலம்பனி நீரே.
பனிநீரின் பெயர்:—கந்தசாரம், இமசலம். (உ)

செறிகுழம்பின் பெயர்.

**219.** தேய்வையுஞ் செச்சையுஞ் செறிகுழம் பாகும்.
செறிகுழம்பின் பெயர்:—தேய்வை, செச்சை. (உ)

அப்புதலின் பெயர்.

**220.** கொட்ட லப்புதல்.
அப்புதலின் பெயர்:—கொட்டல். (க)

பூசுதலின் பெயர்.

**221.** புலர்த்தல் பூசுதல்.
பூசுதலின் பெயர்:—புலர்த்தல். (க)

மகளி ராகத்தெழுது கோலத்தின் பெயர்.

**222.** மகளிர் கோலால் வனமுலை யாகத்
தெழில்பெற வரிப்பது தொய்யி லாகும்.
ளிர் உடலில் எழுது கோலத்தின் பெயர்:—தொய்யில். (க)

நுதற்குறியின் பெயர்.

223. புண்டரந் திலக நுதற்புனை குறியே.
நுதற்குறியின் பெயர்:—புண்டரம், திலகம். (உ)

அச்சுதம் என்பது.

224. அச்சுத மறுகரிசி கூட்டிய தாகும்.
அச்சுதமென்பது:—அறுகும், வெள்ளரிசியுங் கூட்டியணிவது. (க)
[அச்சுதத்தை அக்கதமென்றும் வழங்குவர்.]

ஏழாவது

## சூட்டு வகை.

மாலையின் பெயர்.

225. சுக்கை தொடைய லொங்கல் கத்திகை
யலங்கல் கண்ணி தெரிய றாரே
யணியல் தாம மொலியல் சூட்டு
கோதை மஞ்சரி மாலையின் கூற்றே.
மாலையின் பெயர்:—சுக்கை, தொடையல், தொங்கல், கத்திகை, அலங்கல், கண்ணி, தெரியல், தார், அணியல், தாமம், ஒலியல், சூட்டு, கோதை, மஞ்சரி. (கச)

நுதலணி மாலையின் பெயர்.

226. சூட்டே யிலம்பக நுதலணி மாலை.
நுதலணி மாலையின் பெயர்:—சூட்டு, இலம்பகம். (உ)

கோத்த மலரின் பெயர்.

227. கோத்த மலரே மத்தக மாலை.
கோத்த மலரின் பெயர்:—மத்தகமாலை. (க)

பின்னிய மாலையின் பெயர்.

228. பிணைய லென்பது பின்னிய மாலை.
பின்னிய மாலையின் பெயர்:—பிணையல். (க)

கோத்த மாலையின் பெயர்.

229. சிகழிகை படலை வாசிகை தொடையல்.
கோத்த மாலையின் பெயர்:—சிகழிகை, படலை, வாசிகை, தொடையல். (

வாகை மாலையாவது.

230. கல்வியிற் கேள்வியிற் கொடையிற் படையில்
வெல்லுந ரணிவது வாகை யாகும்.

வாகை மாலையாவது:—கல்வியிலும், கேள்வியிலும், கொடையிலும், படையிலும் வென்றவ ரணிவது. (௭)

எட்டாவது

## இயல் வகை.

முவகைத் தமிழின் பெயர்.

231. இயற்றமி ழிசைத்தமிழ் நாடகத் தமிழென
வகைப்படச் சாற்றினர் மதியுணர்ந் தோரே.

மூவகைத் தமிழின் பெயர்:—இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ். (௧)

எண்வகைக் கணத்தின் பெயர்.

232. அறம்பொரு ளின்பம் வீடென் றிவற்றின்
றிறம்படச் செய்யுள் செப்புங் காலை
நீரின் கணமு நிலத்தின் கணமுந்
தேயுவின் கணமும் வாயுவின் கணமு
மந்தர கணமு மியமான கணமுஞ்
சந்திர கணமுஞ் சூரிய கணமுமென்
றெண்வகைக் கணமு மியம்பல் வேண்டும்.

எண்வகைக் கணத்தின் பெயர்:—அறம், பொருள், இன்பம், வீடு என்று சொல்லப்பட்ட இவற்றினது பாகுபாடமைய ஒரு நூலைச் சொல்லுங்காலத்து, நீர், நிலம், தேயு, வாயு, அந்தரம், இயமானன், சந்திரன், சூரியன் என்று சொல்லப்பட்ட எட்டு வகைக் கணங்களும் முதற்செய்யுளின் முதலி லமையைக் கூற வேண்டும். (௨)

அவற்றுள், நீரின் கணவகை.

233 நேர் முதலாகி நிரையிணை பின்வரி
னீரின் கணமெனச் சீர்பெயர் பெறுமே.

அவற்றுள் நீரின் கணவகை:—நேர் நிரை நிரை.

நிலத்தின் கணவகை.

234. நிரைமூன் றுறுசீர் நிலக்கண மாகும்.

நிலத்தின் கணவகை:—நிரை நிரை நிரை.

### தேயுவின் கணவகை.

235. நேர் நடுவாகி நிரையிரு பால்வரிற்
றேயுவின் கணமெனச் செப்புவர் புலவர்.

*தேயுவின் கணவகை:—நிரை நேர் நிரை. [தேயு=அக்கினி]*

### மாருத கணவகை.

236. இறுதி நிரையா யிணைநேர் முன்னர்
வருவது மாருத கணமென வைப்பார்.

*மாருத கணவகை:—நேர் நேர் நிரை. [மாருதம்=காற்று]*

### அந்தர கணவகை.

237. முந்து நிரையிணை வந்துநேர் பின்வரி
னந்தர கணமென் றறையல் வேண்டும்.

*அந்தர கணவகை:—நிரை நிரை நேர். [அந்தரம்=ஆகாயம்]*

### இயமானன் கணவகை.

238. நேர்மூன் றாகிற் சீரிய மானன்.

*இயமானன் கணவகை:—நேர் நேர் நேர். [இயமானன்=உயிர்]*

### மதியின் கணவகை.

239. முதனிரை யாகி யிணைநேர் பின்வரின்
மதியின் கணமென வகுத்தனர் புலவர்.

*மதியின் கணவகை:—நிரை நேர் நேர். [மதி=சந்திரன்]*

### எரிகதிர்க் கணவகை.

240. *நிரைநடு வாகி நேரிரு பால்வரி
னெரிகதிர்க் கணமென் றியம்பினர் புலவர்.

*எரிகதிர்க் கணவகை:—நேர் நிரை நேர். [எரிகதிர்=சூரியன்]*

### அவ்வெட்டினுள், நற்கணவகை.

241 நிலனு நீரு மதியுமிய மானனு
நலமிக முன்வரி னற்கண மாகும்.

*அவ்வெட்டினுள், நற்கணவகை:—நிலன், நீர், மதி, இயமானன் இந்நான்கும் முன் வருவது நற்கணம்.*

### தீக் கணவகை.

242. ஏனைய நான்கு மூனம தாகும்.

*தீக்கணவகை:—மற்றைத் தேயு, வாயு, அந்தரம், சூரியன் இந்நான்கும் முன் வருவது தீக்கணம்.*

### நற்கண, தீக்கண வரலாற்று வகை.

வெண்பா.

243. காய்ச்சீரின் முன்னிரண்டுங் கைகொள் கனிச்சீரின்
வாய்த்தசீர் பின்னிரண்டும் வாங்கிக்கொள்-வாய்த்த
கனிச்சீரின் முன்னிரண்டுங் காய்ச்சீரின் பின்னும்
நுனித்தகண மெட்டினுக்கு நூல்.

நற்கண வரலாற்று வகை:—தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்கனி, கூவிளங்கனி. (௪)

தீக்கண வரலாற்று வகை:—தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்காய், கூவிளங்காய். (௪)

### எழுத்துப் பொருத்தவகை.

244. சொல்லிய வகையா லெழுத்துப் பொருத்தம்
வல்லெழுத் தல்லது மெல்லெழுத் தாகா
யாவகைச் செய்யுட் கின்பமொடு புணர்ந்த
மூவகைச் சீரே முதற்சீ ராகும்.

எழுத்துப் பொருத்த வகை:—நற்கண வகையில் வரு மூவகைச்சீர் நான்கும் வல்லெழுத்தே யன்றி மெல்லெழுத்து முதற்சீராக வரத் தொடுக்கக்கூடா. எவ்வகைப்பட்ட செய்யுளுக்கும் நற்கண வகையால் வரு மூவகைச்சீரே முதற்சீராய்ப் பாடவேண்டும்.

### தானப் பொருத்தவகை.

வெண்பா.

245. தன்னெழுத்துப் பாலன் குமா னிரண்டாகு
மன்னவற்கு மூன்றும் வருக்குங்காற்—றுன்னிய
நஞ்சார் விருத்தமா நான்காகி யைந்தாகி
லெஞ்சா மரணத் தியல்பு.

தானப்பொருத்த வகை:—குற்றெழுத் தைந்துர், அவற்றிற் கினமாகிய நெட்டெழுத்துக்களேழும் பாட்டுடைத்தலைவனியற்பெயர் முதலெழுத் தெந்த எழுத்தோ அந்த எழுத்தே பாலதானமாகக் கொண்டு, மற்ற எழுத்துக்களைக் குமாரன், ராசன், மூப்பு, மரணமாக எண்ணுதலால் தன்னெழுத்தைப் பாலனாகவும், இரண்டாம் எழுத்தைக் குமாரனாகவும், மூன்றும் எழுத்தை ராசனாகவும், நான்காம் எழுத்தை மூப்பாகவும், ஐந்தாம் எழுத்தை மரணமாகவும் காப்பியத்தின் முதற்செய்யுளின் முதற்சீரிற் கொள்க.

### நற்றானந் தீத்தான மாவன.

246. தலைவ னெழுத்தே முதலாய்ச் சாற்றி
னலமிகு மூன்றுமற் றிரண்டு மூனம்.

நற்றானம், தீத்தானமாவன:—தானப்பொருத்தம் நன்று, தீது என்றிருவகைப்படுதலால், தலைவனியற்பெயரின் முதலெழுத்து முதல் மூன்றும் நற்றானமாகவும், ஏனை இரண்டுந் தீத்தானமாகவுங் கொள்க.

## நாட்பொருத்த வகை.

வெண்பா.

247. தன்னாட்குப் பின்னாளு நன்றாகுஞ் சம்பந்த
நன்னான்கு மாறு நலம்பெருகும்—பொன்னனையா
யெட்டினோ டொன்பானு மித்தனையு மென்பரே
யொட்டாரை யொட்டுவிக்கு நாள்.

நாட்பொருத்தவகை:—உயிரும், உயிர்மெய்யும் இருபத்தேழு நட்சத்திரங்களாக வகுக்கப்பட்டிருத்தலால், தலைவனியற்பெயரின் முதலெழுத்துக் கமைந்த முதற்பாவின் முதற்சீரிலுள்ள எழுத்தை விதித்த அந்நட்சத்திரமாகக் கொண்டு, பின்வரும் எழுத்திற் கமைந்த நட்சத்திரம் நன்மையாம்; அந்த முதலெழுத்திற்கும், நான்கா மெழுத்திற்கும், ஆறாம் எழுத்திற்கும், எட்டாம் எழுத்திற்கும், ஒன்பதாம் எழுத்திற்கும் உரிய நட்சத்திரங்களும் பகைவரை நட்பினராக்கும் நட்சத்திரங்கள் என்பர்.

## இதுவுமது.

வெண்பா.

248. நீர்க்கணத்து நாள்சதய நீடியமா னன்கணநாள்
பார்க்கிற் பரணிபடிக் கணத்துக்—கேற்குநாள்
கேட்டை மதியின் கணநாண் மகமிங்குக்
கூட்டிய நாளென்றே கூறு.

முன்னர்க் கூறிய கணங்களெட்டினுள் நீர்க் கணத்திற்குரிய நேர் நிரை நிரை என்னுஞ் சீர்க்குச் சதய நட்சத்திரம்; இயமானன் கணத்திற்குரிய நேர் நேர் நேர் என்னுஞ் சீர்க்குப் பரணி நட்சத்திரம்; நிலக் கணத்திற் குரிய நிரை நிரை நிரை என்னுஞ் சீர்க்குக் கேட்டை நட்சத்திரம்; சந்திர கணத்திற்குரிய நிரை நேர் நேர் என்னுஞ் சீர்க்கு மக நட்சத்திரம் எனவும் இங்கு அமைத்த நாளாகச் சொல்.

## இதுவுமது.

வெண்பா.

249. காற்றின் கணநாள் கடுஞ்சோதி கார்த்திகையா
மேற்ற வெரிக்கணத்துக் கெண்ணுங்காற்—றோற்றிரவி
பொங்கு கணநாள் புநர்பூச மாகாயந்
தங்குகண நாளோணந் தான்.

வாயு கணத்திற்குரிய நேர் நேர் நிரை என்னுஞ் சீர் சுவாதி நட்சத்திரம் எனவும், தேயுகணத்திற்குரிய நிரை நேர் நிரை என்னுஞ் சீர் கார்த்திகை நட்சத்திரம் எனவும், சூரியகணத்திற்குரிய நேர் நிரை நேர் என்னுஞ் சீர் புநர்பூச நட்சத்திரம் எனவும், ஆகாய கணத்திற்குரிய நிரை நிரை நேர் என்னுஞ் சீர் திருவோண நட்சத்திரம் எனவுங் கூறுவர்.

## நற்கணத்தின் பயன்.

250. நிலமதி நீரிய மானனெனு நான்கும்
பெருக்கஞ் செய்தலில் வாழ்நாள் பயத்தலிற்
றருக்கிய சீர்த்தி தன்னைத் தருதலின்
மிகுதிரு வாக்கலின் வேந்தர்க்கும் பிறர்க்குந்
தகுமெனக் கழறினுந் தகாமற் றற்சீர்க்
குரியவா நாளொடும் பொருந்தாக் காலே.

நற்கணத்தின் பயன்:—நிலக்கணம் பெருக்கஞ் செய்தலாலும், சந்திர கணம் வாழ்நாள் தருதலாலும், நீர்க்கணம் கீர்த்தியைத் தருதலாலும், இயமானன் கணம் செல்வத்தைத் தருதலாலும் அரசர்க்கும் பிறர்க்கும் இவை தக்கனவென்று நூல் கூறினாலும், தலைவனியற்பெயரின் முதலெழுத்திற்கு இயைந்த சீர்க்குரிய நட்சத்திரத்தோடு ஜன்ம நட்சத்திரம் ஆயினும், நாம நட்சத்திரம் ஆயினும் பொருந்தாத விடத்துக் கொள்ளத் தகா.

## தீக்கணத்தின் பயன்.

251. அந்தர வாயு வளவிலா தித்தன்
செந்தழ லென்னுந் தீக்கணஞ் சேரின்
தேசம் போக்குதல் செல்வத்தைப் பிரித்தல்
சூனிய மாக்கல் சூழ்நோ யுறுத்தல்
ஊனம் பயக்குமென் றுரைத்தன ராய்ந்து
தெள்ளிதி னுணர்ந்த செந்தமிழ்க் கவிஞர்.

தீக்கணத்தின் பயன்:—அந்தர கணம் வேறு தேசத்திற் செலுத்தலும், வாயுகணம் செல்வத்தைப் போக்கலும், சூரியகணம் சூனியஞ் செய்தலும், தீக்கணம் நோய் செய்தலுமாகிய குற்றத்தைத் தருமென்று நூலினை யாராய்ந்து தெளிவாக வுணர்ந்த புலவர்கள் கூறுவார்கள்.

## உண்டிப் பொருத்தவகை.

252. ஆதி யமுதெழுத் தாகிய வச்சீர்க்
கோதிய தெய்வத் துக்குரிய நாளொடும்
பாடப் படூஉமியல் பன்றியு மிறைவன்
பிறந்த நாளினும் பெயர்நா டன்னினும்

இரண்டி னொன்றிற் பொருந்தக் கூறிய
பாத முதலை யெடுப்பின் மற்றவற்
கேறுதிரு வாக்கு மென்மனூர் புலவர்.

உண்டிப் பொருத்தவகை:—ஔகார நீங்கிய உயிர்க் குற்றெழுத்து நான்கும், க ச த ப ந ம வ என்னும் மெய்யெழுத்து எழும் அமுதெழுத்தாகக் கூறலால், இவ்வெழுத்துகளு ளொன்றை முதலாகவுடைய முதற்சீர்க்குக் கூறியகணத்திற்குரிய நட்சத்திரத்தோடு பாடவேண்டுதல் முறையாம். இதுவுமன்றித் தலைவன் பிறந்த நாளேனும், பெயர் நாளேனு மிரண்டிலொன்று பொருந்தக் கூறிய அடியை முதலெடுத்துச் சொன்னால், அப்பாட்டுடைத் தலைவனுக்குச் செல்வம் எந்நாளும் வளரும் என்று புலவர் கூறுவர்.

புள் வகை.

வெண்பா.

253. அகரமே வல்லூறு மாந்தை யிகர
முகரமே காக்கை யெனவோது—மெகரமே
* வண்டானக் கோழி வளைவாய் மயிலென்னக்
கொண்டா ரொகரக் குறி.

புள் வகை:—அகரம்-வல்லூறு; இகரம்-ஆந்தை; உகரம்-காக்கை; எகரம்-கோழி; ஒகரம்-மயில்.

† கன்னல் வகை.

254. ஐவகை யெழுத்தி லகர ‡ முதிப்ப
இகரந் தானே யின்புறு மென்ப
உகர மரசா மெகரந் துயிலும்
ஒகரந் தானே யுயிர்ப்பின் றொடுங்கும்.

கன்னல் வகை:—அகரம் தோற்றமாக, இகரம் இன்பத்தை யுண்டாக்கும்; உகரம் அரசாகும்; எகரம்-உறங்கும்; ஒகரம்-மரணம்.

இதுவுமது.

255. அவ்வவர் பெயர்முத லெழுத்தவர் துதிப்ப
வவ்வவர்ப் பாடி னாக்க மிகுமே.

---

* வண்டானக் கோழி - வளைவிய தானமாகக் கொண்ட கோழி.

† கன்னல் நாழிகை - உதையாதி நாழிகைமுதல் நாழிகை முப்பதும் ஒவ்வொன்றிற்கு அவ்வாறு நாழிகையாகக் கொள்ளுதலாம்.

‡ உதிப்ப என்றது - ஆறு நாழிகையில் இந்த புள்ளும் தத்தந் தொழில்பெற நிற்றல்.

அவ்வப்பாட்டுடைத் தலைவன் பெயர் முதலெழுத்தே அவ்வப் பட்சி யாகக் கொண்டு உதிப்புமுதல் அரசீறாகப் பாடின், அப்பாட்டுடைத் தலைவனுக்குச் செல்வ முண்டாகும்.

பால் வகை.

**256.** எழுத்தெனப் படுபவை யாண்பெண் ணலியே.

பால்வகை:—எழுத்தென்று சொல்லப்படுவன ஆண், பெண், அலி என மூன்று வகைப்படும்.

அவற்றுள், ஆணெழுத்தாவன.

**257.** உயிர்பன் னிரண்டு மாணெனப் படுமே.

அவற்றுள், ஆண்பால் எழுத்தாவன:—அகாரமுதல் ஔகார மிறுதியாகிய உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும் ஆணெழுத்துக்களாம்.

பெண்ணெழுத்தாவன.

**258.** உயிர்மெய் யெல்லாம் பெண்ணெழுத் தென்ப.

பெண்பால் எழுத்தாவன:—உயிர் மெய்யெழுத்துக்கள் இருநூற்றுப் பதினாறும் பெண் எழுத்துக்களாம்.

அலியெழுத்தாவன.

**259.** ஒற்றெழுத் தெல்லா மலியெனப் படுமே.

அலி எழுத்தாவன:—மெய்யெழுத்துப் பதினெட்டும் அலி எழுத்தாம்.

அவ்வெழுத்துக்களுள், முதற்சீரின் முதலெழுத்து இன்னதெனல்.

**260.** எழுத்தின் கிழத்தி நாமக ளாதலிற்
பெண்ணெழுத் தல்லது முன்வைத் துரையார்.

ஆண் முதலிய பகுதிகளின் எழுத்துக் குரியவள் நாமக ளாதலால், பெண்பால் எழுத்தை முதற்சீரின் முதலெழுத்தாகக்கொண்டு கூறல்வேண்டும்.

மங்கலச் சொல்.

**261.** திருவே களிறே தேர்பரி கடலே
பொலிவே மணியே பூப்புகழ் சீரெனல்
வருத்த நீங்கிய மங்கலச் சொல்லே.

மங்கலச் சொல்வகை:—திரு, களிறு, தேர், பரி, கடல், பொலிவு, மணி, பூ, புகழ், சீர்.

வேதியர்க்குரிய பாவகைப் பெயர்.

262. பிள்ளைப் பாட்டு வாயின் முன்னம்
வெள்ளைப் பாட்டு வேதியர்க் குரித்தே.

வேதியர்க்குரிய பாவகைப் பெயர்:—பிள்ளைக்கவி பாடத் தொடங்கும் வழி, அதற்குமுன் வெண்பாக் கூறுதல் அந்தணர்க்கு உரியது.

அரசர்க்குரிய பாவகைப் பெயர்.

263. நேரிசை யகவலுங் கொச்சகக் கலியு
மாசா யுங்கா லரசர்க் குரித்தே.

அரசர்க்குரிய பாவகைப் பெயர்:—அக்கவி முன் நேரிசை யாசிரியப்பா வாயினும், கொச்சகக் கலிப்பா வாயினுங் கூறுதல் அரசர்க்கு உரித்து.

வணிகர்க்குரிய பாவகைப் பெயர்.

264. வஞ்சியும் மின்னிசை வெள்ளையும் வணிகர்க்
கெஞ்ச லில்லா வியல்புடைத் தாகும்.

வணிகர்க்குரிய பாவகைப் பெயர்:—அக்கவி முன் வஞ்சிப்பா வாயினும், இன்னிசைவெண்பா வாயினும் கூறுதல் வணிகர்க்கு உரித்து.

சூத்திரர்க்குரிய பாவகைப் பெயர்.

265. நெடுவெண் பாட்டும் நேரிசை யகவலுங்
கடியசூத் திரர்க்குக் கட்டுரைத் தனரே.

சூத்திரர்க்குரிய பாவகைப் பெயர்:—அக்கவி முன் நெடுவெண்பாட்டாயினும், நேரிசை யாசிரியப்பா வாயினும் கூறுதல் சூத்திரர்க்கு உரித்து.

காப்புக்குரிய கடவுள்.

266. காப்புமுத லிசைக்குங் கடவு டானே
பூக்கமழ் தண்டுழாய் புனைந்தவ னுமவன்
காவற் கிழமைய னாத லானும்
பூவின் கிழத்தியைப் பொருந்துத லானு
முடியுங் கடகமு மொய்பூந் தாருங்
குழையு நூலுங் குருமணிப் பூணும்
அணியுஞ் செம்ம லாத லானும்
மன்னுறு பிரமனைத் தருத லானும்
முன்னுற மொழிதற் குரிய னெனப்
பன்னி யுரைத்தனர் பாவலர் தாமே.

காப்புக்குரிய கடவுள்:—காப்பாக நான்முகத் துரைக்கப்படும் கடவுள் மலர்களாற் கமழுந் தண்ணிய துழாய்மாலை சூடிய திருமால்; அத் திருமால் காத்தற்குத் திருமகளைப் புணர்தலையுடையவ னாதலா லும், கிரீடமுங் கடகமும் நெருங்கிய மலர்மாலையும் குண்டல மும் உபவீதமும் நிறந்தங்கிய கௌத்தாபரணமு மாகிய இவற்றை யணியும் இறைவ னாதலாலும், நிலைபெற்ற பிரமனைத் தந்தமை யாலும் நான்முகத்துக் கூறுதற் குரியவனாமென்று நூல்வல் லோர் கூறுவர்.

## ஆண்பாற் பிள்ளைப்பாட்டின் வகை.

267. பிள்ளைப் பாட்டுத் தெள்ளிதிற் கிளப்பிற்
றிங்க ளிரண்டிற் றெய்வங் காக்கென
இன்றமிழ்ப் புலவ ரியம்பிய காப்பு
மைந்தாந் திங்களிற் செங்கீரை யாடலு
மாறாந் திங்களிற் கூறுதல் கற்றலோ
டேழாந் திங்களி னின்னமு தூட்டலு
மெட்டாந் திங்களி னியற்றா லாட்டலு
மொன்பதாந் திங்களி னுயர்சப் பாணியும்
பத்தினோ டொன்றின் முத்தங் கூறலு
மாண்டு வரையி னீண்டுவரு கென்றலு
மதியீ ரொன்பதின் மதியை யழைத்தலு
மிரண்டா மாண்டிற் சிறுபறை கொட்டலு
மூன்றா மாண்டிற் சிற்றில் சிதைத்தலும்
நாலா மாண்டிற் சிறுதே ருருட்டலும்
பத்திற் பூணணி பன்னீ ராண்டினிற்
கச்சொடு சுரிகை காமுறப் புனைதலென்
றின்னவை பிறவு மாகு மிவற்றுள்
முன்னர் மொழிந்த வொழிந்தவற் றோடும்
பெற்ற வாண்பாற் பிள்ளைப் பாட்டாம்
முன்னுறக் கிளந்த ஆண்டி னாள்வரை
இசைத்த பாட லிருபாற்கு முரித்தே.

ஆண்பாற்பிள்ளைப் பாட்டின் வகை:—பிள்ளைக்கவியி னிலக்கணத் தைத் தெளிவாகக் கூறில், இரண்டாமாதத்திற் காப்புக் கூறுத லும், ஐந்தாமாதத்தில் செங்கீரை கூறுதலும், ஆறாமாதத்தில் சொல்லுவதைப் பழகுதலோடு, ஏழாமாதத்தி லமு தூட்டலும், எட்டாமாதத்தில் தாலாட்டுதலும், ஒன்பதாமாதத்திற் சப்பாணி கொட்டலும், பதினோராமாதத்தில் முத்தங் கூறுதலும், பன் னிரண்டாமாதத்தில் வாரானை கூறுதலும், பதினெட்டாமாதத் தில் சந்திரனை யழைத்தலும், இரண்டாமாண்டிற் சிறுபறை

கொட்டலும், மூன்றாமாண்டில் சிற்றில் சிதைத்தலும், நாலாமாண்டில் சிறுதேருருட்டலும், பத்தாமாண்டில் பூணணிதலும், பன்னிரண்டாமாண்டில் கச்சினோடு உடைவாளை விரும்பத் தரித்தலுமென்று சொல்லப்பட்டவையும், இவை ஒழிந்த பிறவுமாம்; இவைகளுள், கூறுதல் கற்றலோடு அமுதூட்டலும், பூணணிதலும், கச்சொடு சுரிகைபுனைதலும் என்னும் இவற்றை யொழிந்த காப்புமுதல் பத்தும் ஆண்பாற் பிள்ளைக்கவியில் வருவ; இவற்றுள், ஓராண்டொறுங் கூறிய நிலங்கள் இருபாலுக்கும் உரியனவாம்.

### பெண்பாற் பிள்ளைப்பாட்டு வகை.

268. பேணும் சிறப்பிற் பெண்மக வாயின்
மூன்று மாண்டிற் குழமணை மொழிதலு
மைந்தின் முதலா வொன்பதின் காறு
மைங்கணைக் கிழவனை யார்வமொடு நோற்றலும்
பனிநீர் தோய்தலும் பாவை யாடலு
மம்மனை கழங்கு பந்தடித் தாடலுஞ்
சிறுசோ றடுதலுஞ் சிற்றி லிழைத்தலு
மூச லாடலு மென்றிவை யுள்ளிட்டுப்
பேசிய பெண்பாற் பிள்ளைப் பாட்டே.

பெண்பாற் பிள்ளைப் பாட்டுவகை:—பெண்பாற் பிள்ளைக் கவியாயின், மூன்றாம் ஆண்டில் தான் விளையாடும் பாவைக்கு மணம் பேசுதலும், ஐந்தாம் ஆண்டு முதல் ஒன்பதாம் ஆண்டுகாறும் மன்மதனையொத்த புருடனைப்பெறத் தவஞ்செய்தலும், குளிர்ந்த நீராடலும், பதுமை வைத்து விளையாடலும், அம்மனையாடலும், கழங்காடலும் (கழங்கு-கழற்காய்), பந்தடித்தலும், சிறுசோறடுதலும், சிற்றிலிழைத்தலும், ஊசலாடலும் என்று சொல்லப்பட்ட இவற்றை யுள்ளிட்டு முற்சூத்திரத்தில் ஆண்டொறுங் கூறிய நிலமேழில் ஏற்பன கூறுதல் முறையாம்.

### கவி அரங்கேற்றிய பாட்டுடைத் தலைவன் செய்யும் வழிபாடு.

269. உருவக முவமை வழிநிலை மடக்கே
விரிசுடர் விளக்கென விரவி வருதலும்
வேற்றுமை நிலையே வெளிப்படு நிலையே
நோக்கே யுட்கோ டொகைமொழி மிகைமொழி
வார்த்தை தன்மை பிறர்கோள் வைப்பெனப்
பாற்படக் கிடந்த பகுதியின் வருதலுஞ்
சிறப்புமொழி சிலேடை மறுத்து மொழிநிலையே

காப்புக்குரிய கடவுள்:—காப்பாக நான்முகத் துரைக்கப்படும் கடவுள் மலர்களாற் கமழுந் தண்ணிய துழாய்மாலை சூடிய திருமால்; அத் திருமால் காத்தற்குத் திருமகளைப் புணர்தலையுடையவ னாதலா லும், கிரீடமுங் கடகமும் நெருங்கிய மலர்மாலையும் குண்டல மும் உபவீதமும் நிறந்தங்கிய கௌத்தாபரணமு மாகிய இவற்றை யணியும் இறைவ னாதலாலும், நிலைபெற்ற பிரமனைத் தந்தமை யாலும் நான்முகத்துக் கூறுதற் குரியவனுமென்று நூல்வல் லோர் கூறுவர்.

## ஆண்பாற் பிள்ளைப்பாட்டின் வகை.

267. பிள்ளைப் பாட்டுத் தெள்ளிதிற் கிளப்பிற்
றிங்க ளிரண்டிற் றெய்வங் காக்கென
இன்றமிழ்ப் புலவ ரியம்பிய காப்பு
மைந்தாந் திங்களிற் செங்கீரை யாடலு
மாறாந் திங்களிற் கூறுதல் கற்றலோ
டேழாந் திங்களி னின்னமு தூட்டலு
மெட்டாந் திங்களி னியற்று லாட்டலு
மொன்பதாந் திங்களி னுயர்சப் பாணியும்
பத்தினோ டொன்றின் முத்தங் கூறலு
மாண்டு வரையி னீண்டுவரு கென்றலு
மதியீ ரொன்பதின் மதியை யழைத்தலு
மிரண்டா மாண்டிற் சிறுபறை கொட்டலு
மூன்று மாண்டிற் சிற்றில் சிதைத்தலும்
நாலா மாண்டிற் சிறுதே ருருட்டலும்
பத்திற் பூணணி பன்னீ ராண்டினிற்
கச்சொடு சுரிகை காமுறப் புனைதலென்
றின்னவை பிறவு மாகு மிவற்றுள்
முன்னர் மொழிந்த வொழிந்தவற் றோடும்
பெற்ற வாண்பாற் பிள்ளைப் பாட்டாம்
முன்னுறக் கிளந்த ஆண்டி னுள்வரை
இசைத்த பாட லிருபாற்கு முரித்தே.

ஆண்பாற்பிள்ளைப் பாட்டின் வகை:—பிள்ளைக்கவியி னிலக்கணத் தைத் தெளிவாகக் கூறில், இரண்டாமாதத்திற் காப்புக் கூறுத லும், ஐந்தாமாதத்தில் செங்கீரை கூறுதலும், ஆறுமாதத்தில் சொல்லுவதைப் பழகுதலோடு, ஏழாமாதத்தி லமுதூட்டலும், எட்டாமாதத்தில் தாலாட்டுதலும், ஒன்பதாமாதத்திற் சப்பாணி கொட்டலும், பதினோராமாதத்தில் முத்தங் கூறுதலும், பன் னிரண்டாமாதத்தில் வாரானை கூறுதலும், பதினெட்டாமாதத் தில் சந்திரனை யழைத்தலும், இரண்டாமாண்டிற் சிறுபறை

கொட்டலும், மூன்றுமாண்டில் சிற்றில் சிதைத்தலும், நாலா மாண்டில் சிறுதேருருட்டலும், பத்தாமாண்டில் பூணணிதலும், பன்னிரண்டா மாண்டில் கச்சினோடு உடைவாளை விரும்பத் தரித்தலுமென்று சொல்லப்பட்டவையும், இவை ஒழிந்த பிறவுமாம்; இவைகளுள், கூறுதல் கற்றலோடு அமுதூட்டலும், பூணணிதலும், கச்சொடு சுரிகைபுனைதலும் என்னும் இவற்றை யொழிந்த காப்புமுதல் பத்தும் ஆண்பாற் பிள்ளைக்கவியில் வரும்; இவற்றுள், ஓராண்டுகாறுங் கூறிய நிலங்கள் இருபாலுக்கும் உரியனவாம்.

பெண்பாற் பிள்ளைப்பாட்டு வகை.

268. பேணும் சிறப்பிற் பெண்மக வாயின்
மூன்று மாண்டிற் குழமண மொழிதலு
மைந்தின் முதலா யொன்பதின் காறு
மைங்கணைக் கிழவனை யார்வமொடு நோற்றலும்
பனிநீர் தோய்தலும் பாவை யாடலு
மம்மனை கழங்கு பந்தடித் தாடலுஞ்
சிறுசோ றடுதலுஞ் சிற்றி லிழைத்தலு
மூச லாடலு மென்றிவை யுள்ளிட்டுப்
பேசிய பெண்பாற் பிள்ளைப் பாட்டே.

பெண்பாற் பிள்ளைப் பாட்டுவகை:—பெண்பாற் பிள்ளைக் கவியாயின், மூன்றும் ஆண்டில் தான் விளையாடும் பாவைக்கு மணம் பேசுதலும், ஐந்தாம் ஆண்டு முதல் ஒன்பதாம் ஆண்டுகாறும் மன்மதனையொத்த புருடனைப்பெறத் தவஞ்செய்தலும், குளிர்ந்த நீராடலும், பதுமை வைத்து விளையாடலும், அம்மனையாடலும், கழங்காடலும் (கழங்கு-கழற்காய்), பந்தடித்தலும், சிறுசோறடுதலும், சிற்றிலிழைத்தலும், ஊசலாடலும் என்று சொல்லப்பட்ட இவற்றை யுள்ளிட்டு முற்சூத்திரத்தில் ஆண்டுகாறுங் கூறிய நிலமேழில் ஏற்பன கூறுதல் முறையாம்.

கவி அரங்கேற்றிய பாட்டுடைத் தலைவன்
செய்யும் வழிபாடு.

269. உருவக முவமை வழிநிலை மடக்கே
விரிசுடர் விளக்கென விரவி வருநவும்
வேற்றுமை நிலையே வெளிப்படு நிலையே
நோக்கே யுட்கோ டொகைமொழி மிகைமொழி
வார்த்தை தன்மை பிறர்கோள் வைப்பெனப்
பாற்படக் கிடந்த பகுதியின் வருநவுஞ்
சிறப்புமொழி சிலேடை மறுத்து மொழிநிலையே

வுடனிலைக் கூட்ட மூவமான முருவக
நுவலா நுவற்சி தலைக்கட் டியமொழி
நிதரிசனம் பாராட் டொருங்கிய னிலையே
யைய முயர்வே விரவியல் வாழ்த்தென
வெய்துமிரு பத்தெட் டலங்காரத் தானு
மெழுத்துச் சொற்பொரு ளியாப்பு நெறியானு
நவையறச் செய்யுள் செய்யும் பாவல
னவையு மரசு மறியப் பாடுவோன்
முத்தமிழ் வல்லோ னற்கவி பாடுவோ
னுத்தமச் சாதியிற் றப்பா துயர்ந்தோ
னுறுப்பிற் குறையா தொழுக்கமொடு புணர்ந்தோன்
முப்பது கழிந்தங் கெழுபதுக் குளவாம்
பெற்றியி னமைந்த பிராயம துடையோன்
பாடுங் கவிதை நாடுறக் கொள்ளிற்
றோரண நாட்டித் துகிற்கொடி யெடுத்து
வார்முர சியம்ப மறையோர் வாழ்த்த
விழுத்தகு கோலத்து விரித்தபூங் கலிங்கத்துப்
பழிப்பில் பாவிகைப் பல்லுணு முளையின்
விளக்குநிறை குடத்து விதானப் பந்தரிற்
றுளக்கமில் பல்வகைத் தூணிரைப் பொதியிற்
பல்கிளை நெருக்கிற் பாவையர் பல்லாண்டின்
மல்குவனப் பமைந்த வளமனை நாப்பண்
வெண்டுகி லுடுத்து வெண்பூச் சூடித்
தன்றவி சிருத்தித் தானய விருந்து
மங்கலச் செய்யுண் மகிழ்ந்து கேட்டுப்
பொன்னு மாடையும் பூணுங் கடகமு
மின்னவை பிறவுங் கொடுத்தே முடிநிலம்
புரவலன் பின்சென் றொழிகென நிற்றல்
பூவலர் நறுந்தார்ப் புரவலன் கடனே.

கவியரங்கேற்றிய பாட்டுடைத்தலைவன் செய்யும் வழிபாடு:—உருவகவணி, உவமையணி, வழிநிலையணி, மடங்குதனவிற்சியணி, தீவகவணி, வேற்றுமையணி, வெளிப்படையணி, கருத்துடையடையணி, குறிப்புநிலையணி, சுருங்கச்சொல்லலணி, மிகுதிநவிற்சியணி, சொற்பின்வருநிலையணி, தன்மையணி, வேற்றுமைப்பொருள்வைப்பணி, சிறப்பணி, சிலேடையணி, எதிர்மறுத்தலணி, உடனிலைக்கூட்டவணி, உவமானவுருவகவணி, பிறிதினவிற்சியணி, ஒப்புமைக்கூட்டவணி, நிதரிசனவணி, புகழ்ச்சியணி, பலபொருட்சொற் றொடர்நிலையணி, ஐயவணி, உயர்வு

நவிர்சியணி, கலவையணி, வாழ்த்தணி யென்னும் இருபத்தெட்டலங்காரங்களாலும், எழுத்து, சொல், பொருள், யாப்பு என்னும் நான்கு வகையாலும் குற்றமறச் செய்யுள் பாடும் புலவனும், அவைக்களத்திலுள்ளாரும் அரசனும் வியக்கப்பாடுகின்றவனும், இயலிசைநாடகமென்னு முத்தமிழில் வல்லவனும், ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னும் பாக்களைப் பாடுகின்றவனும், உயர்குடியிற் பிறந்து மேம்பட்டவனும், எல்லா வுறுப்புகளுங் குறைவின்றி நிறைந்து நல்லொழுக்க முடையவனும், முப்பது வயதிற்கு மேற்பட்டு எழுபது வயதளவில் உள்ளவனுமாகிய கவிஞனொருவன் தன்மேற் பாடுங் கவிதையை யாவரு மாராய்ந்தறியத் தான் கொள்ளுங்கால், அவைக்களத்தில் தோரணத்தைக் கட்டி, துவசத்தை நாட்டி, மங்கல முரசியம்ப, அந்தணரொரு பால் வாழ்த்த, இவ்வாறு மேன்மைமிக்க கோலத்தோடு விரித்த அழகிய ஆடையில் பலதானியங்களா லமைந்த புகழ்ச்சி வாய்ந்த முளைப்பாலிகையோடு, தீபமும் நல்ல பூரணகலசமும் நிறைந்த மேற்கட்டியையுடைய பந்தலின் கீழ், சலித்தலில்லாத தூண் வரிசையின் நெருக்கத்தாலும், பலவகைப்பட்ட தமதுறவினர் நெருக்கத்தாலும், பெண்கள் பாடும் பல்லாண்டினாலும் நிறைந்த, அழகு அமைந்த, செல்வம் வாய்ந்த தன் கோயில் நடுவில் தான் வெள்ளாடை யுடுத்து, வெள்ளிய மலரைச் சூடித் தனதாசனத்தில் தன்மேற் பாடிய புலவனிருக்கச்செய்து, தான் பக்கத்திலிருந்து மங்கல மமைந்த செய்யுளை மகிழ்கூர்ந்து கேட்டு, பொன்னும், ஆபரணமும், கடகமும் இவைபோன்ற பிறவும் அக்கவிஞனுக்குக் கொடுத்து, அவன் பின் ஏழடி சென்று, அவன் நிற்கவெனக் கூறத் தான் நிற்றல், மலர்களாற் பரந்த நறுமணங் கமழு மாலையை யணிந்த அரசனது கடமையாம்.

## பாவலன் பரிசு பெறுவகை.

**270.** பாட்டுடைத் தலைவன் பரிசில் கொடானேல்
மீட்டொரு பேரின் விரைந்ததிற் சேர்த்தி
யூரும் பேரு மொருங்கே பறித்துச்
சீருந் தளையுஞ் செவ்விதி னட்டி
னிங்கிவன் றிருவிழந் திடர்ப்படத் திருவு
மங்கவற் காகு மாகா திவற்கே.

பாவலன் பரிசுபெறுவகை:—பாவலன் தான்பாடிய பாட்டிற்குத் தலைவன் தனக்குப் பரிசு கொடானாகில், வேறொருவன் பெயரினைத் தன்னூலி லமைத்து, அவன் ஊரையும் பெயரையும் ஒருசேர அதினின்றும் நீக்கி, சீரினையுந் தளையினையும் பின்பு தன்னாற் பாடப்பட்டவன் பாட்டுக்கியைய நாட்டுவானாயின், முன்புள்ள தலைவன் செல்வ மிழந்து துன்பப்பட, இலக்குமியும் பின்புள்ளவனைச் சாருவாள்; அவனுக்குச் செல்வ முண்டாகாது.

ஷை பாவலன் பரிசு பெறுக்காற் செய்யும்வகை

**271.** பரிசி லீயாப் பாவிதன் பனுவலைத்
தெரிதா வெழுதிச் செம்பூச் சூடித்
தன்மனைப் புறத்தினுஞ் சாமுண்டி முன்றிலும்
பன்னகம் வாழும் பழம்பதி தன்னினு
மயானத் திடத்தினு மறுகு தன்னினுந்
தியானித் திருந்து செந்தீக் கொளுத்த
வீரா றிங்களி னிறுதி யாமென்ப
தாதிப் புலவ னறைந்த மொழியே.

ஷை பாவலன் பரிசு பெறுக்காற் செய்யும்வகை:—தனக்குப் பரிசு கொடாத பாவி நூலை வேறுபட வெழுதி, சிவந்த பூவினைச் சூடி, தன் மனைக்குப் புறத்திலும், காளி கோவிலிலும், பாம்பு வாழும் புற்றிடத்திலும், சுடுகாட்டிலும், வீதியிலும் தான் வழி படு கடவுளைத் தியானஞ் செய்திருந்து, அவன்மேற் பாடிய நூலை நெருப்பிற் கொளுத்தினால், பன்னிரண்டு மாதத்தில் மரண மடைவானென்பது முதற் புதல்வனாகிய அகத்தியன் கூறிய வாய்மை மொழியாம்.

இதுவுமது.

**272.** பரிசில் பெறாது பாடிய புலவன்
றெருமா வுள்ளமொடு கலங்கித் தீங்குறிற்
பாட்டுடைத் தலைவ னன்றிப் பாட்டுக்
கேட்டினி திருந்த கிளைஞருங் கெடுவர்.

இதுவும் அது:—பாடிய புலவன் பரிசு பெறாமையால் மயங்கிய மனத்தோடு நிலை கலங்கிச் சுழல்வானாகில், அப்பாடலுக்குத் தலைவனா யுள்ளவன் கெடுதலு மன்றி, அப்பாடலை அவைக் களத்திற் கேட்டிருந்த அவன் உறவினரும் கெடுவார்.

ஒன்பதாவது

## இசை வகை.

காமரப் பாட்டின் பெயர்.

**273.** கானங் கொளையே வரிகந் தருவங்
கீதமி ராகங் கேயம் பாணி
நாத மிசைபண் காமரப் பாட்டே.

காமரப் பாட்டின் பெயர்:—கானம், கொளை, வரி, கந்தருவம், கீதம், இராகம், கேயம், பாணி, நாதம், இசை, பண். (கக)

நால்வகைப் பண்ணின் பெயர்.

274. பாலை குறிஞ்சி மருதஞ் செவ் வழியென
நால்வகை யாழா நாற்பெரும் பண்ணே.

நால்வகைப் பண்ணின் பெயர்:—பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி. (௪)

பாலை யாழ்த்திறத்தின் பெயர்.

275. அராக நேர்திற முறுப்புக் குறுங்கலி
யாசா னைந்தும் பாலையாழ்த் திறனே.

பாலை யாழ்த்திறத்தின் பெயர்:—அராகம், நேர்திறம், உறுப்பு, குறுங்கலி, ஆசான். (௫)

குறிஞ்சி யாழ்த்திறத்தின் பெயர்.

276. நைவளங் காந்தாரம் படுமலை மருளொடு
வயிர்ப்புப் பஞ்சர மாற்றுச் செந்திற
மிவ்வகை யெட்டுங் குறிஞ்சியாழ்த் திறனே.

குறிஞ்சி யாழ்த்திறத்தின் பெயர்:—நைவளம், காந்தாரம், படுமலை, மருள், அயிர்ப்பு, பஞ்சரம், ஆற்று, செந்திறம். (௮)

மருத யாழ்த்திறத்தின் பெயர்.

277. நவிர்வடு குவஞ்சி செய்திற நான்கு
மருத யாழ்க்கு வருந்திற னாகும்.

மருத யாழ்த்திறத்தின் பெயர்:—நவிர், வடுகு, வஞ்சி, செய்திறம். (௪)

செவ்வழி யாழ்த்திறத்தின் பெயர்.

278. நேர்திறம் பெயர்திறஞ் சாதாரி முல்லையென
நாலுஞ் செவ்வழி நல்யாழ்த் திறனே.

செவ்வழி யாழ்த்திறத்தின் பெயர்:—நேர்திறம், பெயர்திறம், சாதாரி, முல்லை. (௪)

பெரும் பண்ணின் வகை.

279. ஈரிரு பண்ணு மெழுமூன் றுதிறனு
மோதின் றனிவகை யிவற்றுட் பாலையாழ்
செந்துமண் டலியாழ் பவுரி மருதயாழ்
தேவ தாளி திருபதுங் காரகம்
நாக ராக மிவற்றுட் குறிஞ்சியாழ்
ஆசாரி சாய வேளர் கொல்லி
கின்னராகஞ் செவ்வழி மௌசாளி சீராகஞ்
சந்தி யிவைபதி னாறும் பெரும்பண்.

பெரும் பண்ணின் வகை:—பாலையாழ், செந்து, மண்ட
மருதயாழ், தேவதாளி, நிருபதுங்கராகம், நாக
யாழ், ஆசாரி, சாயவேளர்கொல்லி, இன்னரா
மௌசாளி, சீராகம், சந்தி.

பாலை யாழ்த்திறன் வகையின் பெய

2:0. தக்க ராக மந்தாளி பாடை
அந்தி மன்றல் நேர்திறம் வராடி
பெரிய வராடி சாயரி பஞ்சமம்
திராடம் அழுங்கு தனுசி சோ மராகம்
மேக ராகக் துக்க ராகங்
கொல்லி வராடி காந்தாரம் சிகண்டி
தேசாக் கிரிசுருதி காந்தா ரம்மிவை
யிருபதும் பாலை யாழ்த்திற மென்ப.

பாலையாழ்த்திறன் வகையின் பெயர்:—தக்கராகம், ம
அந்தி, மன்றல், நேர்திறம், வராடி, பெரியவராடி
மம், திராடம், அழுங்கு, தனுசி, சோமராகம், மே
ராகம், கொல்லிவராடி, காந்தாரம், சிகண்டி, தே
காந்தாரம்.

குறிஞ்சி யாழ்த்திறன் வகையின் பெ

2:1. நட்ட பாடை யந்தாளி மலகரி
விபஞ்சி காந்தாரஞ் செருந்தி கவுடி
உதய கிரிபஞ் சுரம்பழம் பஞ்சுரம்
மேக ராகக் குறிஞ்சிகே தாளி
குறிஞ்சிகௌ வாணம் பாடைசூர் துங்
நாக மருள்பழந் தக்க ராகம்
திவ்விய வராடி முதிர்ந்த விந்தள
மநுத்திர பஞ்சமந் தமிழ்க்குச் சரியகா
புரிநா ராயணி நட்ட ராக
மிராமக் கிரிவி யாழக் குறிஞ்சி
பஞ்சமம் தக்கணு திசாவகக் குறிஞ்சி
யாகந்தை யெனவிவை முப்பத் திரண்
குறிஞ்சி யாழ்த்திற மாகக் கூறுவர்.

குறிஞ்சி யாழ்த்திறன் வகையின் பெயர்:—நட்டபா
மலகரி, விபஞ்சி, காந்தாரம், செருந்தி, கவுடி,
சுரம், பழம்பஞ்சுரம், மேகராகக்குறிஞ்சி, கேத
கௌவாணம், பாடை, சூர்துங்கராகம், நாகம், ம
ராகம், திவ்வியவராடி, முதிர்ந்தவிந்தளம், அரு

தமிழ்க்குச்சரி, அருட்புரி, நாராயணி, நட்டராகம், ராமக்கிரி, வியாழக்குறிஞ்சி, பஞ்சமம், தக்கணாதி, சாவகக்குறிஞ்சி, ஆகந்தை. (௩௨)

மருதயாழ்த்திறன் வகையின் பெயர்.

282. தக்கேசி கொல்லி யாரிய குச்சரி
நாகதொனி சாதாளி யிந்தளந் தமிழ்வேளர்
கொல்லிகாந் தாரங் கூர்ந்தபஞ் சமம்பாக்கழி
தத்தள பஞ்சம மாதுங்க ராகம்
கௌசிகஞ் சீகாம ரஞ்சாரல் சாங்கிமம்
எனவிவை பதினேழு மருதயாழ்த் திறனே.

மருதயாழ்த்திறன்வகையின் பெயர்:—தக்கேசி, கொல்லி, ஆரியகுச்சரி, நாகதொனி, சாதாளி, இந்தளம், தமிழ்வேளர் கொல்லி, காந்தாரம், கூர்ந்தபஞ்சமம், பாக்கழி, தத்தளபஞ்சமம், மாதுங்கராகம், கௌசிகம், சீகாமரம், சாரல், சாங்கிமம். (௪௯)

செவ்வழியாழ்த்திறன் வகையின் பெயர்.

283. குறண்டி யாரிய வேளர் கொல்லி
தனுக்காஞ்சி யியக்கை யாழ்பதங் காளி
கொண்டைக் கிரிசீ வனியாமை சாளர்
பாணி நாட்டந் தாணு முல்லை
சாதாரி பைரவம் காஞ்சி யெனவிவை
பதினைந் செவ்வழி யாழ்த்திற மென்ப.

செவ்வழி யாழ்த்திறன் வகையின் பெயர்:—குறண்டி, ஆரியவேளர் கொல்லி, தனுக்காஞ்சி, இயக்கை, யாழ்பதக்காளி, கொண்டைக்கிரி, சீவனி, யாமை, சாளர், பாணி, நாட்டம், தாணு, முல்லை, சாதாரி, பைரவம், காஞ்சி. (௧௯)

ஷை யாழ்த்திற வகையாவன.

284. தாரப் பண்டிறம் பையுள் காஞ்சி
படுமலை யிவைநூற் றுமூன்று திறத்தன.

ஷை யாழ்த்திற வகையாவன:—தாரப்பண்டிறம், பையுள்காஞ்சி, படுமலை இம்மூன்றும் நூற்றுமூன்று வகைப்படும்.

நேர்திறத்தின் பெயர்.

285. துக்கராக நேர்திற மாகும்.

நேர்திறத்தின் பெயர்:—துக்கராகம். (அ)

காந்தார பஞ்சமத்தின் பெயர்.

286. உறழ்ப்புக் காந்தார பஞ்சம மாகும்.
காந்தார பஞ்சமத்தின் பெயர்:—உறழ்ப்பு. (க)

சோமராகத்தின் பெயர்.

287. குறுங்கலி யென்பது சோம ராகம்.
சோமராகத்தின் பெயர்:—குறுங்கலி (க)

காந்தாரத்தின் பெயர்.

288. சாரற் றிறமெனி னதுகாந் தாரம்.
காந்தாரத்தின் பெயர்:—சாரல். (க)

நட்டபாடையின் பெயர்.

289. நைவள மென்பது நட்ட பாடை.
நட்டபாடையின் பெயர்:—நைவளம். (க)

பழம்பஞ்சுரத்தின் பெயர்.

290. பஞ்சுரம் பழம்பஞ் சுரமா கும்மே.
பழம்பஞ்சுரத்தின் பெயர்:—பஞ்சுரம். (க)

கவ்வாணத்தின் பெயர்.

291. படுமலை யென்பது பகரிற்கவ் வாணம்.
கவ்வாணத்தின் பெயர்:—படுமலை. (க)

அநுத்திர பஞ்சமத்தின் பெயர்.

292. அயிர்ப்பு அநுத்திர பஞ்சம மாகும்.
அநுத்திர பஞ்சமத்தின் பெயர்:—அயிர்ப்பு. (க)

குறிஞ்சியின் பெயர்.

293. அராற்றுக் குறிஞ்சி.
குறிஞ்சியின் பெயர்:—அராற்று. (க)

செந்துருதியின் பெயர்.

294. செந்திறஞ் செந்துருதி.
செந்துருதியின் பெயர்:—செந்திறம். (க)

தக்கேசியின் பெயர்.

295. நவிர்தக் கேசி.
தக்கேசியின் பெயர்:—நவிர். (க)

வடுகின் பெயர்.

**296.** இந்தளம் வடுகெனல்.

வடுகின் பெயர்:—இந்தளம். (க)

பாக்கழியின் பெயர்.

**297.** வஞ்சி பாக்கழி.

பாக்கழியின் பெயர்:—வஞ்சி. (க)

சிகண்டியின் பெயர்.

**298.** செய்திறஞ் சிகண்டி.

சிகண்டியின் பெயர்:—செய்திறம். (க)

சாதாரி, நேர்திறத்தின் பெயர்.

**299.** முல்லை சாதாரி புறநீர்மை நேர்திற
மெனவாங் கிசைப்ப ரிசைவல் லுநரே.

சாதாரியின் பெயர்:—முல்லை. (க)
நேர்திறத்தின் பெயர்:—புறநீர்மை. (க)

நால்வகை யாழின் பெயர்.

**300.** பேரி யாழுஞ் சகோட யாழு
மகர யாழுஞ் செங்கோட் டியாழு
மெனநால் வகையா ழிறுமை மாகும்.

நால்வகையாழின் பெயர்:—பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ். (ச)

ஏழிசையின் பெயர்.

**301.** குரலே துத்தங் கைக்கிளை யுழையே
யிளியே விளரி தார மென்றிவை
யேழும் யாழி னிசையெழு நரம்பே.

ஏழிசையின் பெயர்:—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். (எ)

அவற்றுள், செம்பாலையாவது.

**302.** குரல் குரலாகிற் செம்பாலை யென்ப.

அவற்றுள், செம்பாலையாவது:—குரலே குரலாகிற் செம்பாலை. (க)

படுமலைப்பாலையாவது.

**303.** துத்தங் குரலாகிற் படுமலைப் பாலை.

படுமலைப்பாலையாவது:—துத்தமே குரலாகிற் படுமலைப்பாலை. (க)

### செவ்வழிப்பாலையாவது.

304. கைக்கிளை குரலிற் செவ்வழிப் பாலை.

செவ்வழிப்பாலையாவது:—கைக்கிளையே குரலாகிற் செவ்வழிப் பாலை. (க)

### அரும்பாலையாவது.

305. உழைகுர லாகி லரும்பாலை யென்ப.

அரும்பாலையாவது:—உழையே குரலாயி னரும்பாலை. (உ)

### கோடிப்பாலையாவது.

306. இளிகுர லாகிற் கொடிப்பாலை யென்ப.

கோடிப்பாலையாவது:—இளியே குரலாகிற் கொடிப்பாலை. (ங)

### விளரிப்பாலையாவது.

307. விளரி குரலாகின் விளரிப் பாலை.

விளரிப்பாலையாவது:—விளரியே குரலாகின் விளரிப்பாலை. (ச)

### மேற்செம்பாலையாவது.

308. தாரங் குரலென் மேற்செம் பாலை

மேற்செம்பாலையாவது:—தாரமே குரலாயின் மேற்செம்பாலை. (ரு)

### ஏழ் பாலைகளுள், இதனின் இது வலிதெனல்.

309. ஆங்கவை யேழும் பாலை யவற்றுட்
செம்பாலைக்குப் படுமலைப் பாலை
படுமலைப் பாலைக்குச் செவ்வழிப் பாலை
செவ்வழிப் பாலைக் கரும்பாலை யாகும்
அரும்பாலைக்குக் கொடிப்பாலை வலிதே
கொடிப்பாலைக்கு விளரிப் பாலை
விளரிப் பாலைக்கு மேற்செம் பாலை
வலிதென் றுரைத்தனர் வான்றமிழ்ப் புலவர்.

ஏழ் பாலைகளுள் இதனின் இது வலிதெனல்:—அவற்றுள், மேற்கூறிய செம்பாலைக்குப் படுமலைப்பாலை வலிது, படுமலைப்பாலைக்குச் செவ்வழிப்பாலை வலிது, செவ்வழிப்பாலைக்கு அரும்பாலை வலிது, அரும்பாலைக்குக் கொடிப்பாலை வலிது, கொடிப்பாலைக்கு விளரிப்பாலை வலிது, விளரிப்பாலைக்கு மேற்செம்பாலை வலிது.

### ஏழிசை தம்மிற் பிறக்கும் வகை.

310 தாரத் துழையு முழையுட் குரலுங்
குரலுள் ளிளியு மிளியுட் டுத்தமுந்

துத்தத்துள் விளரியும் விளரியுட் கைக்கிளையுந்
தம்மிற் பிறக்குந் தகுதிய வென்ப.

ஏழிசை தம்மிற் பிறக்கும் வகை:—தாரத்துள் உழையும், உழையுட் குரலும், குரலுள் இளியும், இளியுள் துத்தமும், துத்தத்துள் விளரியும், விளரியுள் கைக்கிளையும் பிறப்பது தகுதி.

இவற்றின் பிறப்பிடத்தின் பெயர்.

311. குரலது மிடற்றிற் றுத்த நாவினிற்
கைக்கிளை யண்ணத்திற் சிரத்தி லுழையே
இளிநெற் றியினில் விளரி நெஞ்சினில்
தார நாசியிற் றப்பிறப் பென்ப.

இவற்றின் பிறப்பிடத்தின் பெயர்:—மிடற்றால் குரல், நாவினால் துத்தம், அண்ணத்தால் கைக்கிளை, சிரத்தால் உழை, நெற்றியால் இளி, நெஞ்சால் விளரி, மூக்கால் தாரம், இவ்வாறு தனித்தனி பிறக்குமென்பர்.

இவற்றின் மாத்திரைகளாவன.

312. நான்கு நாலு மூன்று மிரண்டு
நான்கு மூன்று மிரண்டு மாத்திரை
குரன்முத லாகக் கூறு மென்ப.

இவற்றின் மாத்திரைகளாவன:—மாத்திரை கூறுமிடத்து, குரல் ௪, துத்தம் ௪, கைக்கிளை ௩, உழை ௨, இளி ௪, விளரி ௩, தாரம் ௨.

ஏழிசை ஓசையாவன.

313. வேண்டிய வண்டு மாண்டகு கிளியுங்
குதிரையும் யானையுங் குயிலுந் தேனுவும்
ஆடு மென்றிவை யேழிசை யோசை.

ஏழிசை ஓசையாவன:—வண்டு, கிளி, குதிரை, யானை, குயில், தேனு, ஆடு. (எ)

இவற்றின் எழுத்தாவன.

314. ஆஈ ஊஏ ஐஓ ஔவென்
றேழு மேழிசைக் கெய்துமக் கரங்கள்.

இவற்றின் எழுத்தாவன:—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. (எ)

ஏழிசைக்குரிய மரங்களாவன.

315. மௌவன் முல்லை செவ்விணர்க் கடம்பு
வஞ்சி நெய்தல் வளைசம் புன்னை
எஞ்ச லில்லா வேழிசை மரமே.

ஏழிசைக்குரிய மணங்களாவன:—மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், தாமரை, புன்னை. [மௌவல்=வனமல்லிகை] (எ)

இவைவளின் சுவை.

316. பாலுந் தேனுங் கிழானு நெய்யு
மேலமும் வாழையு மாதுளங் கனியு
மாரு மேழிசைக் கமைந்தநன் சுவையே.

இவைகளின் சுவை:—பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி. (எ)

இவைகளுக்கு இறைவர் பெயர்.

317. விசுவா மித்திர னியம னங்கி
திங்கள் வெய்யோன் கௌதமன் காசிப
னென்றிவ ரேழிசைக் கிறைவ ரென்ப.

இவைகளுக்கு இறைவர் பெயர்:—விசுவாமித்திரன், இயமன், அங்கி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன். (எ)

மந்தவிசையின் பெயர்.

318. மந்தாரங் காகுளி மந்த விசையே. (உ)

மந்தவிசையின் பெயர்:—மந்தாரம், காகுளி.

சமனிசையின் பெயர்.

319. மதுரந் துத்த மத்திமஞ் சமனிசை. (௩)

சமனிசையின் பெயர்:—மதுரம், துத்தம் மத்திமம்.

வல்லிசையின் பெயர்.

320. தாரமு முச்சமும் வல்லிசை யாகும். (உ)

வல்லிசையின் பெயர்:—தாரம், உச்சம்.

இசை விகற்பத்தின் பெயர்.

321. ஏனை யோரிசை விகற்ப மென்ப. (க)

இசை விகற்பத்தின் பெயர்:—ஏனை.

குரற்குரிய திறத்தின் பெயர்.

322. குரற்கு ரியதிற மாசான் றிறமே. (க)

குரற்குரிய திறத்தின் பெயர்:—ஆசான்றிறம்.

இருதுறையின் வகை.

323. இருதுறை செந்துறை வெண்டுறை யென்ப. (உ)

இருதுறையின் வகை:—செந்துறை, வெண்டுறை.

### பண் என்பது.

324. நிறைந்த நரம்பு நிகழும் பண்ணெனல்.
பண் என்பது:—நிறைந்த நரம்புள்ளது. (க)

### திறம் என்பது.

325. குறைந்த நரம்பு திறமெனக் கொள்க.
திறம் என்பது:—குறைந்த நரம்புள்ளது. (க)

### யாழேழும் இன்னிசையின் பெயர்.

326. எழாலே யாழேழு மின்னிசை யென்ப.
யாழேழும் இன்னிசையின் பெயர்:—எழால். (க)

### இசைக் குழலின் பெயர்.

327. வாரி வங்கிய மற்றிவை யிசைக்குழல்.
இசைக் குழலின் பெயர்:—வாரி, வங்கியம். (உ)

### வீணையின் பெயர்.

328. வீணை கின்னரந் தண்டு மாகும்.
வீணையின் பெயர்:—கின்னரம், தண்டு. (உ)

### யாழின் பெயர்.

329. தந்தி வீணை கின்னரங் கோட்டங்
கோடவதி விவஞ்சி யாழ்ப்பெயர் கூறும்.
யாழின் பெயர்:—தந்தி, வீணை, கின்னரம், கோட்டம், கோடவதி, விவஞ்சி. (சு)

### இதுவுமது.

330. அதிகலமுங் கருவியு மப்பெயர்க் குரித்தே.
டி. யாழின் பெயர்:—கலம், கருவி. (உ) ஆக (அ)

### யாழ் வலிக்கட்டின் பெயர்.

331. வலிக்கட்டுத் திவவே.
யாழ் வலிக்கட்டின் பெயர்:—திவவு. (க)

### முறுக்காணியின் பெயர்.

332. முறுக்காணி மாடகம்.
முறுக்காணியின் பெயர்:—மாடகம். (க)

### நரம்பின் பெயர்.

333. கோலே தந்திரி குரலிவை நரம்பே.
நரம்பின் பெயர்:—கோல், தந்திரி, குரல். (௩)

### ஆதி யாழாவது.

334. ஆயிர நரம்பிற் றாதியா ழாகும்.
ஆதி யாழாவது:—ஆயிர நரம்புள்ளது. (௧)

### உள்ளோசையின் பெயர்.

335. முரல்வு நரல்வுந் தெளிரு ஞெளிரும்
விழைவு நுணுக்கமு முள்ளோசை யென்ப.
உள்ளோசையின் பெயர்:—முரல்வு, நரல்வு, தெளிர், ஞெளிர், விழைவு, நுணுக்கம். (௬)

### பல்லியந் தழுவு பாடலின் பெயர்.

336 சங்கீதம் பல்லியந் தழுவு பாடல்.
பல்லியந்தழுவு பாடலின் பெயர்:—சங்கீதம். (௧)

### ஆடற்கேற்கும் பாட்டின் பெயர்.

337. செந்துறைப் பாட்டே யாடற் கேற்பது.
ஆடற்கேற்கும் பாட்டின் பெயர்:—செந்துறைப்பாட்டு. (௧)

### பாடற் கேற்கும் பாட்டின் பெயர்.

338. வெண்டுறைப் பாட்டே பாடற் கேற்பது.
பாடற்கேற்கும் பாட்டின் பெயர்:—வெண்டுறைப்பாட்டு. (௧)

### அகமார்க்கமாவது.

339. அருமையிற் பாட லகமார்க்க மாகும்.
அகமார்க்கமாவது:—அருமையிற்பாடல். (௧)

### யாழ் நரம்போசையின் பெயர்.

340. கலித்தல் சும்மை கம்பலை யழுங்கல்
சிலைத்த றுவைத்தல் சிலம்ப லிரங்க
லிமிழ்தல் விம்ம லிரட்ட லேங்கல்
கனைத்த றழங்கல் கறங்க லாற்ற
லிசைத்த லென்றிவை யாழ்நரம் போசை.
யாழ் நரம்பு ஓசையின் பெயர்:—கலித்தல், சும்மை, கம்பலை, அழுங்கல், சிலைத்தல், துவைத்தல், சிலம்பல், இரங்கல், இமிழ்தல்,

விம்மல், இரட்டல், எங்கல், கனைத்தல், தழங்கல், கறங்கல், அரற்றல், இசைத்தல். (கஎ)

### ஒலியின் பெயர்.

341 ஓதை நாதங் கம்பலை சும்மை
யாருலம் புலம்பல் கோடணை யரவ
மோசை கர்ச்சனை யொலியா கும்மே.

ஒலியின் பெயர்:—ஓதை, நாதம், கம்பலை, சும்மை, ஆருலம், புலம்பல், கோடணை, அரவம், ஓசை, கர்ச்சனை. (க௦)

### திரட்டோசையின் பெயர்.

342. அலறல் கூப்பிட றெழித்த லுரப்பல்
பிளிற லென்றிவை இரட்டோசை யாகும்.

இரட்டோசையின் பெயர்:—அலறல், கூப்பிடல், தெழித்தல், உரப்பல், பிளிறல். (ரு)

பத்தாவது

## நாடக வகை.

### கூத்தின் பெயர்.

343. நடமே நாடக நடன நட்டம்
படித மண்டிலந் தாண்டவம் பரத
நிலைய நிருத்த மாட றூக்கு
வாலுத லணங்கை யவிநய மிலயம்
பாணி குரவை கூத்தெனப் பகர்வர்.

கூத்தின் பெயர்:—நடம், நாடகம், நடனம், நட்டம், படிதம், மண்டிலம், தாண்டவம், பரதம், நிலையம், நிருத்தம், ஆடல், தூக்கு, ஆலுதல், அணங்கை, அவிநயம், இலயம், பாணி, குரவை (கஅ)

### கூத்தின் விகற்பத்தின் பெயர்.

344. கரண முப்பித மலைப்புப் புரியம்
பிரமரி வீரட் டாணங் குனிப்பு
வுள்ளாணங் கடக மிலய மென்ப
வொள்ளிய கூத்தின் விகற்ப மாகும்.

கூத்தின் விகற்பத்தின் பெயர்:—கரணம், உப்பிதம், மலைப்பு, புரியம், பிரமரி, வீரட்டாணம், குனிப்பு, உள்ளாணம், கடகம், இலயம். (க௦)

### சிரமஞ் செய்தலின் பெயர்.

345. பருமித்தல் சிரமஞ் செய்த லென்ப.
சிரமஞ் செய்தலின் பெயர்:—பருமித்தல். (க)

### சிவன் ஆடலின் பெயர்.

346. பாண்டரங்கங் காபா லங்கொடு கொட்டி
ஆண்ட சிவன தாட லாகும்.
சிவன் ஆடலின் பெயர்:—பாண்டரங்கம், காபாலம், கொடுகொட்டி.

### பதினொரு ருத்திர ராடலின் பெயர்.

347. கொட்டி குரவை குடங்குடை வெறியே
மல்லுப் பேடு பாவை கடையம்
பாண்டரங்க மரக்கா லீசர்பதி னொராடல்.
பதினொரு ருத்திரர் ஆடலின் பெயர்:—கொட்டி, குரவை, குடம், குடை, வெறி, மல், பேடு, பாவை, கடையம், பாண்டரங்கம், மரக்கால். (கக)

### மாயோன் ஆடலின் பெயர்.

348. அல்லியங் குடமாடன் மல்லே மரக்கா
லல்லொளி மாயோ னாட லாகும்.
மாயோன் ஆடலின் பெயர்:—அல்லியம், குடம், மல், மரக்கால். (ச)

### திருமகள் ஆடலின் பெயர்.

349. பாவை யென்பது திருமக ளாடல்.
திருமகள் ஆடலின் பெயர்:—பாவை. (க)

### முருகன் ஆடலின் பெயர்.

350. கொட்டியுங் குடையுங் குமா னாட
லொடிய துடியு முரித்தா கும்மே.
முருகன் ஆடலின் பெயர்:—கொட்டி, குடை, துடி. (௩)

### காமன் ஆடலின் பெயர்.

351. பேடாடல் காமன தாட லாகும்.
காமன் ஆடலின் பெயர்:—பேடு. (க)

### அயிராணி ஆடலின் பெயர்.

352. அயிராணி யாடற் பெயர்கடைய மாகும்.
அயிராணி ஆடலின் பெயர்:—கடையம். (க)

தூர்க்கை ஆடலின் பெயர்.

353. தூர்க்கை யாடல் மரக்கா லென்ப.
தூர்க்கை ஆடலின் பெயர்:—மரக்கால். (க)

சத்த மாதர் ஆடலின் பெயர்.

354. எழுவகை நங்கைமா ராடலுந் துடியே.
சத்த மாதர் ஆடலின் பெயர்:—துடி. (க)

கைகோத் தாடலின் பெயர்.

355. குரவைக் கூத்தே கைகோத் தாடல்.
கைகோத்து ஆடலின் பெயர்:—குரவை. (க)

முடக்கிய விருகை பழுப்புடை யோற்றியாடலின் பெயர்.

356. முடக்கிய விருகை பழுப்புடை யொற்றித்
தொடக்கிய நடையது துணங்கை யாகும்.
முடக்கிய இருகை பழுப்புடை யொற்றியாடலின் பெயர்:—துணங்கை. (க)

வேலன் ஆடலின் பெயர்.

357. அணங்கும் வெறியும் கழங்கும்வே லனுடல்.
வேலன் ஆடலின் பெயர்:—அணங்கு, வெறி, கழங்கு. (கூ)

ஒத்தறுத்தலின் பெயர்.

358. வட்டித்த றட்டல் வட்டணையொத் தறுத்தல்.
ஒத்தறுத்தலின் பெயர்:—வட்டித்தல், தட்டல், வட்டணை. (கூ)

கைகுவித்துக் கோட்டலின் பெயர்.

359. கொம்மை கொட்டல்கை குவித்துக் கொட்டல்.
கைகுவித்துக் கொட்டலின் பெயர்:—கொம்மை. (க)

ஆர்த்துவாய் கோட்டலின் பெயர்.

360. ஆலலங் கொட்ட லார்த்துவாய் கொட்டல்.
ஆர்த்துவாய் கொட்டலின் பெயர்:—ஆலலங்கொட்டல். (க)

குந்திநிற்றலின் பெயர்.

361. குந்திய காணிலை குஞ்சித்த லாகும்.
குந்திநிற்றலின் பெயர்:—குஞ்சித்தல். (க)

கைகூப்பி மெய்கோட்டி நிற்றலின் பெயர்.

362. குடந்தங் கைகூப்பி மெய்கோட்டி நிற்றல்.
கைகூப்பி மெய்கோட்டி நிற்றலின் பெயர்:—குடந்தம். (க)

கூத்தாடலின் பெயர்.

363. அகவ றாண்ட லாடுத னடித்த
லசைதல் பெயர்த லடுத்தல்கூத் தாடல்.
கூத்தாடலின் பெயர்:—அகவல், தாண்டல், ஆடுதல், நடித்தல், அசைதல், பெயர்தல், அடுத்தல். (எ)

இதுவுமது.

364. மாற லென்பதுங் கூற லாகும்.
ஷ கூத்தாடலின் பெயர்:—மாறல். (க) ஆ (அ)

தாளவொத்தின் பெயர்.

365. சதியுஞ் சீருந் தாளவொத் தின்பெயர்.
தாளவொத்தின் பெயர்:—சதி, சீர். (உ)

நாடகமாவது.

366. அதினி னடிக்கு நடம்நா டகமாம்.
நாடகமாவது:—அத் தாளவொத்தின் திறத்துக் கியைய நடிக்கும் நடம் நாடகம்.

பதினொன்றாவது

மண்டில வகை.

வில் தொடுத்து அம்பினை எய்வார்க்கு உரிய
நால்வகை நிலையின் பெயர்.

367. நவையறு பைசாச நிலையுமண் டிலமு
மாலீட நிலையும் பிரத்தியா லீடமு
மெனக்கொளு நிலையு மொருநால் வகையே.
வில் தொடுத்து அம்பினை எய்வார்க்குரிய நால்வகை நிலையின் பெயர்:—பைசாசம், மண்டிலம், ஆலீடம், பிரத்தியாலீடம். (௬)

அவற்றுள், பைசாச நிலையாவது.

368. ஒருகா னிலைநின் றொருகான் முடக்கும்
பரிசாய நிலையது பைசாச நிலையே.

அவற்றுள், பைசாச நிலையாவது:—ஒருகால் நிலையில் நின்று ஒருகால் முடக்கல் பைசாசநிலை.

### மண்டில நிலையாவது.

369. இருகான் மண்டிலித் திடுதன்மண் டிலநிலை.

மண்டில நிலையாவது:—இருகாலும் பக்கல் வளைய மண்டிலித்தலே மண்டில நிலை.

### ஆலீட நிலையாவது.

370. வலக்கான் மண்டிலித் திடக்கான் முடக்குறி
லதற்பெய ராலீட நிலைய தாகும்.

ஆலீட நிலையாவது:—வலக்கால் மண்டிலித்து இடக்கால் முடக்குதலே ஆலீடநிலை.

### பிரத்தியாலீட நிலையாவது.

371. வலக்கான் முடக்குற் றிடக்கான் மண்டிலித்
திடற்பெயர் பிரத்தியா லீட நிலையே.

பிரத்தியாலீட நிலையாவது:—வலக்கால் முடக்குற்று இடக்கால் மண்டிலித்தலே பிரத்தியாலீட நிலை.

## பன்னிரண்டாவது

## படை வகை.

### போரின் பெயர்.

372. யுத்த மாகவந் தும்பை சமரங்
கனையஞ் செருவுஞ் சங்கிரா மம்மிக லெதிர்
ஞாட்பும் பூசலா யோதன மடலமர்
இரண மலைதலா மின்னவை போரே.

போரின் பெயர்:—யுத்தம், ஆகவம், தும்பை, சமரம், கனையம், செரு, சங்கிராமம், இகல், எதிர், ஞாட்பு, பூசல், ஆயோதனம், அடல், அமர், இரணம், மலைதல். (௧௬)

### புற வகை.

வெண்பா.

373. வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்
வட்கார்மேற் செல்வது வஞ்சியா—மூட்கா
தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்த னொச்சி
யதுவளைத்த லாகு முழிஞை - யதிரப்

பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர்
செருவென் றதுவாகை யாம்.

புறவகை:—வெட்சி - பகைவர் பசுக்கவர்தல், கரந்தை - பகைவர் கவர்ந்த தன்னிரை மீட்டல், வஞ்சி - பகை மேற்செல்லல், காஞ்சி - வரும் பகைவர்முன் னெதிரூன்றல், நொச்சி - தன்னரண் காத்தல், உழிஞை - பகையரண் வளைத்தல், தும்பை - பொருதல், வாகை - போர் வெல்லல். (அ)

## புறப்புற வகை.

374. வாகை பாடாண் பொதுவியற் றிணையெனப்
போகிய மூன்றும் புறப்புற மாகும்.

புறப்புற வகை:—வாகை, பாடாண், பொதுவியல். (௩)

## நால்வகைப் படையின் பெயர்.

375. கோலத் தேர்கரி குதிரை காலா
ளால்வகைப் படையி னும மாகும்.

நால்வகைப் படையின் பெயர்:—தேர், யானை, குதிரை, காலாள். (௪)

## தேரின் பெயர்.

376. குயவு வையங் கொடிஞ்சி சயந்தனந்
திகிரியந் திரங்கவ ரியரியி ரதந்தேர்.

தேரின் பெயர்:—குயவு, வையம், கொடிஞ்சி, சயந்தனம், திகிரி, யந்திரம், கவரி, அரி, இரதம். (௯)

## இதுவுமது.

377. கூவிர மென்பது மோர்வழிக் கொளலே.

ஷ தேரின் பெயர்:—கூவிரம். (க) ஆ (௧0)

## தேருருளின் பெயர்.

378. உருளிகா லாழி பரிதி யுந்தி
திகிரி சில்லி நேமிதே ருருளே.

தேர் உருளின் பெயர்:—உருளி, கால், ஆழி, பரிதி, உந்தி, திகிரி, சில்லி, நேமி. (அ)

## தேரின் அகத்திற் செறிக்திரின் பெயர்.

379. அகத்திற் செறிகதி ராரென லாகும்.

தேரின் அகத்திற் செறிகதிரின் பெயர்:—ஆர். (க)

தேர்க் கொடிஞ்சியின் பெயர்.

380. கூவிரங் கொடிஞ்சி.

*தேர்க் கொடிஞ்சியின் பெயர்:—கூவிரம்.* (க)

தேர் மொட்டின் பெயர்.

381. கூம்புதேர் மொட்டே.

*தேர் மொட்டின் பெயர்:—கூம்பு.* (க)

தேர் முட்டியின் பெயர்.

382. பிரம்பு தேர்முட்டி யென்னப் பேசுவர்.

*தேர் முட்டியின் பெயர்:—பிரம்பு.* (க)

தேர் நடுவின் பெயர்.

383. நடுவட் டேர்ப்பெயர் நாப்பணுந் தட்டும்.

*தேர் நடுவின் பெயர்:—நாப்பண், தட்டு.* (உ)

தேர்மரச் சுற்றின் பெயர்.

384. கிடுகென் கிளவி தேர்மரச் சுற்றே.

*தேர்மரச் சுற்றின் பெயர்:—கிடுகு.* (க)

தேர்ப்பலகைப் பாவின் பெயர்.

385. பாரே பலகைப் பாவென லாகும்.

*தேர்ப்பலகைப் பாவின் பெயர்:—பார்.* (க)

தேர்ப்பரப்பின் பெயர்.

386. பாரே தேரின் பரப்பு மாகும்.

*தேர்ப் பரப்பின் பெயர்:—பார்.* (க)

அச்சுருவாணியின் பெயர்.

387. அச்சே தேரி னச்சுரு வாணி.

*அச்சுருவாணியின் பெயர்:—அச்சு.* (க)

பரிபூண்ட தேரின் பெயர்.

388. பாண்டில்கஞ் சிகைவையம் பரிபூண்ட தேரே.

*பரிபூண்ட தேரின் பெயர்:—பாண்டில், கஞ்சிகை, வையம்.* (ங)

பண்டியின் பெயர்.

389. சகட மொழுகை சாகாடு பண்டி.

*பண்டியின் பெயர்:—சகடம்,ஒழுகை, சாகாடு.* (ங)

### பண்டி யுள்ளிருசின் பெயர்.

390. பண்டி யுள்ளிருசு கந்தெனப் பகர்வர்.

பண்டி உள்ளிருசின் பெயர்:—கந்து. (க)

### அரசுவாவின் இலக்கணம்.

391. காலோர் நான்குந் தனிக்கையுங் கோசமும்
வாலுறுப் போடேழு மாநிலந் தோய்வதும்
பாலுஞ் சங்கும் போலுங் காலுகிர்
காலினுந் தன்றனிக் கையினு மெய்யினும்
வாலினு மருப்பினுங் கோறல்வல் லதுவா
யேழ்முழ முயர்ந்தொன் பான்முழ நீண்டு
பதின்மூன் றுமுழஞ் சுற்றுடைத் தாகித்
தீயுமிழ் சிறுகண் ணுஞ் செப்புகரு முடைத்தாய்
முன்ன்பு யர்ந்து பின்ன்ப ணித்தாய
இயானை யரசுவா வாகு மென்ப.

அரசுவாவின் இலக்கணம்:—நான்கு காலும், துதிக்கையும், கோசமும், வாலும் ஆகிய எழுறுப்பு நிலத்திற் றோய்வதும், பாலையுஞ் சங்கையு மொத்த வெண்ணிறம் வாய்ந்த கால்நக முடையது மாய், காலினாலும், தனது துதிக்கையினாலும், சரீரத்தாலும், வாலினாலும், கொம்பினாலும் கொல்ல வல்லதாய், எழு முழம் உயர்ந்தும், ஒன்பது முழம் நீண்டும், பதின்மூன்று முழம் சுற்றுடைத்தாய், சிறிய கண்ணையும், சிவந்த புள்ளிகளையு முடையதாய், முன்பு முற்கூறியவா றுயர்ந்து, பின்பு தாழ்ந்தது அரசி யானை யென்று அறிவுடையோர் சொல்வர். [முன்ன், பின்ன் ஒற்றளபெடைகள்]

### அரசர்க்குரிய பரியின் இலக்கணம்.

392. மாதர்தம் மணமென மிக்க மணத்தது
வாழை மடலென வளர்ந்த செவியது
நாலு தாளு மெருத்து முகனும்
வெந்நு முன்னும் வெண்மை யுடையதாய்
எண்பத் திருவிர லுயர முயர்ந்தது
பண்புடை யரசர்க் காவது பரியே.

அரசர்க்குரிய பரியின் இலக்கணம்:—பெண்களது மணம்போல மிக்க மணத்ததாய், வாழை மடலைப்போலச் செவியினை யுடையதாய், நான்கு காலும், பிடரும், முகமும், முதுகும், முன்புறமும் வெண்ணிற முடையதாய், எண்பத்திரண்டு விரல் உயர்ந்த குதிரை தத்தமக்குரிய குணங்களையுடைய அரசர்களுக் குரியது.

### பரியின் கதிவகைப் பெயர்.

393. மல்ல கதியே வார கதியே
மயூர கதியே வல்லிய கதியே
மால்விடைக் கதியென வருங்கதி யைந்துந்
தோலாப் புரவிக்குச் சொல்லிய கதியே.

பரியின் கதிவகைப் பெயர்:—மல்லகதி, வாரகதி, மயூரகதி, வல்லியகதி, விடைக்கதி. (௯)

[வல்லியகதி - புலியைப்போலும் பாய்ச்சலுடைய கதி]

## பதின்மூன்றாவது

## காலாள் வகை.

### பகைவர்மேற் செல்லல்.

394. ஊராண்மை யென்ப தோங்கிச் செல்லல்.

பகைவர்மேல் செல்லல்:—ஊராண்மை. (௧)

### பகைவரிடத்தில் செய்யும் அரிய செயல்.

395. பேராண்மை யென்ப தரிய செயலே.

பகைவரிடத்தில் செய்யும் அரிய செயல்:—பேராண்மை. (௨)

### புறங் கொடுத்தோர்மேல் ஆயுதம் எறியாமை.

396. சாய்குநர் மேற்படை விடாமை தழிஞ்சி.

புறங் கொடுத்தோர்மேல் ஆயுதம் எறியாமை:—தழிஞ்சி. (௩)

### வெற்றிப் பூவின் பெயர்.

397. பூளை வெற்றிப் பூவா கும்மே.

வெற்றிப் பூவின் பெயர்:—பூளை. (௪)

### கொள்ளையின் பெயர்.

398. சூறையுங் கொண்டியுங் கொள்ளை யாகும்.

கொள்ளையின் பெயர்:—சூறை, கொண்டி. (௫)

### வாரலின் பெயர்.

393. வாரல் கவரல் வௌவ லதுகொளல்.

வாரலின் பெயர்:—கவரல், வௌவல், கொளல். (௬)

## படையின் பெயர்.

**400.** தானை பதாதி தண்டம் பதாகினி
வானி யநிகம் வாகினி தந்திரஞ்
சேனை பகுதி பாடி பலம்படை.

படையின் பெயர்:—தானை, பதாதி, தண்டம், பதாகினி, வானி, அநிகம், வாகினி, தந்திரம், சேனை, பகுதி, பாடி, பலம். (கஉ)

## இதுவுமது.

**401.** நிதானமுங் ககணமுந் தளமு நிகழ்த்தும்.

ஷடி படையின் பெயர்:—நிதானம், ககணம், தளம். (ந.) ஆ. (கங)

## படை வகுப்பின் பெயர்.

**402.** ஒட்டும் யூகமு முண்டையு மணியு
மற்றிவை படையின் வகுப்பென லாகும்.

படை வகுப்பின் பெயர்:—ஒட்டு, யூகம், உண்டை, அணி. (அ)

## படை உறுப்பின் பெயர்.

**403.** தூசியுங் கூழையு நெற்றியுங் கையு
மணியு மென்ப தப்படைக் குறுப்பே.

படை உறுப்பின் பெயர்:—தூசி, கூழை, நெற்றி, கை, அணி. (கூ)

## பேரணியின் பெயர்.

**404.** கூழை யென்பது பேரணி யாகும்.

பேரணியின் பெயர்:—கூழை. (க)

## கொடிப்படையின் பெயர்.

**405.** தாரே முன்செல் கொடிப்படை யாகும்.

கொடிப்படையின் பெயர்:—தார். (க)

## கீழறுத்தலின் பெயர்.

**406.** அறைபோதல் கீழறுத்தல் படைமறுத்த லாகும்.

க்தலின் பெயர்:—அறைபோதல், படைமறுத்தல். (உ)

## போரவழைத்தலின் பெயர்.

லென்பது பொரவழைத்த லாகும்.

ர்:—அறைகூவல். (ங)

பதினைஞ்சாவது

## தோற்கருவி வகை.

### முழவின் பெயர்.

408. முழவு குளிரே.
முழவின் பெயர்:—குளிர். (௧)

### குடமுழாவின் பெயர்.

409. மண்கணை முழவங் குடமுழா வாகும்.
குடமுழாவின் பெயர்:—மண்கணை, முழவம். (௨)

### படகத்தின் பெயர்.

410. பணவந் திண்டிம மானகம் படகம்.
படகத்தின் பெயர்:—பணவம், திண்டிமம், ஆனகம். (௩)

### கடிப்பின் பெயர்.

411. குணிலே கடிப்பின் கூற்றா குமே.
கடிப்பின் பெயர்:—குணில். (௧)

### சிறுபறையின் பெயர்.

412. ஆகுளி சிறுபறை.
சிறுபறையின் பெயர்:—ஆகுளி. (௧)

### திமிலையின் பெயர்.

413. சல்லரி திமிலை.
திமிலையின் பெயர்:—சல்லரி. (௧)

### ஒருகட் பறையின் பெயர்.

414. ஒருகட் பறையே மொந்தை யென்ப.
ஒருகட் பறையின் பெயர்:—மொந்தை. (௧)

### நிசாளத்தின் பெயர்.

415. தண்ணுமை நிசாளம்.
நிசாளத்தின் பெயர்:—தண்ணுமை. (௧)

### ஒருபறை விகற்பத்தின் பெயர்.

416. ஒருபறை விகற்பந் தாம்பீலி யாகும்.
ஒருபறை விகற்பத்தின் பெயர்:— பீலி. (௧)

பன்றிப் பறையின் பெயர்.

417. பன்றிப் பறையே குடப்பறை யாகும்.
பன்றிப் பறையின் பெயர்:—குடப்பறை. (க)

கரடிப் பறையின் பெயர்.

418. கரடி நாமக் கட்டுரை தட்டை.
கரடிப் பறையின் பெயர்:—தட்டை. (க)

ஒருகட் பகுவாய்ப்பறையின் பெயர்.

419 பதலை யொருகட் பகுவாய்ப் பறையே.
ஒருகட் பகுவாய்ப் பறையின் பெயர்:—பதலை. (க)

துந்துபியின் பெயர்.

420. சகண்டை முரசு பணையே சகடந்
துந்துபி யென்ப தூரியமு மாகும்.
துந்துபியின் பெயர்:—சகண்டை, முரசு, பணை, சகடம், துந்துபி, தூரியம். (சு)

இதுவுமது.

421. பேரி தகணித மென்னவும் பேசுவர்.
அடி துந்துபியின் பெயர்:—பேரி, தகணிதம். (உ) ஆக (அ)

உவகைப் பறையின் பெயர்.

422. உவகைப் பறையே தூரிய மாகும்.
உவகைப் பறையின் பெயர்:—தூரியம். (க)

உடுக்கையின் பெயர்.

423. துடியே யுடுக்கை.
உடுக்கையின் பெயர்:—துடி. (க)

பம்பைப் பறையின் பெயர்.

424. தடாரிபம் பைப்பறை.
பம்பைப் பறையின் பெயர்:—தடாரி. (க)

தம்பட்டத்தின் பெயர்.

425. முரசு தம்பட்ட முழவு மாகும்.
தம்பட்டத்தின் பெயர்:—முரசு, முழவு. (உ)

### தலைவிரி பறையின் பெயர்.

426. குழையுடற் றலைவிரி பறைகத் திரியே.

தலைவிரி பறையின் பெயர்:— கத்திரி. (க)

### மரக்காற் பறையின் பெயர்.

427. மரக்காற் பறையே கோதை யாகும்.

மரக்கால் பறையின் பெயர்:—கோதை. (க)

### பலவகைப் பறையின் பெயர்.

428. பணவந் திண்டிமந் தக்கை யிடக்கை
நிமிலை கண்டிகை கண்டை குறடு
பணைசிந் தூரம் பாண்டிகம் பீலி
காடிகை தாடிகை கடுவை யூமை
சகடை கிடுகு பல்வகைப் பறையே.

பலவகைப் பறையின் பெயர்:—பணவம், திண்டிமம், தக்கை, இடக்கை, நிமிலை, கண்டிகை, கண்டை, குறடு, பணை, சிந்தூரம், பாண்டிகம், பீலி, காடிகை, தாடிகை, கடுவை, ஊமை, சகடை, கிடுகு. (கஅ)

### வாச்சியப் பொதுப்பெயர்.

429. தூரிய முழவம் வைரங் கோடணை
முரசு பீலி முருடு தடாரி
யியம்பணை வாச்சியப் பொதுப்பெய ரென்ப.

வாச்சியப் பொதுப் பெயர்:—தூரியம், முழவம், வைரம், கோடணை, முரசு, பீலி, முருடு, தடாரி, இயம், பணை. (கo)

## பதினோராவது
## குடை வகை.

### குடையின் பெயர்.

430. கவிகை சத்திரம் பிச்சங் கவிப்புக்
குளிரா தபத்திரந் தொங்கல் குடைப்பெயர்.

குடையின் பெயர்:—கவிகை, சத்திரம், பிச்சம், கவிப்பு, ஆதபத்திரம், தொங்கல். (சு)

### செங்குடையின் பெயர்.

431. செங்குடை மீளையுஞ் சிந்தூரமு மாகும்.

செங்குடையின் பெயர்:—மீளை, சிந்தூரம். (உ)

### பீலிக்குடையின் பெயர்.

432. தூங்கப் பீலிக் குடைசுழ லாகும். (௧)
பீலிக் குடையின் பெயர்:—சுழல்

### பீலிக்குஞ்சக் குடையின் பெயர்.

433. தழைமயே தொங்கல் சமாலம் பிச்சங்
குளிரி பீலிக் குஞ்ச மாகும்.
பீலிக்குஞ்சக் குடையின் பெயர்:—தழை, தொங்கல், சமாலம், பிச்சம், (௫)
குளிரி.

## பதினொருவது
## ஆயுத வகை.

### வில்லின் பெயர்.

434. கோதண் டஞ்சிலை கொடுமரங் கார்முகஞ்
சாபந் துரோணந் தனுவில் லாகும்.
வில்லின் பெயர்:—கோதண்டம், சிலை, கொடுமரம், கார்முகம், (௭)
சாபம், துரோணம், தனு.

### இதுவுமது.

435. தடிமுனி சிந்து வாரஞ் சராசனந்
தவரே வேணுச் சார்ங்கமு மாகும்.
ஷை வில்லின் பெயர்:—தடி, முனி, சிந்துவாரம், சராசனம், தவர், (௭) ஆட (௧௪)
வேணு, சார்ங்கம்.

### நாணின் பெயர்.

436. பூரி யாவம் பூட்டுத் தொடைவடம்
நாரி நரம்பு குணநா ணின்பெயர்.
நாணின் பெயர்:—பூரி, ஆவம், பூட்டு, தொடை, வடம், நாரி, நரம்பு, (௮)
குணம்.

### நாணின் ஒலியின் பெயர்.

437. நாணி னொலிமய மருமாஞ்ச மாகும். (௧)
நாணின் ஒலியின் பெயர்:—மருமாஞ்சம்.
[மருமாஞ்சம் - மாஞ்சம் எனவும் பாடம்]

### அம்பின் பெயர்.

438. பகழி வாளி கோணி பாணங்
கதிரம் பல்லங் கணைமகால் சரமொடு

வண்டு பத்திரஞ் சிலீமுகம் விசிக
மம்பின் பெயருடு வாகலு முரித்தே.

அம்பின் பெயர்:—பகழி, வாளி, தோணி, பாணம், கதிரம், பல்லம், கணை, கோல், சரம், வண்டு, பத்திரம், சிலீமுகம், விசிகம், உடு. (கச)

அம்புத் தலையின் பெயர்.

439. உடுவம் புத்தலை.
அம்புத் தலையின் பெயர்:—உடு. (க)

மொட்டம்பின் பெயர்

440. உதண்மொட் டம்பே.
மொட்டம்பின் பெயர்:—உதண். (க)

அம்புக் குப்பியின் பெயர்.

441. புழுகு குப்பி.
அம்புக் குப்பியின் பெயர்:—புழுகு. (க)

அம்புக் கட்டின் பெயர்.

442. புதையம்புக் கட்டே.
அம்புக் கட்டின் பெயர்:—புதை. (க)

அம்புக் குதையின் பெயர்.

443. பகழி புங்க மம்புக் குதையே.
அம்புக் குதையின் பெயர்:—பகழி, புங்கம். (உ)

அம்புத்திரள் கட்டுங் கயிற்றின் பெயர்.

444. பகழித் திரளின் பெயர்பற் றுக்கை.
அம்புத்திரள் கட்டுங் கயிற்றின் பெயர்:—பற்றுக்கை. (க)

அம்பறாத் தூணியின் பெயர்.

445. தூணி புட்டி லம்பறாத் தூணி.
அம்பறாத் தூணியின் பெயர்:—தூணி, புட்டில். (உ)

இதுவுமது.

446. ஆவமு மாவ நாழிகையு மாகும்.
ஷெடி அம்பறாத் தூணியின் பெயர்:—ஆவம், ஆவநாழிகை. (உ) ஆ-(ச)

குதையின் பெயர்.

447. குலையே வில்லி விருதலைக் குதையே.
குதையின் பெயர்:—குலை. (க)

அம்பின் இறகின் பெயர்.

448. அம்பி னிறகு உடுவென் றாகும்.
அம்பின் இறகின் பெயர்:—உடு. (க)

பிண்டிபாலத்தின் பெயர்.

449. பீலித்தண் டெஃகம் பிண்டி பாலம்.
பிண்டிபாலத்தின் பெயர்:—பீலித்தண்டு, எஃகம். (உ)

நாராசத்தின் பெயர்.

450. சலாகை நாராசம்.
நாராசத்தின் பெயர்:—சலாகை. (க)

இருப்பு முள்ளின் பெயர்.

451. தாறிருப்பு முள்ளே.
இருப்பு முள்ளின் பெயர்:—தாறு. (க)

கழு முள்ளின் பெயர்.

452. கழுக்கடை கழுமுட் கட்டுரை யாகும்.
கழு முள்ளின் பெயர்:—கழுக்கடை. (க)

வாளின் பெயர்.

453. கவிரே திநாட்டங் கடுத்தலை நாந்தகம்
வசியே கட்கம் வஞ்சம் வாளே.
வாளின் பெயர்:—கவிர், எதி, நாட்டம், கடுத்தலை, நாந்தகம், வசி, கட்கம், வஞ்சம். (அ)

இதுவுமது.

454. மட்டா யுதந்தூ வத்தியு மாகும்.
ஷெ வாளின் பெயர்:—மட்டாயுதம், தூவத்தி. (உ) ஆக (க०)

கூன் வாளின் பெயர்.

455. கோணங் கூன்வாள்.
கூன் வாளின் பெயர்:—கோணம். (க)

சிறுவாளின் பெயர்.

456. முசுண்டி சிறுவாள்.
சிறுவாளின் பெயர்:—முசுண்டி. (க)

கொடுவாளின் பெயர்.

457. குயமும் புள்ளமுங் கொடுவா ளாகும்.
கொடுவாளின் பெயர்:—குயம், புள்ளம். (உ)

அரிவாளின் பெயர்.

458. அரிகதிர்க் கத்திக்கு மப்பெய ராகும்.
அரிவாளின் பெயர்:—மேற்கூறிய பெயர்கள் அரிவாட்குமாகும். ()

சுழல் படையின் பெயர்.

459. சுழல்படை வட்டம் பாரா வளையம்.
சுழல் படையின் பெயர்:—வட்டம், பாராவளையம். (உ)
[சுழல் படை - வளைதடி]

ஈர்வாளின் பெயர்.

460. வேதினங் கரபத் திரமு மீர்வாள்.
ஈர்வாளின் பெயர்:—வேதினம், கரபத்திரம். (உ)

உடைவாளின் பெயர்.

461. சுரிகை பத்திரங் குறும்பிடி யுடைவாள்.
உடைவாளின் பெயர்:—சுரிகை, பத்திரம், குறும்பிடி. (ங)

கைவாளின் பெயர்.

462. கண்ட மென்பது கைவா ளாகும்.
கைவாளின் பெயர்:—கண்டம் (க)

கணையத்தின் பெயர்.

463. எழுவும் பரிகமுங் கணைய மென்ப.
கணையத்தின் பெயர்:—எழு, பரிகம். (உ)

சூலத்தின் பெயர்.

464. காள நல்வசி சூலங் கழுமுள்
மூவிலை வேலே முத்தலைக் கழுவெனல்.
சூலத்தின் பெயர்:—காளம், நல்வசி, கழுமுள், மூவிலைவேல், முத்தலைவேல், கழு. (சு)

பூங்கருவியின் பெயர்.

465. சன்னகம் பூங்கருவி யாகச் சாற்றும்.
பூங்கருவியின் பெயர்:—சன்னகம். (க)

மழுவின் பெயர்.

466. பரசு கணிச்சி நவியமு மழுவே.
மழுவின் பெயர்:—பரசு, கணிச்சி, நவியம். (௩)

இதுவுமது.

467. பாலந் தண்ணமு மழுப்படை யாகும்.
ஷை மழுவின் பெயர்:—பாலம், தண்ணம். (உ) ஆக (ரு)

இலை மூக்கரி கத்தியின் பெயர்.

468. குளிரிலை மூக்கரி கத்தி யாகும்
கணிச்சியு மதன்பாற் கருதப் படுமே.
இலை மூக்கரி கத்தியின் பெயர்:—குளிர், கணிச்சி. (உ)

கோடாலியின் பெயர்.

469. குடாரமு நவியமுங் கோடாலி யாகும்.
கோடாலியின் பெயர்:—குடாரம், நவியம். (உ)

தோட்டியின் பெயர்.

470. சாணங் கணிச்சி யங்குசந் தோட்டி
தோட்டியின் பெயர்:—சாணம், கணிச்சி, அங்குசம். (௩)

இதுவுமது.

471. கோண மென்றுங் கூறப் படுமே.
ஷை தோட்டியின் பெயர்:—கோணம். (க) ஆக (௪)

வேலின் பெயர்.

472. உடம்பிடி யெஃக மயிலே சத்தி
விட்டே றரண ஞாங்கரும் வேலே.
வேலின் பெயர்:—உடம்பிடி, எஃகம், அயில், சத்தி, விட்டேறு, அரணம், ஞாங்கர். (எ)

வச்சிராயுதத்தின் பெயர்.

473. வயிரப் படையே சம்பங் குலிசம்
அசனி வச்சிரப் படையா கும்மே.
வச்சிராயுதத்தின் பெயர்:—வயிரப்படை, சம்பம், குலிசம், அசனி. (௪)

இதுவுமது.

474. சதகோடி யென்பதுஞ் சாற்றப் பெறுமே.
ஒடி வச்சிராயுதத்தின் பெயர்:—சதகோடி. (௪) ஆ (௫)

தண்டாயுதத்தின் பெயர்.

475. தடியுங் கதையும் சீருந் தண்டெனல்.
அண்டாயுதத்தின் பெயர்:—தடி, கதை, சீர். (௧)

இதுவுமது.

476. வயிரமு முளையு மெறுழுமற் றதுவே.
ஒடி தண்டாயுதத்தின் பெயர்:—வயிரம், முளை, எறுழ். (௩) ஆ (௬)

கிளிகடி கருவியின் பெயர்.

477. தழலுந் தட்டையுங் கிளிகடி கருவி.
கிளிகடி கருவியின் பெயர்:—தழல், தட்டை. (௨)

குறுந் தடியின் பெயர்.

478. குணிலே குறுந்தடி.
றுந் தடியின் பெயர்:—குணில். (௧)

ஈட்டியின் பெயர்.

479. இட்டி யீட்டி.
ட்டியின் பெயர்:—இட்டி. (௧)

கவணின் பெயர்.

480. கவணை யொடிசில் குணில்குளிர் கவணே.
வணின் பெயர்:—கவணை, ஒடிசில், குணில், குளிர். (௪)

சிறு சவளத்தின் பெயர்.

481. குந்தஞ்சிறு சவளம்.
று சவளத்தின் பெயர்:—குந்தம். (௧)

பெருஞ் சவளத்தின் பெயர்.

482. குந்தந் தோமரம் பீலிபெருஞ் சவளம்.
ருஞ் சவளத்தின் பெயர்:—குந்தம், தோமரம், பீலி. (௩)

சக்கரத்தின் பெயர்.

483. திகிரி நேமி யாழியெஃ கம்வளை
பரிதியொளி வட்டஞ் சுதரிசனஞ் சக்கரம்.

சக்கரத்தின் பெயர்:—திகிரி, நேமி, ஆழி, எஃகம், வளை, பரிதி, ஒளி (அ)
வட்டம், சுதரிசனம்.

கைக்கட்டியின் பெயர்.

484. கோதை கைக்கட்டி கைப்புடையுங் கூறும். (உ)
கைக்கட்டியின் பெயர்:—கோதை, கைப்புடை.

கைவிடு படையின் பெயர்.

485. அத்திரம் விடுபடை. (க
கைவிடு படையின் பெயர்:—அத்திரம்.

கைவிடாப் படையின் பெயர்.

486. சத்திரம் விடாப்படை. (
கைவிடாப் படையின் பெயர்:—சத்திரம்.

சுவரகழ் கருவியின் பெயர்.

487. கன்னஞ் சுவரகழ் கருவி யாகும். (
சுவரகழ் கருவியின் பெயர்:—கன்னம்.

தறிகைக்கும், உளிக்கும் பெயர்.

488. தறிகை கணிச்சி யுளிக்கு மதுவே. (
தறிகையின் பெயர்:—கணிச்சி; உளியின் பெயர்:—கணிச்சி.

கைவேலின் பெயர்.

489. கைவேல் விகற்பங் கப்பணந் தோமரம். (
கைவேலின் பெயர்:—கப்பணம், தோமரம்.

கயிற்றின் பெயர்.

490. பாசங் கச்சை நாண்வடம் பழுதை
தாம மிரச்சுத் தாம்பு கயிறே.
கயிற்றின் பெயர்:—பாசம், கச்சை, நாண், வடம், பழுதை, தா
இரச்சு, தாம்பு.

தாமணியின் பெயர்.

491. தாமணி கண்ணி தாம்பு மாகும்.
தாமணியின் பெயர்:—கண்ணி, தாம்பு.

வலைக் கயிற்றின் பெயர்.

492. சால மென்பது கயிற்று வலையே.
வலைக் கயிற்றின் பெயர்:—சாலம்.

அஞ்சனம் எழுதும் கருவியின் பெயர்.

493. கோலே யஞ்சன மெழுதுங் கருவி.
அஞ்சனம் எழுதும் கருவியின் பெயர்:—கோல். (க)

எழுதும் கருவியின் பெயர்.

494. கண்டமூசி யாணி யெழுதுங் கருவி.
எழுதும் கருவியின் பெயர்:—கண்டம், ஊசி, ஆணி. (ங)

ஊசியின் பெயர்.

495. சூசி யூசியென்ப.
ஊசியின் பெயர்:—சூசி. (க)

ஊசித் தொளையின் பெயர்.

496. பாசமூசித்தொளை துன்னமும் பகரும்.
ஊசித் தொளையின் பெயர்:—பாசம், துன்னம். (உ)

நுனியின் பெயர்.

497. நுதியு நுனையு நுனியா கும்மே.
நுனியின் பெயர்:—நுதி, நுனை. (உ)

முசுண்டியின் பெயர்.

498. தானை படையே முற்கர முசுண்டி.
முசுண்டியின் பெயர்:—தானை, படை, முற்கரம். (ங)
[முசுண்டி = சம்மட்டி வடிவினதோர் ஆயுதம்]

இருப்புலக்கையின் பெயர்.

499. முசலமிருப் புலக்கை.
இருப்பு உலக்கையின் பெயர்:—முசலம். (க)

சங்கிலியின் பெயர்.

500. துவக்குத் தொடர்சங் கிலியே யிடங்கணி.
சங்கிலியின் பெயர்:—துவக்கு, தொடர், இடங்கணி, (ங)

பற்றிரும்பின் பெயர்.

501. கற்பொறி யள்வலி பற்றிரும் பாகும்.
பற்றிரும்பின் பெயர்:—கற்பொறி, அள், வலி. (ங)

### கூர்மையின் பெயர்.

502. வயிரமும் வள்ளும் வசியும் வையு
மயிலு நிசிதமு மள்ளும் பூவு
மாருங் கூர்மையி னபிதா னம்மே.

கூர்மையின் பெயர்:—வயிரம், வள், வசி, வை, அயில், நிசிதம், அள், பூ, ஆர். (கூ)

### ஆயுதப் பொதுப்பெயர்.

503. தானை படையே படைக்கலங் கருவி
யெஃகிவை யாயுதம் வேலு மியம்புவர்.

ஆயுதப் பொதுப்பெயர்:—தானை, படை, படைக்கலம், கருவி, எஃகு, வேல். (சு)

### இதுவுமது.

504. துப்பு மேதியுஞ் சுதன்மமு மாகும்.

ஷை ஆயுதப் பொதுப்பெயர்:—துப்பு, எதி, சுதன்மம். (ங) ஆ (௯)

### படையுறையின் பெயர்.

505. தடறுங் கருவிப் புட்டிலு முறையெனல்.

படை உறையின் பெயர்:—தடறு, கருவிப்புட்டில். (உ)

பதினேழாவது

## செயற்கை வகை.

### கவசத்தின் பெயர்.

506. ஆசு தசனம் சடாரி யாணம்
பாசங் கண்டம் பருமங் கச்சை
சாலிகை மாடிகை கந்தளம் பார
மேழகங் கசையே மெய்புகு கருவி
கவசப் பெயரே சடாரியுஞ் சொல்லும்.

கவசத்தின் பெயர்:—ஆசு, தசனம், சடாரி, அாணம், பாசம், கண்டம், பருமம், கச்சை, சாலிகை, மாடிகை, கந்தளம், பாரம், மேழகம், கசை, மெய்புகுகருவி, சடாரி. (கசு)

### இதுவுமது.

507. அந்தளமு மபாமுஞ் சுரிகையுஞ் சொல்லும்.

ஷை கவசத்தின் பெயர்:—அந்தளம், அபாம், சுரிகை (ங) ஆ (௧௯)

### கேடகத்தின் பெயர்.

508. கேடயம் வட்டந் தட்டி கடகம்
வேதிகை கிடுகு பலகை கேடகம்.

கேடகத்தின் பெயர்:—கேடயம், வட்டம், தட்டி, கடகம், வேதிகை, கிடுகு, பலகை. (எ)

### மாவட்டணத்தின் பெயர்.

509. தட்டியம் பலகை தட்டுமா வட்டணம்.

மாவட்டணத்தின் பெயர்:—தட்டியம், பலகை, தட்டு. (ங)
[மாவட்டணம் - கேடயம் பரிசை]

### தோற்பலகையின் பெயர்.

510. தோற்பரந் தட்டுத் தோற்பலகை தோலுமாம்.

தோற்பலகையின் பெயர்:—தோற்பரம், தட்டு, தோல். (ங)

### யானைப் புரசைக் கயிற்றின் பெயர்.

511. தூசு கவடு புரசைக் கயிறெனல்.

யானைப் புரசைக் கயிற்றின் பெயர்:—தூசு, கவடு. (உ)

### யானை முகபடாத்தின் பெயர்.

512. சூழி படமே வேழ முகபடாம்.

யானை முகபடாத்தின் பெயர்:—சூழி, படம். (உ)

### இதுவுமது.

513. மலையின் மந்தன மென்றுஞ் சொல்லும்.

ஷை யானை முகபடாத்தின் பெயர்:—மந்தனம். (க) ஆ (ங)

### யானை கட்டுந் தறியின் பெயர்.

514. ஆளானம் வெளிலே யானை யணைதறி.

யானை கட்டும் தறியின் பெயர்:—ஆளானம், வெளில். (உ)

### யானைக் கச்சையின் பெயர்.

515. கரியின் கச்சை கண்ட மாகும்.

யானைக் கச்சையின் பெயர்:—கண்டம். (க)

### யானை மேற்றவிசின் பெயர்.

516. இலகடம் பலகாரந் தவிசென லாகும்.

யானை மேற்றவிசின் பெயர்:—இலகடம், பலகாரம். (உ)

இதுவுமது.

517. மணையும் பலகையு மப்பெயர் கூறும்.
ஷி யானை மேற்றவிசின் பெயர்:—மணை, பலகை. (உ) ஆ (ச)

குதிரைக் கலணையின் பெயர்.

518. பருமமும் பண்ணும் படையும்பல் லணமும்
பரமு மென்றிவை பரிமாக் கலணை.
குதிரைக் கலணையின் பெயர்:—பருமம், பண், படை, பல்லணம், பாம். (ரு)

இதுவுமது.

519. சூழியும் பரிமாக் கலணை யாகும்.
ஷி குதிரைக் கலணையின் பெயர்:—சூழி. (க) ஆ (சு)

குதிரை அங்கவடியின் பெயர்.

520. கச்சமும் படியு மங்கவடி யென்ப.
குதிரை அங்கவடியின் பெயர்:—கச்சம், படி. (உ)

குதிரைச் சம்மட்டியின் பெயர்.

521. மத்திகை கோலே மற்றிவை சம்மட்டி.
குதிரைச் சம்மட்டியின் பெயர்:—மத்திகை, கோல். (உ)

குதிரைக் கயிற்றின் பெயர்.

522. வற்கம்வாய் வட்டங் குசைக்கயி றென்ப.
குதிரைக் கயிற்றின் பெயர்:—வற்கம், வாய்வட்டம், குசை. (ங)

குதிரைக் கடிவாளத்தின் பெயர்.

523. கலியமு மூட்டுங் கிராமுங் கலினமுங்
கறுழு மென்றிவை கடிவா ளப்பெயர்.
குதிரைக் கடிவாளத்தின் பெயர்:—கலியம், மூட்டு, கிராம், கலினம், கறுழ். (ரு)

கடிவாளப் பூணின் பெயர்.

524. மற்றதற் கணியும் விருளை யெனலாகும்.
கடிவாளப் பூணின் பெயர்:—விருளை. (க)

கலப்பையின் பெயர்.

525. படையலர் தொடுப்புப் படைவா ளுஞ்சி
லிலாங்கலி யால முழுபடை கலப்பை.

கலப்பையின் பெயர்:—படை, அலம், தொடுப்பு, படைவாள், நாஞ்சில், இலாங்கலி, ஆலம், உழுபடை. (அ)

இதுவுமது.

526. கலனை யென்பதுங் கலப்பைப் பேரே.
இதுவுங் கலப்பையின் பெயர்:—கலனை. (க) ஆக (கக)

மேழியின் பெயர்.

527. கொடுநுக மேழிக் கூற்றுங் கும்மே.
மேழியின் பெயர்:—கொடுநுகம். (க)

குறுந்தறியின் பெயர்.

528. போதிகை குறுந்தறி.
குறுந்தறியின் பெயர்:—போதிகை. (க)

வேள்வித்தறியின் பெயர்.

529. யூபம்வேள் வித்தறி.
வேள்வித் தறியின் பெயர்:—யூபம். (க)

தூணின் பெயர்.

530. தாணுவுங் காலுங் கம்பமுந் தம்பமு
மாணமு மதலை யெழுவெளி லெனுந்தறி
தூணென் றுரைப்பர் கந்துஞ் சொல்லும்.
தூணின் பெயர்:—தாணு, கால், கம்பம், தம்பம், ஆணம், மதலை, எழு, வெளில், தறி, கந்து. (க0)

தொழுவின் பெயர்.

531. தொழுவின் பெயரே தொழு மாகும்.
தொழுவின் பெயர்:—தொழும். (க)

யானைத் தோட்டியின் பெயர்.

532. யானையின் குடாரி யங்குசந் தோட்டி.
தோண மியானை வணக்கியுங் கூறும்.
யானைத் தோட்டியின் பெயர்:—குடாரி, அங்குசம், தோட்டி, தோணம், யானை வணக்கி. (ரு)

அடைகுறட்டின் பெயர்.

533. அடைகுறட் டின்பெயர் பட்டடை யாகும்.
அடை குறட்டின் பெயர்:—பட்டடை. (க)

பெருங் குறட்டின் பெயர்.

534. கூறின் முருடு பெருங்குற டென்ப. (நே)

பெருங் குறட்டின் பெயர்:—முருடு.

சம்மட்டியின் பெயர்.

535. கொட்டுஞ்சம் மட்டி கூட மென்ப. (க)

சம்மட்டியின் பெயர்:—கூடம்.

சுட்டுக்கோலின் பெயர்.

536. சுட்டுக்கோ லாணி. (வ)

சுட்டுக்கோலின் பெயர்:—ஆணி.

கொழுவின் பெயர்.

537. கோல்கொழு வென்ப. (க)

கொழுவின் பெயர்:—கோல்.

ஒண்டியின் பெயர்.

538. ஊற்றாணி யொண்டி. (உ)

ஒண்டியின் பெயர்:—ஊற்றாணி.

பாரைக்கோலின் பெயர்.

539. மீன்குத்தி பாரைக்கோல். (ச)

பாரைக்கோலின் பெயர்:—மீன்குத்தி.

பதினெட்டாவது

## அக்குரோணி வகை.

பதாதி என்பது.

540. ஒருபெருங் களிறு மொருபெருந் தேரும்
புரவி மூன்றும் படைஞ ரைவரும்
பதாதி யென்று பகரப் படுமே.

பதாதி என்பது:—ஓர் யானையும், ஓர் தேரும், மூன்று பரியும், ஐந்து காலாளும் கொண்டது.

சேனாமுகம் என்பது.

541. பதாதி மும்மடி சேனா முகமே.

சேனாமுகம் என்பது:—பதாதி மூன்று பங்கு கொண்டது.

குமுதம் என்பது.

542. சேனுமுக மும்மடி தானுங் குமுதம்.

குமுதம் என்பது:—சேனுமுகம் மூன்று பங்கு கொண்டது.

கணகம் என்பது.

543. குமுத மும்மடி கொண்டது கணகம்.

கணகம் என்பது:—குமுதம் மூன்று பங்கு கொண்டது.

வாகினி என்பது.

544. கணக மும்மடி கொண்டது வாகினி.

வாகினி என்பது:—கணகம் மூன்று பங்கு கொண்டது.

பிரளயம் என்பது.

545. வாகினி மும்மடி யாகும் பிரளயம்.

பிரளயம் என்பது:—வாகினி மூன்று பங்கு கொண்டது.

சமுத்திரம் என்பது.

546. பிரளய மும்மடி கொண்டது சமுத்திரம்.

சமுத்திரம் என்பது:—பிரளயம் மூன்று பங்கு கொண்டது சமுத்திரம்.

சங்கம் என்பது.

547. சமுத்திர மும்மடி கொண்டது சங்கம்.

சங்கம் என்பது:—சமுத்திரம் மூன்று பங்கு கொண்டது.

அநீகம் என்பது.

548. சங்க மும்மடி கொண்ட தநீகம்.

அநீகம் என்பது:—சங்கம் மூன்று பங்கு கொண்டது.

அக்குரோணி என்பது.

549. அநீக மும்மடி யக்குரோணி யாகும்.

அக்குரோணி என்பது:—அநீகம் மூன்று பங்கு கொண்டது.

பத்தொன்பதாவது

வெள்ள வகை.

அக்குரோணி எட்டுப் பங்கு கொண்டது.

550. மூன்றையெண் மடங்கு கொண்டதொன் றேகம்.

அக்குரோணி எட்டுப் பங்கு கொண்டது:—ஏகம்.

ஏகம் எட்டுப் பங்கு கொண்டது.

551. ஏகமெண் மடங்கு கொண்டது கோடி.

ஏகம் எட்டுப் பங்கு கொண்டது:—கோடி.

கோடி எட்டுப் பங்கு கொண்டது.

552. கோடியெண் மடங்கு கொண்டது சங்கம்.

கோடி எட்டுப் பங்கு கொண்டது:—சங்கம்.

சங்கம் எட்டுப் பங்கு கொண்டது.

553. சங்கமெண் மடங்கு கொண்டது விந்தம்.

சங்கம் எட்டுப் பங்கு கொண்டது:—விந்தம்.

விந்தம் எட்டுப் பங்கு கொண்டது.

554. விந்தமெண் மடங்கு கொண்டது குமுதம்.

விந்தம் எட்டுப் பங்கு கொண்டது:—குமுதம்.

குமுதம் எட்டுப் பங்கு கொண்டது.

555. குமுதமெண் மடங்கு கொண்டது பதுமம்.

குமுதம் எட்டுப் பங்கு கொண்டது:—பதுமம்.

பதுமம் எட்டுப் பங்கு கொண்டது.

556. பதுமமெண் மடங்கு கொண்டது நாடு.

பதுமம் எட்டுப் பங்கு கொண்டது:—நாடு.

நாடு எட்டுப் பங்கு கொண்டது.

557. நாடெண் மடங்கு கொண்டது சமுத்திரம்.

நாடு எட்டுப் பங்கு கொண்டது:—சமுத்திரம்.

சமுத்திரம் எட்டுப் பங்கு கொண்டது.

558. சமுத்திரமெண் மடங்கு கொண்டது வெள்ளம்.

சமுத்திரம் எட்டுப் பங்கு கொண்டது:—வெள்ளம்.

இருபதாவது

## இல்லணி வகை.

கருமபூமியின் இயல்.

559. உழவு தொழிலே வரைவு வாணிகம்
விச்சை சிற்பமென் றித்திறத் தறுதொழிற்
கற்பனை யுடையது கருமபூமி.

கருமபூமியின் இயல்:—உழவு, தொழில், வரைவு, வாணிகம், விச்சை, சிற்பம் என அறுவகைப்படும் தொழிற் பாகுபாட்டினை யுடையது கருமபூமியின் இயல்.

போகபூமியின் இயல்.

560. பதினா றாட்டைக் குமரனுஞ் சிறந்த
பன்னீ ராட்டைக் குமரியு மாகி
யொத்த மரபினு மொத்த வன்பினுங்
கற்பக நன்மா நற்பய னுதவ
வாகிய செய்தவத் தளவு மவ்வுழிப்
போக நுகர்வது போக பூமி.

போகபூமியின் இயல்:—பதினாறு வயதுடைய குமரனும், பன்னிரண்டு வயதுடைய குமரியுமாய், தம்முளொத்த மரபும், தம்முளொத்த அன்பு முடையவராகிய தலைவனும், தலைவியும் கற்பகம்போலச் செல்வம் வந்து வாய்ப்பத் தாம் செய்த தவங்காறும் அப்பூமியில் இன்ப நுகர்வது போகபூமியின் இயல்.

போகபூமி - ஆரியரி வஞ்சம், நல்லரி வஞ்சம், ஏமத வஞ்சம், ஏம வஞ்சம், தேவ குருவம், உத்தர குருவம் என அறுவகைப்படும். இது கருமபூமியில் ஆதலால் பின்னர்க் கூறினர்.

ஆசிரியர் கூற்று.

561. அந்தண ரருமறை மன்ற லெட்டினுட்
பிரமந் தெய்வம் பிரசா பத்திய
மாரிடங் காந்தருவ மாசுர மிராக்கதம்
பைசாச மென்ன வெண்வகைப் படூஉம்
வதுவை வகையின் மணமொடு புணர்ந்தோர்
வாழ்க்கை யென்னு மில்லற நன்னெறிக்
கேற்பவை நாமத் தெரிந்திசி கூறுவன்.

ஆசிரியர் கூற்று:—அந்தணர்க்குரிய வேதத்திற் கூறிய பிரம முதலிய எட்டுவகைப்பட்ட கல்யாணத்தில் ஒருவகை மண முடையவராய், அவர்கள் வாழும் இல்வாழ்க்கைக் குரிய பொருள்களுள் முன்பு சொல்லா தொழிற்றவைகளை இங்குக் கூறுவேன்.

கட்டிலின் பெயர்.

562. கட்டில்பா ரிமஞ்சம் பரியங்கம் பாண்டில்.

கட்டிலின் பெயர்:—பாரி, மஞ்சம், பரியங்கம், பாண்டில். (௪)

விசியின் பெயர்.

563. கட்டிலின் விசியே யரியெனக் கழறும்.

விசியின் பெயர்:—அரி. (௧)

பீடத்தின் பெயர்.

564. பீடிகை தவிசு விட்டாம் பீடம். (௩)
பீடத்தின் பெயர்:—பீடிகை, தவிசு, விட்டாம்.

சிங்காதனத்தின் பெயர்.

565. பத்திரா தனம்சிங் காதன மென்ப. (௪)
சிங்காதனத்தின் பெயர்:—பத்திராதனம்.

உரலின் பெயர்.

566. கறையு முலூகலமுந் திட்டையு முரலே. (௫)
உரலின் பெயர்:—கறை, உலூகலம், திட்டை.

உலக்கையின் பெயர்.

567. முசலமுந் தடியு முரோங்கலு முலக்கை. (௬)
உலக்கையின் பெயர்:—முசலம், தடி, உரோங்கல்.

உறியின் பெயர்.

568. சிமிலி தூக்குச் சிக்கஞ் சிதருறி. (௭)
உறியின் பெயர்:—சிமிலி, தூக்கு, சிக்கம், சிதர்.

ஊஞ்சலின் பெயர்.

569. ஊசல் தூங்க லூரியு மாகும். (௮)
ஊஞ்சலின் பெயர்:—ஊசல், தூரி.

ஏணியின் பெயர்.

570. இறைவையுங் கடவையு மேணி யாகும். (௯)
ஏணியின் பெயர்:—இறைவை, கடவை.

கண்ணேணியின் பெயர்.

571. கண்ணே ணிப்பெயர் மால்பென் றாகும். (௧0)
கண்ணேணியின் பெயர்:—மால்பு.

அளவையின் பெயர்.

572. கச்சமுங் கடனு மளவை யாகும். (௧௧)
அளவையின் பெயர்:—கச்சம், கடன்.

மரக்காலின் பெயர்.

573. அம்பணந் தூம்புகா லாகலு மரக்கால். (௧௨)
மரக்காலின் பெயர்:—அம்பணம், தூம்பு, கால்.

தூக்குக்கோலின் பெயர்.

574. நிறையே கட்டளை வாணிக னிறுப்பான்
துலையே கோலொடு தூக்குக் கோலே.

தூக்குக் கோலின் பெயர்:—நிறை, கட்டளை, வாணிகன், நிறுப்பான், துலை, கோல். (௬)

கோத்தளிப்பாயின் பெயர்.

575. ஆரைகொத் தளிப்பாய்.

கொத்தளிப் பாயின் பெயர்:—ஆரை. (௧)

புற்பாயின் பெயர்.

576. சாப்பை புற்பாய்.

புற் பாயின் பெயர்:—சாப்பை. (௧)

பிரப்பம்பாயின் பெயர்.

577. சாதி பிரப்பம்பாய்.

பிரப்பம் பாயின் பெயர்:—சாதி. (௧)

தோற்பாயின் பெயர்.

578. சருமந் தோற்பாய்.

தோற் பாயின் பெயர்:—சருமம். (௧)

தடுக்கின் பெயர்.

579. தவிசு தடுக்கே.

தடுக்கின் பெயர்:—தவிசு. (௧)

குழாயின் பெயர்.

580. தண்டு குழாயே.

குழாயின் பெயர்:—தண்டு. (௧)

பூந்தட்டின் பெயர்.

581. பீடிகை படலிகை கோடிகம் பூந்தட்டு.

பூந்தட்டின் பெயர்:—பீடிகை, படலிகை, கோடிகம். (௩)

விளக்குத் தண்டின் பெயர்.

582. கௌசிக மல்லிகை கம்ப மத்திகை
சுடர்நிலைத் தண்டெனத் தீபமு மதற்கே.

விளக்குத் தண்டின் பெயர்:—கௌசிகம், மல்லிகை, கம்பம், மத்தி கை, தீபம். (ரு)

முறத்தின் பெயர்.

583. சின்னந் தட்டுச் சேட்டைமுச் சின்முறம். (௪)

முறத்தின் பெயர்:—சின்னம், தட்டு, சேட்டை, முச்சில்.
[முச்சில்-முற்றில் எனவும் பாடம்]

சுளகின் பெயர்.

584. சூர்ப்பஞ் சுளகே. (க)

சுளகின் பெயர்:—சூர்ப்பம்.

புட்டிலின் பெயர்.

585. இறைவை புட்டில். (க)

புட்டிலின் பெயர்:—இறைவை.

கூடையின் பெயர்.

586. வட்டிகை கூடை. (க)

கூடையின் பெயர்:—வட்டிகை.

துடைப்பத்தின் பெயர்.

587. துடைப்பஞ் சோதனி மாறலகு வாருகோல். (௪)

துடைப்பத்தின் பெயர்:—சோதனி, மாறு, அலகு, வாருகோல்.

நாழியின் பெயர்.

588. வட்டி குஞ்சம் படிநாழி யாகும். (௩)

நாழியின் பெயர்:—வட்டி, குஞ்சம், படி.

தயிர்கடை தறியின் பெயர்.

589 தயிர்கடை தறிவெளில். (க)

தயிர்கடை தறியின் பெயர்:—வெளில்.

தயிர்க் கோலின் பெயர்.

590. தயிர்க்கோன் மத்தாம். (க)

தயிர்க் கோலின் பெயர்:—மத்து.

காரம்பியின் பெயர்.

591. காராம்பி யம்பி. (க)

காராம்பியின் பெயர்:—அம்பி.

நீர்ப்பத்தலின் பெயர்.

592. பத்த லம்பணம்.
நீர்ப் பத்தலின் பெயர்:—அம்பணம். (க)

கரண்டியின் பெயர்.

593. காண்டங் காண்டி.
கரண்டியின் பெயர்:—காண்டம். (க)

அம்மியின் பெயர்.

594. அரைசிலே யம்மி யாகலு முரித்தே.
அம்மியின் பெயர்:—அரைசிலே. (க)

அம்மிக் கல்லின் பெயர்.

595. அம்மிக்கல் குழவி.
அம்மிக் கல்லின் பெயர்:—குழவி. (க)

சாணையின் பெயர்.

596 சிலாவட்ட மென்பது சாணை யாகும்.
சாணையின் பெயர்:—சிலாவட்டம். (க)

சந்தனமரை கல்லின் பெயர்.

597. சாணம் சிலாவட்டஞ் சந்தன மரைகல்.
சந்தனம் அரை கல்லின் பெயர்:—சாணம், சிலாவட்டம். (உ)

நாடாவின் பெயர்.

598. காருகர் நாடா நாழி யாகும்.
நாடாவின் பெயர்:—நாழி. (க)

இறைகூடையின் பெயர்.

599 இடாரிறை கூடை.
இறைகூடையின் பெயர்:—இடார். (க)

சும்மாட்டின் பெயர்.

600. சுமடு சுடுவுஞ் சுமையடை சும்மாடே.
சும்மாட்டின் பெயர்:—சுமடு, சுடு, சுமையடை. (௩)

பேரால வட்டத்தின் பெயர்.

601. ஆலவட்ட முக்கந் தால விருந்தம்.
பேர் ஆலவட்டத்தின் பெயர்:—உக்கம், தாலவிருந்தம். (உ)

இதுவுமது.

602. கால்செய் வட்டமு மப்பெயர் கழறும்.
ஷை பேராலவட்டத்தின் பெயர்:—கால்செய் வட்டம். (க) ஆ (கூ)

சிற்றாலவட்டத்தின் பெயர்.

603. சிவிறி யென்பது சிற்றால வட்டம். (க)
சிற்றால வட்டத்தின் பெயர்:—சிவிறி.

சாந்தாற்றியின் பெயர்.

604. பீலி யென்பது சாந்தாற்றி யாகும். (க)
சாந்தாற்றியின் பெயர்:—பீலி.

சீப்பின் பெயர்.

605. சிக்க மயிர்வாரி கங்கம் சீப்பெனல். (கூ)
சீப்பின் பெயர்:—சிக்கம், மயிர்வாரி, கங்கம்.

திரிகையின் பெயர்.

606. வட்டமும் பந்துந் தட்டுந் திரிகை. (கூ)
திரிகையின் பெயர்:—வட்டம், பந்து, தட்டு.

பந்தின் பெயர்.

607. கந்துகம் பந்தெனல். (க)
பந்தின் பெயர்:—கந்துகம்.

அம்மானையின் பெயர்.

608. அம்மனை யம்மானை. (க)
அம்மானையின் பெயர்:—அம்மனை.

மகளிர் விளையாட்டுக் கலத்தின் பெயர்.

609. ஓரை யென்பது விளையாட் டொண்கலம். (க)
மகளிர் விளையாட்டுக் கலத்தின் பெயர்:—ஓரை.

கூத்தர் கருவியின் பெயர்.

610. கலப்பை கூத்தர் கருவி யாகும். (க)
கூத்தர் கருவியின் பெயர்:—கலப்பை.

நீர் சிதறும் துருத்தியின் பெயர்.

611. நீர்சிதறுந் துருத்தி சிவிறி யாகும். (க)
நீர் சிதறும் துருத்தியின் பெயர்:—சிவிறி.

செருப்பின் பெயர்.

612. தொடுதோல் கழலிவை தோற்செருப் பாகும்.
செருப்பின் பெயர்:—தொடுதோல், கழல். (உ)

மிதியடியின் பெயர்.

613. பாதுகை மிதியடி பாவலு மாகும்.
மிதியடியின் பெயர்:—பாதுகை, பாவல். (உ)

மிதியடியின்மேலிட்ட கோட்டையின் பெயர்.

614. குடையே கல்லே கொட்டைய தன்பெயர்.
மிதியடியின் மேலிட்ட கொட்டையின் பெயர்:—குடை, கல்லே. (உ)

உலைத்துருத்தியின் பெயர்.

615. உதியத் திரிசிவை யுலைத்துருத் திப்பெயர்.
உலைத் துருத்தியின் பெயர்:—உதி, அத்திரி, சிவை. (ஙு)

கொல்லுலை மூக்கின் பெயர்.

616 குருகுஞ் சிவையுங் கொல்லுலை மூக்கே.
கொல்லுலை மூக்கின் பெயர்:—குருகு, சிவை. (உ)

சுண்ணச்சாந்தின் பெயர்.

617. சுதையே களபஞ் சுடுசுண்ணச் சாந்தே.
சுண்ணச் சாந்தின் பெயர்:—சுதை, களபம். (உ)

நெருப்புறு விறகின் பெயர்.

618 ஞெகிழி கொள்ளி நெருப்புறு விறகே.
நெருப்புறு விறகின் பெயர்:—ஞெகிழி, கொள்ளி. (உ)

விறகின் பெயர்.

619. இந்தனங் காட்டந் துவரிவை விறகே.
விறகின் பெயர்:—இந்தனம், காட்டம், துவர். (ஙு)

ஓமவிறகின் பெயர்.

620. சமிதை யோம விறகெனச் சாற்றும்.
ஓம விறகின் பெயர்:—சமிதை. (க)

அரிவாண்மணையின் பெயர்.

621. புள்ளங் கூர்வா யிரும்பரி வாண்மணை.
அரிவாள் மணையின் பெயர்:—புள்ளம், கூர்வாயிரும்பு. (உ)

சுக்கின் பெயர்.

622. நாகரஞ் சுண்டி சுக்கா கும்மே. (௨)

சுக்கின் பெயர்:—நாகரம், சுண்டி.

மிளகின் பெயர்.

623. திரங்கல் கலினை கோளக மிரியல்
காய மரீசம் கறியிவை மிளகே.

மிளகின் பெயர்:—திரங்கல், கலினை, கோளகம், மிரியல், காயம், மரீசம், கறி. (௭)

மஞ்சளின் பெயர்.

624. நிசியரி சனமே பீதங் காஞ்சனி
அரித்திர மின்னவை மஞ்ச ளாகும்.

மஞ்சளின் பெயர்:—நிசி, அரிசனம், பீதம், காஞ்சனி, அரித்திரம். (௫)

அரிசியின் பெயர்.

625. அரியே வீயந் தண்டுல மரிசி. (௩)

அரிசியின் பெயர்:—அரி, வீயம், தண்டுலம்.

தவிட்டின் பெயர்.

626. முட்டை தவிடே முடைபொதியு மாகும். (௩)

தவிட்டின் பெயர்:—முட்டை, முடை, பொதி.

பெருங்காயத்தின் பெயர்.

627. இங்குப் பெருங்காயம். (௧)

பெருங்காயத்தின் பெயர்:—இங்கு.

குங்கிலியத்தின் பெயர்.

628. குக்கில்குங் கிலியம். (௧)

குங்குலியத்தின் பெயர்:—குக்கில்.

கடுகின் பெயர்.

629. ஐயவி கடுகு. (௧)

கடுகின் பெயர்:—ஐயவி.

உப்பின் பெயர்.

630. இலவணமுப் பாகும். (௧)

உப்பின் பெயர்:—இலவணம்.

### பருப்பின் பெயர்.

631. மூதிரை முற்கம் பருப்பென மொழிப.
பருப்பின் பெயர்:—மூதிரை, முற்கம். (உ)

### அரக்கின் பெயர்.

632. அரத்தமுந் துப்பு மரக்கின் பெயரே.
அரக்கின் பெயர்:—அரத்தம், துப்பு. (உ)

### செத்தையின் பெயர்.

633 காடுந் தூராலு மயலுஞ் செத்தை.
செத்தையின் பெயர்:—காடு, தூரால், மயல். (௩)

### பாடையின் பெயர்.

634. பாடை வெள்ளிலா சந்தியு மாகும்.
பாடையின் பெயர்:—வெள்ளில், ஆசந்தி. (உ)

### தாழியின் பெயர்.

635. அகளமுஞ் சாடியும் பதலையு மன்றித்
தளமுந் தாழியின் சாற்றிய பெயரே.
தாழியின் பெயர்:—அகளம், சாடி, பதலை, தளம். (௪)

### நீர்ச்சாலின் பெயர்.

636 நிறைவட்ட மிடங்கர் நீர்ச்சா லாகும்.
நீர்ச்சாலின் பெயர்:—நிறை, வட்டம், இடங்கர். (௩)

### கொப்பரையின் பெயர்.

637. கொப்பரை கொப்பரி கடாரந் தசும்பு.
கொப்பரையின் பெயர்:—கொப்பரி, கடாரம், தசும்பு. (௩)

### குடத்தின் பெயர்.

638. கடமு மிடங்கருந் தாழியு மிறங்கருங்
குணமு மிரும்பையுங் கும்பமுங் குடங்கரும்
குடந்தமுங் கலசமு மிடக்கருங் குடமே.
குடத்தின் பெயர்:—கடம், இடங்கர், தாழி, இறங்கர், குணம், இரும்பை, கும்பம், குடங்கர், குடந்தம், கலசம், இடக்கர். (கக)

### மிடாவின் பெயர்.

639. கரீரங் குழிசி முகைதடா மிடாவே.
மிடாவின் பெயர்:—கரீரம், குழிசி, முகை, தடா. (௪)

பானையின் பெயர்.

640. குண்டமு மிடாவுங் குழிசியும் பானை.
பானையின் பெயர்:— குண்டம், மிடா, குழிசி. (௩)

தயிர்கடை தாழியின் பெயர்.

641. குடாரு மந்தினி வெண்டயிர்த் தாழி.
தயிர்கடை தாழியின் பெயர்:—குடார், மந்தினி. (௨)

கரகத்தின் பெயர்.

642. கர்க்கரி சிரகங் கன்னல் கரகம்.
கரகத்தின் பெயர்:—கர்க்கரி, சிரகம், கன்னல். (௩)

மட்கலத்தின் பெயர்.

643. கடிஞை பாத்திர மட்கல மாகும்.
மட்கலத்தின் பெயர்:—கடிஞை, பாத்திரம். (௨)

தகழியின் பெயர்.

644. இடிஞ்சில் பாண்டி லெரிசுடர்த் தகழி.
தகழியின் பெயர்:—இடிஞ்சில், பாண்டில். (௨)

குடுவையின் பெயர்.

645. குடுவை குண்டம்.
குடுவையின் பெயர்:—குண்டம். (௧)

சட்டியின் பெயர்.

646 விசளை சட்டி.
சட்டியின் பெயர்:—விசளை. (௧)

அகலின் பெயர்.

647. சராவஞ் சுத்திகை யிடிஞ்சிலக லென்ப.
அகலின் பெயர்:—சராவம், சுத்திகை, இடிஞ்சில். (௩)

கொள்கலத்தின் பெயர்.

648. இடுங்கலங் கொள்கலம் பாண்ட மென்ப.
கொள்கலத்தின் பெயர்:—இடுங்கலம், பாண்டம். (௨)

வெற்றிலையின் பெயர்.

649. நாக வல்லி தாம்பூலம் வெற்றிலை.
வெற்றிலையின் பெயர்:—நாகவல்லி, தாம்பூலம். (௨)

### பாக்கின் பெயர்.

650. கோலந் துவர்க்காய் பாகு பாக்கே.
பாக்கின் பெயர்:—கோலம், துவர்க்காய், பாகு. (௩)

### சுண்ணாம்பின் பெயர்.

651. சுண்ணமு நீறும் சுண்ணாம் பாகும்.
சுண்ணாம்பின் பெயர்:—சுண்ணம், நீறு. (௨)

### திருநீற்றின் பெயர்.

652. பூதி யோமப் பொடிவிபூதி காப்புப்
புண்ணிய சாந்தம்வெண் டாது திருநீறே.
திருநீற்றின் பெயர்:—பூதி, ஓமப்பொடி, விபூதி, காப்பு, புண்ணிய சாந்தம், வெண்டாது. (௬)

### சாணியின் பெயர்.

653. புண்ணிய சாந்தஞ் சாணிசா ணாகம்.
சாணியின் பெயர்:—புண்ணியசாந்தம், சாணாகம். (௨)

### சாம்பலின் பெயர்.

654. அடலை வெண்பலி சாம்ப லாகும்.
சாம்பலின் பெயர்:—அடலை, வெண்பலி. (௨)

### பெட்டியின் பெயர்.

655. மஞ்சிகம் பெட்டி.
பெட்டியின் பெயர்:—மஞ்சிகம். (௧)

### பேழையின் பெயர்.

656. மஞ்சிகை பேழை.
பேழையின் பெயர்:—மஞ்சிகை. (௧)

### அணிகலச் செப்பின் பெயர்.

657. கண்டிகை பீடிகை காண்டங் கடிப்ப
மன்றியுங் கோடிக மணிகலச் செப்பே.
அணிகலச் செப்பின் பெயர்:—கண்டிகை, பீடிகை, காண்டம், கடிப்பம், கோடிகம். (௫)

ஆறாவது
அநுபோக வகை முற்றிற்று.

---

ஏழாவது

# பண்பிற்செயலின் பகுதிவகை.

## உள்ள நல்வகை.

### குணத்தின் பெயர்.

1. உள்ள நல்வகை யுரைக்குங் காலை
மாலையும் பெற்றியு மாபுங் கிழமையும்
பாலும் விதியும் பான்மையு மியல்புந்
தகவுந் தகுதியுந் தகைமையுந் தன்மையும்
பரிசும் படியு முறையும் பண்பு
நிலையும் வண்மையு நீருஞ் சால்புங்
குணமென லதன்பெயர் கொள்கையு மாகும்.

குணத்தின் பெயர்:—மாலை, பெற்றி, மாபு, கிழமை, பால், விதி, பான்மை, இயல்பு, தகவு, தகுதி, தகைமை, தன்மை, பரிசு, படி, முறை, பண்பு, நிலை, வண்மை, நீர், சால்பு, கொள்கை. (உக)

[உள்ள நல்வகை - மனத்தின் நல்வகை]

### உயர்வின் பெயர்.

2. உவப்புப் புரைசே ணுன்னதந் துங்க
நிவப்பு மேடு நீள்வரி பிறங்க
லேந்த லொழுகல் போக லோச்ச
லோங்கல் வார்த லுறையுயர் வென்ப.

உயர்வின் பெயர்:—உவப்பு, புரை, சேண், உன்னதம், துங்கம், நிவப்பு, மேடு, நீள், வரி, பிறங்கல், ஏந்தல், ஒழுகல், போகல், ஓச்சல், ஓங்கல், வார்தல், உறை. (கஎ)

### வலியின் பெயர்.

3. முரணு மறமு முன்பு நோன்மையு
முரமும் பாழியு மூக்கமு மதுகையு
முடலையு மும்பலு மூரியுந் தோற்றமு
மிடலும் மள்ளமுங் கூளியு மீடுந்
திறமு மெழிலு மெறுழுந் திண்மையும்
வயமும் விறலு மைந்துந் துப்பு
மீளியு மடலுந் தாவு மாண்மையும்
ஆற்றலுங் கோளு மிகலு மொய்ம்பும்
மதனுங் கலியும் வலியின் பெயரே.

வலியின் பெயர்:—முரண், மறம், முன்பு, நோன்மை, உரம், பாழி, ஊக்கம், மதுகை, முடலை, உம்பல், ஊரி, சோற்றம், மிடல், மள்ளம், கூளி, ஈடு, திறம், எழில், எறுழ், திண்மை, வயம், விறல், மைந்து, துப்பு, மீளி, அடல், தா, ஆண்மை, ஆற்றல், கோள், இகல், மொய்ம்பு, மதன், கலி. (௩௰௪)

### மாட்சிமையின் பெயர்.

4. மாணலு மாணுஞ் சால்பு மதனு
மான்றலு வாய்த்தலு மாட்சிமை யாகும்.

மாட்சிமையின் பெயர்:—மாணல், மாண், சால்பு, மதன், ஆன்றல், வாய்த்தல். (௬)

### கொழுமையின் பெயர்.

5 கொழுமையுஞ் செழுமையும் வளமையுங் கொழுப்பே.

கொழுமையின் பெயர்:—செழுமை, வளமை, கொழுப்பு. (௩)

### குளிரின் பெயர்.

6 நளிபனி சீதந் தண்மை சீதளங்
குளிரின் பெயரே நளிருங் கூறும்.

குளிரின் பெயர்:—நளி, பனி, சீதம், தண், சீதளம், நளிர். (௬)

### செவ்வியின் பெயர்.

7. செவ்வையுஞ் செப்பமுஞ் செம்மையுஞ் செவ்வனு
மிவ்வகை பிறவுஞ் செவ்வியின் பெயரே.

செவ்வியின் பெயர்:—செவ்வை, செப்பம், செம்மை, செவ்வன் (௪)

### அறிவின் பெயர்.

8. உணர்வு காட்சி யுரனே மேதை
தெளிவு புலனே தெருட்சி போதம்
புத்தி ஞான மறிவெனப் புகல்வர்.

அறிவின் பெயர்:—உணர்வு, காட்சி, உரன், மேதை, தெளிவு, புலன், தெருட்சி, போதம், புத்தி, ஞானம். (௰)

### வெற்றியின் பெயர்.

9. வலனுங் கொற்றமும் வாகையு முல்லையுஞ்
சயமு மாடும் புகலும் படிணமும
விசயமும் வெற்றமும் வென்றியும் வெற்றி.

வெற்றியின் பெயர்:—வலன், கொற்றம், வாகை, முல்லை, சயம், ஆடு, புகல், படிணம், விசயம், வெற்றம், வென்றி. (௰௧)

செல்வத்தின் பெயர்.

10. சீரும் வெறுக்கையும் விபவமுந் திருவு
மாவு மாக்கமும் வாழ்க்கையும் பொறியு
மாகுஞ் செல்வத் தபிதா னம்மே.

செல்வத்தின் பெயர்:—சீர், வெறுக்கை, விபவம், திரு, மா, ஆக்கம், வாழ்க்கை, பொறி. (அ)

பற்றின் பெயர்.

11. பரிவு மார்வமு மீரமும் பற்றே.

பற்றின் பெயர்:—பரிவு, ஆர்வம், ஈரம். (௩)

அன்பின் பெயர்.

12. அளிநார் சங்க நேய மன்பே.

அன்பின் பெயர்:—அளி, நார், சங்கம், நேயம். (௪)

இதுவுமது.

13. பாச மென்றும் பேசப் படுமே.

ஷை அன்பின் பெயர்:—பாசம். (க) ஆ (டு)

அருளின் பெயர்.

14. தகவுங் கருணையு மிரக்கமுந் தயவுங்
கிருபையு மபயமுங் கிளரரு ளாகும்.

அருளின் பெயர்:—தகவு, கருணை, இரக்கம், தயவு, கிருபை, அபயம். (௬)

மனத்தின் பெயர்.

15. முன்னமு மகமு முள்ளமு முன்னமும்
இதயமு நெஞ்சு முள்ளு மனமே.

மனத்தின் பெயர்:—முன்னம், அகம், உள்ளம், உன்னம், இதயம், நெஞ்சு, உள். (எ)

குறிப்பின் பெயர்.

16. சிந்தையு நினைவுந் தெளிவுந் தியானமு
மிங்கிதமுங் கருத்து மெண்ணமுங் குறிப்பே.

குறிப்பின் பெயர்:—சிந்தை, நினைவு, தெளிவு, தியானம், இங்கிதம், கருத்து, எண்ணம். (எ)

இதுவுமது.

17. அங்கது நாட்டிய மாகவு முரித்தே.

ஷை குறிப்பின் பெயர்:—நாட்டியம். (க) ஆ (அ)

### குறித்தலின் பெயர்.

18. கண்ண னுதலல் காணல் புகற
லெண்ணல் பேணல் கருதல் சுட்ட
லுன்ன லென்றிவை குறித்தலை யுரைக்கும்.

குறித்தலின் பெயர்:—கண்ணல், நுதலல், காணல், புகறல், எண்ணல், பேணல், கருதல், சுட்டல், உன்னல். (௯)

### வரையறுத்தலின் பெயர்.

19. குணித்தலுங் கணித்தலுங் குறித்தலு மன்றி
மதித்தலும் வரையறுத் தற்பொருட் டாமே.

வரையறுத்தலின் பெயர் : — குணித்தல், கணித்தல், குறித்தல், மதித்தல். (௪)

### தேடலின் பெயர்.

20. நாடலு நேடலுந் தேட லாகும்.

தேடலின் பெயர்:—நாடல், நேடல். (௨)

### இதுவுமது.

21. கூடலுங் கையரிக் கொளலு மதற்கே.

ஷை தேடலின் பெயர்:—கூடல், கையரிக்கொளல். (௨) ஆக (௪)

### நினைத்தலின் பெயர்.

22. உன்னல் படர்த லூழ்த்தல் கருதல்
முன்ன லறிதல் வலித்தல்சிந் தித்தல்
எண்ண லனைத்து நினைப்பென் றிசைப்பர்.

நினைத்தலின் பெயர்:—உன்னல், படர்தல், ஊழ்த்தல், கருதல், முன்னல், அறிதல், வலித்தல், சிந்தித்தல், எண்ணல். (௯)

### ஏமாப்பின் பெயர்.

23. ஏமாப்புச் செம்மாப்பு.

ஏமாப்பின் பெயர்:—செம்மாப்பு. (௧)

### இறுமாப்பின் பெயர்.

24. எக்கழுத்த மிறுமாப்பு.

இறுமாப்பின் பெயர்:—எக்கழுத்தம். (௧)

### களிப்பின் பெயர்.

25. மதர்ப்பு மதர்வை மதந்தருக் கேமம்
பெருமிதஞ் செருக்கும் பேசிற் களிப்பே.

களிப்பின் பெயர்:—மதர்ப்பு, மதர்வை, மதம், தருக்கு, ஏமம், பெருமிதம், செருக்கு. (எ)

## இன்பத்தின் பெயர்.

26. நகையு மேமமு நயமு மகிழ்ச்சியுஞ்
சுகமுங் கடியுந் தொய்யலு மின்பம்.

இன்பத்தின் பெயர்:—நகை, ஏமம், நயம், மகிழ்ச்சி, சுகம், கடி, தொய்யல். (எ)

## பேரின்பத்தின் பெயர்.

27. அகமலர்ச்சி பேரின்ப மாநந்த மாகும்.

பேரின்பத்தின் பெயர்:—அகமலர்ச்சி, ஆநந்தம். (உ)

## சுகத்தின் பெயர்.

28. சந்தமுந் தருமமு மழகுமகிழ் வுஞ்சுகம்.

சுகத்தின் பெயர்:—சந்தம், தருமம், அழகு, மகிழ்வு. (ச)

## தெளிவின் பெயர்.

29. தெருளு மானவு முணர்வுந் தேறலுந்
தேற்றமுந் துணிவுந் தெளிவின் றிறத்த.

தெளிவின் பெயர்:—தெருள், மானவு, உணர்வு, தேறல், தேற்றம், துணிவு. (சு)

## நயத்தின் பெயர்.

30. நறுமை விழுப்ப நன்னர் நயமே.

நயத்தின் பெயர்:—நறுமை, விழுப்பம், நன்னர். (ந)

## நன்மையின் பெயர்.

31. உறுதி யாண ரொண்மை யுத்தமம்
நன்றி சேடு நன்மைநன் றுரும்.

நன்மையின் பெயர்:—உறுதி, யாணர், ஒண்மை, உத்தமம், நன்றி, சேடு, நன்று. (எ)

## பொறுத்தலின் பெயர்.

32. சமித்தலு நோன்றலுங் கமித்தலும் பொறுத்தல்.

பொறுத்தலின் பெயர்:—சமித்தல், நோன்றல், கமித்தல். (ங)

## முயற்சியின் பெயர்.

33. முயற்சி யூக்க மியற்றி யாள்வினை
யுஞற்றுத் தாடப் புற்சா கம்மே.

முயற்சியின் பெயர்:—ஊக்கம், இயற்றி, ஆள்வினை, உஞற்று, தாள், துப்பு, உற்சாகம். (எ)

உற்சாகத்தின் பெயர்.

34. உஞற்றுத் தாள்வினை துப்பூக்க முற்சாகம்.
உற்சாகத்தின் பெயர்:—உஞற்று, தாள், வினை, துப்பு, ஊக்கம். (ரு)

இலாபத்தின் பெயர்.

35. பலனு மூதியமும் பயனு மாக்கமும்
பேறும் பலித்தலு மிலாபப் பெயரே.
இலாபத்தின் பெயர்:—பலன், ஊதியம், பயன், ஆக்கம், பேறு, பலித்தல். (சு)

ஒற்றுமையின் பெயர்.

36. ஒருமை குறிப்பே யொற்றுமை யாகும்.
ஒற்றுமையின் பெயர்:—ஒருமை, குறிப்பு. (உ)

துணையின் பெயர்.

37. இணையுந் துப்புஞ் சகாயமு மென்றிவை
துணையென்ப புகலுஞ் சொல்லுவர் புலவர்.
துணையின் பெயர்:—இணை, துப்பு, சகாயம், புகல். (சு)

தவத்தின் பெயர்.

38. நோன்பென் கிளவி தான்றவ மாகும்.
தவத்தின் பெயர்:—நோன்பு. (க)

இதுவுமது.

39. உவ்வென் கிளவியு மோதுவ ரதற்கே.
டி தவத்தின் பெயர்:—உவ்வு. (க) ஆ (உ)

நல்வினையின் பெயர்.

40. தானமு மறமுந் தருமமுஞ் சீலமு
மருளுமங் கலமுஞ் சுபமுஞ் சுகிர்தமும்
புண்ணியமும் பாக்கியமு நல்வினை யாகும்.
நல்வினையின் பெயர்:—தானம், அறம், தருமம், சீலம், அருள், மங்கலம், சுபம், சுகிர்தம், புண்ணியம், பாக்கியம். (௧௦)

அருச்சனையின் பெயர்.

41. ஆரா தனையே வழிபா டருச்சனை.
அருச்சனையின் பெயர்:—ஆராதனை, வழிபாடு. (உ)

பூசையின் பெயர்.

42. பூசனை யென்ப பூசையின் பெயரே.
பூசையின் பெயர்:—பூசனை. (க)

யாகத்தின் பெயர்.

43. சித்து யாகம் வேள்விகிரு தாகும்.
யாகத்தின் பெயர்:—சித்து, வேள்வி, கிருது. (ங)

வெறுப்பின் பெயர்.

44. வெறுப்பொல் லாமையும் வேண்டா மையுமுனிவு
மொறுத்தலு முவர்த்தலு முவர்ப்பு மாகும்.
வெறுப்பின் பெயர்:—ஒல்லாமை, வேண்டாமை, முனிவு, ஒறுத்தல், உவர்த்தல், உவர்ப்பு. (ரு)

துறவின் பெயர்.

45. துறத்த னிவிர்த்தி துறவா கும்மே.
துறவின் பெயர்:—துறத்தல், நிவிர்த்தி. (உ)

உறவின் பெயர்.

46. உறவி விருப்ப முறவா கும்மே.
உறவின் பெயர்:—உறவி, விருப்பம். (உ)

நாணத்தின் பெயர்.

47. வெட்க மிலச்சை வெள்கல் சமழ்த்தல்
வட்க லிருளை மானமு மன்றி
யுட்கு நாணத் துரைசெயப் படுமே.
நாணத்தின் பெயர்:—வெட்கம், இலச்சை, வெள்கல், சமழ்த்தல், வட்கல், இருளை, மானம், உட்கு. (அ)

செல்வப்பகுதியின் பெயர்.

48. மல்லுந் தடமும் வளமும் வாரியுஞ்
செல்வப் பகுதிக்குச் செப்பிய பெயரே.
செல்வப் பகுதியின் பெயர்:—மல், தடம், வளம், வாரி. (ச)

நிலைபேற்றின் பெயர்.

49. துஞ்சன் மன்ன றிதிநிலை பேறே.
நிலைபேற்றின் பெயர்:—துஞ்சல், மன்னல், திதி. (ங)

இதுவுமது.

50. அங்கது திறமோ டெணந் தானு
வெண்பன் மூன்று மிசைக்கப் பெறுமே.

ஷை நிலைபேற்றின் பெயர்:—திறம், எணம், தானு. (௩) ஆ_ (௬)

மெய்யின் பெயர்.

51. சாதம் வாய்மை சத்திய முண்மை
நீதி நிலைமை நியாய நிச்சயம்
வாய்திட மாணை மன்றஞ் சாதம்
வேளாண்மை பட்டாங்கு மெய்யென வுரைப்பர்.

மெய்யின் பெயர்—சாதம், வாய்மை, சத்தியம், உண்மை, நீதி, நிலைமை, நியாயம், நிச்சயம், வாய், திடம், ஆணை, மன்றம், சாதம், வேளாண்மை, பட்டாங்கு. (௧௫)

பிழைப்பின் பெயர்.

52. இழுக்கம் வழுக்குத் தப்பல் பிழைப்பென்ப
உஞற்றும் பணைத்தலு முளவப் பெயர்க்கே.

பிழைப்பின் பெயர்:—இழுக்கம், வழுக்கு, தப்பல், உஞற்று, பணைத்தல். (௫)

ஆதலின் பெயர்.

53. ஆத னந்துதல்.

ஆதலின் பெயர்:—நந்துதல். (௧)

ஏவலின் பெயர்.

54. ஆணை யேவல்.

ஏவலின் பெயர்:—ஆணை. (௧)

ஒற்றின் பெயர்.

55 வேயென் கிளவி யொற்றா கும்மே.

ஒற்றின் பெயர்:—வேய். (௧)

செய்தியின் பெயர்.

56. செயல்செய்கை செய்தல் செய்தி யாகும்.

செய்தியின் பெயர்:—செயல், செய்கை, செய்தல். (௩)

ஒழுக்கத்தின் பெயர்.

57. சரியை யாசார நடையியல் பொழுக்கம்.

ஒழுக்கத்தின் பெயர்:—சரியை, ஆசாரம், நடை, இயல்பு. (௪)

நீதியின் பெயர்.

58. நெறியு நியாயமுந் தருமமு நீதி.
நீதியின் பெயர்:—நெறி, நியாயம், தருமம். (ங)

இதுவுமது.

59. விதியு நிழலும் வரைவின் றென்ப.
ஷெ நீதியின் பெயர்:—விதி, நிழல். (உ) ஆ (ரு)

உள்ளின் பெயர்.

60. அகணி யகடே யகமே கோட்டை
யுரைசெயி னின்னவை யுள்ளா கும்மே.
உள்ளின் பெயர்:—அகணி, அகடு, அகம், கோட்டை. (ச)

சூழ்ச்சியின் பெயர்.

61. சூழ்ச்சி யுசாவே தேர்ச்சி விசாரம்
யாப்பே யெண்ண மந்திர நூலே.
சூழ்ச்சியின் பெயர்:—உசா, தேர்ச்சி, விசாரம், யாப்பு, எண்ணம், மந்திரம், நூல். (எ)

இதுவுமது.

62. ஆய்தலுந் தேர்தலு மாகலு மூரித்தே.
ஷெ சூழ்ச்சியின் பெயர்:—ஆய்தல், தேர்தல். (உ) ஆ (கூ)

உண்டாதலின் பெயர்.

63. விளைதல் பூத்தல் படுதலுண் டாதல்.
உண்டாதலின் பெயர்:—விளைதல், பூத்தல், படுதல். (ங)

தோற்றுதலின் பெயர்.

64. பிறப்பித்தலும் படைத்தலு காறலும்வெளிப் படலுந்
தோற்றலு முருத்தலுந் தோற்றுத லாகும்.
தோற்றுதலின் பெயர்:—பிறப்பித்தல், படைத்தல், காறல், வெளிப்படல், தோற்றல், உருத்தல். (சு)

காத்தலின் பெயர்.

65. நிலைபெ றுத்தலும் புரத்தலு மளித்தலுங்
காப்பு நோக்கலுந் திதியுங்காத் தலென்ப.
காத்தலின் பெயர்:—நிலைபெறுத்தல், புரத்தல், அளித்தல், காப்பு, நோககல், திதி. (சு)

பாதுகாத்தலின் பெயர்.

66. போற்ற லோம்பல் நோக்கல்பா துகாத்தல்.

பாதுகாத்தலின் பெயர்:—போற்றல், ஓம்பல், நோக்கல். (௩)

காவலின் பெயர்

67. இறையு மரணுஞ் சேமமுஞ் செயலுங்
காப்பும் வேலியுங் கடியுந் தட்டியுங்
கட்டுந் தட்டுங் காவற் பெயரே.

காவலின் பெயர்:—இறை, அரண், சேமம், செயல், காப்பு, வேலி, கடி, தட்டி, கட்டு, தட்டு. (௧௦)

கொள்கையின் பெயர்

68. தெவ்வு வரைதல் தேர்தலேற் றலெனக்
கூறிய பிறவுங் கொள்கை யாகும்.

கொள்கையின் பெயர்:—தெவ்வு, வரைதல், தேர்தல், ஏற்றல். (௪)

மேற்கோளின் பெயர்.

69. பூட்கை யென்பது மேற்கோ ளாகும்.

மேற்கோளின் பெயர்:—பூட்கை. (௧)

உய்தலின் பெயர்.

70. ஆற்றுதல் வலித லுய்த லாகும்.

உய்தலின் பெயர்:—ஆற்றுதல், வலிதல். (௨)

தூய்மை செய்தலின் பெயர்.

71. உவளித்த றூய்மை செய்தலை யுரைக்கும்.

தூய்மை செய்தலின் பெயர்:—உவளித்தல். (௧)

உடன்பாட்டின் பெயர்.

72. வலித்த லொட்ட னேர்த லிசைதலென்
றறைந்த பலவு முடன்பா டாகும்.

உடன்பாட்டின் பெயர்:—வலித்தல், ஒட்டல், நேர்தல், இசைதல். (௪)

விதிமுறையின் பெயர்.

73. நியமமென் கிளவி விதிமுறை யாகும்.

விதிமுறையின் பெயர்:—நியமம். (௧)

குற்றலின் பெயர்.

74. நவித்தலுந் துப்பலுந் துற்றலுங் குற்றல்.
குற்றலின் பெயர்:—நவித்தல், துப்பல், துற்றல்.

அவியலின் பெயர்.

75. அவைத்தலு மவித்தலு மவிய லாகும்.
அவியலின் பெயர்:—அவைத்தல், அவித்தல்.

ஒட்டுதலின் பெயர்.

76 அணவ லொட்டுதல்.
ஒட்டுதலின் பெயர்:—அணவல்.

தெரிதலின் பெயர்.

77. தெள்ளுத றெரிதல்.
தெரிதலின் பெயர்:—தெள்ளுதல்.

தெளிதலின் பெயர்.

78 தேறுதல் தெளித லாகச் செப்புவர்.
தெளிதலின் பெயர்:—தேறுதல்.

கேளாவென்றலின் பெயர்.

79. வேளா வென்பது கேளா வென்றல்.
கேளா வென்றலின் பெயர்:—வேளா.

தவிர்தலின் பெயர்.

80. வாளாவென் கிளவி தவிர்த லாகும்.
தவிர்தலின் பெயர்:—வாளா.

தேற்றத்தின் பெயர்.

81. மன்ற தேறு தேற்ற மாகும்.
தேற்றத்தின் பெயர்:—மன்ற, தேறு.

ஆமென்னும் பெயர்.

82. அன்றெனை வின்றெனை லாமென லாகும்.
ஆமென்னும் பெயர்:—அன்றெனல், இன்றெனல்.

சரண்புகலின் பெயர்.

83. மறைபுகல் கிளவி சரண்புக லாகும்.
சரண் புகலின் பெயர்:—மறைபுகல்.

எண்ணலின் பெயர்.

84 கரணமுங் கணிதமுங் கணக்கு மெண்ணல்.
எண்ணலின் பெயர்:—கரணம், கணிதம், கணக்கு. (௩)

நிமித்தத்தின் பெயர்.

85. சோதனஞ் சோதிட நிமித்தச் சொல்லே.
நிமித்தத்தின் பெயர்:—சோதனம், சோதிடம். (௨)

உடனிகழ்வின் பெயர்.

86. ஒடுவென் கிளவி யுடனிகழ் வாகும்.
உடன் நிகழ்வின் பெயர்:—ஒடு. (௧)

பெயரின் பெயர்.

87. அபிதான மாக்குவய நாமமும் பெயரே.
பெயரின் பெயர்:—அபிதானம், ஆக்குவயம், நாமம். (௩)

ஆதாரநிலையின் பெயர்.

88 கந்துமா லம்பமு பாலம் பனமும்
தஞ்சமுந் தாவு மாதார நிலையே.
ஆதார நிலையின் பெயர்:—கந்து, ஆலம்பம், ஆலம்பனம், தஞ்சம், தாவு. (௫)

பேரறிவின் பெயர்.

89. முதுக்குறைவு பேரறிவு முசரிமையு மாகும்.
பேரறிவின் பெயர்:—முதுக்குறைவு, முசரிமை. (௨)

உள்ளது சிறத்தலின் பெயர்.

90. கூர்ப்புங் கழிப்பு முள்ளது சிறத்தல்.
உள்ளது சிறத்தலின் பெயர்:—கூர்ப்பு, கழிப்பு. (௨).

## இரண்டாவது
## உள்ளத்தின் றியல்வகை.

தீவினையின் பெயர்.

91 பவமும் பாவமும் பாதகமுந் தீவினை.
தீவினையின் பெயர்:—பவம், பாவம், பாதகம், (௩)

### தாழ்வின் பெயர்.

92 சாய்ப்பு மிழிவுந் தண்மையுந் தஞ்சமுந்
தாழ்வென் கிளவித் தன்மைய தாகும்.
தாழ்வின் பெயர்:—சாய்ப்பு, இழிவு, தண்மை, தஞ்சம். (ஃ)

### கூம்புதலின் பெயர்.

93. சாம்புத லொடுங்குதல் கூம்புத லாகும்.
கூம்புதலின் பெயர்:—சாம்புதல், ஒடுங்குதல். (உ)

### அச்சத்தின் பெயர்

94. உருமு முருவு முட்கும் பனிப்பும்
வெருவும் புலம்பும் வெறியும் பயமும்
பிறப்புங் கொன்னும் பேமு நாமும்
வெறுப்புஞ் சூரும் பீரும் வெடியுங்
கவலையு மடுப்புங் கலக்கமு மச்சம்.
அச்சத்தின் பெயர்:—உரும், உருவு, உட்கு, பனிப்பு, வெருவு, புலம்பு, வெறி, பயம், பிறப்பு, கொன், பேம், நாம், வெறுப்பு, சூர், பீர், வெடி, கவலை, அடுப்பு, கலக்கம். (கூ)

### குலைதலின் பெயர்.

95 ஓடல் வெய்துற லுலமர றேங்கல்
கூச றிட்கல் குலைய றுணுக்கெனல்
வெள்க றுண்ணென றெருமா லளுக்கல்
ஞொள்கல் பிறவுங் குலைதலி னுவல்பெயர்.
குலைதலின் பெயர்:—ஓடல் வெய்துறல், உலமரல், தேங்கல், கூசல், திட்கல், குலையல், துணுக்கெனல், வெள்கல், துண்ணெனல், தெருமரல், அளுக்கல், ஞொள்கல். (சு)

### நடுக்கத்தின் பெயர்.

96. விதிர்ப்புப் பனிப்பு விதலை கம்பம்
அதிர்ப்புப் பொதிர்ப்பு விதப்பு நடுக்கம்.
நடுக்கத்தின் பெயர்:—விதிர்ப்பு, பனிப்பு, விதலை, கம்பம், அதிர்ப்பு, பொதிர்ப்பு, விதப்பு. (எ)

### கலக்கத்தின் பெயர்.

97. கதனமுந் துரிதமும் பிரமமும் கலக்கம்.
கலக்கத்தின் பெயர்:—கதனம், துரிதம், பிரமம். (அ)

இதுவுமது.

98 வெறியென் றுரைப்பது மப்பெயர் மேற்றே.

ஷெடி கலக்கத்தின் பெயர்:—வெறி. (க) அடி (சா)

எளிமையின் பெயர்.

99. எண்மை பரிபவ மிழிதகவு மெளிமை.

எளிமையின் பெயர்:—எண்மை, பரிபவம், இழிதகவு. (௩)

இதுவுமது.

100. தண்மை யென்பது மதன்பாற் சாற்றும்.

ஷெடி எளிமையின் பெயர்:—தண்மை. (க) அடி (சா)

பேதைமையின் பெயர்.

101 பேதைமை மடைமை வெறியே மருட்சி.

பேதைமையின் பெயர்:—மடைமை, வெறி, மருட்சி. (௩)

மாசின் பெயர்.

102. கசடு மலினமுங் கறையு மழுக்கும்
மலமுங் களங்கமு மாசா கும்மே.

மாசின் பெயர்:—கசடு, மலினம், கறை, அழுக்கு, மலம், களங்கம். (௬)

குற்றத்தின் பெயர்.

103. காசுந் தவறுங் கறையுங் களங்கமு
மாசும் வசையு மறுவும் வடுவும்
ஆசும் புகரு மரிலுங் களையு
மேசும் பழியும் போக்கு மேதமு
கறையும் வண்டுங் கடையு கவையு
மிறையும் பிழையும் விடலுங் கரிலுந்
தோமுந் தப்புந் துகளும் புரையுங்
கோதுஞ் செயிரும் மையுங் குற்றம்.

ற்றத்தின் பெயர்:—காசு, தவறு, கறை, களங்கம், மாசு, வசை, மறு, வடு, ஆசு, புகர், அரில், களை, ஏசு, பழி, போக்கு, ஏதம், கறை, வண்டு, கடை, கவை, மிறை, பிழை, விடல், கரில், தோம், தப்பு, துகள், புரை, கோது, செயிர், மை. (௩௧)

இதுவுமது.

104 இழுக்குஞ் சோர்வும் புன்மையு மிகழ்ச்சியும்
வழுக்குங் கீழு மறவியும்பொல் லாங்கும்
பொச்சாப் பென்பதும் புகலுமப் பெயர்க்கே.

ஷை குற்றத்தின் பெயர்:—இழுக்கு, சோர்வு, புன்மை, இகழ்ச்
வழுக்கு, கீழ், மறவி, பொல்லாங்கு, பொச்சாப்பு. (கூ)ஆ_(

வெம்மையின் பெயர்.

105. உருமமுங் கருமமு முருப்பமும் வெப்பமு
மழனமுங் கோரமு மழலும் வெம்மை.

வெம்மையின் பெயர்:—உருமம், கருமம், உருப்பம், வெப்பம், அ
னம், கோரம், அழல். (

தோல்வியின் பெயர்.

106. நிலையழி வோட்டம் பின்னிட றோல்வே
தொலைத றோற்ற லஞ்சறல் விப்பெயர்.

தோல்வியின் பெயர்:—நிலையழிவு, ஓட்டம், பின்னிடல், தோல்
தொலைதல், தோற்றல், அஞ்சல். (

கொடுமையின் பெயர்.

107. கடுமை கோடணை சண்டங் கடினங்
கொடுமையின் பெயரிவை கூரமு மாகும்.

கொடுமையின் பெயர்:—கடுமை, கோடணை, சண்டம், கடின
கூரம். (

இதுவுமது.

108. உக்கிரங் கோர முறைப்புப் பூதி
வக்கிரம் வஞ்சஞ் சடங்கரி லுமாமே.

ஷை கொடுமையின் பெயர்:—உக்கிரம், கோரம், உறைப்பு, பூதி
வக்கிரம், வஞ்சம், சடம், கரில். (அ) ஆ_ (

மறப்பின் பெயர்.

109. வழுக்கு மறவியு மயர்ப்பு மிவறலு
மறப்பென் கிளவி மறலு மாகும்.

மறப்பின் பெயர்:—வழுக்கு, மறவி, அயர்ப்பு, இவறல், மறல். (

வறுமையின் பெயர்.

110. மிசைகுறை மிடியே தரித்திர மொற்க
மிலம்பா டிலாமை நல்குரவும் வறுமை.

வறுமையின் பெயர்:—மிசை, குறை, மிடி, தரித்திரம், ஒற்கம்
இலம்பாடு, இலாமை, நல்குரவு. (

இதுவுமது

111. மறலு மின்மையு நிரப்புமற் றதன்பெயர்.

ஷெ வறுமையின் பெயர்:—மறல், இன்மை, நிரப்பு. (௩) ஆ (௧௧)

பகையின் பெயர்.

112. முனையு மூசணு முறழ்வுந் தூவும்
படியுந் தெவ்வுந் துப்பும்பகை யென்ப.

பகையின் பெயர்:—முனை, மூசண், உறழ்வு, தூவு, படி, தெவ், துப்பு. (௭)

இதுவுமது.

113. இகலுஞ் செறலு மதன்பெய ரென்ப.

ஷெ பகையின் பெயர்:—இகல், செறல். (௨) ஆ (௧)

வெகுளியின் பெயர்.

114. கறுவங் கோபங் கலாமறங் குரோதம்
வெகுளி யென்பர் வேரமு மாகும்.

வெகுளியின் பெயர்:—கறுவம், கோபம், கலாம், மறம், குரோதம், வேரம். (௬)

சினத்தின் பெயர்.

115. முனிவுஞ் செயிருஞ் சீற்றமும் வியர்ப்புஞ்
சினமென் கிளவி தெரிக்குங் காலை.

சினத்தின் பெயர்:—முனிவு, செயிர், சீற்றம், வியர்ப்பு. (௪)

சினக் குறிப்பின் பெயர்.

116. கறுப்புஞ் செவப்புங் கனறலுங் கன்றலும்
வியர்ப்பும் வெதிர்ப்பும் புழுங்கலுங் கொதித்தலும்
வெய்துறலும் புகைதலும் வயிரமு மினைத்தும்
சினத்தின் குறிப்பினைத் தெரிக்குங் கிளவி.

சினக் குறிப்பின் பெயர்:—கறுப்பு, செவப்பு, கனறல், கன்றல், வியர்ப்பு, வெதிர்ப்பு, புழுங்கல், கொதித்தல், வெய்துறல், புகைதல், வயிரம். (௧௧)

தணியாக் கோபத்தின் பெயர்.

117. கோம்பலுங் கொந்தலுங் கனிதலும் வெம்பலும்
வெதும்பலுந் தணியாக் கோப மென்ப.

தணியாக் கோபத்தின் பெயர்:—கோம்பல், கொந்தல், கனிதல், வெம்பல், வெதும்பல். (௫)

பெருஞ் சினத்தின் பெயர்.

118. உடற்றல் சீற லுருத்தல் காய்தன்
முனைதல் விடைத்தல் பைத்தல் பெருஞ்சினம்.

பெருஞ் சினத்தின் பெயர்:—உடற்றல், சீறல், உருத்தல், காய்தல், முனைதல், விடைத்தல், பைத்தல். (௭)

தணியா முனிவின் பெயர்.

119. சலமும் வயிரமுஞ் செற்றமு மற்றிவை
கறுவுகொள் நெஞ்சங் கடைமுடி வளவுந்
தணியா முனிவு தானா கும்மே.

தணியா முனிவின் பெயர்:—சலம், வயிரம், செற்றம். (௮)

இகழ்தலின் பெயர்.

120. எள்ள னகுத னிந்தை யிகழ்தல்.

இகழ்தலின் பெயர்:—எள்ளல், நகுதல், நிந்தை. (௯)

வருத்தத்தின் பெயர்.

121. உயவே யனுக்கங் கவற்சி யுயங்க
லயர்வே கசிவே யாகுல மணங்கு
வயாவே யழுங்கல் வருத்த மாகும்.

வருத்தத்தின் பெயர்:—உயவு, அனுக்கம், கவற்சி, உயங்கல், அயர்வு, கசிவு, ஆகுலம், அணங்கு, வயா, அழுங்கல். (௧௦)

குண மின்மையின் பெயர்.

122. சீரணஞ் சிதம்பு சித்தை செடியெனக்
கூடிய பலவுங் குணமின்மை யாகும்.

குணம் இன்மையின் பெயர்:—சீரணம், சிதம்பு, சித்தை, செடி. (௧௧)

துக்கத்தின் பெயர்.

123. அல்லல் பீடை யரந்தைகோட் டாலை
செல்லல் கலக்கஞ் சிறுமை யுறுகண்
கவ்வை மம்மர் விழுமங் கவலை
யெவ்வ மின்ன லிடும்பை யிடுக்கண்
படர்சூர் பைதல் பருவரல் பழங்க
ணிடரு ரேதம் யாதனை யிட்டளங்
கலக்கம் புன்கண் டனிமோய் கப்பலை
யலக்கண் வெய்துற லழுங்கல் பிறழ

யலமா னடலை யுறுவல் வெறுப்பே
இலேசந் துயர்துனி துன்பந் துக்கமாம்.

துக்கத்தின் பெயர்:—அல்லல், பீடை, அரந்தை, கோட்டாலை, செல்லல், கலக்கம், சிறுமை, உறுகண், கவ்லை, மம்மர், விழுமம், சவலை, எவ்வம், இன்னல், இடும்பை, இடுக்கண், படர், சூர், பைதல், பருவரல், பழங்கண், இடர், அஞர், ஏதம், யாதனை, இட்டளம், கலக்கம், புன்கண், பனி, நோய், கம்பலை, அலக்கண், வெய்துறல், அழுங்கல், பீழை, அலமரல், நடலை, உறுவல், வெறுப்பு, இலேசம், துயர், துனி, துன்பம். (௩௩)

இதுவுமது.

124. துரிசு மல்ல கண்டமுந் தாராலுஞ்
சிலுகுமலந் தலையுஞ் செப்பற் குரித்தே.

ஷை துக்கத்தின் பெயர்:—துரிசு, அல்லகண்டம், தரால், சிலுகு, அலந்தலை. (டு) ஆ (௩அ)

சந்தேகத்தின் பெயர்.

125. அநுமானமுஞ் சங்கையுஞ் சந்தேக மாகும்.

சந்தேகத்தின் பெயர்:—அநுமானம், சங்கை. (உ)

இதுவுமது.

126 ஐயுறல் கடுத்தலு மப்பெயர்க் குரித்தே.

ஷை சந்தேகத்தின் பெயர்:—ஐயுறல், கடுத்தல். (உ) ஆ (௪)

மயக்கத்தின் பெயர்.

127. களிப்பு மறமுங் கழுமலும் பிறப்பு
மாலு மறலு மையலு மான்றலு
மிருளு மைந்து மேமமு மிளமையு
மருளு மயர்வு மயக்க மென்ப.

மயக்கத்தின் பெயர்:—களிப்பு, மறம், கழுமல், பிறப்பு, மால், மறல், மையல், மான்றல், இருள், மைந்து, ஏமம், இளமை, மருள், மயர்வு. (கச)

இதுவுமது.

128. மோகமு முணரா மையுமுன் மத்தமுங்
களனென் கிளவியு மப்பெயர்க் கட்டுரை.

ஷை மயக்கத்தின் பெயர் :—மோகம், உணராமை, உன்மத்தம், களன். (௪) ஆ (கஅ)

தீதின் பெயர்.

129. தீங்குங் கோளு மூறுந் தீதெனல். (௩)
தீதின் பெயர்:—தீங்கு, கோள், ஊறு.

இதுவுமது.

130. ஆங்கது மாயமு மந்தரமு மென்ப. (௨) ஆக (௫)
ஷை தீதின் பெயர்:—மாயம், அந்தரம்.

பொய்யின் பெயர்.

131. படிறு மிச்சையும் பெட்டும் பழுதும்
வழுதுந் தத்தி காரமு மாயமும்
பொக்கமும் பிசியு நடலையும் பொய்யே.
பொய்யின் பெயர்:—படிறு, மிச்சை, பெட்டு, பழுது, வழுது, தத்திகாரம், மாயம், பொக்கம், பிசி, நடலை. (௧௦)

பொறாமையின் பெயர்.

132. நோனாமை வக்கிர மழுக்கா றவ்வியம்
கூர மென்பது பொறாமையின் கூற்றே.
பொறாமையின் பெயர்:—நோனாமை, வக்கிரம், அழுக்காறு, அவ்வியம், கூரம். (௫)

சோம்பலின் பெயர்.

133. தூங்க லசைத லலைசுதல் சோம்பே. (௩)
சோம்பலின் பெயர்:—தூங்கல், அசைதல், அலைசுதல்.

இதுவுமது.

134. சடமடி தள்ளா வாரமுந் தகுமே.
ஷை சோம்பலின் பெயர்:—சடம், மடி, தள்ளாவாரம். (௩) ஆக (௬)

வஞ்சனையின் பெயர்.

135. கூடம் புள்ளுவங் குத்திரங் கஞ்ச
மாயைதொடுப் பட்டிமை வஞ்சனை யாகும்.
வஞ்சனையின் பெயர்:—கூடம், புள்ளுவம், குத்திரம், கஞ்சம், மாயை, தொடு, பட்டிமை. (௭)

வேறுபாட்டின் பெயர்.

136. வேற்று விகிர்தம் விகடம் விரூபம்
வேற்றுமை விபரீதம் வேறுபா டாகும்.

வேறுபாட்டின் பெயர்:—வீற்று, விகிர்தம், விகடம், விரூபம், வேற்றுமை, விபரீதம். (௬)

### இதுவுமது.

137. திரிபும் விள்ளலும் செப்புமப் பெயர்க்கே.

ஷை வேறுபாட்டின் பெயர்:—திரிபு, விள்ளல். (௨) ஆக (௮)

### தளர்வின் பெயர்.

138. எளிமை யுடைத லிட்டளந் தளர்வே.

தளர்வின் பெயர்:—எளிமை, உடைதல், இட்டளம். (௩)

### தனிமையின் பெயர்.

139. கேவலமும் புலம்புந் தனிமையைக் கிளக்கும்.

தனிமையின் பெயர்:—கேவலம், புலம்பு. (௨)

### பாவத்தின் பெயர்

140. தீவினை மறமே செடியே யகமே
துரிதங் கலுடம் பாவ மாமே.

பாவத்தின் பெயர்:—தீவினை, மறம், செடி, அகம், துரிதம், கலுடம். (௬)

### விருப்பத்தின் பெயர்.

141. மாதர் காதல் வயாவே வேட்கை
யாதர வாசை யவாவே யார்வ
நச்சுநசை விழைவு நயப்புக் காம
மிச்சை பெட்பு மோக மேட்டை
வெப்பம் பற்று விழுப்பம் வீழ்தல்
இவர்தல் கவர்தல் வேண்டல் பேணல்
வேட்ட றாழ்தல் வெஃகலும் விருப்பம்.

விருப்பத்தின் பெயர்:—மாதர், காதல், வயாவு, வேட்கை, ஆதரவு, ஆசை, அவா, ஆர்வம், நச்சு, நசை, விழைவு, நயப்பு, காமம், இச்சை, பெட்பு, மோகம், ஏட்டை, வெப்பம், பற்று, விழுப்பம், வீழ்சல், இவர்தல், கவர்தல், வேண்டல், பேணல், வேட்டல், தாழ்தல், வெஃகல். (௨௮)

### வேட்கைப் பெருக்கத்தின் பெயர்.

142. வேட்கைப் பெருக்கம் வேணவா வாகும்.

வேட்கைப் பெருக்கத்தின் பெயர்:—வேணவா. (௧)

### நோயின் பெயர்.

143. மடங்கல் பிணிமடி மாரி பையு
ளணங்கு வியாதி யவல நீழல்
உறுகண் புன்கண் உரோகஞ் சூர்நோய்.

நோயின் பெயர்:—மடங்கல், பிணி, மடி, மாரி, பையுள், அணங்கு, வியாதி, அவலம், நீழல், உறுகண், புன்கண், உரோகம், சூர். (க௩)

### இதுவுமது.

144 சிறுமையுங் குத்து மப்பெயர் தெரிக்கும்.

௸ நோயின் பெயர்:—சிறுமை, குத்து. (உ) ஆக (க௫)

### வேதனை நோயின் பெயர்.

145. ஈதி வாதை வேதனை நோயே.

வேதனை நோயின் பெயர்:—ஈதி, வாதை. (உ)

### காமநோயின் பெயர்.

146. விரக மதனங் காமக் கவலை
காம நோயின் கட்டுரை யாகும்.

காம நோயின் பெயர்:—விரகம், மதனம், காமக்கவலை. (௩)

### களவின் பெயர்.

147. காப்புக் கட்டல் பட்டிமை சோர்வு
கயவு படிறு கரவடங் களவே.

களவின் பெயர்:—காப்பு, கட்டல், பட்டிமை, சோர்வு, கயவு, படிறு, கரவடம். (௭)

### பயனின்மையின் பெயர்.

148 வறிதுங் கொன்னும் விழலும் விதாவு
மல்லவை பயனில் சொல்லா கும்மே.

பயன் இன்மையின் பெயர்:—வறிது, கொன், விழல், விதா, அல்லவை. (௫)

### மரணத்தின் பெயர்.

149. மூஞ்சலுந் துவன்றலு முடிதலும் விளிதலுந்
துஞ்சலுந் தவறலு மிறப்பும் பொன்றலும்
வீய்வு முலப்பும் வீடலு மாய்தலு
மாண்டலு மரித்தலுஞ் சாவு மரணம்.

மரணத்தின் பெயர்:—முஞ்சல், துவன்றல், முடிதல், விளிதல், துஞ்சல், தவறல், இறப்பு, பொன்றல், வீய்வு, உலப்பு, வீடல், மாய்தல், மாண்டல், மரித்தல், சாவு. (௧௫)

### இதுவுமது.

150 இல்லெனலென்பதுஞ் சொல்லப் படுமே.

இ-மரணத்தின் பெயர்:—இல்லெனல். (௧) ஆக (௧௬)

### சாய்தலின் பெயர்.

151. இரிதல் நெரிதல் இடைதல் உடைதல்
கெடுதல் சரிதல் சாய்த லாகும்.

சாய்தலின் பெயர்:—இரிதல், நெரிதல், இடைதல், உடைதல், கெடுதல், சரிதல். (௬)

### பிணக்கின் பெயர்.

152. அரின்மற லபரந் துவக்கென வமைந்த
பெரியவை நான்கும் பிணக்கென மொழிப.

பிணக்கின் பெயர்:—அரில், மறல், அபரம், துவக்கு. (௪)

### முறிதலின் பெயர்.

153. ஒடித லொசிதன் ஞெமிர்த லிடிதன்
முரித லிறுதன் முறிதற் பெயரே.

முறிதலின் பெயர்:—ஒடிதல், ஒசிதல், ஞெமிர்தல், இடிதல், முரிதல், இறுதல். (௬)

### கேட்டின் பெயர்.

154. வழுவு சிதைவு மங்குதல் சேத
மழிவு சிந்துதல் நந்துதன் முரித
லிறுதல் சுதமடி யொருங்கல் கேடென்ப.

கேட்டின் பெயர்:—வழுவு, சிதைவு, மங்குதல், சேதம், அழிவு, சிந்துதல், நந்துதல், முரிதல், இறுதல், சுதம், மடி, ஒருங்கல். (௧௨)

### கொலையின் பெயர்.

155. கோளே யணங்கு வேட்டங் கொலையெனல்.

கொலையின் பெயர்:—கோள், அணங்கு, வேட்டம். (௩)

### வெளிற்றின் பெயர்.

156. வெண்மையுந் தண்மையும் வெளிறென லாகும்.

வெளிற்றின் பெயர்:—வெண்மை, தண்மை. (௨)

### புன்மையின் பெயர்.

**157.** நவிர மென்பது புன்மை யாகும்.
புன்மையின் பெயர்:—நவிரம். (க)

### இரங்குதலின் பெயர்.

**158.** இனைத லெற்றித்த லிரங்குத லாகும்.
இரங்குதலின் பெயர்:—இனைதல், எற்றித்தல். (உ)

### அருவருப்பின் பெயர்.

**159.** வாலாமை சூதகம் பயிர்ப்பரு வருப்பே.
அருவருப்பின் பெயர்:—வாலாமை, சூதகம், பயிர்ப்பு. (ங)

### ஒழிதலின் பெயர்.

**160.** ஓவு மன்னு மொழிதற் சொல்லே.
ஒழிதலின் பெயர்:—ஓவு, மன். (உ)

### இதுவுமது.

**161.** ஏனையு மப்பெய ரியல்பா கும்மே.
ஷை ஒழிதலின் பெயர்:—ஏனை. (க) ஆ (ங)

### கலங்குதலின் பெயர்.

**162.** கதுவே கலுழல் கலங்குதல் மலங்குதல்.
கலங்குதலின் பெயர்:—கதுவு, கலுழ்தல், மலங்குதல். (ங)

### குலுங்குதலின் பெயர்.

**163.** குலைத னடுங்குதல் குலுங்குத லாகும்.
குலுங்குதலின் பெயர்:—குலைதல், நடுங்குதல். (உ)

### வாட்டத்தின் பெயர்.

**164.** தேம்பலுங் குழைதலு மனுங்கலு ழுளியும்
வாடலுந் தளர்தலும் வாட்டமென லாகும்.
வாட்டத்தின் பெயர்:—தேம்பல், குழைதல், அனுங்கல், ழுளி, வாடல், தளர்தல். (சு)

### குழைதலின் பெயர்.

**165.** சுனைதல் களைதல் குழைத லாகும்.
குழைதலின் பெயர்:—சுனைதல், களைதல். (உ)

மாறுபாட்டின் பெயர்.

166. தெற்றே மாறுபா டாகத் தெரிக்கும்.

மாறுபாட்டின் பெயர்:—தெற்று. (க)

நிலையின்மையின் பெயர்.

167. வம்பென் கிளவி நிலையின்மை யின்பெயர்.

நிலை இன்மையின் பெயர்:—வம்பு. (க)

மேன்மையின் பெயர்.

168. கயவுஞ் சாயலு ஞெள்ளலு மேன்மை.

மேன்மையின் பெயர்:— கயவு, சாயல், ஞெள்ளல். (ஙு)

மனக்கோட்டத்தின் பெயர்.

169. அழுக்காறு மனத்தழுக்கு மவ்வியமு மனக்கோட் [டம்.

மனக் கோட்டத்தின் பெயர்:—அழுக்காறு, மனத்தழுக்கு, அவ்வியம். (ஙு)

மூன்றாவது

மெய் வகை.

பருமையின் பெயர்.

170. மெய்வகைக் கியன்றன விளம்புங் காலைப்
பருஉம் பீனமுந் தடித்தலும் பருமை.

பருமையின் பெயர்:—பருஉ, பீனம், தடித்தல். (ஙு)

இளைப்பின் பெயர்.

171. தேம்பலும் பழங்கணுஞ் சிங்கலுந் தேய்வு
நாம்பலு ஞொள்கலு மெலிவு மிளைப்பே.

இளைப்பின் பெயர்:—தேம்பல், பழங்கண், சிங்கல், தேய்வு, நாம்பல், ஞொள்கல், மெலிவு. (எ)

வெண்மையின் பெயர்.

172. சுவேதந் தவளஞ் சுக்கிலங் குருத்து
விளர்வால் வெள்ளை நரைசிதம் வெண்மை.

வெண்மையின் பெயர்:—சுவேதம், தவளம், சுக்கிலம், குருத்து, விளர், வால், வெள்ளை, நரை, சிதம். (கூ)

இதுவுமது.

173. குருகுபால் சுப்பிர மென்னவுங் கூறும்.

ஷை வெண்மையின் பெயர்:—குருகு, பால், சுப்பிரம். (ஙு) ஆ (கஉ)

## பொன்மையின் பெயர்.

174. பீதகம் பசப்புப் பிங்கல மரிதம்
நாலுங்காஞ் சனியும் பொன்மையின் பெயரே.

பொன்மையின் பெயர்:—பீதகம், பசப்பு, பிங்கலம், அரிதம், காஞ்சனி. (௫)

## சேவப்பின் பெயர்.

175. அத்து மருணமு மாத்தமுஞ் சேப்புஞ்
சோணமுங் குருதியுந் துவருஞ்சிந் தூரமும்
பூவலும் படீரமும் சேத்து மரக்கும்
செக்கருஞ் செம்மையுஞ் சேந்துபா டலமுங்
கிஞ்சுகமுங் குலிகமுந் துப்புஞ் செவப்பே.

செவப்பின் பெயர்:—அத்து, அருணம், அரத்தம், சேப்பு, சோணம், குருதி, துவர், சிந்தூரம், பூவல், படீரம், சேத்து, அரக்கு, செக்கர், செம்மை, சேந்து, பாடலம், கிஞ்சுகம், குலிகம், துப்பு. [செவப்பு - இதைச் சிவப்பெனவும் வழங்குவர்.] (௬)

## பச்சையின் பெயர்.

176. பாசும் பையு மரியும் பசுமையும்
பலாசுஞ் சாமமு மரிதமும் பச்சை.

பச்சையின் பெயர்:—பாசு, பை, அரி, பசுமை, பலாசு, சாமம், அரிதம். (௭)

## கருநிறத்தின் பெயர்.

177. காளமுங் காழகமுங் காளிமமுங் காரிமால்
மாவு மிருளு நீலமு மசிதமுங்
காருமஞ் சனமு நல்லமுங் கருளு
மாகுங் கருநிறத் தபிதா னம்மே.

கரு நிறத்தின் பெயர்:—காளம், காழகம், காளிமம், காரி, மால், மா, இருள், நீலம், அசிதம், கார், அஞ்சனம், நல்லம், கருள். (௮)

## புற்கெனு நிறத்தின் பெயர்.

178 கபிலங் குரால்புகர் புற்கெனு நிறமே.

புத்கெனு நிறத்தின் பெயர்:—கபிலம், குரால், புகர். (௯)

## ஒளியின் பெயர்.

179 வெயிலு நிலவும் விலலும் வாளு
நிழலு மெல்லு நீமமு நகையுங்

கானலுங் கிரணமுங் கதிருஞ் செடியுஞ்
சோதியு மின்னுந் துணியு மரியுங்
கேழுங் காமுந் தேசுங் இளரொளி.

ஒளியின் பெயர்:—வெயில், நிலவு வில், வாள், நிழல், எல், நீமம், நகை, கானல், கிரணம், கதிர், செடி, சோதி, மின், துணி, அரி, கேழ், காம், தேசு, இளர். (உ0)

## இதுவுமது

180. ஆதவ மென்பது மதன்பாற் படுமே.

வெடி ஒளியின் பெயர்:—ஆதவம். (க) ஆ_ (உக)

## ஒளிவிடுதலின் பெயர்

181. விளங்குத னுருதன் மின்னன் மினிர்த
லுளங்குத னிகழ்தல் சுடர்தல் பிறழ்த
லிலங்கல் வயங்க லிலகுத லிமைத்த
லலங்க றயங்க லவிர்த னிலவ
லொளிர்த லென்றிவை யொளிவிட லாகும்.

ஒளி விடுதலின் பெயர்:—விளங்குதல், நுருதல், மின்னல், மினிர்தல், துளங்குதல், நிகழ்தல், சுடர்தல், பிறழ்தல், இலங்கல், வயங்கல், இலகுதல், இமைத்தல், அலங்கல், தயங்கல், அவிர்தல், நிலவல், ஒளிர்தல். (கஎ)

## ஒளி மழுங்குதலின் பெயர்.

182. மட்கல் புல்லெனன் மழுங்குத லழுங்குதல்
ஒளிமழுங் குதலென வுரைத்தல் வேண்டும்.

ஒளி மழுங்குதலின் பெயர்:—மட்கல், புல்லெனல், மழுங்குதல், அழுங்குதல். (௮)

## அழகின் பெயர்.

183. ஏரும் வனப்பு மெழிலு மிராமமுங்
காரிகையு மாவு மம்மையுங் கவினுஞ்
செழுமையும் பத்தமுந் தேசிகமு நோக்கு
மணியு மணங்கு மியாணரும் வாரியு
மதரு மாமையுஞ் சாயலும் வகுப்பும்
வண்ணமும் வளமும் பூவும் பொற்புஞ்
சேடும் பொன்னுஞ் சித்திரமும் பத்திரமு
பாமையுந் தளிமமு மயமு மஞ்சு
மதனும் பாங்கு மம்முஞ் சொக்குஞ்

சுந்தரமுந் தோட்டியு மையு மொப்பு
மந்தமு மொண்மையும் விடங்கமு மமலமுங்
குழருங் கோலமும் வாமமுங் காந்தியு
மழகின் பெயரலங் காரமு மாகும்.

அழகின் பெயர்:—ஏர், வனப்பு, எழில், இராமம், காரிகை, மா, அம்மை, கவின், செழுமை, பந்தம், தேசிகம்; நோக்கு, அணி, அணங்கு; யாணர், பாணி, மாதர், மாழை, சாயல், வகுப்பு, வண்ணம், வளம், பூ, பொற்பு, சேடு, பொன், சித்திரம், பத்திரம், மாணை, தளிமம், மயம், மஞ்சு, மதன், பாங்கு, அம், சொக்கு, சுந்தரம், தோட்டி, ஐ, ஒப்பு, அந்தம், ஒண்மை, விடங்கம், அமலம், குழரு, கோலம், வாமம், காந்தி, அலங்காரம். (௪௧)

இதுவுமது.

184. கொம்மையு மனோகரமுஞ் சாருவுங் கூறுப.
ஷை அழகின் பெயர்:—கொம்மை, மனோகரம், சாரு. (௩)-ஆ-(௫௨)

கட்டழகின் பெயர்.

185. சித்திர மனோகரஞ் சுந்தரங்கட் டழகே.
கட்டழகின் பெயர்:—சித்திரம், மனோகரம், சுந்தரம். (௩)

நிறத்தின் பெயர்.

186 குருவுங் கொழுமையுங் குணமுங் கொழுமையு
மரியுஞ் சாயலும் வருணமு மன்றிப்
பயப்புங் கறையுங் கருவு நிறமே.
நிறத்தின் பெயர்:—குரு, கொழுமை, குணம், கொழுமை, அரி, சாயல், வருணம், பயப்பு, கறை, கரு. (௧௰)

வடிவத்தின் பெயர்.

187. செண்ணம் படிவம் வடிவ மென்ப.
வடிவத்தின் பெயர்:—செண்ணம், படிவம். (௨)

வண்ணத்தின் பெயர்.

188. வண்ணஞ் சந்தம்.
வண்ணத்தின் பெயர்:—சந்தம். (௧)

வளைதலின் பெயர்.

189. குடிலந் தடவு கூன்கோண் கோட்டம்
வசிவு கோணல் வாங்கல் குலாவல்
வளாவலென் றின்னவை வளைத லாகும்.

வளைதலின் பெயர்:—குடிலம், தடவு, கூன், கோண், கோட்டம், வசிவு, கோணல், வாங்கல், குலாவல், வளாவல். (௰)

இளமையின் பெயர்.

190. மழவு முருகுந் தருணமு மஞ்சுங்
குழவும் விளருங் கொம்மையும் புருவையுங்
கோமளமும் போதகமு மிளமையின் கூற்றே.

இளமையின் பெயர்:—மழவு, முருகு, தருணம், மஞ்சு, குழவு, விளர், கொம்மை, புருவை, கோமளம், போதகம். (௰)

முதுமையின் பெயர்.

191. முதுமை மூப்பு முரஞ்சுதன் முற்றுதல்.

முதுமையின் பெய:—மூப்பு, முரஞ்சுதல், முற்றுதல். (௩)

இதுவுமது.

192. விளைவும் சாம்பலும் விதந்துகொளப் படுமே.

ஷை முதுமையின் பெயர்:—விளைவு, சாம்பல். (௨) ஆக (௫)

கலியாணத்தின் பெயர்.

193. வதுவை மன்றல் மணங்கலி யாணம்.

கலியாணத்தின் பெயர்:—வதுவை, மன்றல், மணம். (௩)

இதுவுமது.

194. கடியும் வேட்டலுங் கைப்பற்றலு மாகும்.

ஷை கலியாணத்தின் பெயர்:—கடி, வேட்டல், கைப்பற்றல். (௩) ஆக (௬)

கொண்டாடுதலின் பெயர்.

195. குலாவல் பாராட்டுக் கொண்டா டுதலே.

கொண்டாடுதலின் பெயர்:—குலாவல், பாராட்டு. (௨)

அலங்கரித்தலின் பெயர்.

196. புனைதலு மண்ணலும் பொற்புறுத் துதலு
மணிதலுங் கைசெய் தலுமலங் கரித்தல்.

அலங்கரித்தலின் பெயர்:—புனைதல், மண்ணல், பொற்புறுத்துதல், அணிதல், கைசெய்தல். (௫)

சிங்காரத்தின் பெயர்.

197. அணியே பொற்புக் கையலங் காரந்
தெரியினைப் பனையுஞ் சிங்கார மாகும்.

சிங்காரத்தின் பெயர்:—அணி, பொற்பு, கை, அலங்காரம், ஒப்பனை. (௫)

புதுமையின் பெயர்.

198. புதைபுணர் விருந்து புத்தேள் கடிநவ
நூதனங் கோடகம் வம்பிவை புதுமை.

புதுமையின் பெயர்:— புதை, புணர், விருந்து, புத்தேள், கடி, நவம், நூதனம், கோடகம், வம்பு. (௯)

மகளிர் விளையாட்டின் பெயர்.

199. தொடலையுங் தகுளமு மகளிர்விளை யாட்டே. (௨)

மகளிர் விளையாட்டின் பெயர்:—தொடலை, தகுளம்.

சூடுதலின் பெயர்.

200. மிலைதலு மலைதலும் வேய்தலுஞ் சூடுதல். (௩)

சூடுதலின் பெயர்:—மிலைதல், மலைதல், வேய்தல்.

இருத்தலின் பெயர்.

201. செகுத்த லிருத்தல். (க)

இருத்தலின் பெயர்:—செகுத்தல்.

மீளுதலின் பெயர்.

202. திரிதல் மீளுதல். (க)

மீளுதலின் பெயர்:—திரிதல்.

புறத்தின் பெயர்.

203. புறணியும் புடமும் புறமென லாகும். (௨)

புறத்தின் பெயர்:—புறணி, புடம்.

பதுங்கலின் பெயர்.

204. பழுகலு மொடுங்கலும் பாந்தலும் பதுங்கல். (௩)

பதுங்கலின் பெயர்:—பழுகல், ஒடுங்கல், பாந்தல்.

தங்குதலின் பெயர்.

205. அசைத றெவிட்ட லிறுத்த லார்தல். தங்குதலின் பெயர்:—அசைதல், தெவிட்டல், இறுத்தல், ஆர்தல். (௪)

இதுவுமது.

206. வதிதல் வைக லிறையு மப்பெயர்.

ஷை தங்குதலின் பெயர்:—வதிதல், வைகல், இறை. (௩) ஆ (௭)

அடக்கத்தின் பெயர்.

207. முடக்கமு நொறிலு மடங்கு முணங்கு
மொடுக்கமு மடக்க மொருங்கு மாமே.

அடக்கத்தின் பெயர்:—முடக்கம், நொறில், மடங்கு, முணங்கு, ஒடுக்கம், ஒருங்கு. (சு)

கூடலின் பெயர்.

208. விழைச்சும் பிணைச்சும் விழைவுமை துனமும்
புணர்ச்சியுங் கூடல் புகலுங் கிளவி
அணைதல் கலவிசை யோகமு மாகும்.

கூடலின் பெயர்:—விழைச்சு, பிணைச்சு, விழைவு, மைதுனம், புணர்ச்சி, அணைதல், கலவி, சையோகம். (அ)

இதுவுமது.

209. மணத்தல் பயினி மற்றிவை கூடுதல்.

கூடலின் பெயர்:—மணத்தல், பயினி. (உ) ஆக (௧0)

பிரிதலின் பெயர்.

210. நீத்த றவிர்த லகல லுணர்தல்
தணத்தல் வல்லி பகலிவை பிரிதல்.

பிரிதலின் பெயர்:—நீத்தல், தவிர்தல், அகலல், உணர்தல், தணத்தல், வல்லி, பகல். (எ)

புலத்தலின் பெயர்.

211. புலவி யூடல் புலத்த லாகும்.

புலத்தலின் பெயர்:—புலவி, ஊடல். (உ)

புலவிநீடுதலின் பெயர்.

212. துனியென் கிளவி புலவி நீடுதல்.

புலவி நீடுதலின் பெயர்:—துனி. (க)

கலத்தலின் பெயர்.

213 புணர்தல் படிதல் றோய்தல் சார்தல்
கலவன் மேவல் கலத்த லாகும்.

கலத்தலின் பெயர்:—புணர்தல், படிதல், தோய்தல், சார்தல், கலவல், மேவல். (சு)

அளவளாவலின் பெயர்.

214. கலாவலுந் துழாவலும் வளாவலுஞ் சிவணலும்
புணர்தலும் பொருந்தலு மளவளா வற்பெயர்.

அளவளாவலின் பெயர்:—கலாவல், குழாவல், வளாவல், சிவணல், புணர்தல், பொருந்தல். (௬)

### வணங்கலின் பெயர்.

**215** வந்தனை பணிதற் றண்டன் வணக்கம்
பரவ லிறைஞ்ச றாழ்தல் காண்டல்
வந்தித்தல் போற்றல் வணங்க லாகும்.

வணங்கலின் பெயர்:—வந்தனை, பணிதல், தண்டன், வணக்கம், பரவல், இறைஞ்சல், தாழ்தல், காண்டல், வந்தித்தல், போற்றல். (௧௦)

### சிறைப்படலின் பெயர்.

**216** வலைப்பட றளைப்படல் சிறைப்பட லாகும்.

சிறைப்படலின் பெயர்:—வலைப்படல், தளைப்படல். (௨)

### சருச்சரை வடிவின் பெயர்.

**217.** பிணரே சருச்சரை வடிவின தாகும்.

சருச்சரை வடிவின் பெயர்:—பிணர். (௧)

### தாழ்தலின் பெயர்.

**218** இறைஞ்சலுங் குரங்கலுந் தாழ்தலை யிசைக்கும்.

தாழ்தலின் பெயர்:—இறைஞ்சல், குரங்கல். (௨)

### அலைதலின் பெயர்.

**219** நடுங்க லாஞ்சி ஞெகிழ்கல் ஞொள்கல்
அழுங்குதல் சோம்பென லலைத லாகும்.

அலைதலின் பெயர்:—நடுங்கல், ஆஞ்சி, ஞெகிழ்தல், ஞொள்கல், அழுங்குதல், சோம்பு. (௬)

### சுமத்தலின் பெயர்.

**220** பரித்தல் பொறுத்த றரித்தல் சுமத்தல்.

சுமத்தலின் பெயர்:—பரித்தல், பொறுத்தல், தரித்தல். (௩)

### ஏறுதலின் பெயர்.

**221** எக்க லிவரன் மீக்கோ ளேறுதல்.

ஏறுதலின் பெயர்:—எக்கல், இவரல், மீக்கோள். (௩)

### எதிர்தலின் பெயர்.

**222.** மூட்டல் கிடைத்தன் முடுகனேர்த
லேற்ற றலைப்பட லெதிர்த லாகும்.

எதிர்தலின் பெயர்:—மூட்டல், இடைத்தல், முடுகல், நேர்தல், ஏற்றல், தலைப்படல். (௬)

மீதூரலின் பெயர்.

223. இடங்கழி நெருங்குதல் மீதூ ரலாகும்.
மீதூரலின் பெயர்:—இடங்கழி, நெருங்குதல். (௨)

ஒருங்கின் பெயர்.

224. உடங்கொருங் காகும்.
ஒருங்கின் பெயர்:—உடங்கு. (௧)

வடுப்படுத்தலின் பெயர்.

225. கதுவாய் வடுப்படுத் தலாகக் கருதுவர்.
வடுப்படுத்தலின் பெயர்:—கதுவாய். (௧)

சொறியின் பெயர்.

226. கண்டூதி தினவு சொறியெனக் கழறும்.
சொறியின் பெயர்:—கண்டூதி, தினவு. (௨)

பொங்குதலின் பெயர்.

227. பூரித்தன் மிகுதல் பொங்குத லாகும்.
பொங்குதலின் பெயர்:—பூரித்தல், மிகுதல். (௨)

வேர்த்தலின் பெயர்.

228 வேர்த்தல் வியர்ப்பு.
வேர்த்தலின் பெயர்:—வியர்ப்பு. (௧)

விடுதலின் பெயர்.

229. விடுதல் உயிர்த்தல்.
விடுதலின் பெயர்:—உயிர்த்தல். (௧)

மூடுதலின் பெயர்.

230. போர்வை மூய்தல் கவித்தன் மூடுதல்.
மூடுதலின் பெயர்:—போர்வை, மூய்தல், கவித்தல். (௩)

பூணலின் பெயர்.

231 புனைத லார்த்தல் பூண லாகும்.
பூணலின் பெயர்:—புனைதல், ஆர்த்தல். (௨)

### இயைபின் பெயர்.

232. இயைபே புணர்ச்சி யிசைப்பிவை யாகும்.

இயைபின் பெயர்:—இயைபு, புணர்ச்சி, இசைப்பு. (௩)

### மஞ்சனத்தின் பெயர்.

233. நான மென்பது மஞ்சன மாகும்.

மஞ்சனத்தின் பெயர்:—நானம். (க)

### குளித்தலின் பெயர்.

234. தோய்தலும் படிதலு மாடலு மன்றிக்
குடைதலு மூழ்கலுங் குளித்தலின் கூற்றே.

குளித்தலின் பெயர்:—தோய்தல், படிதல், ஆடல், குடைதல், மூழ்கல். (ரு)

### பிறகிடலின் பெயர்.

235. பின்றல் பிறக்கிடல் பிறகிட லாகும்.

பிறகிடலின் பெயர்:—பின்றல், பிறக்கிடல். (உ)

### கருவுள் அமைப்பும், மெய்ப்படு பருவமும் ஆவன.

236 பேறிழ வின்பம் பிணிமூப்புச் சாக்கா டென்
றாறுள வந்நா ளமைந்தன வறியக்
கூறிய புலவர் கோட்பா டன்றியும்
பாலை பாலன் காளை யிளையோன்
முதியோ னென்ன விதிவழி வந்த
மெய்யே மெய்யின் மேம்படு குணமே.

கருவுள் அமைப்பாவன:—பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு. (சு)

மெய்ப்படு பருவமாவன:—பாலை, பாலன், காளை, இளையோன், விருத்தன். (ரு)

நான்காவது

## வாய் வகை.

### இன்சுவையின் பெயர்.

237. வாய்வகை யியல்பு வகுக்குங் காலைத்
தீமென் கிளவியொ டிரத மின்சுவை.

இன் சுவையின் பெயர்:—தீம், இரதம். (உ)

### அழைத்தலின் பெயர்.

238. கேத லுளைத்த லிருத்தல் விளித்தல்
யாவெனல் கூவுதல் வாவெனன் மத்தல்

இயம்பலின் பெயர்:—கதை, நுவல், சாற்று, செப்பு, பனுவல், அறை, பறை, வாணி, கூற்று, மொழி, குயிறல், புகறல், மாற்றம், மறை, கொடி, பரவல், இசை, இயம், பேச்சு, உரை, எதிர்ப்பு. (உக)

வாசகத்தின் பெயர்.

245. வசனம் பாசுரம் வார்த்தையும் வாசகம். (ங)

வாசகத்தின் பெயர்:—வசனம், பாசுரம், வார்த்தை.

பதத்தின் பெயர்

246. பாழியு முரையும் பதமென லாகும். (உ)

பதத்தின் பெயர்:—பாழி, உரை.

பேசுதலின் பெயர்.

247. இசைத்த லிறுத்தல் இயம்பல் புகறல்
பிதற்ற லென்றிவை பேசுத லாகும்.

பேசுதலின் பெயர்:—இசைத்தல், இறுத்தல், இயம்பல், புகறல், பிதற்றல். (ரு)

பல்கால் விளம்புதலின் பெயர்.

248. மீதுரை பல்கால் விளம்புத லாகும். (க)

பல்கால் விளம்புதலின் பெயர்:—மீதுரை.

துதித்தலின் பெயர்.

249. பரவல் வழுத்தல் ஏத்தல் போற்றல்
பழிச்சல் வாழ்த்தல் துதித்த லாகும்.

துதித்தலின் பெயர்:—பரவல், வழுத்தல், ஏத்தல், போற்றல், பழிச்சல், வாழ்த்தல். (ரு)

வாழ்த்தின் பெயர்.

250. ஆசிடை யாசி வாழ்த்தா கும்மே. (உ)

[illegible]தின் பெயர்:—ஆசிடை, ஆசி.

சொல்லுதலின் பெயர்.

[illegible]ல் விரித்தன் மொழிதல் விளம்பல்
[illegible]னல் நவிறல் கத்துதல்
[illegible] வழங்கல் குயிலல்
[illegible]டதல் பிறழ்தல்

பறைதல் செப்ப லதிர்த்தல் பணித்தல்
சொற்ற லாடல் சொல்லுத லென்ப.

சொல்லுதலின் பெயர்:—இயம்பல், விரித்தல், மொழிதல், விளம்பல், பகர்தல், பன்னல், நவிறல், கத்துதல், உரைத்தல், கூறல், வழங்கல், குயிலல், புகலல், பேசல், நொடிதல், பிறழ்தல், பறைதல், செப்பல், அதிர்த்தல், பணித்தல், சொற்றல், ஆடல் (உஉ)

படித்தலின் பெயர்.

252. பாட லோதல் வாசித்தல் படித்தல்.

படித்தலின் பெயர்:—பாடல், ஓதல், வாசித்தல். (ந)

பெருஞ்சொல்லின் பெயர்.

253. பெருஞ்சொல் பலரறி சொல்லெனப் பெயர்பெறும்.

பெருஞ் சொல்லின் பெயர்:—பலரறிசொல். (க)

சிறுசொல்லின் பெயர்.

254. சிறுசொ லிழிச்சொற் றீச்சொற் பழிச்சொல்.

சிறு சொல்லின் பெயர்:—இழிச்சொல், தீச்சொல், பழிச்சொல். (ந)

பழிமொழியின் பெயர்.

255. அம்பலுங் கௌவையு மலரும் பழிமொழி.

பழி மொழியின் பெயர்:—அம்பல், கௌவை, அலர். (ந)

திசைச்சொல்லின் பெயர்.

256. தேசிக மென்பது திசைச்சொல் லாகும்.

திசைச் சொல்லின் பெயர்:—தேசிகம். (க)

மறைத்துமொழி கிளவியின் பெயர்.

257. இடக்கர் மறைமொழி யெக்கரு மாகும்.

மறைத்து மொழி கிளவியின் பெயர்:—இடக்கர், எக்கர் (உ)

சிலரறிந்து தம்முள் தூற்றலின் பெயர்.

258. அம்பல்சில ரறிந்துதம் முட்புறங் கூறுதல்.

சிலர் அறிந்து தம்முள் தூற்றுதலின் பெயர்:—அம்பல். (க)

பலரறிந்து தூற்றலின் பெயர்.

259. அலரே பலரு மறிந்தலர் தூற்றுதல்.

பலர் அறிந்து தூற்றுதலின் பெயர்:—அலர். (க)

### உறுதிக்கட்டுரையின்பெயர்.

260. கழறலு மிடித்தலு நெருங்கலு மென்றிவை
யுறுதிக் கட்டுரை யெனவுரைத் தனரே.

உறுதிக் கட்டுரையின் பெயர்:—கழறல், இடித்தல், நெருங்கல். (௩)

### நயச்சொல்லின் பெயர்.

261. முகமன் சம்மான முபசார நயச்சொல்.

நயச் சொல்லின் பெயர்:—முகமன், சம்மானம், உபசாரம். (௩)

### குறளைமொழியின் பெயர்.

262. கொடுவாய் பிசுனந் தொடுப்புக் குஞ்சம்
குறளை மொழிகொண் டியமு மாகும்.

குறளை மொழியின் பெயர்:—கொடுவாய், பிசுனம், தொடுப்பு, குஞ்சம், கொண்டியம். (௫)

### அசதியாடலின் பெயர்.

263. அசதி நகல்நயக் கிளவி யாகும்.

அசதி ஆடலின் பெயர்:—நகல், நயக்கிளவி. (௨)

### நிரம்பா மென்மொழியின் பெயர்.

264. குதலை மழலை கொஞ்சலுல் லாபம்
மிழலை நிரம்பா மென்மொழி யாகும்.

நிரம்பா மென்மொழியின் பெயர்:—குதலை, மழலை, கொஞ்சல், உல்லாபம், மிழலை. (௫)

### சத்தியத்தின் பெயர்.

265. ஆணை வஞ்சினஞ் சபதஞ் சத்தியம்.

சத்தியத்தின் பெயர்:—ஆணை, வஞ்சினம், சபதம். (௩)

### இதுவுமது.

266. சூளை விரதஞ் சூளுறவு மாகும்.

ஷை சத்தியத்தின் பெயர்:—சூள், விரதம், சூளுறவு. (௩) ஆக (௬)

### முதுசொல்லின் பெயர்.

267 மொழிமை முதுரை முன்சொற் பழஞ்சொல்
முதுசொல் லென்பர் பழமொழியு மாமே.

முது சொல்லின் பெயர்:—மொழிமை, முதுரை, முன்சொல், பழஞ்சொல், பழமொழி. (௫)

நன்னிமித்தத்தின் பெயர்.

268 விரிச்சியும் வாய்ப்புள்ளு நற்சொனி மித்தம்.
நல் நிமித்தத்தின் பெயர்:—விரிச்சி, வாய்ப்புள். (உ)

கதையின் பெயர்.

269. கதையென் றுரைப்பது காரணச் சொல்லெனல்.
கதையின் பெயர்:—காரணச்சொல். (க)

வினவலின் பெயர்.

270. வினவல் கடாவல்.
வினவலின் பெயர்:—கடாவல். (க)

எதிர்மொழியின் பெயர்.

271. விடையதற் கெதிர்மொழி.
எதிர்மொழியின் பெயர்—விடை. (க)

வினவும், விடையுங்கூடிய பொருளின் பெயர்.

272. வினவொடு விடையும் விளம்புதல்சல் லாபம்.
வினவும், விடையுங் கூடிய பொருளின் பெயர்—சல்லாபம். (க)

பாயிரத்தின் பெயர்.

273. அணிந்துரை பெய்துரை புனைந்துரை நான்முகம்
முகவுரை தந்துரை புறவுரை பாயிரம்.
பாயிரத்தின் பெயர்:—அணிந்துரை, பெய்துரை, புனைந்துரை, நான்முகம், முகவுரை, தந்துரை, புறவுரை. (எ)

சத்தி பண்ணலின் பெயர்.

274. உமிழ்தல் தெவிட்டல் காறு லோங்கல்
உக்காரஞ் சத்தி யன்றிக் கக்கல்.
சத்தி பண்ணலின் பெயர்:—உமிழ்தல், தெவிட்டல், கன்றல், ஒங்கல், உக்காரம், கக்கல். (உக்காரம்-உற்காரம் எனவும் பாடம்) (சு)

இதுவுமது.

275. அபன மென்பது மதன்பெய ராகும்.
ஷை சத்தி பண்ணலின் பெயர்:—அபனம். (க) ஆ_(எ)

எச்சலின் பெயர்.

276. மிச்சில் பேளிகை யுச்சிட்டம் விசதம்
எச்சி லென்றற் கிழவு மாகும்.

எச்சிலின் பெயர்—மிச்சில், பேளிகை, உச்சிட்டம், விசதம், இழவு. (ரு)

கோட்டாவியின் பெயர்.

277. ஆவித்தல் கொட்டாவி யாகு மென்ப.
கொட்டாவியின் பெயர்:—ஆவித்தல். (க)

ஐந்தாவது

## கண் வகை.

கண்ணோட்டத்தின் பெயர்.

278. கண்ணிற் கமைந்த கடனெறி கூறிற்
கண்மைநா கரிகம் பார்வைகண் ணோட்டம்.
கண்ணோட்டத்தின் பெயர்:—கண்மை, நாகரிகம், பார்வை. (௩)

இதுவுமது.

279. கண்ணென் பதுமக் கட்டுரை யாகும்.
மேடி கண்ணோட்டத்தின் பெயர்:—கண். (க) ஆக (௪)

உற்சவத்தின் பெயர்.

280. சாறு முருகு துணங்கறல் விழாவுடன்
ஓதுஞ் சேறு முற்சவ மாகும்.
உற்சவத்தின் பெயர்:—சாறு, முருகு, துணங்கறல், விழா, சேறு. (ரு)

தூங்கலின் பெயர்.

281. கனவு துயிலே கண்படை யனந்தல்
படலே நித்திரை பள்ளி யுறக்கந்
துஞ்ச லுறங்க றூங்க லாகும்.
தூங்கலின் பெயர்:—கனவு, துயில், கண்படை, அனந்தல், படல், நித்திரை, பள்ளி, உறக்கம், துஞ்சல், உறங்கல். (௧௦)

நிரம்பாத்துயிலின் பெயர்.

282. தூங்கல் நிரம்பாத் துயிலு மாமே.
நிரம்பாத் துயிலின் பெயர்:—தூங்கல். (க)

அழுகையின் பெயர்.

283. கலக்க முரோதனங் கலுழ்ச்சி யழுகை.
அழுகையின் பெயர்:—கலக்கம், உரோதனம், கலுழ்ச்சி. (௩)

இதுவுமது.

284. அரற்ற லிரங்கல் விம்மல் பொருமு
லேங்க லிராவண மாங்கத னிலையே.

ஷ அழுகையின் பெயர்:—அரற்றல், இரங்கல், விம்மல், பொருமல், ஏங்கல், இராவணம். (சு) ஆ_(கூ)

துயி லொழிதலின் பெயர்.

285. சாகர மென்பது துயிலொழித லாகும்.
துயில் ஒழிதலின் பெயர்:—சாகரம். (க)

கண்பார்வையின் பெயர்.

286. விழித்தல்கண் பார்வை.
கண் பார்வையின் பெயர்:—விழித்தல். (க)

கண் மூடலின் பெயர்.

287. சிமிழ்த்தல்கண் மூடல்.
கண் மூடலின் பெயர்:—சிமிழ்த்தல். (க)

காண்டலின் பெயர்.

288. நோக்க றெரிசித்தல் பார்த்தல் காண்டல்.
காண்டலின் பெயர்:—நோக்கல், தெரிசித்தல், பார்த்தல். (ங)

கண்ணுறலின் பெயர்.

289. காட்சி யென்பது கண்ணுற லாகும்.
கண்ணுறலின் பெயர்:—காட்சி. (க)

கண்ணிமையின் பெயர்.

290. கண்ணிமை யிதழ்விளிம் பென்னவும் பெறுமே.
கண் இமையின் பெயர்:—இதழ், விளிம்பு. (உ)

ஆறாவது

## மூக்கின் வகை.

கந்தித்தலின் பெயர்.

291. மூக்கி னியல்பு மொழியுங் காலை
மணமு முருகு மன்றலும் வாசமும்
விரையும் வதுவையு நானமும் வேரியுங்
கடியுந் தேனும் வம்புங் கானு

நறையுங் கந்தமு மோதமு நாற்றமுங்
கமழலும் வெறியுங் கந்தித்த லாகும்.

கந்தித்தலின் பெயர்:—மணம், முருகு, மன்றல், வாசம், விரை, வதுவை, ஞானம், வேரி, கடி, தேன், வம்பு, கான், நறை, கந்தம், மோதம், நாற்றம், கமழல், வெறி. (கஅ)

நறுமணத்தின் பெயர்.

292. சுகந்த நறுமணம்.

நறு மணத்தின் பெயர்:—சுகந்தம். (க)

பெருமணத்தின் பெயர்.

293. பரிமளம் பெருமணம்.

பெரு மணத்தின் பெயர்:—பரிமளம். (க)

மூச்சின் பெயர்.

294. தும்மன் மூச்சுச் சுவாதங் கொறுக்கை
யிரேசக பூரகங் கும்பக மன்றிச்
சுவாச நிசுவாசஞ் சொல்லப் பெறுமே.

மூச்சின் பெயர்:—தும்மல், சுவாதம், கொறுக்கை, இரேசகம், பூரக்கு, கும்பகம், சுவாசம், நிசுவாசம். (அ)

ஏழாவது

## செவி வகை.

கல்வியின் பெயர்.

295. செவியிற் றேறுந் திறனினி துரைக்கி
லுறுதியுங் கேள்வியு மோதியுங் கலையும்
பனுவலுங் கல்விப் பெயரெனப் பகரும்.

கல்வியின் பெயர்:—உறுதி, கேள்வி, ஓதி, கலை, பனுவல். (ங)

சொன்மாலையின் பெயர்.

296. தோற்றஞ் சீரொளி சுலோகஞ்சொன் மாலை.

சொல் மாலையின் பெயர்:—தோற்றம், சீர், ஒளி, சுலோகம். (ச)

புகழின் பெயர்.

297. ஏற்றங் கியாத மிசைமெய்ப் பாடு
சீர்த்தி கீர்த்திசொல் லிசைப்புக ழாகும்.

புகழின் பெயர்:—ஏற்றம், கியாதம், இசை, மெய்ப்பாடு, சீர்த்தி, கீர்த்தி, சொல். (எ)

இதுவுமது.

298. மீக்கூற் றென்று விளம்பவும் பெறுமே.
ஷெ புகழின் பெயர்:—மீக்கூற்று. (க) ஆ (அ)

நூலின் பெயர்.

299. அதிகாரம் பிடக மாரிடந் தந்திரம்
பனுவ லாகமஞ் சூத்திர நூலே.
நூலின் பெயர்:—அதிகாரம், பிடகம், ஆரிடம், தந்திரம், பனுவல், ஆகமம், சூத்திரம். (எ)

நற்பொருளின் பெயர்.

300 ஞாபகம் பிசியிவை நற்பொரு ளாகும்.
நற் பொருளின் பெயர்:—ஞாபகம், பிசி. (உ)

வேதத்தின் பெயர்.

301. இருக்குச் சுருதிமறை யெழுதாக் கிளவி
ஆதிநூல் சாகை யாரணம் வேதம்.
வேதத்தின் பெயர்:—இருக்கு, சுருதி, மறை, எழுதாக்கிளவி, ஆதி நூல், சாகை, ஆரணம். (எ)

முதல் வேதத்தின் பெயர்.

302. பௌடிக மிருக்கு முதல்வேத மாகும்.
முதல் வேதத்தின் பெயர்:—பௌடிகம், இருக்கு. (உ)

இரண்டாம் வேதத்தின் பெயர்.

303. இரண்டாம் வேதம் யசுதைத் திரியம்.
இரண்டாம் வேதத்தின் பெயர்:—யசு, தைத்திரியம். (உ)

மூன்றாம் வேதத்தின் பெயர்.

304. மூன்றது சாம வேதங் கீதநடை.
மூன்றாம் வேதத்தின் பெயர்:—சாமம், கீதநடை. (உ)

நான்காம் வேதத்தின் பெயர்.

305 நான்காம் வேத மதர்வண மென்ப.
நான்காம் வேதத்தின் பெயர்:—அதர்வணம். (க)
[அதர்வணம் - அதர்வம் எனவும் வழங்கும்.]

வேதத் துட்பொருளின் பெயர்.

306 உபநிடதம் வேதத்தி னுட்பொரு ளாகும்.
வேதத்து உட்பொருளின் பெயர்:—உபநிடதம். (க)

### வேதமார்க்கத்தின் பெயர்.

307. வைதிகம் வேதமொழி மார்க்க மாகும்.
வேத மார்க்கத்தின் பெயர்:—வைதிகம். (க)

### உதாரணத்தின் பெயர்.

308. இதிகாச மிலக்கிய மெடுத்துக் காட்டல்
உதாரண மெனவு முரைக்கப் படுமே.
உதாரணத்தின் பெயர்:—இதிகாசம், இலக்கியம், எடுத்துக்காட்டல். (ங)

### ஆகமத்தின் பெயர்.

309. ஆகம ஞானம்.
ஆகமத்தின் பெயர்:—ஞானம். (க)

### அத்தியாயத்தின் பெயர்.

310. படல மிலம்பகஞ் சருக்கங் காண்டம்
பரிச்சேத மத்தி யாய மாகும்.
அத்தியாயத்தின் பெயர்:—படலம், இலம்பகம், சருக்கம், காண்டம், பரிச்சேதம். (ரு)

### நூற்பா வகவலின் பெயர்.

311. அடிவரை யின்றி யெழுமிதி னடக்கு
நூற்பா வகவல் சூத்திர மென்ப.
நூற்பா அகவலின் பெயர்:—சூத்திரம். (க)

### ஓத்தென்பது.

312. நிரல்பட வைப்ப தோத்தென மொழிப.
ஓத்து என்பது:—ஓரினப் பொருளை வரிசைப்பட வைப்பது.

### படலமென்பது.

313. பொதுமொழி தொடர்வது படல மாகும்.
படலம் என்பது:—ஒருவழிப்படாமல், பல பொருள்களைத் தரும் பொதுச் சொற் றொடர்வது.

### பொழிப்புரை யென்பது

314. பொழிப்புரை பிண்டப் பொருள தென்ப.
பொழிப்புரை என்பது:—பல பொருளைப் பிண்டமாக்கிக் கூறுவது.

விரித்துரையென்பது.

315. விரித்துரை பதவுரை விரித்த சூர்ணை
தொகுதி பகுதிப் பொருள தாகும்.
விரித்துரை என்பது:—பதவுரை, சூர்த்துரை, தொகுத்துரை முத லிய பகுதிப் பொருளை யுடையது.

கீர்த்தியினேற்றத்தின் பெயர்.

316. ஏற்றங் கியாத மிசைப்பா டென்ப.
கீர்த்தியின் ஏற்றத்தின் பெயர்:—கியாதம், இசைப்பாடு. (உ)

தன்மேம்பாடு தானிகழ்த்தலின் பெயர்.

317. நெடுமொழி தன்மேம் பாட்டுரை யென்ப.
தன் மேம்பாடு தான் நிகழ்த்தலின் பெயர்:—நெடுமொழி. (க)

சோபனத்தின் பெயர்.

318. பல்லாண்டு சோபனம்.
சோபனத்தின் பெயர்:—பல்லாண்டு. (க)

பழிச்சொல்லின் பெயர்.

319. பழிச்சொல் பரிவாதம்.
பழிச் சொல்லின் பெயர்:—பரிவாதம். (க)

பிடித்தொன்றைப் பேசுதலின் பெயர்.

320. பிடித்தொன்றைப் பேசுதல் பிதற்றுத லாகும்.
பிடித் தொன்றைப் பேசுதலின் பெயர்:—பிதற்றுதல். (க)

வெண்பாவின் பெயர்.

321. முதற்பா வெண்பா.
வெண்பாவின் பெயர்:—முதற்பா. (க)

கலிப்பாவின் பெயர்.

322. விகற்பங் கலிப்பா.
கலிப்பாவின் பெயர்:—வெண்பா விகற்பித்து வருவது. (க)

ஆசிரியப்பாவின் பெயர்.

323. அகவலுந் தொகையு மாசிரி யப்பா.
ஆசிரியப்பாவின் பெயர்:—அகவல், தொகை. (உ)

### வஞ்சிப்பாவின் பெயர்.

**324.** அதனின் விகற்பம் வஞ்சி யாகும்.

*வஞ்சிப்பாவின் பெயர்:—ஆசிரியப்பா விகற்பித்து வருவது.* (௧)

[‘ஆசிரிய நடைத்தே வஞ்சியேனை - வெண்பா நடைத்தே கலியென மொழிப’’ என்னும், தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் சூத்திரத்தால் அறிக.]

### அராகத்தின் பெயர்.

**325.** அராக முடுகியல் வண்ண மாகும்.

*அராகத்தின் பெயர்:—முடுகியல், வண்ணம்.* (௨)

### குளகச் செய்யுளென்பது.

**326.** குற்றெழுத்துத் தொடரினது குளகச் செய்யுள்.

*குளகச் செய்யுள் என்பது:—குற்றெழுத்துத் தொடர்ந்து வருவது.*

### கணக்கின் பெயர்.

**327.** எழுத்து மெண்ணுங் கணக்கென் றாகும்.

*கணக்கின் பெயர்:—எழுத்து, எண்.* (௨)

### எண்ணின் பெயர்.

**328.** எண்ணே கரணமுங் கணிதமு மென்ப.

*எண்ணின் பெயர்:—கரணம், கணிதம்.* (௨)

### நால்வகை யெழுத்தாவன.

**329.** வடிவுபெயர் தன்மை முடிவுநான் கெழுத்தே.

*நால்வகை எழுத்தாவன:—வடிவெழுத்து, பெயரெழுத்து, தன்மையெழுத்து, முடிவெழுத்து.* (௪)

[வடிவெழுத்து - செவிப்புல வொலியைக் கண்களுக்குப் புலப்படவெழுதும் எழுத்து. பெயரெழுத்து - வடிவெழுத்து முதலாக வழங்கு மெழுத்துக்களுக்கு இடும் பெயரெழுத்து. தன்மையெழுத்து - செவிப்புலனாகிய ஒலியெழுத்து. முடிவெழுத்து - தன்மையெழுத்து, பெயரெழுத்து, வடிவெழுத்து முதலாக வுள்ள எழுத்தினை மனத்தாற் றுணிவது.]

### ஒற்றெழுத்தின் பெயர்.

**330.** விராமமும் புலுதமு மெய்யுமொற் றெழுத்தே.

*ஒற்றெழுத்தின் பெயர்:—விராமம், புலுதம், மெய்.* (௩)

இருவகைப் பாயிரத்தின் பெயர்.

331. பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே.
இருவகைப் பாயிரத்தின் பெயர் :— பொதுப்பாயிரம், சிறப்புப் பாயிரம். (உ)

முதல்வன் வாக்கின் பெயர்.

332. ஆகம முதல்வன் வாக்க தாகும்.
முதல்வன் வாக்கின் பெயர்:—ஆகமம். (க)

அந்தணர்க்குரிய மார்க்கத்தின் பெயர்.

333. அந்தண ரவர்க்கே வேத மார்க்கம்.
அந்தணர்க்கு உரிய மார்க்கத்தின் பெயர்:—வேதமார்க்கம். (க)

தந்திரத்தின் பெயர்.

334. மிருதி யாரிடம் பனுவ றந்திரம்.
தந்திரத்தின் பெயர்:—மிருதி, ஆரிடம், பனுவல். (ஈ)

பாவின் பெயர்.

335. தூக்கு மியாப்புஞ் செய்யுளுங் கவியும்
பாட்டுந் தொடர்பும் பாவின் பெயரும்.
பாவின் பெயர்:—தூக்கு, யாப்பு, செய்யுள், கவி, பாட்டு, தொடர்பு. (சா)

உலக்கைப் பாட்டின் பெயர்.

336. உலக்கைப் பாட்டே வள்ளைப்பாட் டென்ப.
உலக்கைப் பாட்டின் பெயர்:—வள்ளைப்பாட்டு. (க)

இடத்தின் சந்தேகச் சொல்லின் பெயர்.

337. யாண்டையு மியாங்கு மிடத்தினை யுறற்சொல்.
இடத்தின் சந்தேகச் சொல்லின் பெயர்:—யாண்டை, யாங்கு. (உ)

ஐயச் சொல்லின் பெயர்.

338 யாதெவ னென்னை யேதுகொல் லையம்.
ஐயச் சொல்லின் பெயர்:—யாது, எவன், என்னை, ஏது, கொல். (ரு)

இசைநிறை அசைச் சொல்லின் பெயர்.

339. ஏயுங் குரையு மிசைநிறை யசைச்சொல்.
இசைநிறை அசைச்சொல்லின் பெயர்:—ஏ, குரை. (உ)

முன்னிலை அசைச் சொல்லின் பெயர்.

340. மியாயிக மோமதி யிகுஞ்சின் னென்னு
மின்னவை முன்னிலை யசைச்சொ லென்ப.

முன்னிலை அசைச்சொல்லின் பெயர்:—மியா, இக, மோ, மதி, இகும், சின். (அ)

சுட்டின் பெயர்.

341. அஇ உஅம் மூன்றுஞ் சுட்டே.

சுட்டின் பெயர்:—அ, இ, உ. (ந)

வினாவின் பெயர்.

342. ஆஎ ஓஅம் மூன்றும் வினாவே.

வினாவின் பெயர்:—ஆ, எ, ஓ. (ந)

சாரியைச் சொல்லின் பெயர்.

343. இன்னே வற்றே யிக்கே யம்மே
யொன்னே யானே யக்கே யன்னே
யின்னவை யெல்லாஞ் சாரியைச் சொல்லே.

சாரியைச் சொல்லின் பெயர்:—இன், வற்று, இக்கு, அம், ஒன், ஆன், அக்கு, அன். (அ)

எழுத்தின் சாரியையின் பெயர்.

344. காரமுங் கானுங் காரமு மகாரமு
மேனமும் பிறவு மெழுத்தின் சாரியை.

எழுத்தின் சாரியையின் பெயர்:— காரம், கான், காரம், அகரம், எனம். (ரு)

இடைச் சொல்லின் பெயர்.

345. அரோபோ மாதோ வல்லா லுறைகெழு
வாங்குத் தெய்ய வெனவே ஞான்று
அந்தி லொரு மினைய விடைச்சொல்.

இடைச் சொல்லின் பெயர்:—அரோ, போ, மாது, ஓ, அல், ஆல், உறை, கெழு, ஆங்கு, தெய்ய, என, எ, ஞான்று, அந்தில், ஒரும். (கரு)

அதிசய மொழியின் பெயர்.

346. ஆஅ ஓஒ வத்தோ வங்தோ
வன்றோ வையோ வக்கோ வச்சோ
வென்றோ வெற்றே யிவையதி சயமொழி.

அதிசய மொழியின் பெயர்:—ஆஅ, ஓஓ, அந்தோ, அந்தோ, அன்னோ, ஐயோ, அக்கோ, அச்சோ, என்னோ, எற்றே. (௧௦)

### இகழ்ச்சிக் குறிப்பின் பெயர்.

347. என சிச்சி யெல்லெ னிகழ்மொழி.

இகழ்ச்சிக் குறிப்பின் பெயர்:—என, சிச்சி, எல், என். (௪)

### வேற்றுமை உருபின் பெயர்.

348. ஐயொடு குஇன் அதுகண் ணொன்று
மவ்வா றென்ப வேற்றுமை யுருபே.

வேற்றுமை உருபின் பெயர்:—ஐ, ஒடு, கு, இன், அது, கண். (௬)

### ஒலியின் பெயர்.

349. ஆரவாரங் கம்பலை யரவங்
கோடணை புலம்பு கோசணை யுளையே
நாத மோதை யாகுலந் துழனி
யிடியிசை சும்மை யோசை தொனியே
யுரையே பாடு சத்த மொலியெனல்.

ஒலியின் பெயர்:—ஆரவாரம், கம்பலை, அரவம், கோடணை, புலம்பு, கோசணை, உளை, நாதம், ஓதை, ஆகுலம், துழனி, இடி, இசை, சும்மை, ஓசை, தொனி, உரை, பாடு, சத்தம். (௧௯)

### ஆபரண ஓசையின் பெயர்.

350. சிஞ்சித மாபரண வோசை யாகும்.

ஆபரண ஓசையின் பெயர்:—சிஞ்சிதம். (௧)

### எடுத்தலோசையின் பெயர்.

351. முரல்வு நரல்வு முக்கலும் பயிறலுந்
தெளிறலு ஞெளிர்தலுஞ் சிரற்றலும் பிளிற்றலுங்
குளிறலுங் குமுறலுங் குருமித்தலு கெளிர்தலும்
அகவலு மெடுத்த லோசைப் பெயரே.

எடுத்தல் ஓசையின் பெயர்:—முரல்வு, நரல்வு, முக்கல், பயிறல், தெளிறல், ஞெளிர்சல், சிரற்றல், பிளிற்றல், குளிறல், குமுறல், குருமித்தல், கெளிர்தல், அகவல். (௧௩)

### இதுவுமது.

352. உளையென் றுரைத்தலு மப்பெயர்க் குரித்தே.

ஷை எடுத்தல் ஓசையின் பெயர்:—உளை. (௧) ஆக (௧௪)

தொனித்தலின் பெயர்.

353. கலித்தல் கனைத்தல் கறங்கல் கதித்தல்
சிலைத்தல் சிலம்ப விரைக்க விரட்ட
லிடிக்க லிசைத்த லுளைத்த லுரப்ப
லாற்ற லுழம்பன் முரற்ற லிரற்றன்
முழங்க றழங்கல் கத்தல் புலம்ப
லழுங்க லியம்ப றுவைத்த லிரங்க
றெழித்தல் குரைத்தல் கொழித்த னரற்ற
றெவிட்ட லாலித்த லிமிழ்த்தல் குமுற
லேங்கல் விம்மல் பிளிற றொனித்தல்.

தொனித்தலின் பெயர்:—கலித்தல், கனைத்தல், கறங்கல், கதித்தல், சிலைத்தல், சிலம்பல், இரைக்தல், இரட்டல், இடிக்தல், இசைத்தல், உளைத்தல், உரப்பல், உரற்றல், உழம்பல், முரற்றல், இரற்றல், முழங்கல், தழங்கல், கத்தல், புலம்பல், அழுங்கல், இயம்பல், துவைத்தல், இரங்கல், தெழித்தல், குரைத்தல், கொழித்தல், நரற்றல், தெவிட்டல், ஆலித்தல், இமிழ்த்தல், குமுறல், ஏங்கல், விம்மல், பிளிறல். (௩௫)

பேரொலியின் பெயர்.

354. திமிலந் குமிலந் திமிர்தந் திமிதங்
களகள மென்பன பேரொலிக் கட்டுரை.

பேரொலியின் பெயர்:—திமிலம், குமிலம், திமிர்தம், திமிதம், களகளம். (௫)

இதுவுமது.

355. குமுத மென்பது மப்பெயர்க் கூற்றே.

டி பேரொலின் பெயர்:—குமுதம். (௧) ஆ (௬)

ஆரவாரத்தின் பெயர்.

356. அலம்ப லுளற லாற்ற லேம்ப
றழங்கல் பிளிறல் கலித்தல் குமுறல்
பூச றமரங் கோசனை யுலம்ப
லாகுலங் கோலாகல மாரவார மென்ப.

ஆரவாரத்தின் பெயர்:—அலம்பல், உளறல், அரற்றல், ஏம்பல், தழங்கல், பிளிறல், கலித்தல், குமுறல், பூசல், தமரம், கோசனை, உலம்பல், ஆகுலம், கோலாகலம். (௧௪)

கதறலின் பெயர்

357. அரற்றலு முரற்றலு மழைத்தலுங் கத்தலுங்
கதற லென்னுங் கட்டுரை யாகும்.

கதறலின் பெயர்:—அரற்றல், மூரற்றல், அழைத்தல், கத்தல். (௨)

அனுகரண வோசையின் பெயர்.

358. இம்மெனல் கல்லென விழுமெனல்
வல்லெனல்
பொம்மென வொல்லெனல் பொள்ளெனல்
ஞெரேலெனல்
கொம்மெனல் சரேலெனல் ஞொள்ளெனல்
கொல்லென
லம்மெனல் பிறவு மனுகரண
வோசை.

அனுகரண ஓசையின் பெயர்:—இம்மெனல், கல்லெனல், இழுமெனல், வல்லெனல், பொம்மெனல், ஒல்லெனல், பொள்ளெனல், ஞெரேலெனல், கொம்மெனல், சரேலெனல், ஞொள்ளெனல், கொல்லெனல், அம்மெனல். (௧௩)

அனுகரண வுபயவோசையின் பெயர்.

359. வெடுவெடென றிடுஇடெனல் களகளெனல்
கொளகொளென
னெடுநெடெனன் மொகமொகென னெறுநெறெனல்
படபடெனன்
மொடுமொடெனல் சடசடெனல் சளசளெனல்
கலகலெனல்
சலசலெனல் இடுஇடென வாமன்ன பிறவு
மனுகரண வுபய வோசைப் பெயரே.

அனுகரண உபய ஓசையின் பெயர்:—வெடுவெடெனல், இடுஇடெனல், களகளெனல், கொளகொளெனல், நெடுநெடெனல், மொகமொகெனல், நெறுநெறெனல், படபடெனல், மொடுமொடெனல், சடசடெனல், சளசளெனல், கலகலெனல், சலசலெனல், இடுஇடெனல். (௧௪)

கலப்புக் கட்டோசையின் பெயர்.

360. உளற றெழித்த லுலப்ப லலப்பல்
பூசல் குழூற றவைவா றவைத்த
லாகுலங் கோடணை கோலா கலமே
யார்ப்புத் தமரங் கலப்புக்கட் டோசை.

கலப்புக் கட்டோசையின் பெயர்:—உளறல், தெழித்தல், உலப்பல், அலப்பல், பூசல், குழூறல், அவைவால், அவைத்தல், ஆகுலம், கோடணை, கோலாகலம், ஆர்ப்பு, தமரம். (௧௫)

அடரொலியின் பெயர்.

361. அதிர்த்த றெழித்த லதட்ட லுறைத்த
உரப்ப லடரொலிப் பெயர தாகும்.

அடர் ஒலியின் பெயர்:—அதிர்த்தல், தெழித்தல், அதட்டல், உறைத்தல், உரப்பல். (௫)

செவியறிவின் பெயர்.

362. சத்தம் பரிச ரூபரசம் கந்தமென்
றுரைத்த வைம்புலனுஞ் செவியறி வென்ப.

செவி அறிவின் பெயர்:—சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம். (௫)
[பரிச முதலிய நாற்புலன்களின் குணங்களைச் செவி கேட் டுணர்தலால், சத்தத்தையும் அடக்கி ஐம்புலனும் என்றார்.]

எட்டாவது

கை வகை.

பறித்தலின்பெயர்.

363. கைக்கட னாய காரண முறைப்பின்
பரூஉவுங் குற்றலும் பறித்தன் மேற்றே.

பறித்தலின் பெயர்:—பரூஉ, குற்றல். (௨)

கடைதலின் பெயர்.

364. கடைதல் குடைதல் கவர்த லன்றி
மதனமுந் துருவலு மற்றதன் பெயரே.

கடைதலின் பெயர்:—குடைதல், கவர்தல், மதனம், துருவல். (௪)

தேய்த்தலின் பெயர்.

365. அரைத்தலு மரக்கலுஞ் சிரத்தலுஞ் சிதைத்தலுந்
தேய்த்த லின்பெய ரென்ன வழங்கும்.

தேய்த்தலின் பெயர்:—அரைத்தல், அரக்கல், சிரத்தல், சிதைத்தல். (௪)

எழுதுதலின் பெயர்.

366. தெரித்தல் வரித றீட்டல் பொறித்தல்
வரைதல் கீறல் கிறுக்குத லெழுதல்.

எழுதுதலின் பெயர்:—தெரித்தல் வரிதல், தீட்டல், பொறித்தல், வரைதல், கீறல், கிறுக்குதல். (எ)

### எழுத்தின் பெயர்.

367. வரியும் பொறியுமக் கரமு மன்றி
யிரேகையு மெழுத்தின் பெயரா கும்மே.

எழுத்தின் பெயர்:—வரி, பொறி, அக்கரம், இரேகை. (ச)

### கொல்லுதலின் பெயர்.

368. காதுத றொலைத்த லெற்றல் களைதல்
சவட்டல் கோறல் செறித்தல் செவிட்ட
லடுத றெறுதல் செறுத்தல் முருக்குதல்
செகுத்தல் வதைத்தல் கொல்லுதல் செப்பும்.

கொல்லுதலின் பெயர்:—காதுதல், தொலைத்தல், எற்றல், களைதல், சவட்டல், கோறல், செறித்தல், செவிட்டல், அடுதல், தெறுதல், செறுத்தல்; முருக்குதல், செகுத்தல், வதைத்தல். (கச)

### எற்றலின் பெயர்.

369. எறித லள்ள லெற்றலின் மேற்றே.

எற்றலின் பெயர்:—எறிதல், அள்ளல். (உ)

### கொடையின் பெயர்.

370. ஈகை தான மிடுகை கவிகை
வேள்வி வண்மை தியாகம்வே ளாண்மை
யுதாரங் கடப்பா டுபகாரங் கொடையெனல்.

கொடையின் பெயர்:—ஈகை, தானம், இடுகை, கவிகை, வேள்வி, வண்மை, தியாகம், வேளாண்மை, உதாரம், கடப்பாடு, உபகாரம். (கக)

### பெருங் கொடையின் பெயர்.

371. ஈதல் வீச லிசைத்த னீட்டல்
புரத்த னல்க லருளல் பகுத்தல்
கொடுத்தல் வழங்க லளித்தல் பெருங்கொடை.

பெருங் கொடையின் பெயர்:—ஈதல், வீசல், இசைத்தல், நீட்டல், புரத்தல், நல்கல், அருளல், பகுத்தல், கொடுத்தல், வழங்கல், அளித்தல். (கக)

### வரையாது கொடுத்தலின் பெயர்.

372. கொடைமட மென்பது வரையாது கொடுத்தல்.

வரையாது கொடுத்தலின் பெயர்:—கொடைமடம். (க)

### கொடாமையின் பெயர்.

373. மாற்றலுங் காத்தலு மறுத்தலுங் கொடாமை.

கொடாமையின் பெயர்:—மாற்றல், காத்தல், மறுத்தல். (௩)

### இரத்தலின் பெயர்.

374. ஏற்றல் குறைகோ ளிரத்தல் வேண்டுதல்.

இரத்தலின் பெயர்:—ஏற்றல், குறைகோள், வேண்டுதல். (௩)

### பிச்சையின் பெயர்.

375. பலியும் படிகமும் பாகமும் பயிக்கமும்
பிண்டமுஞ் சரியையு மையமும் பிச்சை.

பிச்சையின் பெயர்:—பலி, படிகம், பாகம், பயிக்கம், பிண்டம், சரியை, ஐயம். (எ)

### கும்பிடுதலின் பெயர்.

376. தொழுத லஞ்சலி சோத்தங் கும்பிடல்.

கும்பிடுதலின் பெயர்:—தொழுதல், அஞ்சலி, சோத்தம். (௩)

### மெய்கோட்டிக் கைகுவித்தலின் பெயர்.

377. குடந்த மெய்கோட்டிக் கைகுவித்த லென்ப.

மெய் கோட்டிக் கை குவித்தலின் பெயர்:—குடந்தம். (க)

### தோடுதலின் பெயர்.

378. திவள லூறு பரிசந் தீண்ட
றுவள றொட்ட றொடுத லாகும்.

தொடுதலின் பெயர்:—திவளல், ஊறு, பரிசம், தீண்டல், துவளல், தொட்டல். (௬)

### அடித்தலின் பெயர்.

379. புடைத்த லெற்ற லெறிதல் மொக்கல்
குத்தன் மோதன் மொத்த லறைத
லடித்த லென்ப அகைத்தலு மாகும்.

அடித்தலின் பெயர்:—புடைத்தல், எற்றல், எறிதல், மொக்கல், குத்தல், மோதல், மொத்தல், அறைதல், அகைத்தல். (௯)

### இதுவுமது.

380. வழுக்கலு மப்பெயர் வரைவின் றாகும்.

ஷை அடித்தலின் பெயர்:—வழுக்கல். (க) ஆக (௪0)

குத்தலின் பெயர்.

381. அவைத்தலென் கிளவி குத்த லாகும்.
குத்தலின் பெயர்:—அவைத்தல். (க)

கட்டலின் பெயர்.

382. விசித்த லிசைத்தல் வீக்கல் கட்டல்.
கட்டலின் பெயர்:—விசித்தல், இசைத்தல், வீக்கல். (க)

இதுவுமது.

383. அசைத்த லிமிழ்த்த லார்த்தல் யாப்பு
சிமிழ்த்தல் பிணித்தல் சுருக்க றொடுத்தல்
கிட்டல் துவக்கல் கட்டுத லாகும்.
ஷை கட்டலின் பெயர்:—அசைத்தல், இமிழ்த்தல், ஆர்த்தல், யாப்பு, சிமிழ்த்தல், பிணித்தல், சுருக்கல், தொடுத்தல், கிட்டல், துவக்கல். (கo) ஆக (கக)

தீட்டலின் பெயர்.

384. தீட்ட றுலக்கல்
தீட்டலின் பெயர்:—துலக்கல். (க)

வெட்டலின் பெயர்.

385 துழாவல் வெட்டல்.
வெட்டலின் பெயர்:—துழாவல். (க)

துணித்தலின் பெயர்

386. துமித்தலு மெற்றலுந் துணித்த லாகும்.
துணித்தலின் பெயர்:—துமித்தல், எற்றல். (உ)

அறுத்தலின் பெயர்.

387. கடித றடிதல் பரிதல்கண் டித்தல்
சேதித்தல் கொய்த லறுத்த லாகும்.
அறுத்தலின் பெயர் :— கடிதல், தடிதல், பரிதல், கண்டித்தல், சேதித்தல், கொய்தல். (சு)

முகத்தலின் பெயர்.

388. தோண்டன் முகத்தல்.
முகத்தலின் பெயர்:—தோண்டல். (க)

நிறுத்தலின் பெயர்.

389 நோன்ற னிறுத்தல்.

நிறுத்தலின் பெயர்:—நோன்றல். (க)

கிண்டலின் பெயர்.

390. கிண்டல் கிளைத்தல்.

கிண்டலின் பெயர்:—கிளைத்தல். (க)

கிளறுதலின் பெயர்.

391. நோண்டல் கிளறுதல்.

கிளறுதலின் பெயர்:—நோண்டல். (க)

தெள்ளுதலின் பெயர்.

392. வறண்ட றெள்ளுதல்.

தெள்ளுதலின் பெயர்:—வறண்டல். (க)

கொழித்தலின் பெயர்.

393. வான்றல் கொழித்தல்.

கொழித்தலின் பெயர்:—வான்றல். (க)

தொளைத்தலின் பெயர்.

394. தொள்கலுங் குயிறலுந் தொளைத்த லாகும்.

தொளைத்தலின் பெயர்:—தொள்கல், குயிறல். (உ)

தோண்டலின் பெயர்.

395. சூறல் சூன்ற றொட்ட றோண்டல்
ஆகுந் தொடுதலு மகழ்தலு மதற்கே.

தோண்டலின் பெயர்:—சூறல், சூன்றல், தொட்டல், தொடுதல், அகழ்தல். (ரு)

கிழித்தலின் பெயர்.

396. கீறல் கிண்டல் கிள்ளல் கிழித்தல்.

கிழித்தலின் பெயர்:—கீறல், கிண்டல், கிள்ளல். (௩)

இதுவுமது.

397 பீற லென்பது மப்பெயர் மேற்றே.

ஷை கிழித்தலின் பெயர்:—பீறல். (க)

அடைக்கலத்தின் பெயர்.

398. கையடை யில்லடை யபய மடைக்கலம்.
அடைக்கலத்தின் பெயர்:—கையடை, இல்லடை, அபயம். (௩)

பிடுங்குதலின் பெயர்.

399. புய்த்தலும் பறித்தலும் பிடுங்குத லாகும்.
பிடுங்குதலின் பெயர்:—புய்த்தல், பறித்தல். (௨)

களைதலின் பெயர்.

400. கட்ட லென்பது களைத லாகும்.
களைதலின் பெயர்:—கட்டல். (௧)

இதுவுமது.

401. சிதைத்தல் குத்தல் சிந்துதல் விலங்கல்.
மேற்படி களைதலின் பெயர்:—சிதைத்தல், குத்தல், சிந்துதல், விலங்கல்.
(௪) ஆக (௫)

உருவுதலின் பெயர்.

402. சிதக லுருவுதல்.
உருவுதலின் பெயர்:—சிதகல். (௧)

முடைதலின் பெயர்.

403. வலத்தன் முடைத னிணத்த லாகும்.
முடைதலின் பெயர்:—வலத்தல், நிணத்தல். (௨)

எறிதலின் பெயர்.

404. விலகல் செலவிடல் வீச லோச்சுதல்
விடுத லெறித லாகு மென்ப.
எறிதலின் பெயர்:—விலகல், செலவிடல், வீசல், ஓச்சுதல், விடுதல்.
(௫)

மாற்றுதலின் பெயர்.

405. மாற்றுதல் விலக்கல்.
மாற்றுதலின் பெயர்:—விலக்கல். (௧)

பிடித்தலின் பெயர்.

406. தொடலும் பற்றலும் பிடித்த லாகும்.
பிடித்தலின் பெயர்:—தொடல், பற்றல். (௨)

### நேரித்தலின் பெயர்.

407. தெறுத்த னெரித்தல். (க)
நெரித்தலின் பெயர்:—தெறுத்தல்.

### கூட்டுதலின் பெயர்.

408. அடுத்தல் பொருத்தல் கூட்டுத லாகும். (உ)
கூட்டுதலின் பெயர்:—அடுத்தல், பொருத்தல்.

### எழுப்புதலின் பெயர்.

409 எடுத்த லெற்ற லெழுப்புத லாகும். (உ)
எழுப்புதலின் பெயர்:—எடுத்தல், எற்றல்.

### தடுத்தலின் பெயர்.

410. வாரித்தல் வாரணை தகைத்த றடுத்தல். (ங)
தடுத்தலின் பெயர்:—வாரித்தல், வாரணை, தகைத்தல்.

### பகுத்தலின் பெயர்.

411. பகிர்தல் பாத்தி பகுத்த லாகும். (உ)
பகுத்தலின் பெயர்:—பகிர்தல், பாத்தி

### சிந்துதலின் பெயர்.

412. சிதர்த்தல் சிந்துதல். (க)
சிந்துதலின் பெயர்:—சிதர்த்தல்.

### வாரலின் பெயர்.

413. வாரல் கவரல் வெளவ லென்ப. (உ)
வாரலின் பெயர்:—கவரல், வெளவல்.

### வகிர்தலின் பெயர்.

414 வகிர்த றுவர்தல். (க)
வகிர்தலின் பெயர்:—துவர்தல்.

### தடவலின் பெயர்.

415. தடவ றைவர னீவல் வருடல். (ங)
தடவலின் பெயர்:—தைவரல், நீவல், வருடல்.

### அசைதலின் பெயர்.

416. துயில்வர லசைதல். (க)
அசைதலின் பெயர்:—துயில்வரல்.

சோரிதலின் பெயர்.

417. சோரிதல் பொழிதல்.
சோரிதலின் பெயர்:—பொழிதல். (க)

மூட்டலின் பெயர்.

418. மாட்டலும் பொருத்தலு மூட்ட லாகும்.
மூட்டலின் பெயர்:—மாட்டல், பொருத்தல். (உ)

தள்ளுதலின் பெயர்.

419 தோன்ற லூன்ற லூக்க றள்ளுதல்.
தள்ளுதலின் பெயர்:—தோன்றல், ஊன்றல், ஊக்கல். (ங)

செறித்தலின் பெயர்.

420. அளித்தலும் பெய்தலுஞ் செறித்த லாகும்.
செறித்தலின் பெயர்:—அளித்தல், பெய்தல். (உ)

பரப்புதலின் பெயர்.

421. விரியல் விளம்பல் பாரித்தல் பரப்புதல்.
பரப்புதலின் பெயர்:—விரியல், விளம்பல், பாரித்தல். (ங)

அடுக்குதலின் பெயர்.

422. ஏற்ற லடுக்குதல்.
அடுக்குதலின் பெயர்:—ஏற்றல். (க)

புதைத்தலின் பெயர்.

423. பொத்தல் கனிதல் புதைத்த லாகும்.
புதைத்தலின் பெயர்:—பொத்தல், கனிதல். (உ)

குட்டலின் பெயர்.

424. குட்டல் புடைத்தல் தகர்த்த லாகும்.
குட்டலின் பெயர்:—புடைத்தல், தகர்த்தல். (உ)

ஒன்பதாவது

## கால் வகை.

கடத்தலின் பெயர்.

425. காலிற் கமைந்த கடனெறி கூறி
விறத்தலுங் கழிதலு மிகத்தலுங் கடத்தல்
நடத்தலு மீளலு மவ்வியல் பாகும்.

கடத்தலின் பெயர்:—இறத்தல், கழிதல், இகத்தல், நடத்தல், மீளல். (ரு)

## சுழலலின் பெயர்.

426 உழிதரல் கொட்புத் திரிதர லுழலல்
பிரமரி யலமர றெருமரன் மறுகல்
சொரிதரல் கறங்கல் சுழலற் பெயரே.

சுழலலின் பெயர்:—உழிதரல், கொட்பு, திரிதரல், உழலல், பிரமரி, அலமரல், தெருமரல், மறுகல், சொரிதரல், கறங்கல். (கo)

## தாண்டலின் பெயர்.

427. தாண்டல் வாவலுந் தாவலு மன்றித்
தத்தலுங் கடத்தலு மப்பெயர் மேற்றே.

தாண்டலின் பெயர்:—வாவல், தாவல், தத்தல், கடத்தல். (ச)

## இதுவுமது.

428. உறுக்கலும் பாய்தலு முகளலு மன்றிக்
குதித்தலுந் தவறலுங் குப்புறலு மாமே.

ஷை தாண்டலின் பெயர்:—உறுக்கல், பாய்தல், உகளல், குதித்தல், தவறல். (ரு) ஆ (கூ)

## எழுச்சியின் பெயர்.

429. கஞறலுங் கதித்தலு மும்பலு மேர்பும்
பொலிவுங் கலித்தலு மொழுக்கலும் பாச்சலு
மறலு மோங்கலு மெழுச்சிப் பெயரே.

எழுச்சியின் பெயர்:— கஞறல், கதித்தல், உம்பல், ஏர்பு, பொலிவு, கலித்தல், ஒழுக்கல், பாச்சல், மறல், ஓங்கல். (கo)

## நடத்தலின் பெயர்.

430. இல்ல லொதுங்க லேக லிவர்தல்
செல்லல் படர்தல் கழித னடத்தல்.

நடத்தலின் பெயர்:—இல்லல், ஒதுங்கல், ஏகல், இவர்தல், செல்லல், படர்தல், கழிதல். (எ)

## செலவின் பெயர்.

431. தாவுங் கதியும் படருஞ் செலவெனல்.

செலவின் பெயர்:—தாவு, கதி, படர். (ங)

ஓடலின் பெயர்.

432. நீளல் பாற னிமிர்த லென்றிவை
யோடலின் பெயருக் குரித்தா கும்மே.

ஓடலின் பெயர்:—நீளல், பாறல், நிமிர்தல். (௩)

இரிதலின் பெயர்.

433. உடைதல் கெடுத லிரித லாகும்.

இரிதலின் பெயர்:—உடைதல், கெடுதல். (௨)

நேரோடுதலின் பெயர்.

434. ஆதியும் வீதியு நேரோ டுதலே.

நேர் ஓடுதலின் பெயர்:—ஆதி, வீதி. (௨)

மண்டிலமா யோடலின் பெயர்.

435 மாதி சுற்றுச் சாரிகை வாளி
யாயவை மண்டில வரவா கும்மே.

மண்டிலமாய் ஓடலின் பெயர்:—மாதி, சுற்று, சாரிகை, வாளி. (௪)

விரைவின் பெயர்.

436. கதழ்வும் வல்லையு மொல்லையுங் கடுப்புங்
கடுகலுந் தாரையுந் துணைவு நொறிலும்
விசையு முடுகலும் வேகமும் விரைவே.

விரைவின் பெயர்:—கதழ்வு, வல்லை, ஒல்லை, கடுப்பு, கடுகல், தாரை, துணைவு, நொறில், விசை, முடுகல், வேகம். (௧௧)

இதுவுமது.

437. கவனமுந் துரிதமு மப்பெயர்க் கட்டுரை.

ஷ விரைவின் பெயர்:—கவனம், துரிதம். (௨) ஆ (௧௩)

விரைவுக்குறிப்பின் பெயர்.

438. பொள்ளென லையெனல் பொருக்கென னொய்தெனல்
வெய்தெனல் கதுமெனல் விரைவின் பண்பே.

விரைவுக் குறிப்பின் பெயர்:—பொள்ளெனல், ஐயெனல், பொருக்கெனல், நொய்தெனல், வெய்தெனல், கதுமெனல். (௬)

உராய்தலின் பெயர்.

439 உரோச லுரிஞ்ச லுரோஞ்ச லுராய்தல்.

உராய்தலின் பெயர்:—உரோசல், உரிஞ்சல் உரோஞ்சல். (௩)

உலாப்போதலின் பெயர்.

440. பவனி யென்ப துலாப்போத லாகும்.
உலாப் போதலின் பெயர்:—பவனி. (க)

உலாவலின் பெயர்.

441. அசைதலு மியங்கலும் வழங்கலு முலாவுதல்.
உலாவலின் பெயர்:—அசைதல், இயங்கல், வழங்கல். (ங)

உழக்குதலின் பெயர்.

442. உழுதன் மடித்த லுழக்குத லாகும்.
உழக்குதலின் பெயர்:—உழுதல், மடித்தல். (உ)

கோடுபோதலின் பெயர்.

443. போதால்கோடு போதல்.
கோடு போதலின் பெயர்:—போதால். (க)

மீளுதலின் பெயர்.

444. மறிதால் திரிதான் மடங்கன் மீளுதல்.
மீளுதலின் பெயர்:—மறிதால், திரிதால், மடங்கல். (ங)

ஒதுங்கலின் பெயர்.

445. ஒடுங்கலென் கிளவி யொதுங்க லாகும்.
ஒதுங்கலின் பெயர்:—ஒடுங்கல். (க)

செலுத்துதலின் பெயர்.

446. ஓய னடவல் கடவ லோச்சல்
ஏவுதல் தாண்டல் தூண்ட லுகைத்தல்
ஊர்தல் உய்த்தல் செலுத்த லொருபொருள்.
செலுத்தலின் பெயர்: — ஓயல், நடவல், கடவல், ஓச்சல், ஏவுதல், தாண்டல், தூண்டல், உகைத்தல், ஊர்தல், உய்த்தல். (கம)

போதலின் பெயர்.

447. படர்தல் சேற லொதுங்க றீர்த
றிரித லியங்க னீங்க லிறத்த
றாத்த லேகல் செல்லல் விடுதல்
கடத்த னடத்தல் போதலின் பெயரே.
போதலின் பெயர்:—படர்தல், சேறல், ஒதுங்கல், தீர்தல், திரிதல், இயங்கல், நீங்கல், இறத்தல், தூரத்தல், ஏகல், செல்லல், விடுதல், கடத்தல், நடத்தல். (கச)

பத்தாவது

## முறைமை வகை.

### முறைமையின் பெயர்.

448 முறைமையு மூழும் பாவமுந் தன்மமு
முறையும் வாழும் வழியுமா மென்ப.

முறைமையின் பெயர் :— ஊழ், பாவம், தன்மம், முறை, வாழ், வழி. (சு)

### கோத்திரத்தின் பெயர்.

449. குடியே யும்பல் கோத்திர மாகும்.

கோத்திரத்தின் பெயர்:—குடி, உம்பல். (உ)

### பழைமையின் பெயர்.

450. ஒல்லை புராண முதுமை முறையூழ்
தொல்லை முந்தை தொன்று பண்டு
தொன்மை முன்னை புராதனம் பழைமை.

பழைமையின் பெயர்:—ஒல்லை, புராணம், முதுமை, முறை, ஊழ், தொல்லை, முந்தை, தொன்று, பண்டு, தொன்மை, முன்னை, புராதனம். (கஉ)

### முற்பிறப்பின் பெயர்.

451. உம்மைமுற் பிறப்பு.

முற் பிறப்பின் பெயர்:—உம்மை. (க)

### இப்பிறப்பின் பெயர்.

452. இம்மையிப் பிறப்பு.

இப் பிறப்பின் பெயர்:—இம்மை. (க)

### வரு பிறப்பின் பெயர்.

453 அம்மையு மறுமையும் வருபிறப் பாகும்.

வரு பிறப்பின் பெயர்:—அம்மை, மறுமை. (உ)

### பிறப்பின் பெயர்.

454. பிறந்தையும் பவமும் யோனியும் பிறப்பெனல்.

பிறப்பின் பெயர்:—பிறந்தை, பவம், யோனி. (ங)

### இதுவுமது

455. சூதக மென்ன வோதவும் பெறுமே.

ஷ பிறப்பின் பெயர்:—சூதகம். (க)

உரிமையின் பெயர்.

456. உரிமை கிழமை யாட்சியு மாகும்.
உரிமையின் பெயர்:—கிழமை, ஆட்சி. (உ)

பயிறலின் பெயர்.

457. நவிறல் செழுமல் பயிற லாகும்.
பயிறலின் பெயர்:—நவிறல், செழுமல். (உ)

அடைவின் பெயர்.

458. ஆம்ப லடைவே.
அடைவின் பெயர்:—ஆம்பல். (க)

பதினொன்றாவது

## அளவின் வகை.

விரிவின்பெயர்.

459. அளவின் வகையை யளந்தீங் குரைப்பின்
விசாலமும் விபுலமும் விரிவென லாகும்.
விரிவின் பெயர்:—விசாலம், விபுலம். (உ)

பரப்பின்பெயர்.

460. பாய்தல் விரியல் பப்புப் பாவை.
தாவ லென்றிவை தாம்பரப் பாகும்
பரப்பின் பெயர்:—பாய்தல், விரியல், பப்பு, பாவை, தாவல். (ரு)

தூரத்தின் பெயர்.

461. சேணு நீளமுஞ் செய்மையுந் தூரம்.
தூரத்தின் பெயர்:—சேண், நீளம், சேய்மை. (ந)

அகலத்தின் பெயர்.

462. நனவே கண்ணறை வியலிவை யகலம்.
அகலத்தின் பெயர்:—நனவு, கண்ணறை, வியல். (ந)

கனத்தின் பெயர்.

463. கனமே யடையு ஞாட்பு மாகும்.
கனத்தின் பெயர்:—அடை, ஞாட்பு, (உ)

### எல்லையின் பெயர்.

464. அவதியுஞ் சிம்முங் காடும்பரி யந்தமும்
ஏணியும் வரைப்புங் கொத்தமு மெல்லை.

எல்லையின் பெயர்:—அவதி, சிம், காடு, பரியந்தம், ஏணி, வரைப்பு, கொத்தம். (எ)

### அளவின் பெயர்.

465. தனையுங் காறுந் தாறுந் துணையும்
வரையும் பிரமாணமு மாத்திரையு மட்டு
மளவின் பெயரென் றறைந்தனர் புலவர்.

அளவின் பெயர்:—தனை, காறு, தாறு, துணை, வரை, பிரமாணம், மாத்திரை, மட்டு. (அ)

### அளவின்மையின் பெயர்.

466. அபரி மிதமு மநந்தமு மபாரமு
மெல்லையில் பொருளும் மளவின்மை யென்ப.

அளவு இன்மையின் பெயர்:—அபரிமிதம், அநந்தம், அபாரம், எல்லையின்மை. (௯)

### பெருமையின் பெயர்.

467. இருமையும் பொழிலு மேந்தலு மீடுங்
கருமையுந் தடவுங் கயவு மணியும்
பகடு மண்ணலுஞ் செம்மலும் பரியு
மிறையும் பேழுங் கொன்னும் விபுலமும்
வியலுந் தலையு நெய்தையு மாவுந்
தகையு முடலையு மூரியும் வீறு
நளியு மீளியு நன்றும் பாடும்
நனியும் பணையும் விறலுஞ் சேடும்
பீடுங் கதழ்வும் பெருமைப் பெயரே.

பெருமையின் பெயர்:—இருமை, பொழில், ஏந்தல், ஈடு, கருமை, தடவு, கயவு, அணி, பகடு, அண்ணல், செம்மல், பரி, இறை, பேழ், கொன், விபுலம், வியல், தலை, நெய்தை, மா, தகை, முடலை, மூரி, வீறு, நளி, மீளி, நன்று, பாடு, நனி, பணை, விறல், சேடு, பீடு, கதழ்வு. (௰)

### நுண்மையின் பெயர்.

468. ஐயு நுணுக்கமு மணுவு முளரியும்
நுவணையு நுட்பமு நுணங்கு நுழையும்
நுணுகு நுழையு நுண்மைப் பெயரே.

நுண்மையின் பெயர்:—ஐ, நுணுக்கம், அணு, முளரி, நுவணை, நுட்பம், நுணங்கு, நூழை, நுணுகு, நுழை. (கo)

சிறுமையின் பெயர்.

469. அற்பமுங் கன்றுந் தன்னமு மாசும்
பேடும் வறிது மிறையுஞ் சிறுமை.

சிறுமையின் பெயர்:—அற்பம், கன்று, தன்னம், ஆசு, பேடு, வறிது, இறை. (எ)

நிறைவின் பெயர்.

470. மலித றுவன்றன் மல்க லார்த
றெருள றதும்ப றேக்கல் கிளைத்த
னிரம்பல் பூரணங் கமமே நிறைவு.

நிறைவின் பெயர்:—மலிதல், துவன்றல், மல்கல், ஆர்தல், தெருளல், ததும்பல், தேக்கல், கிளைத்தல், நிரம்பல், பூரணம், கமம். (கக)

பெருக்கத்தின் பெயர்.

471. பிறங்கலும் பெருகலும் பெருக்க மாகும்.

பெருக்கத்தின் பெயர்:—பிறங்கல், பெருகல். (உ)

குறைபாட்டின் பெயர்.

472. ஊனமு நிரப்பும் விகலமுந் தவலு
மீனமுங் குறைபா டென்றியம்பல் வேண்டும்.

குறைபாட்டின் பெயர்:—ஊனம், நிரப்பு, விகலம், தவல், ஈனம். (ரு)

குறைதலின் பெயர்.

473. சுருங்கலுங் குறையு மருகலுங் குன்றலு
மெஞ்சலுங் குறைதலி னியன்ற பெயரே.

குறைதலின் பெயர்:—சுருங்கல், குறை, அருகல், குன்றல், எஞ்சல். (ரு)

மிகுதியின் பெயர்.

474. அமலை நனியே யாற்ற லிறப்புப்
பெருகல் கழிவு சிறப்புப் பிறங்க
லுருப்பந் தவமத ரூக்க மதிகம்
விதப்புச் செறிதல் பொங்கன் மிகுதி.

மிகுதியின் பெயர்:—அமலை, நனி, ஆற்றல், இறப்பு, பெருகல், கழிவு, சிறப்பு, பிறங்கல், உருப்பம், தவ, மதர், ஊக்கம், அதிகம், விதப்பு, செறிதல், பொங்கல். (கசு)

### பொலிவின் பெயர்.

475. துப்புக் கலிப்புக் கஞறல் பொம்மல்
பொறியே பொக்கம் பூப்பொலி வாகும்.

பொலிவின் பெயர்:—துப்பு, கலிப்பு, கஞறல், பொம்மல், பொறி, பொக்கம், பூ. (எ)

### செறிவின் பெயர்.

476. துறுத லுறப்புப் பிறப்புத் துதைதல்
மிடைதல் துற்று வெறித லோதி
செற்று வெறுப்புக் கஞற லடர்தல்
நெருங்குதல் திணுங்குதல் செறிவின் பெயரே.

செறிவின் பெயர்:—துறுதல், உறப்பு, பிறப்பு, துதைதல், மிடைதல், துற்று, வெறிதல், ஓதி, செற்று, வெறுப்பு, கஞறல், அடர்தல், நெருங்குதல், திணுங்குதல். (க௪)

### கூட்டத்தின் பெயர்.

477. கூளியு மீட்டமுங் குழுமலுந் தோடுந்
தொழுதியுந் தொறுவுந் தொகையுங் குழாமுந்
துற்று நளியு முகையு மொய்யுங்
கணமுஞ் சரியு மீண்டலுஞ் சங்கமுந்
திரளையுஞ் சவையு மவையுங் கூட்டம்.

கூட்டத்தின் பெயர்:—கூளி, ஈட்டம், குழுமல், தோடு, தொழுதி, தொறு, தொகை, குழாம், துற்று, நளி, முகை, மொய், கணம், சரி, ஈண்டல், சங்கம், திரளை, சவை, அவை. (க௯)

### திரளின் பெயர்.

478. கொம்மையு முண்டையுங் குழியமுங் குப்பையு
முத்தையும் பூகமுஞ் சோகமும் புஞ்சமும்
பந்தமு மாழையும் வட்டும் பிண்டமும்
வழியுஞ் சேடுஞ் சேர்வுந் திரளே.

திரளின் பெயர்:—கொம்மை, உண்டை, குழியம், குப்பை, முத்தை, பூகம், சோகம், புஞ்சம், பந்தம், மாழை, வட்டு, பிண்டம், வழி, சேடு, சேர்வு. (க௫)

### ஐம்மையின் பெயர்.

479. அரியுந் தகடு மடரு மைம்மை.

ஐம்மையின் பெயர்:—அரி, தகடு, அடர்.

[ஐம்மை=தகட்டு வடிவு]

எல்லாம் என்றலின் பெயர்.

480. அடையவு மடங்கலு மனைத்தும் யாவையு
முழுவது முற்றுஞ் சமத்தமு முட்டவு
மெவையு மெல்லா மென்றலின் பெயரே.

எல்லாம் என்றலின் பெயர்:—அடைய, அடங்கல், அனைத், யாவை, முழுவதும், முற்றும், சமத்தம், முட்ட, எவை.

இதுவுமது.

481. அகிலமு மகண்டமு மப்பெய ராகும்.

ஷை எல்லாம் என்றலின் பெயர்:—அகிலம், அகண்டம். (உ) ஆ

பாதியின் பெயர்.

482. பாயல்பய லருத்தம் பங்கு பாதி.

பாதியின் பெயர்:—பாயல், பயல், அருத்தம், பங்கு.

இதுவுமது.

483. கூறும் பாகமுங் கூறு மதற்கே.

ஷை பாதியின் பெயர்:—கூறு, பாகம். (உ) ஆ

பாரத்தின் பெயர்.

484. சீருங் கனமுங் குருவு ஞாட்பும்
பார மாகும் பரமு மதற்கே.

பாரத்தின் பெயர்:—சீர், கனம், குரு, ஞாட்பு, பரம்.

நொய்மையின் பெயர்.

485. நொய்வு மிலேசு நொய்மை யாகும்.

நொய்மையின் பெயர்:—நொய்வு, இலேசு.

பொழுது போக்கலின் பெயர்.

486. நெடித்தல் பாணித்தல் பொழுது போக்கல்.

பொழுது போக்கலின் பெயர்:—நெடித்தல், பாணித்தல்.

மீறுதலின் பெயர்.

487. திருகலு முறுகலு மீறுத லென்ப.

மீறுதலின் பெயர்:—திருகல், முறுகல்.

குவிதலின் பெயர்.

488. குவையுங் குவாலு மிராசியுங் குப்பையுங்
குவவு நூழிலுங் குவிதற் பெயரே.

குவிதலின் பெயர்:—குவை, குவால், இராசி, குப்பை, குவவு, நூழில். (௬)

முதலின் பெயர்.

489. ஆதி தலைதா ளடிமுன் னெழுவாய்
மோனை பிராசய முதலெனப் படுமே.

முதலின் பெயர்:—ஆதி, தலை, தாள், அடி, முன், எழுவாய், மோனை, பிராசயம். (௮)

நடுவின் பெயர்.

490. இடைசம மத்திமம் நாப்பண் பகனடு.

நடுவின் பெயர்:—இடை, சமம், மத்திமம், நாப்பண், பகல். (௫)

இதுவுமது.

491. நள்ளென் பெயரு நனந்தலையு மாகும்.

ஷை நடுவின் பெயர்:—நள், நனந்தலை (௨) ஆக (௭)

கடையின் பெயர்.

492. இறுதிபின் னெல்லை கடையீ றந்த
முடிவு முற்று முடித லாகும்.

கடையின் பெயர்:—இறுதி, பின், எல்லை, ஈறு, அந்தம், முடிவு, முற்று, முடிதல். (௮)

மிகுத்தலின் பெயர்.

493. தெறுத லுறுத்தல் மிகுத்த லாகும்.

மிகுத்தலின் பெயர்:—தெறுதல், உறுத்தல். (௨)

மிக்கதன் பெயர்.

494. மிஞ்சுதல் விஞ்சுதல் மீமிசை மிக்கது.

மிக்கதன் பெயர்:—மிஞ்சுதல், விஞ்சுதல், மீமிசை. (௩)

நெருக்கத்தின் பெயர்.

495. எக்கல் குவித்த னளிநிபிட நெருக்கம்.

நெருக்கத்தின் பெயர்:—எக்கல், குவித்தல், நளி, நிபிடம். (௪)

தூக்கின் பெயர்.

496. தூக்குத் துலாங்கா.

தூக்கின் பெயர்:—துலாம், கா. (௨)

தூக்கினிறையின் பெயர்.

497. நூற்றுப் பலநிறை.

தூக்கின் நிறையின் பெயர்:—நூற்றுப்பலம். (க)

ஒரு பலத்தின் பெயர்

498. தொடியென் கிளவி யொருபல மாகும்.

ஒரு பலத்தின் பெயர்:—தொடி. (க)

துலாமிருபஃதின் பெயர்.

499 பார மென்பது துலா மிருபஃதே.

துலாம் இருபஃதின் பெயர்:—பாரம். (க)

காற்பலத்தின் பெயர்.

500. கஃசு காற்பலம்.

கால் பலத்தின் பெயர்:—கஃசு. (க)

மாகாணிப்பலத்தின் பெயர்.

501. வீசமா காணிப்பலம்.

மாகாணிப் பலத்தின் பெயர்:—வீசம். (க)

ஒன்றன் பெயர்.

502. ஏக மொன்றே.

ஒன்றன் பெயர்:—ஏகம். (க)

பத்தின் பெயர்.

503. தசம்பத் தாகும்.

பத்தின் பெயர்:—தசம். (க)

நூற்றின் பெயர்.

504. சதநூ றாகும்.

நூற்றின் பெயர்:—சதம். (க)

ஆயிரத்தின் பெயர்.

505. சகசிர மாயிரம்.

ஆயிரத்தின் பெயர்:—சகசிரம். (க)

பதினாயிரத்தின் பெயர்.

506. அயுதம்பதி னாயிரம்.

பதினாயிரத்தின் பெயர்:—அயுதம். (க)

நூறுயிரத்தின் பெயர்.

507. நியுத நூறுயிரமே.

நூறுயிரத்தின் பெயர்:—நியுதம். (க)

பத்துநூறுயிரத்தின் பெயர்.

508. பிரயுதம் பத்து நூறு யிரமே.

பத்து நூறுயிரத்தின் பெயர்:— பிரயுதம். (க)

கோடியின் பெயர்.

509. பிரயுதம் பத்தே கோடி யென்ப.

கோடியின் பெயர்:—பிரயுதம் பத்து. (க)

அற்புதத்தின் பெயர்.

510. கோடி பத்தே யற்புத மாகும்.

அற்புதத்தின் பெயர்:—கோடி பத்து. (க)

நிகர்ப்புதத்தின் பெயர்.

511. அற்புதம் பத்தே நிகர்ப்புத மாகும்.

நிகர்ப்புதத்தின் பெயர்:—அற்புதம் பத்து. (க)

கும்பத்தின் பெயர்.

512. நிகர்ப்புதம் பத்தே கும்ப மாகும்.

கும்பத்தின் பெயர்:—நிகர்ப்புதம் பத்து. (க)

கணகத்தின் பெயர்.

513. கும்பம் பத்தே கணக மாகும்.

கணகத்தின் பெயர்:—கும்பம் பத்து. (க)

கற்பத்தின் பெயர்.

514. கணகம் பத்தே கற்ப மாகும்.

கற்பத்தின் பெயர்:—கணகம் பத்து. (க)

நிகற்பத்தின் பெயர்.

515. கற்பம் பத்தே நிகற்ப மாகும்.

நிகற்பத்தின் பெயர்:—கற்பம் பத்து (க)

பதுமத்தின் பெயர்.

516. நிகற்பம் பத்தே பதும மாகும்.

பதுமத்தின் பெயர்:—நிகற்பம் பத்து. (க)

சங்கத்தின் பெயர்.

517. பதுமம் பத்தே சங்க மாகும்.
சங்கத்தின் பெயர்:—பதுமம் பத்து. (க)

சமுத்திரத்தின் பெயர்.

518. சங்கம் பத்தே சமுத்திர மாகும்.
சமுத்திரத்தின் பெயர்:—சங்கம் பத்து. (க)

அந்தியத்தின் பெயர்.

519. சமுத்திரம் பத்தே யந்திய மாகும்.
அந்தியத்தின் பெயர்:—சமுத்திரம் பத்து. (க)

மத்தியத்தின் பெயர்.

520. அந்தியம் பத்தே மத்திய மாகும்.
மத்தியத்தின் பெயர்:—அந்தியம் பத்து. (க)

பரார்த்தத்தின் பெயர்.

521. மத்தியம் பத்தே பரார்த்த மாகும்.
பரார்த்தத்தின் பெயர்:—மத்தியம் பத்து. (க)

பூரியத்தின் பெயர்.

522. பரார்த்தம் பத்தே பூரிய மாகும்.
பூரியத்தின் பெயர்:—பரார்த்தம் பத்து. (க)

பிரமகற்பத்தின் பெயர்.

523. பூரியம் பத்தே பிரம கற்பமென்
றோதின ரெண்ண றுறுமப் பெயரே.
பிரம கற்பத்தின் பெயர்:—பூரியம் பத்து. (க)

பன்னிரண்டாவது

## காரண வகை, பல்பொருள் வகை.

காரண வகை, பல் பொருள் வகை கூறுதல்.

524. காரண வகையும் பல்பொருள் வகையுஞ்
சேர வுரைப்பன் றெள்ளத் தெளிந்தே.
காரண வகையும், பல் பொருள் வகையும் ஒருசேரக் கூறுகிற்பன்.

காரணத்தின் பெயர்.

525 நிபமும் பொருட்டு மேதுவு நிமித்தமுந்
திறனும் வாயிலு மூலமு மென்றிவை
கருதுங் காலைக் காரண மாகும்.

காரணத்தின் பெயர்:—நிபம், பொருட்டு, ஏது, நிமித்தம், திறன், வாயில், மூலம். (எ)

உட்டொளையின் பெயர்.

526. சுகிர்குழ னாழி தசிரந் தூம்பு
புழைபுரை வேய்வேணு வுட்டொளை பொள்ளே.

உட்டொளையின் பெயர்:—சுகிர், குழல், நாழி, தசிரம் தூம்பு, புழை, புரை, வேய், வேணு, பொள். (கo)

இதுவுமது.

527. நாளமுஞ் சுரையு மதற்கு நாமம்.

ஷை உட்டொளையின் பெயர்:—நாளம், சுரை. (உ) ஆ (கஉ)

வட்டத்தின் பெயர்.

528. வலய நேமி கடக மண்டிலம்
பரிதி யாழி பாண்டில் விருத்தம்
படலிகை கோளகை பாலிகை கொம்மை
திகிரி மல்லை வல்லை சக்கரந்
தட்டு வட்டணை யென்றிவை பிறவும்
வட்ட வடிவிற் கொட்டிய பெயரே.

வட்டத்தின் பெயர்:—வலயம், நேமி, கடகம், மண்டிலம், பரிதி, ஆழி, பாண்டில், விருத்தம், படலிகை, கோளகை, பாலிகை, கொம்மை, திகிரி, மல்லை, வல்லை, சக்கரம், தட்டு, வட்டணை. (கஅ)

அதிசயத்தின் பெயர்.

529. வியப்பே யிறும்பு விசித்திரம் விம்மிதம்
விபரீத மிறும்பூ ததிசய மாகும்.

அதிசயத்தின் பெயர்:—வியப்பு, இறும்பு, விசித்திரம், விம்மிதம், விபரீதம், இறும்பூது. (சு)

இதுவுமது

530. சித்திர மென்பது மற்றதற் குரித்தே.

ஷை அதிசயத்தின் பெயர்:—சித்திரம். (க) ஆ

உவமையின் பெயர்.

531 புரைய மானும் பொருவுங் கடுப்பு
நிகரு மேய்வு நேரும் போலு
மொப்பு முவமமு மேரு மாங்கு
மெனவெதி ரன்னவு மிணையு முறழ்வும்
சமமுந் துல்லியமு முவமைக் காகும்.

உவமையின் பெயர்:—புரை, மான், பொருவு, கடுப்பு, நிகர், ஏய்வு, நேர், போல், ஒப்பு, உவமம், ஏர், ஆங்கு, என, எதிர், அன்ன, இணை, உறழ்வு, சமம், துல்லியம். (கக)

வினையின் பெயர்

532 கருமமுந் தொழிலும் விதியும் பணியும்
வினையமுஞ் செயலும் வினையின் பெயரே.

வினையின் பெயர்:—கருமம், தொழில், விதி, பணி, வினையம், செயல். (சா)

செய்தலின் பெயர்.

533 அயர்தலுங் குயிறலும் பண்ணலும் வனைதலும்
புரிதலு மாடலுஞ் செய்த லாகும்.

செய்தலின் பெயர்:—அயர்தல், குயிறல், பண்ணல், வனைதல், புரிதல், ஆடல். (சா)

விற்றலின் பெயர்.

534 மாறுதல் பகர்தல் கூறுதல் விற்றல்.

விற்றலின் பெயர்:—மாறுதல், பகர்தல், கூறுதல். (௩)

விலையின் பெயர்.

535 நொடையென் கிளவி விலையென நுவல்வர்.

விலையின் பெயர்:—நொடை. (க)

கூட்டுதலின் பெயர்.

536 ஆற்றலும் போற்றலு மீட்டலுங் கூட்டுதல்.

கூட்டுதலின் பெயர்:—ஆற்றல், போற்றல், ஈட்டல். (௩)

இதுவுமது.

537 ஓம்ப லென்பது மாங்கதன் மேற்றே.

ஷை கூட்டுதலின் பெயர்:—ஓம்பல். (க) ஆக (௪)

### இலாஞ்சனையின் பெயர்.

538. ஆணை பொறிகுறி யச்சடை யாளம்
சாதனஞ் சின்ன முத்திரை யிலிங்கமென்
றேயிவை பலவு மிலாஞ்சனை யாகும்.

இலாஞ்சனையின் பெயர்:—ஆணை, பொறி, குறி, அச்சு, அடை யாளம், சாதனம், சின்னம், முத்திரை, இலிங்கம். (கூ)

### தலைக்காவலின் பெயர்.

539. இளையுருக் கிரமு மிவைதலைக் காவல்.

தலைக் காவலின் பெயர்:—இளை, உக்கிரம். (உ)

### படர்தலின் பெயர்.

540. படலை படர்ச்சி பம்பல் படர்தல்.

படர்தலின் பெயர்:—படலை, படர்ச்சி, பம்பல். (௩)

### அறியாமையின் பெயர்.

541. எய்யாமை யறியாமை.

அறியாமையின் பெயர்:—எய்யாமை. (க)

### ஒழியாமையின் பெயர்.

542. ஓவாமை யொழியாமை.

ஒழியாமையின் பெயர்:—ஓவாமை. (க)

### வழிப்பறியின் பெயர்.

543. அதர்கோள் வழிப்பறி யாறலையு மாகும்.

வழிப்பறியின் பெயர்:—அதர்கோள், ஆறலை. (உ)

### தைத்தலின் பெயர்.

544. அத்துும் பொல்லமுந் தைத்தல் துன்னம்.

தைத்தலின் பெயர்:—அத்து, பொல்லம், துன்னம். (௩)

### தண்டலின் பெயர்.

545. தப்பலென் கிளவி தண்ட லாகும்.

தண்டலின் பெயர்:—தப்பல் (க)

### காய்தலின் பெயர்.

546. உலறுதல் காய்தல் வறளுதன் முளிதல்.

காய்தலின் பெயர்:—உலறுதல், வறளுதல், முளிதல். (௩)

பில்குதலின் பெயர்.

**547.** பிலிற்றல் தூவுதல் பில்குத லென்ப.

பில்குதலின் பெயர்:—பிலிற்றல், தூவுதல். (உ)

குடியிறையின் பெயர்.

**548.** கறைவரி யாயங் கடன்கர மென்றிவை
குடியிறைப் பெயரா மிறுப்பு மதற்கே.

குடி இறையின் பெயர்:—கறை, வரி, ஆயம், கடன், கரம், இறுப்பு. (சா)

சுங்கவிறையின் பெயர்.

**549.** உல்கு சாரிகை சுங்கவிறை யாகும்.

சுங்க இறையின் பெயர்:—உல்கு, சாரிகை. (உ)

தீர்தலின் பெயர்.

**550.** ஓவ தீர்தல்.

தீர்தலின் பெயர்:— ஓவல். (க)

முடிவின் பெயர்.

**551.** முடிவு வீடே.

முடிவின் பெயர்:—வீடு. (க)

கலத்தலின் பெயர்.

**552.** கலவை கலப்புக் கலத்த லாகும்.

கலத்தலின் பெயர்:—கலவை, கலப்பு. (உ)

ஏழாவது

பண்பிற் செயலின் பகுதிவகை முற்றிற்று.

---

ஆ சூத்திரம் உஙகO.

---

எட்டாவது

# மாப் பெயர் வகை.

## முதலாவது
## புள் வகை.

அன்னத்தின் பெயர்.

1. அன்ன மெகின மஞ்ச மோதிம
மென்னடை வக்கி ராங்கம் விகங்கம்.

அன்னத்தின் பெயர்—எகினம், அஞ்சம், ஓதிமம், மென்னடை, வக்கிராங்கம், விகங்கம். (சு)

இதுவுமது.

2. பிணிமுக மாராள மென்னவும் பேசுவர்.

ஷை அன்னத்தின் பெயர்:—பிணிமுகம், மராளம். (உ) ஆ (அ)

அன்னத்திறகின் பெயர்.

3. தூவி யன்னத் திறகெனச் சொல்லும்.

அன்னத்து இறகின் பெயர்:—தூவி. (க)

மயிலின் பெயர்.

4. சிகியே நவிர மஞ்ஞை பிணிமுகஞ்
சிகண்டி மயூரங் கேதார மொகரஞ்
சிகாவள ஞமலி கலாபி பீலி
தோகை கேகய மயிலெனச் சொல்லும்.

மயிலின் பெயர்:—சிகி, நவிரம், மஞ்ஞை, பிணிமுகம், சிகண்டி, மயூரம், கேதாரம், ஒகரம், சிகாவளம், ஞமலி, கலாபி, பீலி, தோகை, கேகயம். (கச)

மயிற்றேகையின் பெயர்.

5. சரணஞ் சிகண்டங் கூந்தல் சந்திரகந்
தொங்க றேகை தூவியு மாகும்.

மயில் தோகையின் பெயர்:—சரணம், சிகண்டம், கூந்தல், சந்திரகம், தொங்கல், தூவி. (சு)

இதுவுமது.

6 பீலியுங் கலாபமுங் கூழையு மதற்கே.

ஷை மயில்தோகையின் பெயர்:—பீலி, கலாபம், கூழை. (ங) ஆ (கூ)

### விரிதரு தோகையின் பெயர்.

7. மேசக மென்பது விரிதரு தோகை.

விரிதரு தோகையின் பெயர்:—மேசகம். (க)

### மயிற்குரலின் பெயர்.

8. அகவ லால லேங்கன் மயிற்குரல்.

மயில் குரலின் பெயர்:—அகவல், ஆலல், ஏங்கல். (ங)

### மயிற் சிகையின் பெயர்.

9. அநந்தர மயூர விரிசிகை யாகும்.

மயில் சிகையின் பெயர்:—அநந்தரம். (க)

### இறகி னடிமுள்ளின் பெயர்.

10. முருந்தே யிறகின் முதன்முள் ளாகும்.

இறகின் அடிமுள்ளின் பெயர்:—முருந்து. (க)

### கருடன் பெயர்.

11. வைன னுவணன் வைன தேயன்
பறவை வேந்தன் பன்னக வைரி
கலுழன் றார்க்கியன் சௌரி கருடன்.

கருடன் பெயர்:—வைனன், உவணன், வைனதேயன், பறவை வேந்தன், பன்னகவைரி, கலுழன், தார்க்கியன், சௌரி. (அ)

### இதுவுமது.

12. இமையிலி யெனவு மியம்பப் பெறுமே.

௸ கருடன் பெயர்:—இமையிலி. (க) ஆ (கூ)

### கழுகின் பெயர்.

13. பவணை யுவணஞ் சகுந்தம் புண்டா
மெருவை கங்கமுங் கழுகெண விசைப்பர்.

கழுகின் பெயர்:—பவணை, உவணம், சகுந்தம், புண்டாம், எருவை, கங்கம். (சா)

### இதுவுமது.

14. பூக மென்பது மப்பெயர் புகலும்.

௸ கழுகின் பெயர்:—பூகம். (க) ஆ (எ)

### சக்கரவாகப்புள்ளின் பெயர்.

15. நேமிப்புள் சக்கர வாகப்புள் சகோரம்.

சக்கரவாகப் புள்ளின் பெயர்:—நேமிப்புள், சகோரம். (உ)

பெருங் குருகின் பெயர்.

16. யானையுண் குருகு பெருங்குரு கென்ப.

பெருங் குருகின் பெயர்:—யானையுண்குருகு. (௧)

எண்காற் புள்ளின் பெயர்.

17. சிம்புள்வா ருண்ட மம்பர வாணஞ்
சம்பரம் வருடை துரோணஞ் சரப
மெண்காற் பறவைக் கெய்தும் பெயரே.

எண்கால் புள்ளின் பெயர்:—சிம்புள், வாருண்டம், அம்பரவாணம், சம்பரம், வருடை, துரோணம், சரபம். (எ)

பருந்தின் பெயர்.

18. பாறு சேனங் கங்கம் பருந்தே.

பருந்தின் பெயர்:—பாறு, சேனம், கங்கம். (ங)

இதுவுமது.

19. கூறிற் பார சிகையுங் கூறும்.

ஷை பருந்தின் பெயர்:—பாரசிகை. (௧) ஆ (௪)

நிலாமுகியின் பெயர்.

20. சகோரம்பே ராந்தை நிலாமுகி யாகும்.

நிலாமுகியின் பெயர்:—சகோரம், பேராந்தை. (உ)

பொய்யாப் புள்ளின் பெயர்.

21. சலாங்கென் கிளவி பொய்யாப் புள்ளே.

பொய்யாப் புள்ளின் பெயர்:—சலாங்கு. (௧)

அசுணமாவின் பெயர்.

22. அசுணமா விசையறி பறவைகே கயப்புள்.

அசுணமாவின் பெயர்:—இசையறிபறவை, கேகயப்புள். (உ)

சாதகப் புள்ளின் பெயர்.

23. நவில்சா ரங்கஞ் சாதகப் புள்ளெனல்.

சாதகப் புள்ளின் பெயர்:—சாரங்கம். (௧)

வானம்பாடியின் பெயர்.

24. கலிங்கம் வானம் பாடி யாகும்.

வானம்பாடியின் பெயர்:—கலிங்கம். (௧)

இதுவுமது.

25. மேகப்புள் ளென்றும் விளம்ப லாகும்.

ஷை வானம்பாடியின் பெயர்:—மேகப்புள். (க) ஆக (உ)

கிளியின் பெயர்.

26. சாரு வன்னி யவந்திகை தத்தை
கீரங் கிள்ளை கிளிப்பெய ராகும்.

கிளியின் பெயர்:—சாரு, வன்னி, அவந்திகை, தத்தை, கீரம், கிள்ளை. (௬)

இதுவுமது.

27. அரிசு வாகதஞ் சுகமு மாகும்.

ஷை கிளியின் பெயர்:—அரி, சுவாகதம், சுகம். (௩) ஆக (௯)

குயிலின் பெயர்.

28. காளகண் டங்கோ ரகைபர புட்டங்
கோகிலம் பிகத்தொடு குயிலின் பெயரே.

குயிலின் பெயர்:—காளகண்டம், கோரகை, பரபுட்டம், கோகிலம், பிகம். (௫)

கோட்டான் பெயர்.

29. கூகை குடிஞை குரா அல் கௌசிகம்
ஊமனி சாசரி யுலூகங் கோட்டான்.

கோட்டான் பெயர்:—கூகை, குடிஞை, குரால், கௌசிகம், ஊமன், நிசாசரி, உலூகம். (௭)

பெருங் கோட்டான் பெயர்.

30. கௌசிக மூமன் குடிஞை கூகை
பெரும்பு ளென்ப பெருங்கோட் டான்பெயர்.

பெருங்கோட்டான் பெயர்:—கௌசிகம், ஊமன், குடிஞை, கூகை, பெரும்புள். (௫)

அன்றிலின் பெயர்.

31. கவுஞ்ச மன்றில் கிரவுஞ்சமுஞ் சாற்றும்.

அன்றிலின் பெயர்:—கவுஞ்சம், கிரவுஞ்சம். (உ)

காடையின் பெயர்.

32. கபிஞ்சலங் குறும்பூழ் காடை யாகும்.

காடையின் பெயர்:—கபிஞ்சலம், குறும்பூழ். (உ)

கரிக்குருவியின் பெயர்.

33. காரி பிள்ளை கபிலங் கஞ்சனங்
கயவாய் கரிக்குரு விப்பெய ராகும்.

கரிக் குருவியின் பெயர்:—காரி, பிள்ளை, கபிலம், கஞ்சனம், கயவாய். (ரு)

வலியன் பெயர்.

34. கஞ்சனங் கிகிணி கஞ்ச ரீடம்
வயவன் பாரத் துவாசம் வலியன்.

வலியன் பெயர்:—கஞ்சனம், கிகிணி, கஞ்சரீடம், வயவன், பாரத்துவாசம். (ரு)

காரிப்பிள்ளையின் பெயர்.

35 வஞ்சுளன் வயவன் வயான்கா ரிப்பிள்ளை.

காரிப் பிள்ளையின் பெயர்:—வஞ்சுளன், வயவன், வயான். (௩)

கோழியின் பெயர்.

36. குக்குடங் குருகு வாரணங் கோழி.

கோழியின் பெயர்:—குக்குடம், குருகு, வாரணம். (௩)

இதுவுமது.

37. ஆண்டலைப் புள்கா லாயுத மாகும்.

ஷ கோழியின் பெயர்:—ஆண்டலைப்புள், காலாயுதம். (௨) ஆ (ரு)

சம்பங்கோழியின் பெயர்.

38. கம்பு ளென்ப சம்பங் கோழி.

சம்பங் கோழியின் பெயர்:—கம்புள். (க)

நிலங்கின் பெயர்.

39. நிலங்கு பூழ்.

நிலங்கின் பெயர்:—பூழ். (க)

கானாங்கோழியின் பெயர்.

40. காதம்பம் கானாங்கோழி.

கானாக் கோழியின் பெயர்:—காதம்பம். (க)

கருங் கிளியின் பெயர்.

41 கீரங் கிள்ளையரி கருங்கிளிக் கேற்கும்.

கருங் கிளியின் பெயர்:—கீரம், கிள்ளை, அரி. (௩)

கரும் புறாவின் பெயர்.

42. கபோதம் பாரா வதங்கரும் புறாவே.

கரும் புறாவின் பெயர்:—கபோதம், பாராவதம். (உ)

புறாப் பொதுவின் பெயர்.

43. தூதுணங் கபோதங் களரவம் புறாவே.

புறாப் பொதுவின் பெயர்:—தூதுணம், கபோதம், களரவம். (ங)

கவுதாரியின் பெயர்.

44. சிரவங் கவுதாரி.

கவுதாரியின் பெயர்:—சிரவம். (க)

பகண்டையின் பெயர்.

45. சில்லை பகண்டை.

பகண்டையின் பெயர்:—சில்லை. (க)

நாகணவாய்ப்புள்ளின் பெயர்.

46. பூவை சாரிகை நாகண வாய்ப்புள்.

நாகணவாய்ப் புள்ளின் பெயர்:—பூவை, சாரிகை. (உ)

கல்சிலையின் பெயர்.

47. பல்லி யென்ப கல்சிலை யாகும்.

கல்சிலையின் பெயர்:—பல்லி. (க)

உள்ளான் பெயர்.

48. உள்ள லென்பது வுள்ளா னாகும்.

உள்ளான் பெயர்:—உள்ளல். (க)

மாடப்புறாவின் பெயர்.

49 கன்மேய்வு காளபதம் மாடப் புறாவே.

மாடப் புறாவின் பெயர்:—கன்மேய்வு, காளபதம். (உ)

தூக்கணங் குருவியின் பெயர்.

50. சிதகஞ் சிந்தன் றூக்கணங் குருவி.

தூக்கணங் குருவியின் பெயர்:—சிதகம், சிந்தன். (உ)

இராகப் புள்ளின் பெயர்.

51. மிதுனங் கின்னா மிராகப் புள்ளே.

இராகப் புள்ளின் பெயர்:—மிதுனம், கின்னரம். (உ)

தலையிலாக் குருவியின் பெயர்.

52. மழைக்குயில் தலையிலாக் குருவி யாகும்.
தலையிலாக் குருவியின் பெயர்:—மழைக்குயில். (க)

சிச்சிலியின் பெயர்.

53. சிரல்கவுதம் பொன்வாய்ப்புள் தித்திரி சிச்சிலி.
சிச்சிலியின் பெயர்:—சிரல், கவுதம், பொன்வாய்ப்புள், தித்திரி. (உ)

மீன்எறி சிறுபறவையின் பெயர்.

54. சிரலே மீன்எறி சிறுபறவை யாகும்.
மீன்எறி சிறு பறவையின் பெயர்:—சிரல். (௩)

ஊர்க்குருவியின் பெயர்.

55. கலிங்கஞ் சகடங் குலிங்கமூர்க் குருவி.
ஊர்க் குருவியின் பெயர்:—கலிங்கம், சகடம், குலிங்கம். (௪)

இதுவுமது.

56. புலிங்க மென்றும் புகலப் பெறுமே.
ஷெ ஊர்க்குருவியின் பெயர்:—புலிங்கம். (௫)

காகத்தின் பெயர்.

57. கடங் கொடிபலி புட்டங் காரி
வாயசங் கரும்பிள்ளை யரிட்டங் காகம்.
காகத்தின் பெயர்—கடம், கொடி, பலிபுட்டம், காரி, வாயசம், கரும்பிள்ளை, அரிட்டம். (௬)

அண்டங் காக்கையின் பெயர்.

58 காகோல மண்டங் காக்கை யாகும்.
அண்டங் காக்கையின் பெயர்:—காகோலம். (௭)

நீர்க் காக்கையின் பெயர்.

59. அர்க்கமும் காரண்டமு நீர்க்காக்கை யாகும்.
நீர்க் காக்கையின் பெயர்:—அர்க்கம், காரண்டம். (௮)

செம்போத்தின் பெயர்.

60. குக்கில்செம் போத்துச் சகோரமு மதற்கே.
செம்போத்தின் பெயர்:—குக்கில், சகோரம். (௯)

சிவலின் பெயர்.

61. கோரசம் புல்லோ டிதல்சிவ லாகும்.
சிவலின் பெயர்:—கோரசம், புல், இதல். (௩)

ஆந்தையின் பெயர்.

62. இருடி பிங்கலை கின்னர மாந்தை.
ஆந்தையின் பெயர்:—இருடி, பிங்கலை, கின்னரம். (௩)

பேராந்தையின் பெயர்.

63. சகோரம்பே ராந்தை தனக்குப் பெயரே.
பேராந்தையின் பெயர்:—சகோரம். (௧)

கோய்யடி நாரையின் பெயர்.

64. குருகுவண் டானங் கொய்யடி நாரை.
கொய்யடி நாரையின் பெயர்:—குருகு, வண்டானம். (௨)

பெரு நாரையின் பெயர்.

65. பெருநாரை போதா பிதாவு மாகும்.
பெரு நாரையின் பெயர்:—போதா, பிதா. (௨)

கரு நாரையின் பெயர்.

66. சிகரிகரு நாரை யெனச்செப் பினரே.
கரு நாரையின் பெயர்:—சிகரி. (௧)

வெண்ணாரையின் பெயர்.

67. சாரசம்வெண் ணாரை யெனச்சாற் றுவரே.
வெண் நாரையின் பெயர்:—சாரசம். (௧)

கோக்கின் பெயர்.

68. குரண்டமும் வலாகமும் பகமுங் கொக்கே.
கொக்கின் பெயர்:—குரண்டம், வலாகம், பகம். (௩)

நீர்வாழ் பறவையின் பெயர்.

69. உன்னங் கிராம முற்கு ரோசங்
கின்னர நீர்ப்பற வைப்பெய ராகும்.
நீர்வாழ் பறவையின் பெயர்:—உன்னம், கிராமம், உற்குரோசம், கின்னரம். (௪)

திருஞ்சிலின் பெயர்.

70. ஆலாலந் திருஞ்சில்.

திருஞ்சிலின் பெயர்:—ஆலாலம். (௧)

வாவலின் பெயர்.

71. அஞ்சலிகை வாவல்.

வாவலின் பெயர்:—அஞ்சலிகை. (௧)

வண்டின் பெயர்.

72. அறுபத ஞிமிறளி யார்பதம் பிரமரஞ்
சிதரந் தேனே மந்தி சிலீமுகந்
தும்பி கரும்புள்சஞ் சாலிகங் கழுது
புண்ட ரீகஞ் சுரும்புசந் திரகஞ்
சூதங் கேசர மதுகரங் கீத
மாவரிசஞ் சரிகம் வடுவரி வண்டே.

வண்டின் பெயர்:—அறுபதம். ஞிமிறு, அளி, ஆர்பதம், பிரமரம், சிதரம், தேன், மந்தி, சிலீமுகம், தும்பி, கரும்புள், சஞ்சாலிகம், கழுது, புண்டரீகம், சுரும்பு, சந்திரகம், சூதம், கேசரம், மதுகரம், கீதம், மா, அரி, சஞ்சரிகம், வடு, வரி. (௨௫)

ஆண் வண்டின் பெயர்.

73. சுரும்பு மதுகரந் தும்பியாண் வண்டே.

ஆண் வண்டின் பெயர்:—சுரும்பு, மதுகரம், தும்பி. (௩)

தேனீயின் பெயர்.

74. பிரச மதுகரஞ் சரகந் தேனீ.

தேனீயின் பெயர்:—பிரசம், மதுகரம், சரகம். (௩)

ஈசலின் பெயர்.

75. ஈசல் சிதலாம்.

ஈசலின் பெயர்:—சிதல். (௧)

மின்மினியின் பெயர்.

76 மின்மினிகச் சோதம்.

மின் மினியின் பெயர்:—கச்சோதம். (௧)

சிள் வீட்டின் பெயர்.

77. சில்லைகொடி சில்லிகை சிமிலிசிள் வீடு.

சிள் வீட்டின் பெயர்:—சில்லை, கொடி, சில்லிகை, சிமிலி. (௪)

### விட்டிற் பறவையின் பெயர்.

78. பதங்கமுஞ் சலபமும் விட்டிற் பறவை.

விட்டில் பறவையின் பெயர்:—பதங்கம், சலபம். (உ)

### கொதுகின் பெயர்.

79. நுளம்பே நிலம்பியு லங்கே கொதுகெனல்.

கொதுகின் பெயர்:—நுளம்பு, நிலம்பி, உலங்கு. (ந)

### இதுவுமது.

80. அலகுஞ் சகலு நொள்ளலு மதற்கே.

ஷை கொதுகின் பெயர்:—அலகு, சகல், நொள்ளல். (ந) ஆ (சு)

### சல கொதுகின் பெயர்.

81. மசகந் துள்ளல் சலகொது காகும்.

சல கொதுகின் பெயர்:—மசகம், துள்ளல். (உ)

### நுளம்பின் பெயர்.

82. அஞுலமு ஞலவலு நொள்ளலு நுளம்பே.

நுளம்பின் பெயர்:—அஞுலம், ஞலவல், நொள்ளல். (ந)

### புட்பொதுவின் பெயர்.

83. பதங்கம் பக்கி பதகம் பத்திரி
விகங்கஞ் சகுந்தம் விகிரஞ் சகுனங்
குடிஞை பறவை குரீஇ வியமே
பிணிமுகங் ககமே போகில்புட் பொதுப்பெயர்.

புள் பொதுவின் பெயர்:—பதங்கம், பக்கி, பதகம், பத்திரி, விகங்கம், சகுந்தம், விகிரம், சகுனம், குடிஞை, பறவை, குரீஇ, வியம், பிணிமுகம், ககம், போகில். (கரு)

### இறகின் பெயர்.

84. பறையுஞ் சதனமும் பக்கமும் பிஞ்சமுஞ்
சிறையுந் தூவியுஞ் சிறகுந் தோகையுங்
கூழையுஞ் சதமுங் குரலுங் கூரலும்
வாசமும் பத்திரமு மிறையுமிற கின்பெயர்.

இறகின் பெயர்:—பறை, சதனம், பக்கம், பிஞ்சம், சிறை, தூவி, சிறகு, தோகை, கூழை, சதம், குரல், கூரல், வாசம், பத்திரம், இறை. (கரு)

இதுவுமது.

85. ஈரீ கச்ச மென்ன லாகும்.

ஷை இறகின் பெயர்:—ஈர், ஈ, கச்சம். (௩) ஆ (௪அ)

முட்டையின் பெயர்.

86. அண்டஞ் சினைகோச மரிட்ட முட்டை.

முட்டையின் பெயர்:—அண்டம், சினை, கோசம், அரிட்டம். (௪)

வாயலகின் பெயர்.

87. துண்டமுஞ் சுவவு மூக்குமவா யலகே.

வாய் அலகின் பெயர்:—துண்டம், சுவவு, மூக்கு. (௩)

புள்ளின் மூக்கின் பெயர்.

88. புள்ளின் மூக்குச் சுச்சுவெனப் புகலும்.

புள்ளின் மூக்கின் பெயர்:—சுச்சு. (௧)

புட்சிற கடித்துப் புடைத்துக் கூப்பிடுதலின் பெயர்.

89. புட்சிற கடித்துப் புடைத்துக் கூப்பிட
லோச னித்த லென்ப தாகும்.

புள் சிறகடித்துப் புடைத்துக் கூப்பிடுதலின் பெயர்:—ஓசனித்தல்.

எழாலு மயிலு மொழிந்த பறவையி னாண் பெயர்.

90. எழான்மயி லொழிந்த வேனைப் பறவைகள்
வழா அ வாணின் பெயர்சேவ லாகும்.

எழாலும், மயிலும் ஒழிந்த பறவையின் ஆண் பெயர்:—சேவல். (௧)

மயிலெழா லென்னு மிரண்டி னாண் பெயர்.

91. மயிலு மெழாலு மாண்பெயர் மரபு
புகலுங் காலைப் போத்தென லாகும்.

மயில், எழால் என்னும் இரண்டின் ஆண் பெயர்:—போத்து (௧)

கோழி கூகைகளின் பெண் பெயர்.

92. கோழியுங் கூகையு மல்லாப் பெண்பெய
ராயுங் காலை யளகெனற் கமையா.

கோழி, கூகைகளின் பெண் பெயர்:—அளகு. (௧)

[அடியில் வருஞ் சூத்திரத்தால், 'அளகெனற்குரிய' என்னும் பாடத்தை 'அளகெனற் கமையா' எனக் கொண்டாம். தொல்காப்பி

யம் பொருளதிகாரம் மரபியல்: "கோழி கூகை யாயிரண் டல்லவை, சூழுங் காலை யளகெனவமையா, அப்பெயர்க் கிளவி மயிற்கு மாகும்."]

### மயிலின் பெண் பெயர்.

93. அப்பெயர்க் கிளவி மயிற்கு மாகும்.

மயிலின் பெண் பெயர்:—அளகு. (௧)

### புள்ளின் பெண் பெயர்.

94. பேடைபெடை பெட்டை புள்ளின் பெண்பெயர்.

புள்ளின் பெண் பெயர்:—பேடை, பெடை, பெட்டை. (௩)

### பறவைக் குஞ்சின் பெயர்.

95. பிள்ளையும் பார்ப்புங் குஞ்சின் பெயரே.

பறவைக் குஞ்சின் பெயர்:—பிள்ளை, பார்ப்பு. (௨)

### பறவைக் குரலின் பெயர்.

96. குரலது புகலிற் பயிரா கும்மே.

பறவைக் குரலின் பெயர்:—பயிர். (௧)

### புட்கூட்டத்தின் பெயர்.

97. தொழுதிபுட் கூட்டம்.

புள் கூட்டத்தின் பெயர்:—தொழுதி. (௧)

### புட்கூட்டத் தோசையின் பெயர்.

98. துழனி யோசை.

புள் கூட்டத்து ஓசையின் பெயர்:—துழனி. (௧)

## இரண்டாவது
## விலங்கின் வகை.

### சிங்கத்தின் பெயர்.

99. ஆளி வாளரி யரிமிரு காபதி
கோளரி கண்டீ ரவம்பஞ் சானனஞ்
சீய மடங்கல் கேசரி முடங்குளை
அரிமா வயப்போத்துப் பஞ்ச நகாயுதம்
வயமா வயப்புலி சிங்கப் பெயரே.

சிங்கத்தின் பெயர்:—ஆளி, வாளரி, அரி, மிருகாபதி, கோளரி, கண்டீரவம், பஞ்சானனம், சீயம், மடங்கல், கேசரி, முடங்குளை, அரிமா, வயப்போத்து, பஞ்சநகாயுதம், வயமா, வயப்புலி. (௧௬)

யானை யாளியின் பெயர்.

100. அறுகு பூட்கை யானையா ளிப்பெயர்.

யானை யாளியின் பெயர்:—அறுகு, பூட்கை. (உ)

புலியின் பெயர்.

101. வியாக்கிரம் வேங்கை வியாளம் பாய்மா
தரக்குச் சித்திர காயஞ்சார்த் தூலம்
வயவரி புண்ட ரீகம் வல்லியங்
கொடுவரி யுழுவை குயவரி வயமா
புல்லுத் தீவி புலியின் பெயரே.

புலியின் பெயர்:—வியாக்கிரம், வேங்கை, வியாளம், பாய்மா, தரக்கு, சித்திரகாயம், சார்த்தூலம், வயவரி, புண்டரீகம், வல்லியம், கொடுவரி, உழுவை, குயவரி, வயமா, புல், தீவி. (கசு)

யானையின் பெயர்.

102. தும்பி கரிணி தோல்சுண் டாலி
கும்பி கறையடி குஞ்சரம் பகடு
களிறு பூட்கை கரிமா தங்கம்
வழுவை வேழம் வாரண மொய்யே
யும்ப லெறும்பி யுவாவே பொங்கடி
தந்தி யத்தி கடிவை கயமே
நாகஞ் சிந்துரந் தூங்க னிருமதம்
புழைக்கைவல் விலங்கு நால்வாய் புகர்முகம்
மதாவளந் தந்தா வளமருண் மாவே
கைம்மாப் பெருமா மதமா வயமா
மந்த மாவே மதகய மாம்ப
லிபமே போதகங் களபம்யா னைப்பெயர்.

யானையின் பெயர்:—தும்பி, கரிணி, தோல், சுண்டாலி, கும்பி, கறையடி, குஞ்சரம், பகடு, களிறு, பூட்கை, கரி, மாதங்கம், வழுவை, வேழம், வாரணம், மொய், உம்பல், எறும்பி, உவா, பொங்கடி, தந்தி, அத்தி, கடிவை, கயம், நாகம், சிந்துரம், தூங்கல், நிருமதம், புழைக்கை, வல்விலங்கு, நால்வாய், புகர்முகம், மதாவளம், தந்தாவளம், மருண்மா, கைம்மா, பெருமா, மதமா, வயமா, மந்தமா, மதகயம், ஆம்பல், இபம், போதகம், களபம். (சரு)

மதயானையின் பெயர்.

103. மதகரி தந்தி களிறுமத யானை.

மத யானையின் பெயர்:—மதகரி, தந்தி, களிறு. (ங)

உதவிசெய் யானையின் பெயர்.

104. உதவிசெய் யானை பூத நாதன்.
உதவிசெய் யானையின் பெயர்:—பூதநாதன். (க)

பெண் யானையின் பெயர்.

105. அத்தினி கரிணி வடவைபிடி பெண்யானை.
பெண் யானையின் பெயர்:—அத்தினி, கரிணி, வடவை, பிடி. (ச)

யானைக் கன்றின் பெயர்.

106. கயந்தலை போதகந் துடியடி களபங்
கயமுனி யானைக் கன்று கும்மே.
யானைக் கன்றின் பெயர்:—கயந்தலை, போதகம், துடியடி, களபம், கயமுனி. (ரு)

யானை நுதலின் பெயர்.

107. மதகமுங் கும்பமு மத்தகமு நுதலே.
யானை நுதலின் பெயர்:—மதகம், கும்பம், மத்தகம். (௩)

யானைத் துதிக்கையின் பெயர்.

108. தொண்டை தொண்டலஞ் சுண்டை துதிக்கை.
யானைத் துதிக்கையின் பெயர்:—தொண்டை, தொண்டலம், சுண்டை. (௩)

யானைக் கைந்நுனியின் பெயர்.

109. கைந்நுனி புட்காம்.
யானைக் கைந் நுனியின் பெயர்:—புட்காம். (க)

யானைக் கடைக்கண்ணின் பெயர்.

110. கடைக்கண் ணிரியாணம்.
யானைக் கடைக் கண்ணின் பெயர்:—நிரியாணம். (க)

யானைக் கொம்பின் பெயர்.

111. தந்தமெ யிறுகோடு மருப்புக் கொம்பே.
யானைக் கொம்பின் பெயர்:—தந்தம், எயிறு, கோடு, மருப்பு. (ச)

யானைக் கொம்பினடுப் பெயர்.

112. பிருதி மானங் கொம்பினடு வென்ப.
யானைக் கொம்பின் நடுப் பெயர்:—பிருதுமானம். (க)

யானை முன்காலின் பெயர்.

113. காத்திர முன்கால்.

யானை முன் காலின் பெயர்:—காத்திரம். (க)

யானைப் பின்காலின் பெயர்.

114. அபரம் பின்கால்

யானைப் பின் காலின் பெயர்:—அபரம். (க)

யானை முதுகின் பெயர்.

115. முதுகுமஞ் சாகும்.

யானை முதுகின் பெயர்:—மஞ்சு. (க)

யானை மத்தகத்தின் பெயர்.

116. மத்தக மதோற்கடம்.

யானை மத்தகத்தின் பெயர்:—மதோற்கடம். (க)

யானை வாலின் பெயர்.

117. வாறால வட்டம்.

யானை வாலின் பெயர்:—தாலவட்டம். (க)

யானை வானுனியின் பெயர்.

118. வானுனி வேசகம்.

யானை வால் நுனியின் பெயர்:—வேசகம். (க)

யானை வாற்கீழிடத்தின் பெயர்.

119. வெருகம்வாற் கீழிடம்.

யானை வால் கீழிடத்தின் பெயர்:—வெருகம். (க)

யானைச் செவியின் பெயர்.

120. செவிகன்னந் தாலம்.

யானைச் செவியின் பெயர்:—கன்னம், தாலம். (உ)

யானை நடுச்செவியின் பெயர்.

121. வட்ட நடுச்செவி.

யானை நடுச் செவியின் பெயர்:—வட்டம். (க)

யானைச் செவியடியின் பெயர்.

122. சூளிகை செவியடி.

யானைச் செவி அடியின் பெயர்:—சூளிகை. (க)

யானை வாயின் பெயர்.

123. தளவு வாயெனல்.
யானை வாயின் பெயர்:—தளவு. (க)

யானை மதச்சுவட்டின் பெயர்.

124. கடமே கொடிறு காட மதச்சுவடு.
யானை மதச் சுவட்டின் பெயர்:—கடம், கொடிறு, காடம். (ங)

யானை உமிழ்நீரின் பெயர்.

125. உமிழ்நீர் விலாழி.
யானை உமிழ்நீரின் பெயர்:—விலாழி. (க)

யானைப் பல்லடியின் பெயர்.

126. கரீரம் பல்லடி.
யானைப் பல் அடியின் பெயர்:—கரீரம். (க)

யானை மதத்தின் பெயர்.

127. மதங்கடம் தானங் கடாமு மாகும்.
யானை மதத்தின் பெயர்:—கடம், தானம், கடாம். (ங)

யானைத் தோட்டியின் பெயர்.

128. அங்குசந் தோட்டி.
யானைத் தோட்டியின் பெயர்:—அங்குசம். (க)

யானைப் பிடரின் பெயர்.

129. இயாதம் பிடரே.
யானைப் பிடரின் பெயர்:—இயாதம். (க)

யானைப் புகர்முகத்தின் பெயர்.

130. புகர்முகஞ் சிந்தூரம்.
யானைப் புகர்முகத்தின் பெயர்:—சிந்தூரம். (க)

யானை நுதலணி சிந்தூரத்தின் பெயர்.

131. நுதலணிசிந் தூரஞ் சாமோற் பலமே.
யானை நுதலணி சிந்தூரத்தின் பெயர்:—சாமோற்பலம். (க)

யானை மேற்றவிசின் பெயர்.

132. யானைமேற் றவிசி லகட மாகும்.
யானை மேல் தவிசின் பெயர்:—இலகடம். (க)

யானை நோயின் பெயர்.

133. பாகலம் யானைநோய்.

யானை நோயின் பெயர்:—பாகலம். (௧)

யானை படுகுழியின் பெயர்.

134. படுகுழி பயம்பாம்.

யானை படுகுழியின் பெயர்:—பயம்பு. (௧)

யானை படுக்குமிடத்தின் பெயர்.

135. படுக்கு மிடம்வாரி.

யானை படுக்கும் இடத்தின் பெயர்:—வாரி. (௧)

யானை நுதற்பட்டத்தின் பெயர்.

136 பட்ட மோடை.

யானை நுதல் பட்டத்தின் பெயர்:—ஓடை. (௧)

யானைத் திரளின் பெயர்.

137. கடகம் யானைத் திரட்பெயர்க் கட்டுரை.

யானைத் திரளின் பெயர்:—கடகம். (௧)

பிறந்த நிலப்பெயரைப் பெற்ற யானை பெறும் பெயராவன.

138. கிரிசரம் வநசர நதிசர மடுத்துப்
பெறுமே யானை பிறந்த நிலப்பெயர்.

பிறந்த நிலப்பெயரைப் பெற்ற யானை பெறும் பெயராவன:—கிரிசரம், வநசரம், நதிசரம். (௩)

குதிரையின் பெயர்.

139. பரியே பாடலம் பாய்மா புரவி
யரிகன வட்ட மத்திரி கோரம்
வாசி துரங்க மாவே கந்துகந்
தூசி யிவுளி துரகந் துரகதங்
கோடகஞ் சயிந்தவங் கோணங் குரகதங்
கந்தருவங் கிள்ளை மண்டிலங் கற்கி
யச்சுவ முன்னி யயமே கொக்குக்
கொய்யுளை சடிலங் குந்தங் கண்ணுகங்
கோடை வயமா குதிரையின் பெயரே.

குதிரையின் பெயர்:—பரி, பாடலம், பாய்மா, புரவி, அரி, கனவட்டம், அத்திரி, கோரம், வாசி, துரங்கம், மா, கந்துகம், தூசி,

இவுளி, துரகம், துரகதம், கோடகம், சயிந்தவம், கோணம், குரகதம், கந்தருவம், கிள்ளை, மண்டிலம், கற்கி, அச்சுவம், உன்னி, அயம், கொக்கு, கொய்யுளை, சடிலம், குந்தம், கண்ணுகம், கோடை, வயமா. (௩௪)

பாண்டியன் குதிரையின் பெயர்.

140. அவற்றுள்,
கனவட்ட மென்பது வழுதி யூர்மா.
பாண்டியன் குதிரையின் பெயர்:—கனவட்டம். (௧)

சோழன் குதிரையின் பெயர்.

141 கோர மென்பது சோழ னூர்மா.
சோழன் குதிரையின் பெயர்:—கோரம். (௧)

சேரன் குதிரையின் பெயர்.

142. பாடல மென்பது சேர னூர்மா.
சேரன் குதிரையின் பெயர்:—பாடலம். (௧)

குறுநில மன்னர் குதிரையின் பெயர்.

143 கச்சுகங் குறுநில மன்ன ரூர்மா.
குறுநில மன்னர் குதிரையின் பெயர்:—கச்சுகம். (௧)

குதிரை மயிரின் பெயர்.

144 சுவல்குசை கூந்தல் மேசக மயிரே.
குதிரை மயிரின் பெயர்:—சுவல், குசை, கூந்தல், மேசகம். (௪)

குதிரைக் குளம்பின் பெயர்.

145 குரமுங் குரச்சையுங் குரசுங் குளம்பே.
குதிரைக் குளம்பின் பெயர்:—குரம், குரச்சை, குரசு. (௩)

குதிரை போமார்க்கத்தின் பெயர்.

146 மாதிக மதுபோ மார்க்க மாகும்.
குதிரை போம் மார்க்கத்தின் பெயர்:—மாதிகம். (௧)

குதிரை வாலின் பெயர்.

147. வாலதி தோகை வால தாகும்.
குதிரை வாலின் பெயர்:—வாலதி, தோகை. (௨)

பசுவின் பெயர்.

148. கோவே பெற்றம் நிரைகுடஞ் சுட்டுத்
தேனுசுரை பத்திரை கபிலை சேதா
வாவே சுரபி யான்பசு வாகும்.

பசுவின் பெயர்:—கோ, பெற்றம், நிரை, குடம், சுட்டு, தேனு, சுரை, பத்திரை, கபிலை, சேதா, ஆ, சுரபி, ஆன். (௧௩)

தெய்வப் பசுவின் பெயர்.

149. தேனுவுங் கபிலையுந் தெய்வப் பசுவே.

தெய்வப் பசுவின் பெயர்:—தேனு, கபிலை. (௨)

நற்பசுவின் பெயர்.

150. பத்திரை நற்பசு.

நல் பசுவின் பெயர்:—பத்திரை. (௧)

குணமில்லாப் பசுவின் பெயர்.

151. சுதைகுண மிலாப்பசு.

குணம் இல்லாப் பசுவின் பெயர்:—சுதை. (௧)

ஓரீற்றுப் பசுவின் பெயர்.

152. கிட்டியோ ரீற்றுப்பசு.

ஓர் ஈற்றுப் பசுவின் பெயர்:—கிட்டி. (௧)

மலட்டுப் பசுவின் பெயர்.

153. வற்சை மலட்டுப்பசு.

மலட்டுப் பசுவின் பெயர்:—வற்சை. (௧)

கன்றை வளர்க்கும் பசுவின் பெயர்.

154. வற்சலங் கன்றை வளர்க்கும் பசுவே.

கன்றை வளர்க்கும் பசுவின் பெயர்:—வற்சலம். (௧)

பசுவின் முலைப் பெயர்.

155. சுரைமுலை யென்ப.

பசுவின் முலையின் பெயர்:—சுரை. (௧)

பசுக் கோட்டத்தின் பெயர்.

156. பசுநிலை கோட்டம்.

பசுக் கோட்டத்தின் பெயர்:—பசுநிலை. (௧)

பசுவின் மடியின் பெயர்.

157. செருத்தலா பீன மடியென வகுப்பர்.
பசுவின் மடியின் பெயர்:—செருத்தல், ஆபீனம். (உ)

பசுவின் கன்றின் பெயர்.

158. தன்னம்வற் சந்தனம் பசுவின் கன்றே.
பசுவின் கன்றின் பெயர்:—தன்னம், வற்சம், தனம். (ங)

பசுக் கூட்டத்தின் பெயர்.

159. காலிநிரை தொறுகதுப்புக் காலேயம் பசுக்கூட்டம்.
பசுக் கூட்டத்தின் பெயர்:—காலி, நிரை, தொறு, கதுப்பு, காலேயம். (ரு)

எருதின் பெயர்.

160. பாறல் சேவிடை பாண்டில் பெற்றம்
பூணி குண்டை புல்லங் காளை
யிறூலே கொட்டிய மூரி யெருதெனல்.

எருதின் பெயர்:—பாறல், சே, விடை, பாண்டில், பெற்றம், பூணி, குண்டை, புல்லம், காளை, இறூல், கொட்டியம், மூரி. (கஉ)

ஏற்றின் பெயர்.

161. குத்தமும் விடபமுங் கூளியு நந்தியு
முக்கமு மிடபமு மேறெனப் புரைப்பர்.

ஏற்றின் பெயர்:—குத்தம், விடபம், கூளி, நந்தி, உக்கம், இடபம். (சு)

பேரெருதின் பெயர்.

162. பகடு தூரியம் பாறல்பே ரெருதே.
பேர் எருதின் பெயர்:—பகடு, தூரியம், பாறல். (ங)

பொதியெருதின் பெயர்.

163. தூரியந் தூர்வகம் பொதியெரு தாகும்.
பொதி எருதின் பெயர்:—தூரியம், தூர்வகம். (உ)

எருதின் முரிப்பின் பெயர்.

164. இமிலே யேற்றின் றிரண்முரிப் பாகும்.
எருதின் முரிப்பின் பெயர்:—இமில். (க)

போலி யெருதின் பெயர்.

165. ஏறு கூளி யிடபம்போலி யெருதே.

பொலி எருதின் பெயர்:— ஏறு, கூளி, இடபம். (௩)

எருமையின் பெயர்.

166. காரான் மகிடங் கவரி காரா
காசாச் சைரிபம் வடவை கயவாய்
மேதி யெருமை மூரியு மாகும்.

எருமையின் பெயர்:—காரான், மகிடம், கவரி, காரா, காசா, சைரிபம், வடவை, கயவாய், மேதி, மூரி. (௧௦)

எருமைப் போத்தின் பெயர்.

167. பகடுங் கடாவு மவற்றின் போத்தாம்.

எருமைப் போத்தின் பெயர்:—பகடு, கடா. (௨)

மலட்டெருமையின் பெயர்.

168. மைமை யென்பது மலட்டெரு மைப்பெயர்.

மலட்டு எருமையின் பெயர்:—மைமை. (௧)

ஆட்டின் பொதுப்பெயர்.

169. அருணங் கொச்சை துருவை மேழக
மசமுத டுள்ளன் மறிமை வெறிகொறி
புருவை சாக மாட்டின் பொதுப்பெயர்.

ஆட்டின் பொதுப் பெயர்:—அருணம், கொச்சை, துருவை, மேழகம், அசம், உதள், துள்ளல், மறி, மை, வெறி, கொறி, புருவை, சாகம். (௧௩)

செம்மறியாட்டின் பெயர்.

170. உதள்கொறி துருவை யொருவே புருவை
யருணமே டஞ்செம் மறியா டென்ப.

செம்மறி ஆட்டின் பெயர்:—உதள், கொறி, துருவை, ஒருவு, புருவை, அருணம், மேடம். (௭)

துருவாட்டின் பெயர்.

171. துருவை கொறிமை துருவா டாகும்.

துருவாட்டின் பெயர்:—துருவை, கொறி, மை. (௩)

துருவாட் டேற்றின் பெயர்.

172. மேழகங் கம்பளந் தகரே திண்ணகம்
ஏழகங் கடாதுரு வாட்டி னேறே.

குருவாட்டு ஏற்றின் பெயர்:—மேழகம், கம்பளம், தகர், திண்ணகம், ஏழகம், கடா. (௬)

## ஆட்டுக்குட்டியின் பெயர்.

173 குட்டன் சோரன் மறிபறழ் குட்டி

ஆட்டுக் குட்டியின் பெயர்:—குட்டன், சோரன், மறி, பறழ். (௪)

## வெள்ளாட்டின் பெயர்.

174 வெள்ளைவற் காலி கொச்சைவெள் ளாடே.

வெள்ளாட்டின் பெயர்:—வெள்ளை, வற்காலி, கொச்சை. (௩)

## வெள்ளாட் டேற்றின் பெயர்.

175 மேடஞ் செச்சை சாக மோத்தை
யசமைகடா வெள்ளை யாட்டி னேறே.

வெள்ளாட்டு ஏற்றின் பெயர்:—மேடம், செச்சை, சாகம், மோத்தை, அசம், மை, கடா. (௭)

## வெள்ளாட்டு மறியின் பெயர்.

176 வெள்ளை யென்பது மறிக்கு மாகும்.

வெள்ளாட்டு மறியின் பெயர்:—வெள்ளை. (௧)

## பள்ளையாட்டின் பெயர்.

177 வெள்ளைவற் காலி பள்ளை யாடே.

பள்ளை ஆட்டின் பெயர்:—வெள்ளை, வற்காலி. (௨)

## வரையாட்டின் பெயர்.

178 வருடை சரபம் வரையா டாகும்.

வரை ஆட்டின் பெயர்:—வருடை, சரபம். (௨)

## காட்டாவின் பெயர்.

179 ஆமா கவையமா காட்டா வாகும்.

காட்டு ஆவின் பெயர்:—ஆமா, கவையமா. (௨)

## மரையின் பெயர்.

180 ஆவிதங் கானக் குதிரைமரை யாகும்.

மரையின் பெயர்:—ஆவிதம், கானக்குதிரை. (௨)

ஒட்டகத்தின் பெயர்.

181. அத்திரி நெடுங்கழுத்தன் றாசேரகங் கனகதம்
அயவண மிரவண மொட்டக மாகும்.

ஒட்டகத்தின் பெயர் :—அத்திரி, நெடுங்கழுத்தன், தாசேரகம், கனகதம், அயவணம், இரவணம். (௬)

கழுதையின் பெயர்.

182. வேசரி கோகு காம்வா லேபங்
காள வாயே கர்த்தபங் கழுதை.

கழுதையின் பெயர்:—வேசரி, கோகு, காம், வாலேபம், காளவாய், கர்த்தபம். (௬)

கோவேறுகழுதையின் பெயர்.

183. வேசரி யத்திரி கோவேறு கழுதை.

கோவேறு கழுதையின் பெயர்:—வேசரி, அத்திரி. (௨)

கரடியின் பெயர்.

184. பல்லூக மெண்கு உளியம் பல்ல
மிளிறுமெலு வுங்குடா வடியுங் காடி.

கரடியின் பெயர்:—பல்லூகம், எண்கு, உளியம், பல்லம், மிளிறு, எலு, குடாவடி. (எ)

கவரிமாவின் பெயர்.

185. எகின மானமா பட்டங் கவரிமா.

கவரி மாவின் பெயர்:—எகினம், மானமா, பட்டம். (௩)

சவரியின் பெயர்.

186. ஆகு கவரி சீகாஞ் சவரி.

சவரியின் பெயர்:—ஆகு, கவரி, சீகாம். (௩)

இதுவுமது.

187. சாமரம் வெண்மயி ருஞ்சவரி யாகும்.

ஷை சவரியின் பெயர்:—சாமரம், வெண்மயிர். (௨) ஆக (ரு)

மானின் பெயர்.

188. அரிணநவ் விகுரங் கஞ்சா ரங்க
மறியுழை ருணம் மேணம் பிணைமான்.

மானின் பெயர்:—அரிணம், நவ்வி, குரங்கம், சாரங்கம், மறி, உழை, ருணம், எணம், பிணை. (௯)

மானேற்றின் பெயர்.

189. இரலை வச்சய மவற்றி னேறே.
மான் ஏற்றின் பெயர்:—இரலை, வச்சயம். (உ)

இதுவுமது.

190. கலைகரு மானென வருமா னதற்கே.
ஷ மான் ஏற்றின் பெயர்:—கலை, கருமான். (உ) ஆ (ச)

புல்வாயின் பெயர்.

191. இரலை புல்வா யென்ன லாகும்.
புல்வாயின் பெயர்:—இரலை. (க)

பன்றியின் பெயர்.

192. கேழல் குரோடங் கிரிகிடி கிருட்டி
மோழல் வராகம் போத்திரி கோல
மேறுழி வல்லுளி யேனஞ் சூகரங்
கனலி யிருளி கருமா கோணி
போழ்முக மரிமைம் மாகளிறு பன்றி.
பன்றியின் பெயர்:—கேழல், குரோடம், கிரி, கிடி, கிருட்டி, மோழல், வராகம், போத்திரி, கோலம், ஏறுழி, வல்லுளி, ஏனம், சூகரம், கனலி, இருளி, கருமா, கோணி, போழ்முகம், அரி, மைம்மா, களிறு. (உக)

முட்பன்றியின் பெயர்.

193. சல்லியந் முளவு மெய்யே முண்மா.
முள் பன்றியின் பெயர்:—சல்லியம், முளவு, எய், முண்மா. (ச)

இதுவுமது.

194. சல்லக முட்பன்றி நாம மாகும்.
ஷ முள் பன்றியின் பெயர்:—சல்லகம். (க) ஆ (ரு)

முட்பன்றி முள்ளின் பெயர்.

195. சல்லமுஞ் சலமு மவற்றின் முள்ளே.
முட்பன்றி முள்ளின் பெயர்:—சல்லம், சலம். (உ)

குரங்கின் பெயர்.

196. வலிமுகங் கவியே மர்க்கட மரியே
வானரங் கோடரங் கீசகங் கோலம்

பிலவங்கந் தோரண மந்தி யூக
நிரந்தர நாகங் குரங்கின் பெயரே.

குரங்கின் பெயர்:—வலிமுகம், கவி, மர்க்கடம், அரி, வானரம், கோடரம், இசகம், கோலம், பிலவங்கம், தோரணம், மந்தி, யூகம், நிரந்தரம், நாகம். (கச)

பெண்குரங்கின் பெயர்.

197. மந்தி யூக மற்றதன் பெண்பெயர்.

பெண் குரங்கின் பெயர்:—மந்தி, யூகம். (உ)

கருங்குரங்கின் பெயர்.

198. காருகம் யூகங் கருங்குரங் கின்பெயர்.

கருங் குரங்கின் பெயர்:—காருகம், யூகம். (உ)

மூசுவின் பெயர்.

199. ஓரியுங் கலையுங் கள்வனு மூசுவே.

மூசுவின் பெயர்:—ஓரி, கலை, கள்வன். (ங)

இதுவுமது.

200. கோலாங் கூலமைம் முகனு மதற்கே.

ஷை மூசுவின் பெயர்:—கோலாங்கூலம், மைம்முகன். (உ) ஆ (ரு)

நாயின் பெயர்.

201. ஞமலி யுச்சி யெகினங் குக்கன்
கூரன் சூரன் சார மேயன்
சுனகன் புரோகதி குரைமுகன் ஞாளி
சுணங்கன் முடுவல் பாட்டி சுவாவே
பாசியிவை நாயின் பெயரெனப் பகரும்.

நாயின் பெயர்:—ஞமலி, உச்சி, எகினம், குக்கன், கூரன், சூரன், சாரமேயன், சுனகன், புரோகதி, குரைமுகன், ஞாளி, சுணங்கன், முடுவல், பாட்டி, சுவா, பாசி. (கசு)

பெண்ணாயின் பெயர்.

202. முடுவல் பெண்ணா யாக மொழிப.

பெண் நாயின் பெயர்:—முடுவல். (க)

செந்நாயின் பெயர்.

203. விருகமுங் கொக்குமண் டிகமுஞ் செந்நாய்.

செந் நாயின் பெயர்:—விருகம், கொக்கு, அண்டிகம். (ங)

முயலின் பெயர்.

**204.** சசமும் வயமு முயலா கும்மே.
முயலின் பெயர்:—சசம், வயம். (உ)

நரியின் பெயர்.

**205.** ஓரி யிகல னூளன் சம்பு
செந்துகுரோட் டங்கோ மாயுச் சிருகால
னொண்டன்பூ ரிமாயு நரியின் பெயரே.
நரியின் பெயர்:—ஓரி, இகலன், ஊளன், சம்பு, செந்து, குரோட்டம், கோமாயு, சிருகாலன், ஒண்டன், பூரிமாயு. (க0)

முதுநரியின் பெயர்.

**206.** முதுநரி யிகலன் கோமாயு வோரி.
முது நரியின் பெயர்:—இகலன், கோமாயு, ஓரி. (ங)

கொம்பிலா மிருகத்தின் பெயர்.

**207.** குமர மென்பது கொம்பிலா மிருகம்.
கொம்பு இலா மிருகத்தின் பெயர்:—குமரம். (க)

பூனையின் பெயர்.

**208.** வெருகு மண்டலி யிற்புலி விலாளம்
பவன மோதிமார்ச் சாலம் பாக்கன்
பூசை யலவன் விடருகம் பூனை.
பூனையின் பெயர்:—வெருகு, மண்டலி, இற்புலி, விலாளம், பவனம், ஓதி, மார்ச்சாலம், பாக்கன், பூசை, அலவன், விடருகம். (கக)

காட்டுப் பூனையின் பெயர்.

**209.** கான்புலி மண்டலி பாக்கன்கான் பூனை.
காட்டுப் பூனையின் பெயர்:—கான்புலி, மண்டலி, பாக்கன். (ங)

ஆண் பூனையின் பெயர்.

**210.** விலாளமுங் கடுவனும் வெருகுமாண் பூனை.
ஆண் பூனையின் பெயர்—விலாளம், கடுவன், வெருகு. (ங)

அழுங்கின் பெயர்.

**211.** பனிங்கு மறியு மழுங்கா கும்மே.
அழுங்கின் பெயர்:—பனிங்கு, மறி. (உ)

அழுங்கின் குருளையின் பெயர்.

212. மற்றிதன் குருளை மறியெனலாகும்.

அழுங்கின் குருளையின் பெயர்:—மறி. (க)

நாவியின் பெயர்.

213. மறுவி மிருகமத நாவி யாகும்.

நாவியின் பெயர்:—மறுவி, மிருகமதம். (உ)

கத்தூரியின் பெயர்.

214. மான்மதந் தருக்க நாந்தநானங் கத்தூரி.

கத்தூரியின் பெயர்:—மான்மதம், தருக்கம், நாந்தம், நானம். (ங)

கீரியின் பெயர்.

215. நகுலங் காத்திரி தீர்வையுங் கீரி.

கீரியின் பெயர்:—நகுலம், காத்திரி, தீர்வை. (ச)

உடும்பின் பெயர்.

216. மூசலிகை கோதா தடியுமுடும் பாகும்.

உடும்பின் பெயர்:—மூசலிகை, கோதா, தடி. (ரு)

அணிலின் பெயர்.

217. வரிப்புறம் வெளிலணி லிலுதையு மாகும்.

அணிலின் பெயர்:—வரிப்புறம், வெளில், இலுதை. (சு)

பச்சோந்தியின் பெயர்.

218. கோம்பி சரடம் சாயா னதமூசலி
ஓதி தண்டோ டோத்தி மயிற் பகை
காம ரூபிபச் சோந்தியு மாகும்.

பச்சோந்தியின் பெயர்:—கோம்பி, சரடம், சாயானதம், மூசலி, ஓதி, தண்டு, ஓத்தி, மயிற்பகை, காமரூபி. (எ)

ஓந்தியின் பெயர்.

219. ஓமா னோதி யோத்தியோந் திப்பெயர்.

ஓந்தியின் பெயர்:—ஓமான், ஓதி, ஓத்தி. (அ)

மூஞ்சூற்றின் பெயர்.

220. சூரன் சுண்டன் சுந்தரி மூஞ்சூ
றூருஞ் சுவவு மப்பெய ராமே.

மூஞ்சூற்றின் பெயர்:—சூரன், சுண்டன், சுந்தரி, சுவவு. (கூ)

பெருச்சாளியின் பெயர்.

221. மூடிகங் களதமுந் துருப்பெருச் சாளி.
பெருச்சாளியின் பெயர்:—மூடிகம், களதம், உந்துரு. (௩)

காரெலியின் பெயர்.

222. கருப்பை காரெலி.
காரெலியின் பெயர்:—கருப்பை. (க)

சீறெலியின் பெயர்.

223. சிகிரி சீறெலி.
சீறெலியின் பெயர்:—சிகிரி. (க)

அகழெலியின் பெயர்.

224. இரும்ப னகழெலி.
அகழ் எலியின் பெயர்:—இரும்பன். (க)

இல்லெலியின் பெயர்.

225. ஆகு வில்லெலி.
இல் எலியின் பெயர்:—ஆகு. (க)

கௌளியின் பெயர்.

226. புள்ளி கோகிலம் பொந்து மனைக்கோள்
பல்லி கௌளிப் பெயரா கும்மே.
கௌளியின் பெயர்:—புள்ளி, கோகிலம், பொந்து, மனைக்கோள், பல்லி. (௫)

எறும்பின் பெயர்.

227. உறவி பிலஞ் சுலோபம் பிபீலிகை யெறும்பே.
எறும்பின் பெயர்:—உறவி, பிலஞ்சுலோபம், பிபீலிகை. (௩)

கறையான் பெயர்.

228. சிதலை யாழல் செல்லே கறையான்.
கறையான் பெயர்:—சிதலை, ஆழல், செல். (௩)

தேளின் பெயர்.

229. தெறுக்கால் விருச்சிக நளிவிடந் தேளே.
தேளின் பெயர்:—தெறுக்கால், விருச்சிகம், நளிவிடம். (௩)

இதுவுமது.

230. நளியே துட்டன் விடமுளென் பதுமாம்.
ஷை தேளின் பெயர்:—நளி, துட்டன், விடமுள். (ங) ஆ (சு)

இந்திர கோபத்தின் பெயர்.

231. ஈயன்மூ தாதம் பலமிந்திர கோபம்.
இந்திரகோபத்தின் பெயர்:—ஈயல், மூதா, தம்பலம். (ங)

விலங்கின் பொதுப்பெயர்.

232. மாவு மிருகமு மானுங் குரங்கமு
மாகும் விலங்கின் பொதுப்பெய ராகும்.
விலங்கின் பொதுப் பெயர்:—மா, மிருகம், மான், குரங்கம். (௪)

விலங்கின் வாலின் பெயர்.

233. தோகை வாலதி கூலம் வேசகம்
வாலதென் பவிலாங் கூலமு மாகும்.
விலங்கின் வாலின் பெயர்:—தோகை, வாலதி, கூலம், வேசகம், இலாங்கூலம். (௫)

விலங்கின் வாற்கீழிடத்தின் பெயர்.

234. வாலின்கீழ் வெருகம்.
விலங்கின் வால் கீழிடத்தின் பெயர்:—வெருகம். (க)

விலங்கின் கோம்பின் பெயர்.

235. கோடு மருப்பு முலவையுங் கொம்பே.
விலங்கின் கொம்பின் பெயர்:—கோடு, மருப்பு, உலவை. (ங)

இதுவுமது.

236. சிருங்கமும் விடாணமு மப்பெயர் தெரிக்கும்.
ஷை விலங்கின்கொம்பின்பெயர்:—சிருங்கம், விடாணம். (உ) ஆ (௫)

புலாலின் பெயர்.

237. புறணி புலாலே புலையு மாகும்.
புலாலின் பெயர்:—புறணி, புலை. (உ)

இதுவுமது.

238. ஊழ்த்தசை பூதியென் றுரைக்கப் படுமே.
ஷை புலாலின் பெயர்:—ஊழ்த்தசை, பூதி. (உ) ஆ (௪)

இறைச்சியின் பெயர்.

239. ஊழ்த்த றசையுந் தடியூன் வள்ளூரம்
பிசிதம்விடக் குக்தூவும் பூழ்தியு மிறைச்சி.

இறைச்சியின் பெயர்:—ஊழ்த்தல், தசை, தடி, ஊன், வள்ளூரம், பிசிதம், விடக்கு, தூ, பூழ்தி. (கூ)

ஆவி னிறைச்சியின் பெயர்.

240. ஆவி னிறைச்சி வள்ளூர மாகும்.

ஆவின் இறைச்சியின் பெயர்:—வள்ளூரம். (க)

முடைநாற்றத்தின் பெயர்.

241. பூழ்தி யூழ்த்தல் புலவு முடையே.

முடை நாற்றத்தின் பெயர்:—பூழ்தி, ஊழ்த்தல், புலவு. (௩)

தோலின் பெயர்.

242. சருமங் கிருத்திமம் வடகந் துவக்கு
வுரிவை யுரியதள் புறணி பச்சை
துருத்தி பத்துந் தோலென் றுரகும்.

தோலின் பெயர்:—சருமம், கிருத்திமம், வடகம், துவக்கு, உரிவை, உரி, அதள், புறணி, பச்சை, துருத்தி. (௧௦)

இரத்தத்தின் பெயர்.

243. செந்நீர் குருதி சோரி யெருவை
புண்ணீர் சோணிதங் கறைசுடு வனுதிர
மின்னவை யிரத்த மென்ன லாகும்.

இரத்தத்தின் பெயர்:—செந்நீர், குருதி, சோரி, எருவை, புண்ணீர், சோணிதம், கறை, சுடுவன், உதிரம். (௯)

சூலின் பெயர்.

244. பீளுஞ் சினையுங் கருவுஞ்சூ லென்ப.

சூலின் பெயர்:—பீள், சினை, கரு. (௩)

## விலங்கின் ஆண் மரபு.

விலங்கி னாண் பெயர்.

245. களிறும் போத்துங் கலையுங் கடுவனும்
பகடுஞ் சேவு மொருத்தலுந் தகரு
மேறு மும்பலு மேட்டையு மாவு
மோரியுஞ் சேவலும் விலங்கி னாண்பெயர்.

விலங்கின் ஆண் பெயர்:—களிறு, போத்து, கலை, கடுவன், பகடு, சே, ஒருத்தல், தகர், ஏறு, உம்பல், ஏட்டை, மா, ஓரி, சேவல். (கச)

அவற்றுள், களிறென்னும் பெயர்.

**246.** அவற்றுள், கரியுஞ் சுறவுங் கேழலுங் களிறே.

அவற்றுள், களிறு என்னும் பெயர்:—கரி, சுறவு, கேழல் ஆகிய மூன்றற்கும் ஆம்.

போத்தென்னும் பெயர்.

**247.** மரையான் காரான் காட்டாப் புல்வாய்
புலிசல சாதி யனைத்தும் போத்தே.

போத்து என்னும் பெயர்:—மரை, ஆன், காரான், காட்டா, புல்வாய், புலி, சலசாதி. (எ)

['சலசாதி யனைத்தும்' என்றது: சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை இவ்வாறனையும். இதனை, "நீர்வாழ் சாதியு ளறு பிறப் புரிய" என்ற தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் சூத்திரத்தால் உணர்க.]

இதுவுமது.

**248.** யானை வெருகு குதிரை போத்தே.

ஷை போத்துஎன்னும்பெயர்:—யானை,பூனை,குதிரை.(ங)ஆ (கo-ம்)

கலையென்னும் பெயர்.

**249.** மானு முசுவுங் கலையென வருமே.

கலை என்னும் பெயர்:—மான், முசு. (உ-ம்)

கடுவனென்னும் பெயர்.

**250.** கவியும் பூஞையுங் கடுவ னென்ப.

கடுவன் என்னும் பெயர்:—குரங்கு, பூஞை. (உ-ம்)

பகடென்னும் பெயர்.

**251.** யானையு மெருமையும் பெற்றமு மற்றிவை
யான்மையி னுரைக்கிற் பகடென் றுமே.

பகடு என்னும் பெயர்:—யானை, எருமை, பெற்றம். (ங-ம்)

சேவென்னும் பெயர்.

**252.** குதிரை யெருது புல்வாய் சேவெனல்.

சே என்னும் பெயர்:—குதிரை, எருது, புல்வாய். (ங-ம்)

ஒருத்தலென்னும் பெயர்.

253. கவரி யானை பன்றி காடி
யுரிப வாகு மொருத்தற் பெயர்க்கொடை.
ஒருத்தல் என்னும் பெயர்:—கவரி, யானை, பன்றி, காடி. (ச-ம்)

தகரென்னும் பெயர்.

254. துருவாடும் வேழமும் யாளியுஞ் சுறவும்
தகரென் னாமஞ் சாற்றப் பெறுமே.
தகர் என்னும் பெயர்:—துருவாடு, வேழம், யாளி, சுறு. (ச-ம்)

ஏறென்னும் பெயர்.

255 புலியுழை மரையாப் புல்வா யெருமை
யரிசுறுச் சங்கே யேறென லாகும்.
ஏறு என்னும் பெயர்:—புலி, உழை, மரை, ஆ, புல்வாய், எருமை,
பன்றி, சுறு, சங்கு. (கூ-ம்)

உம்பலென்னும் பெயர்.

256. யானையும் யாடு மும்ப லென்ப.
உம்பல் என்னும் பெயர்:—யானை, யாடு. (உ-ம்)

ஏட்டை யென்னும் பெயர்.

257. எருமையும் வெருகு மேட்டை யென்ப.
ஏட்டை என்னும் பெயர்:—எருமை, வெருகு. (உ-ம்)

மாவென்னும் பெயர்.

258 குதிரை யானை பன்றி மாவே.
மா என்னும் பெயர்:—குதிரை, யானை, பன்றி. (ரு-ம்)

ஓரி என்னும் பெயர்.

259 முசுவு நரியு மோரி யாகும்.
ஓரி என்னும் பெயர்:—முசு, நரி. (உ-ம்)

சேவலென்னும் பெயர்.

260. கோழியு மன்னமுஞ் சேவ லாகும்.
சேவல் என்னும் பெயர்:—கோழி, அன்னம். (உ-ம்)

## விலங்கின் பெண் மரபு.

### விலங்கின் பெண்பாற் பொதுப்பெயர்.

261. பிணையும் பாட்டியும் பெட்டையும் பிணவு
மாவு மானும் பிடியு நாகும்
மந்தியு மூடுங் கடமையு மென்றவை
பிறவும் விலங்கின் பெண்பா லாமே.

விலங்கின் பெண்பால் பொதுப் பெயர்:—பிணை, பாட்டி, பெட்டை, பிணா, ஆ, ஆன், பிடி, நாகு, மந்தி, மூடு, கடமை. (கக)

### அவற்றுள், பிணையென்னும் பெயர்.

262. அவற்றுள்,
உழையு நாயும் பன்றியும்புல் வாயும்
பிணையெனும் பெயர்க்கொடை பேசப் படுமே.

அவற்றுள், பிணைஎன்னும்பெயர்:—உழை, நாய், பன்றி, புல்வாய் (சு-ம்)

### பாட்டியென்னும் பெயர்.

263. பன்றியு நாயும் பாட்டியென் றாகும்.

பாட்டி என்னும் பெயர்:—பன்றி, நாய். (உ)

### இதுவுமது.

264. நரியிற் பாட்டி நடைபெற் றியலும்
ஒருசார் விலங்கின் பெண்பெயர்க் குரைப்பர்.

ஷெ பாட்டி என்னும் பெயர்:—நரி. (க) ஆ (ங-ம்)
[பாட்டி என்பது ஒருசார் விலங்கின் பெண்பாற்கும் பொது]

### பெட்டை யென்னும் பெயர்.

265. ஒட்டகங் குதிரை கழுதைமரை சிங்கம்
பெட்டை யென்னும் பெயர்க்கொடை பெறுமே.

பெட்டை என்னும் பெயர்:—ஒட்டகம், குதிரை, கழுதை, மரை, சிங்கம். (ரு-ம்)

### பிணவென்னும் பெயர்.

266. பன்றி புல்வாய் நாயென மூன்றும்
பின்றாக் காட்சிப் பிணவொடு வருமே.

பிணவு என்னும் பெயர்:—பன்றி, புல்வாய், நாய். (ங-ம்)

### ஆவென்னும் பெயர்.

267. எருமையும் பசுவும் மரையுமா வென்ப.

ஆ என்னும் பெயர்:—எருமை, பசு, மரை. (ங-ம்)

ஆனென்னும் பெயர்.

268. ஆவு மெருமையு மரையு மானே,

ஆன் என்னும் பெயர்:—ஆ, எருமை, மரை. (௩-ம்)

பிடியென்னும் பெயர்.

269. கரியும் யூகமுங் கவரியும் பிடியே.

பிடி என்னும் பெயர்:—கரி, யூகம், கவரி. (௩-ம்)

நாகென்னும் பெயர்.

270. மரையும் பெற்றமு மெருமையு நாகே.

நாகு என்னும் பெயர்:—மரை, பெற்றம், எருமை. (௩)

இதுவுமது.

271. நந்து நீர்வாழ் சாதியு நாகே.

ஷை நாகு என்னும் பெயர்:—நந்து, நீர்வாழ்சாதி. (உ) ஆ (ரு-ம்)

மந்தியென்னும் பெயர்.

272. குரங்கும் யூகமு முசுவு மென்றிவை
வருங்காற் பெண்பெயர் மந்தியென் றாகும்.

மந்தி என்னும் பெயர்:—குரங்கு, யூகம், முசு. (௩-ம்)

மூடு, கடமையென்னும் பெயர்கள்.

273. மூடுங் கடமையு மாடல பெறுமே.

மூடு, கடமை என்னும் பெயர்கள்:—ஆடு. (க-ம்)

பெண், பிணவென்னும் பெயர்கள்.

274. பெண்பா லெவையும் பெண்ணும் பிணவுமாம்.

பெண், பிண என்னும் பெயர்கள் :—அஃறிணையில் வரும் பெண்பால் எவற்றிற்கும் ஆம்.

ஆணென்னும் பெயர்.

275. ஆண்பா லெவையு மாணெனப் படுமே.

ஆண் என்னும் பெயர்:—அஃறிணையில் வரும் ஆண்பால் எவற்றிற்கும் ஆம்.

## விலங்கின் பிள்ளை மரபு.

### விலங்கின் பிள்ளைப் பெயர்.

276. குருளையுங் குட்டியும் பறழும் பிள்ளையு
மறியுங் கன்றுங் குழவியும் பார்ப்பும்
மகவும் விலங்கின் பிள்ளைப் பெயரே.

விலங்கின் பிள்ளைப் பெயர்:—குருளை, குட்டி, பறழ், பிள்ளை, மறி, கன்று, குழவி, பார்ப்பு, மகவு. (க)

### அவற்றுள், குருளை, பறழ், குட்டி என்னும் பெயர்கள்.

277. அவற்றுள்,
புலிமுயல் பன்றி நரிநா யென்றிவை
குருளையும் பறழுங் குட்டியு மாகும்.

அவற்றுள், குருளை, பறழ், குட்டி என்னும் பெயர்கள்:—புலி, முயல், பன்றி, நரி, நாய். (உ-ம்)

### பிள்ளையென்னும் பெயர்.

278 பிள்ளைப் பெயர்நா யொழியப் பெறுமே.

பிள்ளை என்னும் பெயர்:—நாய் ஒழிந்தவற்றிற்கு ஆம்.

### மறியென்னும் பெயர்.

279. ஆடுங் குதிரையுமா னழுங்கு மறியெனல்.

மறி என்னும் பெயர்:—ஆடு, குதிரை, மான், அழுங்கு. (ச-ம்)

### கன்றென்னும் பெயர்.

280. கலையு மானுங் கழுதையு மரையும்
பசுவு மெருமையுங் கடமையும் யானையு
மொட்டகமுங் கவரியுங் காரமுங்கன் றென்ப.

கன்று என்னும் பெயர்:—கலை, மான், கழுதை, மரை, பசு, எருமை, கடமை, யானை, ஒட்டகம், கவரி, காரம். (கக-ம்)

### குழவி, மகவு, குட்டி, பிள்ளை, பறழ், பார்ப்பென்னும் பெயர்கள்.

281. குரங்கு முதலாய்க் கோட்டில் வாழும்
விலங்கின் பிள்ளைப் பெயரினை விளம்பிற்
குழவியு மகவுங் குட்டியும் பிள்ளையும்
பறழும் பார்ப்புமப் பண்பா கும்மே.

குழவி, மகவு, குட்டி, பிள்ளை, பறழ், பார்ப்பு என்னும் பெயர்கள்:—குரங்கு முதல் மரக் கோட்டில் வாழ் விலங்கின் பிள்ளைகட்காம்.

பறழ், குட்டியென்னும் பெயர்கள்.

282. வெருகு நரியு முயலு மென்றிவை
பறழுங் குட்டியு மாகும் பண்பே.

பறழ், குட்டி என்னும் பெயர்கள்:—வெருகு, நரி, முயல். (ந-ம்)

பிள்ளை, பார்ப்பு, பறழென்னும் பெயர்கள்.

283. பிள்ளையும் பார்ப்பும் பறழுமென் பெயர்க
டள்ளருஞ் சிறப்பிற் றவழ்வன பெறுமே.

பிள்ளை, பார்ப்பு, பறழ் என்னும் பெயர்கள்:—தவழ் சாதிகட்கு ஆம்.

குழவியென்னும் பெயர்.

284. யானையுங் கடமையு மரையு மெருமையு
மானுங் குழவிப் பெயரோ டடையும்.

குழவி என்னும் பெயர்:— யானை, கடமை, மரை, எருமை, மான். (ரு-ம்)

குருளை, கன்றென்னும் பெயர்கள்.

285. குருளையுங் கன்று மானிற் கொளலே.

குருளை, கன்று என்னும் பெயர்கள்:—மான். (க-ம்)

குழவியென்னும் பெயர்.

286. குழவி முசுவின் குணனடை பெறுமே.

குழவி என்னும் பெயர்:—முசு. (க-ம்)

பிள்ளையென்னும் பெயர்.

287. நந்தி யேற்றையும் மானின் குருளையும்
வந்துழி யொருசார் வழங்கும்பிள் ளைப்பெயர்.

பிள்ளை என்னும் பெயர்:—சங்கேறு, மான்குருளை. (உ-ம்)

பறழ் குட்டியென்னும் பெயர்கள்.

288. பாக்கனு மணிலும் பறழொடு குட்டி.

பறழ், குட்டி என்னும் பெயர்கள்:—பாக்கன், அணில். (உ-ம்)
[பாக்கன் - பூனை.]

பார்ப்பு, பிள்ளையென்னும் பெயர்கள்.

289. பார்ப்பும் பிள்ளையுந் தவழ்சா திக் குரிய.

பார்ப்பு, பிள்ளை என்னும் பெயர்கள்:—தவழ் சாதிகட்கு ஆம்.

விலங்கின் கூட்டத்தின் பெயர்.

290. சாலம் வியூகம் யூதம் விருந்தங்
குலமார் கணமும் விலங்கின் கூட்டம்.

விலங்கின் கூட்டத்தின் பெயர்:—சாலம், வியூகம், யூதம், விருந்தம், குலம், கணம். (சா)

மூன்றாவது
## பாம்பின் வகை.

பாம்பின் பெயர்.

291. அரவு கட்செவி யங்கதம் வியாளம்
உரகம் பன்னக நாகஞ் சர்ப்ப
மரியே மாசுணம் புயங்கம் பாந்தள்
பணிய கிதந்த சூகம் போகி
விடதாங் கும்பி நசங்கா கோதர
மாராளஞ் சக்கிரி யனைத்தும் பாம்பே.

பாம்பின் பெயர்:—அரவு, கட்செவி, அங்கதம், வியாளம், உரகம், பன்னகம், நாகம், சர்ப்பம், அரி, மாசுணம், புயங்கம், பாந்தள், பணி, அகி, தந்தசூகம், போகி, விடதரம், கும்பிநசம், காகோதரம், மாராளம், சக்கிரி. (உக)

இதுவுமது.

292 வாகு வவகதங் கூடபதமும் பாம்பே.

ஷெ பாம்பின் பெயர்:—வாகுவவகதம், கூடபதம். (உ`ஜ (உந)

சாரைப் பாம்பின் பெயர்.

293. துண்ட மிலஞ்சி சாரைப் பாம்பே.

சாரைப் பாம்பின் பெயர்:—துண்டம், இலஞ்சி. (உ)

மண்டலிப் பாம்பின் பெயர்.

294 மண்டலி யாவுங் கோளக மாகும்.

மண்டலிப் பாம்பின் பெயர்:—கோளகம். (க)

கண்குத்திப் பாம்பின் பெயர்.

295. மாவு தாசனன் மற்றது கண்குத்தி.

கண்குத்திப் பாம்பின் பெயர்:—உதாசனன். (க)

பாம்பின் படத்தின் பெயர்.

296. பையும் பணமும் பாம்பின் படமே.

பாம்பின் படத்தின் பெயர்:—பை, பணம். (உ)

பாம்பின் படப்பொறியின் பெயர்.

297. உத்தியுந் துத்தியு முரக படப்பொறி.
பாம்பின் படப்பொறியின் பெயர்:—உத்தி, துத்தி. (உ)

நஞ்சின் பெயர்.

298. காளங் காரி காளநீ லங்கர
மாலால மாலங் கடுவிட நஞ்சே.
நஞ்சின் பெயர்:—காளம், காரி, காளம், நீலம், கரம், ஆலாலம், ஆலம், கடு, விடம். (கு)

பாம்பின் நச்சுப்பல்லின் பெயர்.

299. கட்செவி நஞ்சுகா லும்பல் தட்டம்.
பாம்பின் நச்சுப் பல்லின் பெயர்:—தட்டம். (க)

நாகர வண்டின் பெயர்.

300. நாகர வண்டி ஞமகொள்ளை.
நாகர வண்டின் பெயர்:—கொள்ளை. (க)

சிலந்தியின் பெயர்.

301. சிலம்பி யுலூதை காவன் சிலந்தி.
சிலந்தியின் பெயர்:—சிலம்பி, உலூதை, காவன். (ங)

உளுவின் பெயர்.

302. உளுவென் கிளவி யுசுவாகு மென்ப.
உளுவின் பெயர்:—உசு. (க)

நாங்கூழின் பெயர்.

303. நாங்கூழக் கிளவிபூ நாகமு மாகும்.
நாங்கூழின் பெயர்:—பூநாகம். (க)

உலண்டியின் பெயர்.

304. கோற்புழு வுலண்டு கீட மாகும்.
உலண்டின் பெயர்:—கோற்புழு, கீடம். (உ)

புழுவின் பெயர்.

305. கீடமும் பொட்டுங் கிருமியும் புழுவே.
புழுவின் பெயர்:—கீடம், பொட்டு, கிருமி. (ங)

நான்காவது

## சலசர வகை.

### மகரமீனின் பெயர்.

306. மானே சுறுக்கலை மகரமீ னின்பெயர்.
மகர மீனின் பெயர்:—மான், சுறு, கலை. (௩)

### இதுவுமது.

307. மீனே றென்பதும் விளம்பப் பெறுமே.
ஷை மகர மீனின் பெயர்:—மீனேறு. (௧) ஆ (௪)

### இருன்மீனின் பெயர்.

308. இறவே யிருன்மீன்.
இருல் மீனின் பெயர்:—இறவு. (௧)

### கெளிற்றுமீனின் பெயர்.

309. கெளிறு கெளிற்றுமீன்.
கெளிற்று மீனின் பெயர்:—கெளிறு. (௧)

### பெருமீனின் பெயர்.

310. யானைமீன் பனைமீன் றிமிலம் பெருமீன்.
பெருமீனின் பெயர்:—யானைமீன், பனைமீன், திமிலம். (௩)

### யானைமீனை விழுங்கு மீனின் பெயர்.

311. யானையை விழுங்குமீன் றிமிங்கில மாகும்.
யானைமீனை விழுங்கும் மீனின் பெயர்:—திமிங்கிலம். (௧)

### திமிங்கிலத்தை விழுங்கு மீனின் பெயர்.

312. அம்மீனை விழுங்குமீன் றிமிங்கில கிலமே.
திமிங்கிலத்தை விழுங்கும் மீனின் பெயர்:—திமிங்கிலகிலம். (௧)

### ஆரான்மீனின் பெயர்.

313. ஆரலா ரான்மீன்.
ஆரால் மீனின் பெயர்:—ஆரல். (௧)

### கெண்டைமீனின் பெயர்.

314. சபரங் கெண்டைமீன்.
கெண்டை மீனின் பெயர்:—சபாம். (௧)

மலங்குமீனின் பெயர்.

315. ஏனையு நூழையு மலங்கென் ருகும்.
மலங்கு மீனின் பெயர்:—ஏனை, நூழை. (உ)

அயிரையின் பெயர்.

316. அயிரை நொய்ம்மீன் சிறுமீ னுகும்.
அயிரையின் பெயர்:—நொய்ம்மீன், சிறுமீன். (உ)

மீன் பொதுப் பெயர்.

317. மயிலையு மானு மச்சமு மீனமும்
புழலு மீனின் பொதுப்பெய ராகும்.
மீன் பொதுப் பெயர்:—மயிலை, மான், மச்சம், மீனம், புழல். (ரு)

முதலையின் பெயர்.

318. சிஞ்சு மார மிடங்கர் வன்மீ
னிங்கிவை கரா வே கராமுதலை யென்ப.
முதலையின் பெயர்:—சிஞ்சுமாரம், இடங்கர், வன்மீன், கரா, காரம். (ரு)

ஆண் முதலையின் பெயர்.

319. கராவத னேனைக் கருதல் வேண்டும்.
ஆண் முதலையின் பெயர்:—கரா. (க)

சிப்பியின் பெயர்.

320. இப்பி சுத்தி சிப்பி யாகும்.
சிப்பியின் பெயர்:—இப்பி, சுத்தி. (உ)

பறவையென்னும் பெயர்.

321. தோற்சிற கெல்லாம் பறவை யெனப்படும்.
பறவை என்னும் பெயர் : — தோற்சிற குள்ளனவற்றிற் கெல்லாம் அமையும்.

ஆமையின் பெயர்.

322. கமடங் கூர்மங் கச்சப முறுப்படக்கி
கடிப்பு மாமைப் பெயரா கும்மே.
ஆமையின் பெயர் : — கமடம், கூர்மம், கச்சபம், உறுப்படக்கி, கடிப்பு. (ரு)

பெண்ணுமையின் பெயர்.

323. துளிபெண் ணுமை யாமெனச் சொல்லுப.
பெண் ஆமையின் பெயர்:—துளி. (க)

சங்கின் பெயர்.

324. நந்து சுத்தி நாகு பணிலம்
வண்டு கோடு வளையே சரிமுகம்
கம்பு வெள்ளை யிடம்புரி சங்கே.
சங்கின் பெயர்:—நந்து, சுத்தி, நாகு, பணிலம், வண்டு, கோடு, வளை, சரிமுகம், கம்பு, வெள்ளை, இடம்புரி. (கக)

இதுவுமது.

325. தாரவு மதன்பெயர் சாற்றப் பெறுமே.
ஷ சங்கின் பெயர்:—தார. (க)

வலம்புரிச்சங்கின் பெயர்.

326. வலம்புரி கொக்கரை.
வலம்புரிச் சங்கின் பெயர்:—கொக்கரை. (க)

சலஞ்சலத்தின் பெயர்.

327. சலஞ்சலம் பணிலம்.
சலஞ்சலத்தின் பெயர்:—பணிலம். (க)

இடம்புரிச்சங் கென்பது.

328. இப்பி யாயிரஞ் சூழ்ந்த திடம்புரி.
இடம்புரிச் சங்கு என்பது:—இப்பி ஆயிரஞ் சூழ்ந்தது.

வலம்புரிச்சங் கென்பது.

329. இடம்புரி யாயிரஞ் சூழ்ந்தது வலம்புரி.
வலம்புரிச் சங்கு என்பது:—இடம்புரிச் சங்கு ஆயிரஞ் சூழ்ந்தது.

சலஞ்சல மென்பது.

330. வலம்புரி யாயிரஞ் சூழ்ந்தது சலஞ்சலம்.
சலஞ்சலம் என்பது:—வலம்புரிச் சங்கு ஆயிரஞ் சூழ்ந்து.

பாஞ்சசன்னிய மென்பது.

331. சலஞ்சல மாயிரஞ் சூழ்ந்தது பாஞ்சசன்னியம்.
பாஞ்ச சன்னிய மென்பது:—சலஞ்சலச் சங்கு ஆயிரஞ் சூழ்ந்தது.

நத்தையின் பெயர்.

332. கருநந்து நாகு சுரிமுக நத்தை.
நத்தையின் பெயர்:—கருநந்து, நாகு, சுரிமுகம். (ங)

கிளிஞ்சிலின் பெயர்.

333. ஏரலு மெருந்து மூரலுங் கிளிஞ்சில்.
கிளிஞ்சிலின் பெயர்:—ஏரல், எருந்து, ஊரல். (ங)

தவளையின் பெயர்.

334. அரிமண் டூகந் தேரை தவளை.
தவளையின் பெயர்:—அரி, மண்டூகம், தேரை. (ங)

இதுவுமது.

335. நுணலையும் பேகமு நுவல்பெயர் பெறுமே.
ஷை தவளையின் பெயர்:—நுணலை, பேகம். (உ) ஆ (ரு)

ஞெண்டின் பெயர்.

336. கள்வ னலவ னள்ளிகர்க் கடகங்
குளிரே கவைத்தாண் ஞெண்டின் கூற்றே.
ஞெண்டின் பெயர்:—கள்வன், அலவன், நள்ளி, கர்க்கடகம், குளிர், கவைத்தாள். (சா)

ஆண்ஞெண்டின் பெயர்.

337. அலவ னாண்ஞெண் டாகு மென்ப.
ஆண் ஞெண்டின் பெயர்:—அலவன். (க)

பலகறையின் பெயர்.

338. பட்டி கவடி யலகு பலகறை.
பலகறையின் பெயர்:—பட்டி, கவடி, அலகு. (ங)

அட்டையின் பெயர்.

339. உருவே சளுக மட்டையென மொழிப.
அட்டையின் பெயர்:—உரு, சளுகம். (உ)

எட்டாவது மாப்பெயர் வகை முற்றிற்று.

---

ஆ சூத்திரம் உசுசகூ.

---

ஒன்பதாவது

# மரப் பெயர் வகை.

ஐந் தருவருக்க மாவன.

1. சந்தானந் தேவ தாரங் கற்பகம்
மந்தாரம் பாரிசாத மைந்தரு வருக்கம்.

ஐந் தருவருக்கம் ஆவன:—சந்தானம், தேவதாரம், கற்பகம், மந்தாரம், பாரிசாதம். (௫)

இவ் வைவகை மரத்தின் பெயர்.

2. இம்மர மைந்துந் தெய்வமர மென்ப.

இவ் ஐவகை மரத்தின் பெயர்:—தெய்வமரம். (௧)

கற்பகஞ் சேர் கொடியின் பெயர்.

3. கற்பகஞ் சேர்கொடி காம வல்லி.

கற்பகம் சேர் கொடியின் பெயர்:—காமவல்லி. (௧)

சந்தன மரத்தின் பெயர்.

4. சாந்த மலயசஞ் சந்திர திலக
மேய்ந்த வாரஞ் சந்திவை சந்தனம்.

சந்தன மரத்தின் பெயர்:—சாந்தம், மலயசம், சந்திரதிலகம், ஆரம், சந்து. (௫)

செஞ்சந்தனத்தின் பெயர்.

5. பிசனஞ் செஞ்சந் தனத்தின் பெயரே.

செஞ் சந்தனத்தின் பெயர்:—பிசனம். (௧)

அகிலின் பெயர்.

6. அகருவும் பூழிலுங் காழ்வையு மகிலே.

அகிலின் பெயர்:—அகரு, பூழில், காழ்வை. (௩)

இதுவுமது.

7 பகிற் காக துண்டமு மாகும்.

ஷெடி அகிலின் பெயர்:—காகதுண்டம். (௧) ஆக (௭)

குங்கும மரத்தின் பெயர்.

8. மரவமுந் துருக்கமுங் குங்கும மரமே.

குங்கும மரத்தின் பெயர்:—மரவம், துருக்கம்.

சண்பகத்தின் பெயர்.

9. சம்பகஞ் செண்பகஞ் சண்பக மரமே.
சண்பகத்தின் பெயர்:— சம்பகம், செண்பகம். (உ)

சிறு சண்பகத்தின் பெயர்.

10. சாதி மாலதி சிறுசண் பகமே.
சிறு சண்பகத்தின் பெயர்:—சாதி, மாலதி. (உ)

செவ்வந்தியின் பெயர்.

11. பட்டிகை செவ்வந்தி.
செவ்வந்தியின் பெயர்:—பட்டிகை. (க)

புரசைமரத்தின் பெயர்.

12. பிரமதருப் பலாசம் புரசை மரப்பெயர்.
புரசை மரத்தின் பெயர்:—பிரமதரு, பலாசம். (உ)

இதுவுமது.

13. புனமுருக் கென்றும் புகலப் பெறுமே.
ஷை புரசை மரத்தின் பெயர்:—புனமுருக்கு. (க) ஆ (௩)

ஆலமரத்தின் பெயர்.

14. வடமரந் தொன்மரம் பூதவங் கான்மரம்
பழுமா நியக்ரோ தங்கோளி யாலென்ப.
ஆல மரத்தின் பெயர்:—வடமரம், தொன்மரம், பூதவம், கான்மரம், பழுமரம், நியக்ரோதம், கோளி. (எ)

தேக்கின் பெயர்.

15. சாதி சாகந் தேக்கந் தருவே.
தேக்கின் பெயர்:—சாதி, சாகம். (உ)

வேங்கைமரத்தின் பெயர்.

16. பீதசா லங்கணி திமிசு திமில் வேங்கை.
வேங்கை மரத்தின் பெயர்:—பீதசாலம், கணி, திமிசு, திமில். (சு)

கொன்றைமரத்தின் பெயர்.

17. இதழி கடுக்கை தாமங் கொன்றை.
கொன்றை மரத்தின் பெயர்:—இதழி, கடுக்கை, தாமம். (௩)

இதுவுமது.

18 மதலை யார்க்கு வதமென் றாகும்.

ஷ கொன்றை மரத்தின் பெயர்:—மதலை, ஆர்க்குவதம். (உ)ஆ_(கு)

அரச மரத்தின் பெயர்.

19. சுவலையச் சுவத்தம் பிப்பலம் போதி
திருமரங் குஞ் சராசனம் பணை கணவ மரசு.

அரச மரத்தின் பெயர்:—சுவலை, அச்சுவத்தம், பிப்பலம், போதி, திருமரம், குஞ்சராசனம், பணை, கணவம். (அ)

ஆச்சாமரத்தின் பெயர்.

20. சால மராமர மாவு மாச்சா.

ஆச்சா மரத்தின் பெயர்:—சாலம், மராமரம், ஆ. (௩)

மகிழமரத்தின் பெயர்.

21. வகுள மிலஞ்சி கேசர மகிழே.

மகிழ மரத்தின் பெயர்:—வகுளம், இலஞ்சி, கேசரம். (௩)

அசோகின் பெயர்.

22. பிண்டி செயலைகா கோளி யசோகு.

அசோகின் பெயர்:—பிண்டி, செயலை, காகோளி. (௩)

மருதின் பெயர்.

23 அருச்சுனம் பூதவ மருத மாகும்.

மருதின் பெயர்:—அருச்சுனம், பூதவம். (உ)

இறலியின் பெயர்.

24. இரத்தி யிறலி.

இறலியின் பெயர்:—இரத்தி. (க)

தான்றியின் பெயர்.

25 கலித்துருமந் தான்றி.

தான்றியின் பெயர்:—கலித்துருமம். (க)

குராவின் பெயர்.

26. கோட்டங் குடிலங் குராவா குமே.

குராவின் பெயர்:—கோட்டம், குடிலம். (உ

இதுவுமது.

27. கோபி தாரமுங் குராமர மாகும்.
ஷெ குராவின் பெயர்:—கோபிதாரம். (க) ஆ (ங)

நாவலின் பெயர்.

28. நாவலா ருகதஞ் சம்பு நேரேடம்.
நாவலின் பெயர்:—ஆருகதம், சம்பு, நேரேடம். (ங)

குழிநாவலின் பெயர்.

29. சாதேவங் குழி நாவ லாகும்.
குழி நாவலின் பெயர்:—சாதேவம். (க)

வேம்பின் பெயர்.

30. நிம்பம் வேப்பு பிசிதமு மாகும்.
வேம்பின் பெயர்:—நிம்பம், பிசிதம். (உ)

அனிச்சமரத்தின் பெயர்.

31. நறவஞ் சுள்ளி யருப்பல மனிச்சம்.
அனிச்ச மரத்தின் பெயர்:—நறவம், சுள்ளி, அருப்பலம். (ங)

பாதிரியின் பெயர்.

32. பாடலம் புன்காலி பாதிரி யாகும்.
பாதிரியின் பெயர்:—பாடலம், புன்காலி. (உ)

ஞாழலின் பெயர்.

33 நாகம் பலினி ஞாழ லாகும்.
ஞாழலின் பெயர்:—நாகம், பலினி. (உ)

கோங்கின் பெயர்.

34 கன்னி காரங் குருமோற் பலமே
குயாகூன் பிணரே கோங்கா கும்மே.
கோங்கின் பெயர்:—கன்னிகாரம், குருமோற்பலம், குயா, பிணர். (ச)

நாரத்தையின் பெயர்.

35. நார நரந்த நாரங்க நாரத்தை.
நாரத்தையின் பெயர்:—நாரம், நரந்தம், நாரங்கம். (ங)

குமிழின் பெயர்.

36. கூம்பல் கடம்பல் குமிழெனக் கூறுப.
குமிழின் பெயர்:—கூம்பல், கடம்பல். (உ)

அதிமதுரத்தின் பெயர்.

37. அட்டி மதூர மதுக மதிங்கம்
தட்டின் றுரைப்பிற் சல்லியு மதுவே.
அதிமதூரத்தின் பெயர்:—அட்டி, மதுகம், அதிங்கம், சல்லி. (ச)

மஞ்சாடிமரத்தின் பெயர்.

38. திலகமஞ் சாடி.
மஞ்சாடி மரத்தின் பெயர்:—திலகம். (க)

குடைவேலின் பெயர்.

39. உடைகுடை வேலே.
குடைவேலின் பெயர்:—உடை. (க)

புன்னையின் பெயர்.

40. புன்னைபுன் னாகம்.
புன்னையின் பெயர்:—புன்னாகம். (க)

சுரபுன்னையின் பெயர்,

41. வழைசுர புன்னை.
சுர புன்னையின் பெயர்:—வழை. (க)

வெட்சியின் பெயர்.

42. சிந்தூரமுங் குல்லையுஞ் செச்சையும் வெட்சி.
வெட்சியின் பெயர்:—சிந்தூரம், குல்லை, செச்சை. (ந)

செருந்தியின் பெயர்.

43. பஞ்சரஞ் செருந்தி செங்கோடு மாகும்.
செருந்தியின் பெயர்:—பஞ்சரம், செங்கொடு. (உ)

அலரியின் பெயர்.

44. கவீரங் கணவீரங் கரவீர மலரி.
அலரியின் பெயர்:—கவீரம், கணவீரம், கரவீரம். (ந)

இதுவுமது.

45. அயமா மடுக்கு மென்ப தாகும். (உ) ஆ (௫)
ஷை அலரியின் பெயர்:—அயமாம், அடுக்கு.

முண்முருக்கின் பெயர்.

46. கவிரே கிஞ்சுக முண்முருக் காகும். (உ)
முள் முருக்கின் பெயர்:—கவிர், கிஞ்சுகம்.

பெருங்குறிஞ்சியின் பெயர்.

47. கோரண்டம் குரண்டகம் பெருங்குறிஞ்சி யாகும். (உ)
பெருங் குறிஞ்சியின் பெயர்:—கோரண்டம், குரண்டகம்.
[குறிஞ்சி - மருதோன்றி; இது ஐந்து வகைப்படுதலால் ஐவ்வண்ணம் எனக் காரணப் பெயர்பெறும்.]

பொன்வண்ணக் குறிஞ்சியின் பெயர்.

48. பீதை பொன்வண்ணக் குறிஞ்சி யாகும். (க)
பொன் வண்ணக் குறிஞ்சியின் பெயர்:—பீதை.

வாடாக்குறிஞ்சியின் பெயர்.

49. குரவகம் வாடாக் குறிஞ்சி யாகும். (க)
வாடாக் குறிஞ்சியின் பெயர்:—குரவகம்.

மழைவண்ணக் குறிஞ்சியின் பெயர்.

50. பாண நீலி மழைவண்ணக் குறிஞ்சி. (உ)
மழை வண்ணக் குறிஞ்சியின் பெயர்:—பாணம், நீலி.

பவளக்குறிஞ்சியின் பெயர்.

51. நீடு தீண்டியம் பவளக் குறிஞ்சி.
பவளக் குறிஞ்சியின் பெயர்:—தீண்டியம்.

மகரவாழையின் பெயர்.

52. மருகுந் தானமு மகர வாழை. (௨)
மகர வாழையின் பெயர்:—மருகு, தானம்.

இருவேலியின் பெயர்.

53. வேரிபீ தகமூல கந்தமிரு வேலி. (௩)
இருவேலியின் பெயர்:—வேரி, பீதகம், மூலகந்தம்.

குருக்கத்தியின் பெயர்.

54. அதிகமுத் தகமா தவிவா சந்தி
குருகுநா கரியிவை குருக்கத்தி யாகும்.

குருக்கத்தியின் பெயர்:—அதிகம், முத்தகம், மாதவி, வாசந்தி, குருகு, நாகரி. (௬)

பலாவின் பெயர்.

55. பாகல் வருக்கை பனசம் பலாவே.

பலாவின் பெயர்:—பாகல், வருக்கை, பனசம். (௩)

இதுவுமது.

56. ஆசினி பலாச மீரப் பலாவே.

ஈரப் பலாவின் பெயர்:—ஆசினி, பலாசம். (௨)

மாமரத்தின் பெயர்.

57. மாந்தியுஞ் சூதமுங் கொக்கு மாவு
மாமிரமு மாழையு மாமர மாகும்.

மா மரத்தின் பெயர்:—மாந்தி, சூதம், கொக்கு, மா, ஆமிரம், மாழை. (௬)

புளிமாவின் பெயர்.

58. நாளினி யிபங்க மாழை சிஞ்ச
மாம்பிர மெகினஞ் சூதம் புளிமா.

புளி மாவின் பெயர்:—நாளினி, இபங்கம், மாழை, சிஞ்சம், ஆம்பிரம், எகினம், சூதம். (௭)

தேமாவின் பெயர்.

59. ஆமிரஞ் சககாரஞ் சேதாரந் தேமா.

தே மாவின் பெயர்:—ஆமிரம், சககாரம், சேதாரம். (௩)

புளியமரத்தின் பெயர்.

60. சிந்தூரஞ் சிந்தகந் திந்திருணி யெகினஞ்
சஞ்சீவ கரணி யாம்பிலம் புளியே.

புளிய மரத்தின் பெயர்:—சிந்தூரம், சிந்தகம், திந்திருணி, எகினம், சஞ்சீவகரணி, ஆம்பிலம். (௬)

இலவின் பெயர்.

61. பொங்கர் சான்மலி பூரணி யிலவே.

இலவின் பெயர்:—பொங்கர், சான்மலி, பூரணி. (௩)

இலந்தையின் பெயர்.

62. குல்லரி குவலி கோற்கொடி கோலி
இரத்தி வதரி யிலந்தை யாகும்.

இலந்தையின் பெயர்:—குல்லரி, குவலி, கோற்கொடி, கோலி, இரத்தி, வதரி. (சு)

இலந்தைப்பழத்தின் பெயர்.

63. அதன்பழங் கோலமுங் கோண்டையு மாகும்.

இலந்தைப் பழத்தின் பெயர்:—கோலம், கோண்டை. (உ)

அத்தியின் பெயர்.

64. அதவே கோளி யுதும்பர மத்தி.

அத்தியின் பெயர்:—அதவு, கோளி, உதும்பரம். (ந)

விளாவின் பெயர்.

65. விளவு கபித்தம் வெள்ளில் விளாவே.

விளாவின் பெயர்:—விளவு, கபித்தம், வெள்ளில். (ந)

காயாவின் பெயர்.

66. பூவை யஞ்சனி யல்லிபுன் காலி
காசை வச்சி காயா வாகும்.

காயாவின் பெயர்:—பூவை, அஞ்சனி, அல்லி, புன்காலி, காசை, வச்சி. (சு)

களாவின் பெயர்.

67. களவங் களாவே.

களாவின் பெயர்:—களவு. (க)

நுணாவின் பெயர்.

68. தணக்கு நுணாவே.

நுணாவின் பெயர்:—தணக்கு. (க)

எலுமிச்சையின் பெயர்.

69. சம்பீர முருகு சதாபலஞ் சம்பள
மருண மிலிகுச மெலுமிச்சை யாகும்.

எலுமிச்சையின் பெயர்:—சம்பீரம், முருகு, சதாபலம், சம்பளம், அருணம், இலிகுசம். (சு)

நெல்லியின் பெயர்.

70. ஆமலக நெல்லி யாகு மென்ப.

நெல்லியின் பெயர்:—ஆமலகம். (க)

கடுக்காய் மரத்தின் பெயர்.

71. அரிதகி கடுவே பத்தியங் கடுக்காய்.

கடுக்காய் மரத்தின் பெயர்:—அரிதகி, கடு, பத்தியம். (ங)

மாதுளையின் பெயர்.

72. மாதுளங்க மாதுளங் கழுமுண் மாதுளையே.

மாதுளையின் பெயர்:—மாதுளங்கம், மாதுளம், கழுமுள். (ங)

தாது மாதுளையின் பெயர்.

73. தாடிமந் தாது மாதுளை யென்ப.

தாது மாதுளையின் பெயர்:—தாடிமம். (க)

வில்வத்தின் பெயர்.

74. கூவிளம் வில்வ மாலூரங் கூவிளை.

வில்வத்தின் பெயர்:—கூவிளம், மாலூரம், கூவிளை. (ங)

இதுவுமது.

75. மாவிளம் வில்லுவ மற்றதன் பெயரே.

ஷை வில்வத்தின் பெயர்:—மாவிளம், வில்லுவம். (உ) ஆ (ரு)

வஞ்சியின் பெயர்.

76. வானீ ரம்பிசின் வஞ்சி யாகும்.

வஞ்சியின் பெயர்:—வானீரம், பிசின். (உ)

கருங்காலியின் பெயர்.

77. கதிரங் கருங்காலி.

கருங்காலியின் பெயர்:—கதிரம். (க)

செங் கருங்காலியின் பெயர்.

78. சிறுமா ரோடஞ் செங்கருங் காலி.

செங் கருங்காலியின் பெயர்:—சிறுமாரோடம். (க)

ஈந்தின் பெயர்.

79. கர்ச்சூர மீந்தே.

ஈந்தின் பெயர்:—கர்ச்சூரம். (க)

### வெட்பாலையின் பெயர்.

80. குடசங் கிரிமல் லிகைவெட் பாலை.
வெட்பாலையின் பெயர்:—குடசம், கிரிமல்லிகை. (உ)

### அழிஞ்சிலின் பெயர்.

81. அழிஞ்சில் சேமா மங்கோல மாகும்.
அழிஞ்சிலின் பெயர்:—சேமாம், அங்கோலம். (உ)

### கடம்பின் பெயர்.

82. கதம்பமும் விசாலமு நீபமுங் கடம்பே.
கடம்பின் பெயர்:—கதம்பம், விசாலம், நீபம். (௩)

### இதுவுமது.

83. இந்துள மராவும் வந்துழிக் கொளலே.
ஷை கடம்பின் பெயர்:—இந்துளம், மரா. (உ) ஆ (ரு)

### குருந்த மரத்தின் பெயர்.

84. குந்தங் குருந்தே.
குருந்த மரத்தின் பெயர்:—குந்தம். (க)

### செம்பரத்தையின் பெயர்.

85. மந்தாரஞ் செம்பரத்தை யாமென வகுப்பர்.
செம்பரத்தையின் பெயர்:—மந்தாரம். (க)

### வெண்ணொச்சியின் பெயர்.

86. சிந்து வாரநீர்க் குண்டிவெண் ணொச்சி.
வெள் ளொச்சியின் பெயர்:— சிந்துவாரம், நீர்க்குண்டி. (உ)

### தேற்று மரத்தின் பெயர்.

87 சில்ல மில்லங் கதலிகந் தேற்றே.
தேற்று மரத்தின் பெயர்:—சில்லம், இல்லம், கதலிகம். (௩)

### ஆத்தியின் பெயர்.

88 ஆரே தாதகி சல்லகி யாத்தி.
ஆத்தியின் பெயர்:—ஆர், தாதகி, சல்லகி. (௩)

அகத்தியின் பெயர்.

89. அச்ச முனியே கரீர மகத்தி.
அகத்தியின் பெயர்:—அச்சம், முனி, கரீரம். (௩)

பச்சிலை மரத்தின் பெயர்.

90. பச்சிலை தமாலம் பசும்பிடி யாகும்.
பச்சிலை மரத்தின் பெயர்:—தமாலம், பசும்பிடி. (௨)

முருங்கையின் பெயர்.

91. சுருஞ்சனஞ் சிக்குரு முருங்கை யாகும்.
முருங்கையின் பெயர்:—சுருஞ்சனம், சிக்குரு. (௨)

எட்டியின் பெயர்.

92. காளங் காஞ்சிரை கோடர மெட்டி.
எட்டியின் பெயர்:—காளம், காஞ்சிரை, கோடரம். (௩)

சதுரக்கள்ளியின் பெயர்.

93. வச்சி ராங்கங் கண்டீர்வ மயிலி
வச்சிர விருக்கஞ் சதுரக் கள்ளி.
சதுரக் கள்ளியின் பெயர்:—வச்சிராங்கம், கண்டீர்வம், அயிலி, வச்சிர விருக்கம். (௪)

வாகையின் பெயர்.

94. சிரீடம் பாண்டில் வாகை யாகும்.
வாகையின் பெயர்:—சிரீடம், பாண்டில். (௨)

ஓடையின் பெயர்.

95. உலவை யோடை.
ஓடையின் பெயர்:—உலவை. (௧)

உழிஞ்சிலின் பெயர்.

96. உன்ன முழிஞ்சில்.
உழிஞ்சிலின் பெயர்:—உன்னம். (௧)

சீக்கிரியின் பெயர்.

97. மூன்னந் துரிஞ்சி லுசிலை சிக்கிரி.
சிக்கிரியின் பெயர்:—மூன்னம், துரிஞ்சில், உசிலை. (௩)

இலுப்பையின் பெயர்.

98. குலிக மிருப்பை மதூக மிலுப்பை.
இலுப்பையின் பெயர்:—குலிகம், இருப்பை, மதூகம். (௩)

இதுவுமது.

99. சந்தான கரணி யெனவுஞ் சாற்றும்.
மேடி இலுப்பையின் பெயர்:—சந்தானகரணி. (௧) ஆ (௬)

தெங்கின் பெயர்.

100. தாழை யிலாங்கலி தென்னையுந் தெங்கே.
தெங்கின் பெயர்:—தாழை, இலாங்கலி, தென்னை. (௩)

இதுவுமது.

101. நாளி கேர மென்பதும் கவிலும்.
மேடி தெங்கின் பெயர்:—நாளிகேரம். (௧) ஆ (௪)

பன்னாடையின் பெயர்.

102. நாரி நெய்யரி யதன்பன் னாடை.
பன்னாடையின் பெயர்:—நாரி, நெய்யரி. (௨)

கமுகின் பெயர்.

103. கந்தி பூகம் பூக்கமுங் கமுகே.
கமுகின் பெயர்:—கந்தி, பூகம், பூக்கம். (௩)

கூந்தற்கமுகின் பெயர்.

104. தாலங் கூந்தற் கமுகா கும்மே.
கூந்தல் கமுகின் பெயர்:—தாலம். (௧)

பாக்கின் பெயர்.

105. கோலந் துவர்க்காய் பாகு பாக்கே.
பாக்கின் பெயர்:—கோலம், துவர்க்காய், பாகு. (௩)

பனையின் பெயர்.

106. போந்து தாலம் பெண்ணை புற்பதி
தாளிகரும் புறம்புற் றாளி யும்பனை.
பனையின் பெயர்:—போந்து, தாலம், பெண்ணை, புற்பதி, தாளி, கரும்புறம், புற்றாளி. (எ)

### இளம்பனையின் பெயர்.

107. போந்தை யிளம்பனை.

இளம் பனையின் பெயர்:—போந்தை. (க)

### கூந்தற்பனையின் பெயர்.

108. தாளிகூந் தற்பனை.

கூந்தல் பனையின் பெயர்:—தாளி. (க)

### வாழையின் பெயர்.

109. கதலி யரம்பை கவரே சேகிலி
திரணபதி யோசை வாழையின் பெயரே.

வாழையின் பெயர்:—கதலி, அரம்பை, கவர், சேகிலி, திரணபதி, ஓசை. (சு)

### மூங்கிலின் பெயர்.

110. வெதிரும் வேயும் விண்டும் விண்டலும்
பணையு நெடிலும் வரையு மரியுந்
தட்டையுந் திகிரியுந் தடமு மமையும்
வேரலுங் கழையுந் தூம்பும் வேழமுங்
காம்புங் கிளையுங் கீசகமும் வேணு
வோங்கலு முளையு முடங்கலுஞ் சந்தியு
மூங்கி லின்பெயர் முந்தூழு மாகும்.

மூங்கிலின் பெயர்:—வெதிர், வேய், விண்டு, விண்டல், பணை, நெடில், வரை, அரி, தட்டை, திகிரி, தடம், அமை, வேரல், கழை, தூம்பு, வேழம், காம்பு. கிளை, கீசகம், வேணு, ஓங்கல், முளை, முடங்கல், சந்தி, முந்தூழ். (உரு)

### இதுவுமது.

111. சானகி திரிக ணேமி பாதிரி
யாம்ப றொளையுஞ் சபமு மதன்பெயர்.

பெடி மூங்கிலின் பெயர்:—சானகி, திரிகண், நேமி, பாதிரி, ஆம்பல், தொளை, சபம். (எ) ஆக (கூஉ)

### மூங்கிலரிசியின் பெயர்.

112. வேர றோரை மூங்கிலரி சிப்பெயர்.

மூங்கில் அரிசியின் பெயர்:—வேரல், தோரை. (உ)

### தாழையின் பெயர்.

113. முண்டக மடுவே கைதை முடங்கல்
கண்டல் கேதகை முசலி தாழை.

தாழையின் பெயர்:—முண்டகம், மடி, கைதை, முடங்கல், கண்டல், கேதகை, முசலி. (எ)

பட்டிகையின் பெயர்.

114. பறிவை பட்டிகை.

பட்டிகையின் பெயர்:—பறிவை. (க)

கரும்பின் பெயர்.

115 கழைவேழ மிக்குக் கன்னல் கரும்பே.

கரும்பின் பெயர்:—கழை, வேழம், இக்கு, கன்னல். (ச)

பூவாது காய்க்கு மரத்தின் பெயர்.

116 கோளிபூ வாது காய்க்கு மரமே.

பூவாது காய்க்கும் மரத்தின் பெயர்:—கோளி. (க)

இதுவுமது.

117. வானப் பிரத்தி பத்தியம் வரையார்.

அடி பூவாது காய்க்கும் மரத்தின் பெயர்:—வானப்பிரத்தி, பத்தியம். (உ)

வண்டுணு மலர் மர மாவன.

118 சண்பகமும் வேங்கையும் வண்டுணு மலர்மரம்.

வண்டு உண்ணு மலர் மரமாவன:—சண்பகம், வேங்கை. (உ)

வன்னி மரத்தின் பெயர்.

119 கலிசஞ் சமியே குலிசம் வன்னி.

வன்னி மரத்தின் பெயர்:—கலிசம், சமி, குலிசம். (ங)

ஓமை மரத்தின் பெயர்.

120. ஓமை யுகாவே.

ஓமை மரத்தின் பெயர்:—உகா. (க)

புனமுருங்கையின் பெயர்.

121. புன்குபுன முருங்கை.

புன முருங்கையின் பெயர்:—புன்கு. (க)

ஒடுவின் பெயர்.

122. ஒடுவே யுடுப்பை.

ஒடுவின் பெயர்:—உடுப்பை. (க)

புன்கின் பெயர்.

123. நத்தமாலம் புன்குகாஞ் சனமு நவிலும்.
புன்கின் பெயர்:—நத்தமாலம், காஞ்சனம். (உ)

ஆண் மரத்தின் பெயர்.

124. எகினே சோமர மாண்மர மென்ப.
ஆண் மரத்தின் பெயர்:—எகின், சோரம். (உ)

பராய் மரத்தின் பெயர்.

125. பசுநா விட்டில் புக்கும் பராய்மரம்.
பராய் மரத்தின் பெயர்:—பசுநா, விட்டில், புக்கு. (ங)

நறுவிலியின் பெயர்.

126. அலியுஞ் செலுவும் வலியு நறுவிலி.
நறுவிலியின் பெயர்:— அலி, செலு, வலி. (ங)

செம்புளிச்சையின் பெயர்.

127. தேவதா ரஞ்செம் புளிச்சை யென்ப.
செம் புளிச்சையின் பெயர்:—தேவதாரம். (க)

புனவேலு மிச்சையின் பெயர்.

128. புனவெலு மிச்சை குருந்தெனப் புகலுவர்.
புன எலுமிச்சையின் பெயர்:—குருந்து. (க)

எருக்கின் பெயர்.

129. அருக்கஞ் சல்லிய காணி யெருக்கே.
எருக்கின் பெயர்:—அருக்கம், சல்லியகாணி. (உ)

ஆமணக்கின் பெயர்.

130. ஏரண்டஞ் சித்திர மென்பதா மணக்கே
ஆமணக்கின் பெயர்:—எரண்டம், சித்திரம். (உ)

பருத்தியின் பெயர்.

131. பரியே பன்னல்கார்ப் பாசம் பருத்தி.
பருத்தியின் பெயர்: —பரி, பன்னல், கார்ப்பாசம். (ங)

மருந்தென்னும் பெயர்.

132. புல்லு மாலும் புதலும் பூடும்
வல்லியும் பெயர்பெறு மருத்துச்சஞ் சீவி.

மருந்து என்னும் பெயர்:—புல், மரம், புதல், பூடு, வல்லி, சஞ்சீவி. (வல்லி=கொடி) (சா)

நால்வகை மருந்தாவன.

133. சல்லிய கரணி சந்தான கரணி
சமனிய கரணி முதலி னுத்த
மிருதசஞ் சீவனி மருந்துநால் வகையே.

நால்வகை மருந்தாவன:—சல்லியகரணி, சந்தானகரணி, சமனிய கரணி, மிருதசஞ்சீவனி. (ச)

அத்திர சத்திரந் தைத்த புண்மாற்று மருந்தின் பெயர்.

134. தைத்த வத்திரஞ் சத்திரந் தணிக்கு
மெய்த்தரு மருந்தே சல்லிய கரணி.

அத்திர, சத்திரம் தைத்த புண் மாற்றும் மருந்தின் பெயர்:—சல்லிய கரணி. (க)

துணிபட்ட வுறுப்பினைப் பொருத்து மருந்தின் பெயர்.

135. துண்ட மான வுறுப்புத் துணியினைச்
சந்துசெய் மருந்தே சந்தானகரணி.

துணிபட்ட உறுப்பினைப் பொருத்தும் மருந்தின் பெயர்:—சந்தான கரணி. (க)

விரணந் தழும்புகளை நீக்கு மருந்தின் பெயர்.

136. விரணமுந் தழும்பு நீக்கி மெய்யினைத்
தகைமைசெய் மருந்தே சமனிய கரணி.

விரணம் தழும்புகளை நீக்கும் மருந்தின் பெயர்:—சமனியகரணி. (க)

உயிர்தரு மருந்தின் பெயர்.

137. உயிர்தரு மருந்தே மிருதசஞ் சீவனி.

உயிர் தரும் மருந்தின் பெயர்:—மிருதசஞ்சீவனி. (க)

இதுவுமது.

138. அதகமு மமுதுஞ்சீ வனியு மென்ன
வுயிர்தரு மருந்தி னுறுபெய ராகும்.

ஷை உயிர் தரும் மருந்தின் பெயர்:—அதகம், அமுது, சீவனி. (ங)
ஆ (ச)

நோய் தீர்க்கு மருந்தின் பெயர்.

139. உறைநோய் தீர்க்கும் மருந்துறை யென்ப.

நோய் தீர்க்கும் மருந்தின் பெயர்:—உறை. (க)

மருந்தின் பெயர்.

140. உறையே குளிய மோடதி யௌடத
மதகமும் யோகமு மருந்தென லாகும்.

மருந்தின் பெயர்:—உறை, குளியம், ஓடதி, ஔடதம், அதகம், யோகம். (௬)

மரப்பொதுவின் பெயர்.

141. பாதபந் தாரு தருவே தாவர
மோதிய மூல மரப்பொதுப் பெயரே.

மரப் பொதுவின் பெயர்:—பாதபம், தாரு, தரு, தாவரம், மூலம் (௫)

இதுவுமது.

142. அகமே யங்கிரி விருக்கந் துரும
மகலியஞ் சாதியென் றனைத்துமப் பெயரே.

ஷை மரப் பொதுவின் பெயர்:—அகம், அங்கிரி, விருக்கம், துருமம், அகலியம், சாதி. (௬)

மரக்கன்றின் பெயர்.

143. போதகம் பிள்ளை போத்துக் குழவி
காலிள மரத்தின் கன்றின் பெயரே.

மரக் கன்றின் பெயர்:—போதகம், பிள்ளை, போத்து, குழவி, கால். (௫)

மரவுரியின் பெயர்.

144. மரத்தோல் வற்கலை சீரை மரவுரி.

மர உரியின் பெயர்:—மரத்தோல், வற்கலை, சீரை. (௩)

இதுவுமது

145. இறைஞ்சியு மதற்கு விசைத்த பெயரே.

ஷை மர உரியின் பெயர்:—இறைஞ்சி. (௧) ஆக (௪)

மரக்கோம்பின் பெயர்.

146. கோடே விடபங் கோடரம் பொங்கர்
சாகை கவடு வுலவை தாருச்
சினைபணை கொம்பர் கவலைமரக் கொம்பே.

மரக் கொம்பின் பெயர்:—கோடு, விடபம், கோடரம், பொங்கர், சாகை, கவடு, உலவை, தாரு, சினை, பணை, கொம்பர், கவலை. (௧௨)

### சேகின் பெயர்.

147. சம்ப மாசினி காழே காழ்ப்புச்
சாரம் வயிரங் கலையரி சேகெனல்.

சேகின் பெயர்:—சம்பம், ஆசினி, காழ், காழ்ப்பு, சாரம், வயிரம், கலை, அரி. (அ)

### தழையின் பெயர்.

148. உலவை தழையே.

தழையின் பெயர்:—உலவை. (க)

### கப்பின் பெயர்.

149. கவையுங் கவரும் கப்பென லாகும்.

கப்பின் பெயர்:—கவை, கவர். (உ)

### இளங்கோம்பின் பெயர்.

150. வளாஅர் மெல்லியன் மற்றிளங் கொம்பே.

இளம் கொம்பின் பெயர்:—வளார், மெல்லியல். (உ)

### தளிரின் பெயர்.

151. வல்லரி குழைமுறி மஞ்சரி கிசலயம்
பல்லவ மலங்கல் கிளைபைந் தளிரெனல்.

தளிரின் பெயர்:—வல்லரி, குழை, முறி, மஞ்சரி, கிசலயம், பல்லவம், அலங்கல், கிளை. (அ)

### தளிர்த்தலின் பெயர்.

152. இலிர்த்தலுஞ்சிலிர்த்தலுங்குழைத்தலுந்தளிர்த்தல்.

தளிர்த்தலின் பெயர்:—இலிர்த்தல், சிலிர்த்தல், குழைத்தல். (ங)

### அடி வெண்குருத்தின் பெயர்.

153. முருந்தே முதலிற் செறிவெண் குருத்தே.

அடி வெண்குருத்தின் பெயர்:—முருந்து. (க)

### மலர்க்கோத்தின் பெயர்.

154. தொத்து மஞ்சரி துணரிணர் தொடர்ச்சி
மற்றிவை யனைத்து மலர்க்கொத் தென்ப.

மலர்க் கொத்தின் பெயர்:—தொத்து, மஞ்சரி, துணர், இணர், தொடர்ச்சி. (ரு)

இலையின் பெயர்.

155. பலாசம் பன்னம் பத்திரந் தகடு
பாசடை தண்ணடை சாகை தமால
மோலைதழை பச்சிலை யுலவையடை யிலைப்பெயர்.

இலையின் பெயர்:—பலாசம், பன்னம், பத்திரம், தகடு, பாசடை, தண்ணடை, சாகை, தமாலம், ஓலை, தழை, பச்சிலை, உலவை, அடை. (கந)

இதுவுமது.

156. சதனஞ் சதம்பத் திரிதலமு மாகும்.
ஷ இலையின் பெயர்:—சதனம், சதம், பத்திரி, தலம். (ச) ஆ (கஎ)

பாலி னுட்படு குருத்தின் பெயர்.

157. பயினை பாலி னுட்படு குருத்தே.
பாலின் உட்படு குருத்தின் பெயர்:—பயின். (க)

மொட்டின் பெயர்.

158. கலுவட நனைமுகை கன்னிகை யரும்பே
முகிளங் கலிகை சாலகங் கோரகம்
போகினகை மலரு மொக்குண்மொட் டென்ப.

மொட்டின் பெயர்:—கலுவடம், நனை, முகை, கன்னிகை, அரும்பு, முகிளம், கலிகை, சாலகம், கோரகம், போகில், நகை, மொக்குள். (சஉ)

மலரின் பெயர்.

159. தாமங் குசுமந் தாரே யலர்வீ
போது சுண்ணஞ் சுமனசம் பூவே
சுமந்துண ரலரி யாலநன் மலர்ப்பெயர்.

மலரின் பெயர்:—தாமம், குசுமம், தார், அலர், வீ, போது, சுண்ணம், சுமனசம், பூ, சுமம், துணர், அலரி, ஆலம். (கந)

மலர்த்தாதின் பெயர்.

160. கோசர மகரஞ் சிதரே கொங்கு
கேசரந் துணரிணர் கிளர்மலர்த் தாதே.

மலர்த் தாதின் பெயர்:—கோசரம், மகரம், சிதர், கொங்கு, கேசரம், துணர், இணர், கிளர். (அ)

தாதின் தூளின் பெயர்.

161. மகரந்தஞ் சுண்ணந் தாதின் றூளே.
தாதின் தூளின் பெயர்:—மகரந்தம், சுண்ணம். (உ)

இதுவுமது.

162. பராக மென்றும் பகரப் பெறுமே.
ஷை தாதின் தூளின் பெயர்:—பராகம். (க) ஆ_ (கூ)

மலர்த்தேனின் பெயர்.

163. மகரந்த மலர்த்தேன்.
மலர்த் தேனின் பெயர்:—மகரந்தம். (க)

பூவிதழின் பெயர்.

164. தாது மதழுந் தண்டுந் தோடு
மேடும் பூவி னிதழ்ப்பெய ரென்ப.
பூ இதழின் பெயர்:—தாது, அதழ், தண்டு, தோடு, ஏடு. (ரு)

அகவிதழின் பெயர்.

165. அல்லி யகவிதழ்.
அக இதழின் பெயர்:—அல்லி. (க)

புறவிதழின் பெயர்.

166 புல்லி புறவிதழ்.
புற இதழின் பெயர்:—புல்லி. (க)

மரத்தின் கிளையின் பெயர்.

167. தாறும் படுவுஞ் சாறுங் குடும்புங்
கோடுங் கொத்து மரத்தின் கிளையே.
மரத்தின் கிளையின் பெயர்:—தாறு, படு, சாறு, குடும்பு, கோடு, கொத்து. (சா)

முளையின் பெயர்.

168. காலே யங்குர முளையென லாகும்.
முளையின் பெயர்:—கால், அங்குரம். (உ)

வேரின் பெயர்.

169. தூருஞ் சடையுஞ் சிவையும் வேரே.
வேரின் பெயர்:—தூர், சடை, சிவை. (கூ)

கிழங்கின் பெயர்.

170. மூல மூலகங் கந்தங் கிழங்கே.
கிழங்கின் பெயர்:—மூலம், மூலகம், கந்தம். (கூ)

இதுவுமது.

171. சகுன மெனவுஞ் சாற்றப் பெறுமே.
ஷை கிழங்கின் பெயர்:—சகுனம். (க) ஆ (ச)

சிற்றரும்பின் பெயர்.

172. முகைமுகிழ் மொக்குண் முகிளஞ்சிற் றரும்பே.
சிற் றரும்பின் பெயர்:—முகை, முகிழ், மொக்குள், முகிளம். (ச)

உலர்ந்த பூவின் பெயர்.

173. உணங்கல் சாம்பல் வாட லுலர்ந்தபூ.
உலர்ந்த பூவின் பெயர்:—உணங்கல், சாம்பல், வாடல். (ந)

மலர்ச்சியின் பெயர்.

174. அலர்த லவிழ்தல் விள்ள னகுதன்
மலர்தல் விரிதன் மலர்ச்சிப் பெயரே.
மலர்ச்சியின் பெயர்:—அலர்தல், அவிழ்தல், விள்ளல், நகுதல், மலர்தல், விரிதல். (சு)

விரிமலரின் பெயர்.

175. இகமலர் வெதிர்தொடர்ப் பூவிரி மலரே.
விரி மலரின் பெயர்:—இகமலர், வெதிர், தொடர்ப்பூ. (௩)

பழம் பூவின் பெயர்.

176. செம்மல் சாம்ப றேம்பலும் பழம்பூ.
பழம் பூவின் பெயர்:—செம்மல், சாம்பல், தேம்பல். (ந)

விதையின் பெயர்.

177. வீசம் பாலே விச்சு விரைவிதை.
விதையின் பெயர்:—வீசம், பால், விச்சு, விரை. (ச)

இதுவுமது.

178. காழுங் கொட்டையு மாகு மென்ப.
ஷை விதையின் பெயர்:—காழ், கொட்டை. (உ) ஆ (சு)

பிஞ்சின் பெயர்.

179. வடுவெனுப் பிஞ்சு.
பிஞ்சின் பெயர்:—வடு, எனு. (உ)

பசுங் காயின் பெயர்.

180 தீவிளி பசுங்காய்.
பசும் காயின் பெயர்:—தீவிளி. (க)

பழத்தின் பெயர்.

181 பலமும் கனியும் பழமென் றுகும்.
பழத்தின் பெயர்:—பலம், கனி. (உ)

கனித் தோலின் பெயர்.

182 கனித்தோல் செகிளுங் காழு மாகும்.
கனித் தோலின் பெயர்:—செகிள், காழ். (உ)

காய் மரத்தின் பெயர்.

183 பலினங் காய்மரம்.
காய் மரத்தின் பெயர்:—பலினம். (க)

காயாத மரத்தின் பெயர்.

184 அவகேசி யலாமரம்.
காயாத மரத்தின் பெயர்:—அவகேசி. (க)

தழை மரத்தின் பெயர்.

185 மலினந் தழைமரம்.
தழை மரத்தின் பெயர்:—மலினம். (க)

உலர் மரத்தின் பெயர்.

186 வான முலர்மரம்.
உலர் மரத்தின் பெயர்:—வானம். (க)

ஆண் மரத்தின் பெயர்.

187 அகக்காழ் வன்மர மாண்மர மாகும்.
ஆண் மரத்தின் பெயர்:—அகக்காழ், வன்மரம். (உ)

பெண் மரத்தின் பெயர்.

188 புறக்காழ் புன்மரம் பெண்மர மென்ப.
பெண் மரத்தின் பெயர்:—புறக்காழ், புன்மரம். (உ)

அலி மரத்தின் பெயர்.

189 இருதிறத் தலாதன மரமலி வெளிறே.
அலி மரத்தின் பெயர்:—வெளிறு. (க)

இலைக்கறியின் பெயர்.

190. அடைசாகம் பன்ன மடகு மிலைக்கறி.

இலைக் கறியின் பெயர்:—அடை, சாகம், பன்னம், அடகு. (ச)

சோலையின் பெயர்.

191. அரிநந் தனவனந் தண்டலை பொழிலே
யாராமந் துடவை தோட்டமுய் யான
முபவன முத்தியா னஞ் செய்கான் மரச்செறிவு
சோலை யிளமரக் காவெனச் சொல்லும்

சோலையின் பெயர்:— அரி, நந்தனவனம், தண்டலை, பொழில், ஆராமம், துடவை, தோட்டம், உய்யானம், உபவனம், உத்தியானம், செய்கால், மரச்செறிவு, இளமரக்கா. (கங)

ஊரோடு சேர்ந்த சோலையின் பெயர்.

192. ஊரொடு சேர்ந்த சோலைவன மென்ப.

ஊரோடு சேர்ந்த சோலையின் பெயர்:—வனம். (க)

மலையோடு சேர்ந்த சோலையின் பெயர்.

193. மலையொடு சேர்ந்த சோலையா ராமம்.

மலையோடு சேர்ந்த சோலையின் பெயர்:—ஆராமம். (க)

கழிக்கரைச் சோலையின் பெயர்.

194. கான லென்பது கழிக்கரைச் சோலை

கழிக்கரைச் சோலையின் பெயர்:—கானல். (க)

செய்குன்று சேர்ந்த சோலையின் பெயர்.

195. செய்குன் று சேர்ந்த சோலை தோப் பாகும்.

செய் குன் று சேர்ந்த சோலையின் பெயர்:—தோப்பு. (க)

வயல்சூழ் சோலையின் பெயர்.

196. வயல்சூழ் சோலை யிளமரக் காவே.

வயல் சூழ் சோலையின் பெயர்:—இளமரக்கா. (க)

சிறுதூற்றின் பெயர்.

197. அரிலு மறலும் பதுக்கையுஞ் சிறுதூறு.

சிறு தூற்றின் பெயர்;—அரில், அறல், பதுக்கை. (ங)

குறுங்காட்டின் பெயர்.

198 குறுங்காட் டின்பெய ரிறும்பென மொழிப. (க)
குறும் காட்டின் பெயர்:—இறும்பு.

பெருங்காட்டின் பெயர்.

199. பெருங்காடு வல்லை யெனப்பெயர் பெறுமே. (க)
பெரும் காட்டின் பெயர்:—வல்லை.

காவற்காட்டின் பெயர்.

200. கணைய மிளையரண் காவற் காடே. (ங)
காவல் காட்டின் பெயர்:—கணையம், இளை, அரண்.

முதுகாட்டின் பெயர்.

201. முதையே யிலையுதிர்வு முதுகா டென்ப. (உ)
முது காட்டின் பெயர்:—முதை, இலையுதிர்வு.

கரிகாட்டின் பெயர்.

202. பொச்சையுஞ் சுரமும் பொதிகரி காடே. (ங)
கரி காட்டின் பெயர்:—பொச்சை, சுரம், பொதி.

வேலியின் பெயர்.

203. அடைப்புங் காப்பும் வேலி யாகும். (உ)
வேலியின் பெயர்:—அடைப்பு, காப்பு.

மரப்பொந்தின் பெயர்.

204. பொக்குப் பொத்துப் பொய்பொதும்பு பொள்ளல்
பொந்தா மரமெனப் புகன்றனர் புலவர்.
மரப் பொந்தின் பெயர்:—பொக்கு, பொத்து, பொய், பொதும்பு,
பொள்ளல். (ரு)

முள்ளின் பெயர்.

205. கண்டக முள்ளே கடுவு மாகும். (உ)
முள்ளின் பெயர்:—கண்டகம், கடு.

தூற்றின் பெயர்.

206. இறும்பே மிடைதூ றெனவிளம் பினரே. (உ)
தூற்றின் பெயர்:—இறும்பு, மிடை.

மரச்செறிவின் பெயர்.

**207.** பொதும்பர் சோடர முலவைமரச் செறிவே.
*மரச் செறிவின் பெயர்:—பொதும்பர், சோடரம், உலவை.* (௩)

விறகின் பெயர்.

**208.** முளரி கறலே முருடுகாழ் காட்ட
ஞெகிழி யிந்தனஞ் சமிதைகள் விறகே.
*விறகின் பெயர்:—முளரி, கறல், முருடு, காழ், காட்டம், ஞெகிழி, இந்தனம், சமிதை.* (அ)

முட்செடிப் பொதுவின் பெயர்.

**209.** முளரி முண்டக முட்செடிப் பொதுவே.
*முள் செடிப் பொதுவின் பெயர்:—முளரி, முண்டகம்.* (௨)

விரிதூற்றின் பெயர்.

**210.** அதிரல் விரிதூறு.
*விரிதூற்றின் பெயர்:—அதிரல்.* (க)

சுண்டியின் பெயர்.

**211.** சுச்சுச் சுண்டி.
*சுண்டியின் பெயர்:—சுச்சு.* (க)

வறட்சுண்டியின் பெயர்.

**212.** சுமங்கை வறட்சுண்டி.
*வறட்சுண்டியின் பெயர்:—சுமங்கை.* (க)

ஆவிரையின் பெயர்.

**213.** பகரி யாவிரை.
*ஆவிரையின் பெயர்:—பகரி.* (க)

வஞ்சியின் பெயர்.

**214.** வானீரம் வஞ்சுளம் வஞ்சி யாகும்.
*வஞ்சியின் பெயர்:—வானீரம், வஞ்சுளம்.* (௨)

துத்தியின் பெயர்.

**215.** கோளியந் துத்தி.
*துத்தியின் பெயர்:—கோளியம்.* (க)

ஆடாதோடையின் பெயர்.

216. ஆடா தோடை வாசை யாகும். (க)
ஆடா தோடையின் பெயர்:—வாசை.

சித்திர மூலத்தின் பெயர்.

217 சித்திர மூலங் கொடிவேலி யாகும். (க)
சித்திர மூலத்தின் பெயர்:—கொடிவேலி.

தும்பையின் பெயர்.

218. துரோணந் தும்பை. (க)
தும்பையின் பெயர்:—துரோணம்.

ஆதொண்டையின் பெயர்.

219. தொண்டை யாதொண்டை. (க)
ஆதொண்டையின் பெயர்:—தொண்டை.

மரலின் பெயர்.

220. அரலை மரலாம். (க)
மரலின் பெயர்:—அரலை.

கற்றாழையின் பெயர்.

221. குமரிகற் றாழை. (க)
கற்றாழையின் பெயர்:—குமரி.

நாயுருவியின் பெயர்.

222. காமஞ் சரிநா யுருவி யாகும். (க)
நாயுருவியின் பெயர்:—காமஞ்சரி.

கொழிஞ்சியின் பெயர்.

223. கொழிஞ்சி யின்பெயர் கோளியென் றாகும். (க)
கொழிஞ்சியின் பெயர்:—கோளி.

ஊமத்தையின் பெயர்.

224 உன்மத்த மூமத்தை. (க)
ஊமத்தையின் பெயர்:—உன்மத்தம்.

கஞ்சாவின் பெயர்.

225 கஞ்சங் குல்லை கஞ்சா வாகும். (உ)
கஞ்சாவின் பெயர்:—கஞ்சம், குல்லை.

பொன்னூமத்தையின் பெயர்.

226. மதமத்தை பொன்னூ மத்தை யாகும்.

பொன் னூமத்தையின் பெயர்:—மதமத்தை. (க)

நீலியின் பெயர்.

227. அவுரி பத்திய நீலி யாகும்.

நீலியின் பெயர்:—அவுரி, பத்தியம். (உ)

துழாயின் பெயர்.

228. குல்லைமுடி துளவம் வனமுந் துழாயெனல்.

துழாயின் பெயர்:—குல்லை, முடி, துளவம், வனம். (ச)

இதுவுமது.

229. பிருந்தமு மப்பெயர் பேசப் பெறுமே.

ஷை துழாயின் பெயர்:—பிருந்தம். (க) ஆ (ரு)

தூதுளையின் பெயர்.

230. தூதுளந் தூதுளை.

தூதுளையின் பெயர்:—தூதுளம். (க)

வீழியின் பெயர்.

231. விழுமி வீழி.

வீழியின் பெயர்:—விழுமி. (க)

காஞ்சொறியின் பெயர்.

232. கண்டூதி காஞ்சொறி.

காஞ்சொறியின் பெயர்:—கண்டூதி. (க)

கிலுகிலுப்பையின் பெயர்.

233. பகன்றை கிலுகிலுப்பை.

கிலு கிலுப்பையின் பெயர்:—பகன்றை. (க)

தண்ணீர்க் குடத்தின் பெயர்.

234 கான வாழை தண்ணீர்க் குடமே.

தண்ணீர்க் குடத்தின் பெயர்:—கானவாழை. (க)

பிரம்பின் பெயர்.

235 சாதி வேத்திரஞ் சூரல் பிரம்பே.

பிரம்பின் பெயர்:—சாதி, வேத்திரம், சூரல். (ங)

கழற்கொடியின் பெயர்.

236. கழங்கு மூழல்கர்ச் சூரங் கொடிக்கழல்.
கழல் கொடியின் பெயர்:—கழங்கு, மூழல், கர்ச்சூரம். (௩)

கழற்காயின் பெயர்.

237 கழற்காய் மூழலுங் கழங்கு மாகும்.
கழல் காயின் பெயர்:—மூழல், கழங்கு. (௨)

இண்டின் பெயர்.

238. இண்டை புலிதொடக்கி யீகை யீங்கை
யிண்டென மொழிப வியல்வல் லோரே.
இண்டின் பெயர்:—இண்டை, புலிதொடக்கி, ஈகை, ஈங்கை. (௪)

சூரியின் பெயர்.

239. விந்தஞ் சூரி.
சூரியின் பெயர்:—விந்தம். (௧)

புனற்றுளசியின் பெயர்.

240. குல்லைபுனற் றுளசி.
புனற்றுளசியின் பெயர்:—குல்லை. (௧)

சிறுபூளையின் பெயர்.

241 உழிஞை சிறுபூளை.
சிறு பூளையின் பெயர்:—உழிஞை. (௧)

பாற்சொற்றிச்செடியின் பெயர்.

242. பாற்சொற்றி பாயசம்.
பால் சொற்றிச் செடியின் பெயர்:—பாயசம். (௧)

செங்காந்தளின் பெயர்.

243. தோன்றி பற்றை யிலாங்கலிசெங் காந்தள்.
செங் காந்தளின் பெயர்:—தோன்றி, பற்றை, இலாங்கலி. (௩)

வெண் காந்தளின் பெயர்.

244 கோடறோன்றி கோடைவெண் காந்தள்.
வெண் காந்தளின் பெயர்:—கோடல், தோன்றி, கோடை. (௩)

வெண்கிடையின் பெயர்.

245. கோடல் வெண்கிடை பூசைவெரு காகும்.
வெண் கிடையின் பெயர்:—கோடல், பூசை, வெருகு. (௩)

காக்கணத்தின் பெயர்.

246. கிகிணி கன்னி காக்கணங் கருவிளை.
காக்கணத்தின் பெயர்:— கிகிணி, கன்னி, கருவிளை. (௩)

வெண்காவிளையின் பெயர்.

247. உயவைவெண் காவிளை.
வெண் காவிளையின் பெயர்:—உயவை. (௧)

தாளியின் பெயர்.

248. மஞ்சிகந் தாளி.
தாளியின் பெயர்:—மஞ்சிகம். (௧)

சிவேதையின் பெயர்.

249. சிவேதை பகன்றை.
சிவேதையின் பெயர்:—பகன்றை. (௧)

குன்றியின் பெயர்.

250. குஞ்சங் குன்றி.
குன்றியின் பெயர்:—குஞ்சம். (௧)

கொத்தான் பெயர்.

251. நந்தை கொத்தான்.
கொத்தான் பெயர்:—நந்தை. (௧)

சத்திக்கொடியின் பெயர்.

252. தாடி மஞ்சஞ் சத்திக் கொடியே.
சத்திக் கொடியின் பெயர்:—தாடிமஞ்சம். (௧)

சாறணையின் பெயர்.

253. திரிபுரி சாறடை சாறணை யாகும்.
சாறணையின் பெயர்:—திரிபுரி, சாறடை. (௨)

சீந்திற் கொடியின் பெயர்.

254. அமுதவல்லி சீந்தில் சீவந்தி யாகும்.
சீந்தில் கொடியின் பெயர்:—அமுதவல்லி, சீவந்தி. (௨)

பாலையின் பெயர்.

255. பாலைசீ வந்தி சீவனி யாகும்.
பாலையின் பெயர்:—சீவந்தி, சீவனி. (உ)

கூதாளியின் பெயர்.

256. துடிகூ தாளங் கூதாளி யென்ப.
கூதாளியின் பெயர்:—துடி, கூதாளம். (உ)

கோவையின் பெயர்.

257. விம்பமுந் தொண்டையுங் கொவ்வையுங் கோவை.
கோவையின் பெயர்:—விம்பம், தொண்டை, கொவ்வை. (ஙு)

சிலந்திக் கொடியின் பெயர்.

258. தலைச்சுருள் வள்ளி சிலந்திக் கொடியே.
சிலந்திக் கொடியின் பெயர்:—தலைச்சுருள்வள்ளி. (க)

வள்ளிக்கொடியின் பெயர்

259. வள்ளி யிலதை வள்ளிக் கொடியே.
வள்ளிக் கொடியின் பெயர்:—வள்ளி, இலதை. (உ)

பிரண்டையின் பெயர்.

260 வச்சிர வல்லி பிரண்டை யாகும்.
பிரண்டையின் பெயர்:—வச்சிரவல்லி. (க)

இசங்கின் பெயர்.

261. இசங்கு குண்டலி முத்தா பலமே.
இசங்கின் பெயர்:—குண்டலி, முத்தாபலம். (உ)

கக்கரியின் பெயர்.

263. கக்கரி வாலுங்கி.
கக்கரியின் பெயர்:—வாலுங்கி. (க)

செங்கிடையின் பெயர்.

263 கந்தூரி செங்கிடை.
செங்கிடையின் பெயர்:—கந்தூரி. (க)

இதுவுமது.

264 முதலையு மதன்பால் மொழியப் பெறுமே.
ஷை செங்கிடையின் பெயர்:—முதலை. (க) ஆ (உ)

முந்திரிகையின் பெயர்.

265. மதுரசங் கோத்தனி முந்திரிகை யாகும்.

முந்திரிகையின் பெயர்:—மதுரசம், கோத்தனி. (உ)

முள்ளுடை மூலம் எல்லாவற்றிற்கும் பெயர்.

266 மூண்டக முள்ளுடை மூல மென்ப.

முள்ளுடை மூலம் எல்லாவற்றிற்கும் பெயர்:—மூண்டகம். (க)

இஞ்சியின் பெயர்.

267. நல்ல மல்ல நறுமருப் பிஞ்சி.

இஞ்சியின் பெயர்:—நல்லம், அல்லம், நறுமருப்பு. (ந)

வழுதலையின் பெயர்.

268. வழுதுணை வங்கம் பிருகதி வழுதலை.

வழுதலையின் பெயர்:—வழுதுணை, வங்கம், பிருகதி. (ந)

கையாந்தகரையின் பெயர்.

269. கோகண மறுபதங் கையாந் தகரை.

கையாந் தகரையின் பெயர்:—கோகணம், அறுபதம். (உ)

பொன்னாங்காணியின் பெயர்.

270. சீதை பொன்னாங் காணி யாகும்.

பொன்னாங்காணியின் பெயர்:—சீதை. (க)

சிறுகீரையின் பெயர்.

271. சில்லி சாகினி மேகநாதஞ் சிறுகீரை.

சிறுகீரையின் பெயர்:—சில்லி, சாகினி, மேகநாதம். (ந)

சேம்பின் பெயர்.

272. சாகினி சேம்பு சகுட மாகும்.

சேம்பின் பெயர்:—சாகினி, சகுடம். (உ)

வள்ளையின் பெயர்.

273. நாளிகம் வள்ளை.

வள்ளையின் பெயர்:—நாளிகம். (க)

பசிரியின் பெயர்.

274. பசிரி பாவிரி.

பசிரியின் பெயர்:—பாவிரி. (க)

வெள்ளரியின் பெயர்.

275. உருவாரம் வெள்ளரி.
வெள்ளரியின் பெயர்:—உருவாரம். (க)

சிறுகிழங்கின் பெயர்.

276. சுரசஞ் சிறுகிழங்கு.
சிறுகிழங்கின் பெயர்:—சுரசம். (க)

கருணைக்கிழங்கின் பெயர்.

277. கந்தஞ் சூரணங் கருணைப் பெயரே.
கருணைக் கிழங்கின் பெயர்:—கந்தம், சூரணம். (உ)

பாகலின் பெயர்.

278. கார வல்லி கூலம் பாகல்.
பாகலின் பெயர்:—காரவல்லி, கூலம். (உ)

பீர்க்கின் பெயர்.

279. பீரம் பீர்க்கு.
பீர்க்கின் பெயர்:—பீரம். (க)

பெரும் பீர்க்கின் பெயர்.

280. படலிகை பெரும்பீர்க்கு.
பெரும் பீர்க்கின் பெயர்:—படலிகை. (க)

கொடிக்கொத்தான் பெயர்.

281. நூழில்கொடிக் கொத்தான்.
கொடிக் கொத்தான்பெயர்:—நூழில். (க)

சுரையின் பெயர்.

282. தும்பியு மலாபுஞ் சுரையா கும்மே.
சுரையின் பெயர்:—தும்பி, அலாபு. (உ)

பேய்ச்சுரையின் பெயர்.

283. புற்கொடி பேய்ச்சுரை.
பேய்ச் சுரையின் பெயர்:—புற்கொடி. (க)

கொடியின் பெயர்.

284. இலதை வல்லி நூழில் கொடிப்பெயர்.
கொடியின் பெயர்:—இலதை, வல்லி, நூழில். (ங)

கொடியின் வகைப் பெயர்.

**285.** கோற்கொடி மென்கொடி கொடியென் றாகும்.

கொடியின் வகைப் பெயர்:—கோற்கொடி, மென்கொடி. (உ)

வெற்றிலையின் பெயர்.

**286.** நாகவல்லி மெல்லிலை தாம்பூல மூல
வல்லி யிலைக்கொடி வெற்றிலை யாகும்.

வெற்றிலையின் பெயர்:—நாகவல்லி, மெல்லிலை, தாம்பூலம், மூல
வல்லி, இலைக்கொடி. (ரு)

மிளகின் பெயர்.

**287.** கறியு மரீசியுங் காயமுங் கலினையுங்
கோளகமுந் திரங்கலு மிரியலு மிளகே.

மிளகின் பெயர்:—கறி, மரீசி, காயம், கலினை, கோளகம், திரங்
கல், மிரியல். (எ)

ஏலத்தின் பெயர்.

**288** இலாஞ்சி துடியே யேல மாகும்.

ஏலத்தின் பெயர்:—இலாஞ்சி, துடி. (உ)

மஞ்சளின் பெயர்.

**289.** பீதங் காஞ்சனி நிசியரி சனமுட
னேனுமரித் திராபமு மஞ்சட் குறுபெயர்.

மஞ்சளின் பெயர்:—பீதம், காஞ்சனி, நிசி, அரிசனம், அரித்திரா
பம். (ரு)

வெண்கடுகின் பெயர்.

**290.** அந்தில் கடிப்பகை யையவிசித் தார்த்தம்
வெண்சிறு கடுகென விளம்ப லாகும்.

வெண் கடுகின் பெயர்:—அந்தில், கடிப்பகை, ஐயவி, சித்தார்த்
தம். (சு)

திப்பிலியின் பெயர்.

**291.** பிப்பிலி காமன் சிறுமூ லகமே
மாகதி கலினி திப்பிலி யாகும்.

திப்பிலியின் பெயர்:—பிப்பிலி, காமன், சிறுமூலகம், மாகதி,
கலினி. (ரு)

### கோத்துமலியின் பெயர்.

292. உருளரிசி கோத்து மலியென் றுரைப்பர்.
கோத்துமலியின் பெயர்:—உருளரிசி. (க)

### வெண்காயத்தின் பெயர்.

293. காய முள்ளி வெண்காய மாகும்.
வெண்காயத்தின் பெயர்:—காயம், உள்ளி. (உ)

### வாசந்தரு பலபண்டத்தின் பெயர்.

294. தகரந்தக் கோலங் கோட்டஞ்சா திக்கா
யிலவங்க மேலங் கச்சோல மாஞ்சி
பகரும்வா சந்தரும் பண்டப் பெயரே.
வாசந்தரு பலபண்டத்தின் பெயர்:—தகரம், தக்கோலம், கோட்டம், சாதிக்காய், இலவங்கம், ஏலம், கச்சோலம், மாஞ்சி. (அ)

### மல்லிகையின் பெயர்.

295 மாலதி யநங்கம் பூருண்டி மல்லிகை.
மல்லிகையின் பெயர்:—மாலதி, அநங்கம், பூருண்டி. (ந)

### வன மல்லிகையின் பெயர்.

296. மௌவ லென்பது வனமல் லிகையே.
வன மல்லிகையின் பெயர்:—மௌவல். (க)

### இருவாட்சியின் பெயர்.

297 மயிலை யநங்க மிருவாட்சி யாகும்.
இருவாட்சியின் பெயர்:—மயிலை, அநங்கம். (உ)

### சாதிப்பூவின் பெயர்.

298 கருமுகை பித்திகை சாதி யாகும்.
சாதிப்பூவின் பெயர்:—கருமுகை, பித்திகை. (உ)

### முல்லையின் பெயர்.

299. தளவ முல்லை சாதி பிச்சி.
முல்லையின் பெயர்:—தளவம், சாதி, பிச்சி. (ந)

### ஊசி முல்லையின் பெயர்.

300. தளவுமா கதிகை திகையூசி முல்லை.
ஊசி முல்லையின் பெயர்:—தளவு, மாகதி, கைதிகை. (ந)

கொடி மல்லிகையின் பெயர்.

301. *விசலிகை யென்ப கொடிமல் லிகையே.*
*கொடி மல்லிகையின் பெயர்:—விசலிகை.* (க)

நந்தியாவர்த்தத்தின் பெயர்.

302. *வலம்புரி நந்தியா வர்த்த மாகும்.*
*நந்தியாவர்த்தத்தின் பெயர்:—வலம்புரி.* (க)

மருக்கொழுந்தின் பெயர்.

303. *தமனக மருக்கொழுந்து.*
*மருக்கொழுந்தின் பெயர்:—தமனகம்.* (க)

மலைப்பச்சையின் பெயர்.

304. *குளவி மலைப்பச்சை.*
*மலைப்பச்சையின் பெயர்:—குளவி.* (க)

அடம்பின் பெயர்.

305. *அடப்பு பாலிகை.*
*அடம்பின் பெயர்:—பாலிகை.* (க)

வெட்டுவேரின் பெயர்.

306 *முடிவாழை வெட்டுவேர்.*
*வெட்டுவேரின் பெயர்:—முடிவாழை.* (க)

துவரையின் பெயர்.

307. *ஆடகி துவரை.*
*துவரையின் பெயர்:—ஆடகி.* (க)

அவரையின் பெயர்.

308. *அவரை சிக்கடி.*
*அவரையின் பெயர்:—சிக்கடி.* (க)

உழுந்தின் பெயர்.

309. *மாட முழுந்து.*
*உழுந்தின் பெயர்:—மாடம்.* (க)

கடலையின் பெயர்.

310. *மஞ்சூரங் கடலை.*
*கடலையின் பெயர்:—மஞ்சூரம்.* (க)

காராமணியின் பெயர்.

311 காரா மணியிதை கூலமு மாகும்.
காராமணியின் பெயர்:— இதை, கூலம். (உ)

பசும்பயற்றின் பெயர்.

312. பாசி முற்கம் பசும்பய றாகும்.
பசும் பயற்றின் பெயர்:—பாசி, முற்கம். (உ)

கொள்ளின் பெயர்.

313 காணங் குளுத்தங் கொள்ளெனக் கருதுவர்.
கொள்ளின் பெயர்:—காணம், குளுத்தம். (உ)

துவரை, அவரை முதலியவற்றின் பெயர்.

314. இனையவை முதிரை யென்னவு மாகும்.
துவரை, அவரை முதலியவற்றின் பெயர்:—முதிரை. (க)

சோளத்தின் பெயர்.

315 சொன்னலு மிறுங்குஞ் சோள மாகும்.
சோளத்தின் பெயர்:—சொன்னல், இறுங்கு. (உ)

வரகின் பெயர்.

316. மருவுகோத் திரவம் வரகென லாகும்.
வரகின் பெயர்:—கோத்திரவம். (க)

கருந்தினையின் பெயர்.

317. இறடியுங் கங்குங் கருந்தினை யென்ப.
கருந்தினையின் பெயர்:—இறடி, கங்கு. (உ)

செந்தினையின் பெயர்.

318 கம்புங் கவலையுஞ் செந்தினை யென்ப.
செந்தினையின் பெயர்:—கம்பு, கவலை. (உ)

பைந்தினையின் பெயர்.

319. ஏனல்குர னுவணை பைந்தினை யென்ப.
பைந்தினையின் பெயர்:—ஏனல், குரல், நுவணை. (ங)

தினைத்தாளின் பெயர்.

320. அருவி தினைத்தா ளிருவியு மாகும்.
தினைத் தாளின் பெயர்:—அருவி, இருவி. (உ)

எள்ளின் பெயர்.

321. எண்ணுந் திலமு நூவுமெள் ளாகும்.
எள்ளின் பெயர்:—எண், திலம், நூவு. (௩)

இளையெள்ளின் பெயர்.

322 குமிகை யிளையெள்.
இளை எள்ளின் பெயர்:—குமிகை. (௧)

எள்ளிளங்காயின் பெயர்.

323. கவ்வை யெள்ளிளங் காயா கும்மே.
எள் இளங்காயின் பெயர்:—கவ்வை. (௧)

நெல்லின் பெயர்.

324. சொல்லும் விரீகியும் வரியுஞ் சாலியும்
யவமு நெல்லின் பொதுப்பெய ராகும்.
நெல்லின் பெயர்:—சொல், விரீகி, வரி, சாலி, யவம். (௫)

குளநெல்லின் பெயர்.

325 நீர்வா ரங்குள நெல்லா கும்மே.
குள நெல்லின் பெயர்:—நீர்வாரம். (௧)

மலைச்சாரல்விளை நெல்லின் பெயர்.

326 ஐவன மலைச்சாரல் விளைநெல் லாகும்.
மலைச்சாரல் விளை நெல்லின் பெயர்:—ஐவனம். (௧)

செஞ்சாலியின் பெயர்.

327. செந்நெ னன்னெல் செஞ்சா லிப்பெயர்.
செஞ்சாலியின் பெயர்:—செந்நெல், நன்னெல். (௨)

பயிரின் பெயர்.

328. பயிரே பசும்புல் பைங்கூ ழாகும்.
பயிரின் பெயர்:—பசும்புல், பைங்கூழ். (௨)

பதரின் பெயர்.

329. பதடி பதரே பொல்லு மாகும்.
பதரின் பெயர்:—பதடி, பொல். (௨)

இளஞ் சூலின் பெயர்.

330. இளஞ்சூல் பீட்டை.
இளம் சூலின் பெயர்:—பீட்டை. (க)

இளங் கதிரின் பெயர்.

331. பீனிளங் கதிரே.
இளம் கதிரின் பெயர்:—பீன். (க)

கதிரின் பெயர்.

332. ஏனலுங் குரலுங் கொழுங்கதி ரென்ப.
கதிரின் பெயர்:—ஏனல், குரல். (உ)

கோதுமையின் பெயர்.

333. கோதி கோதுமை
கோதுமையின் பெயர்:—கோதி. (க)

தோரை நெல்லின் பெயர்.

334 இயவை தோரை.
தோரை நெல்லின் பெயர்:—இயவை. (க)

போரின் பெயர்.

335. போர்சும்மை சூடும் போர்ப்பு மாகும்.
போரின் பெயர்:—சும்மை, சூடு, போர்ப்பு. (ங)

தூற்று நெற்சூட்டின் பெயர்.

336 பொலிபொங் கழிதூற்று நெற்சூ டாகும்.
தூற்று நெல் சூட்டின் பெயர்:—பொலி, பொங்கழி. (உ)

வைக்கோலின் பெயர்.

337. வைவைய பலாலம் வழுதுவைக் கோலே.
வைக்கோலின் பெயர்:—வை, பலாலம், வழுது. (ங)

நெல்வி ஞற்றின் பெயர்.

338. நாறு நெல்வி ஞற்று மும்மே.
நெல்லின் நாற்றின் பெயர:—நாறு. (க)

விழலின் பெயர்.

339. விழலே விரணம் விளம்புங் காலே.
விழலின் பெயர்:—விரணம். (க)

வேயரிசியின் பெயர்.

340 வேரல்வே யரிசி தோரையு மாகும்.
வேயரிசியின் பெயர்:—வேரல், தோரை. (உ)

தருப்பையின் பெயர்.

341 குசைகுமுதங் கூர்ச்சங் குசமுந் தருப்பை.
தருப்பையின் பெயர்:—குசை, குமுதம், கூர்ச்சம், குசம். (ச)

நாணலின் பெயர்.

342 கானசரமே காமவேழம்
நவையில் சரவண நாணற் பெயரே.
நாணலின் பெயர்:—கானசரம், காமவேழம், சரவணம். (ந)

இதுவுமது.

343 சிவேதை காசை நாணலெனச் செப்புவர்.
ஷை நாணலின் பெயர்:—சிவேதை, காசை. (உ) ஆக (ரு)

கோறுக்கையின் பெயர்.

344 எருவை வேழங் கொறுக்கை கொறுக்கச்சி.
கொறுக்கையின் பெயர்:—எருவை, வேழம், கொறுக்கச்சி. (ந)

திரட்கோரையின் பெயர்.

345 எருவைசாய் பஞ்சாய் திரட்கோரை யென்ப.
திரள் கோரையின் பெயர்:—எருவை, சாய், பஞ்சாய். (ந)

வாட்கோரையின் பெயர்.

346 செருந்திவாட் கோரை யென்னச் செப்புவர்.
வாள் கோரையின் பெயர்:—செருந்தி. (க)

பச்சறுகின் பெயர்.

347 பதமுந் தூர்வையும் பச்சறு காகும்.
பச்சறுகின் பெயர்:—பதம், தூர்வை. (உ)

பசும்புல்லின் பெயர்.

348 சட்பம் பசும்புல்.
பசும் புல்லின் பெயர்:—சட்பம். (க)

உலர்ந்த புல்லின் பெயர்.

349. திரண முலர்ந்தபுல்.

உலர்ந்த புல்லின் பெயர்:—திரணம். (க)

புற்பிடியின் பெயர்.

350. காசை புற்பிடி.

புல் பிடியின் பெயர்:—காசை. (க)

இளம்புல்லின் பெயர்.

351. இளம்புல் பதமே.

இளம் புல்லின் பெயர்:—பதம். (க)

ஒருவகைப் புல்லின் பெயர்.

352. புதவுவொரு விகற்பப் புல்லா கும்மே.

ஒருவகைப் புல்லின் பெயர்:—புதவு. (க)

நீர்முள்ளியின் பெயர்.

353. நீர்முள்ளி முண்டகம்.

நீர் முள்ளியின் பெயர்:—முண்டகம். (க)

நீர்க்குளிரியின் பெயர்.

354. கல்லார நீர்க்குளிரி.

நீர்க் குளிரியின் பெயர்:—கல்லாரம். (க)

கத்தூரி மஞ்சளின் பெயர்.

355. சுவாங்கி கத்தூரி.

கத்தூரி மஞ்சளின் பெயர்:—சுவாங்கி. (க)

கிடையின் பெயர்.

356 சடையே கிடையெனல்.

கிடையின் பெயர்:—சடை. (க)

பாசியின் பெயர்.

357. நாரஞ் செவிரஞ் சடைச்சி சைவலம்
பாசி யென்பர் பதியமு மாகும்.

பாசியின் பெயர்:—நாரம், செவிரம், சடைச்சி, சைவலம், பதியம். (ரு)

தாமரையின் பெயர்.

358. அம்புய மம்போ ருகமர விந்தம்
பங்கயம் புண்ட ரீகம் பதுமம்
முண்டக நளின முளரி சரோருகஞ்
சதபத் திரிகோ கனதஞ் சலசம்
வனசங் கமலம் வாரிசங் கஞ்சந்
திருமால் கொப்பூழ் திருமல ரிண்டை
பங்கே ருகந்தா மரைப்பெய ராகும்.

தாமரையின் பெயர்:—அம்புயம், அம்போருகம், அரவிந்தம், பங்கயம், புண்டரீகம், பதுமம், முண்டகம், நளினம், முளரி, சரோருகம், சதபத்திரி, கோகனதம், சலசம், வனசம், கமலம், வாரிசம், கஞ்சம், திருமால்கொப்பூழ், திருமலர், இண்டை, பங்கேருகம். (உக)

தாமரைமலரின் பெயர்.

359. இறம்பிரா சீவ நறுந்தண் பூவே.

தாமரை மலரின் பெயர்:—இறம்பு, இராசீவம். (உ)

தாமரைக் கொட்டையின் பெயர்.

360. பூவினுட் கொட்டை பொகுட்டே கன்னிகை.

தாமரைக் கொட்டையின் பெயர்:—பொகுட்டு, கன்னிகை. (உ)

தாமரைச் சுருளின் பெயர்.

361. விசியும் வளையமுஞ் சுருளெனப் பேசுவர்.

தாமரைச் சுருளின் பெயர்:—விசி, வளையம். (உ)

தாமரைக்காயின் பெயர்.

362. வராடகம் வராண்டம் வண்கா யாகும்.

தாமரைக் காயின் பெயர்:—வராடகம், வராண்டம். (உ)

செங்குவளையின் பெயர்.

363. அரத்த முற்பல மாஞ்செங் குவளை.

செங் குவளையின் பெயர்:—அரத்தம், உற்பலம். (உ)

இதுவுமது.

364. எருமணங் கல்லாரஞ்செங் கழுநீரு மாமே.

ஷை செங்குவளையின் பெயர்:—எருமணம், கல்லாரம், செங்கழுநீர். (ந) ஆ (ஙி)

கருங்குவளையின் பெயர்.

365. பானல்கருங் குவளை.
கரும் குவளையின் பெயர்:—பானல். (க)

இதுவுமது.

366. நீல முற்பலம் நீலோற் பலமுமாம்.
ஷை கருங்குவளையின் பெயர் : — நீலம், உற்பலம், நீலோற்பலம். (௩) ஆக (௪)

கருநெய்தலின் பெயர்.

367. நீல மிந்தீ வரங்கரு நெய்தல்.
கரு நெய்தலின் பெயர்:—நீலம், இந்தீவரம். (உ)

இதுவுமது

368. நீலோற் பலமும் நிகழ்த்தப் பெறுமே.
ஷை கருநெய்தலின் பெயர்:—நீலோற்பலம். (க) ஆக (௩)

வெண்ணெய்தலின் பெயர்.

369. வெள்ளாம்பல் குமுதம் வெண்ணிற நெய்தல்.
வெள் நெய்தலின் பெயர்:—வெள்ளாம்மல், குமுதம். (உ)

செவ்வாம்பலின் பெயர்.

370. சேதாம்ப லரக்காம்பல் செவ்வாம்பல் செங்குமுதம்.
செவ் ஆம்பலின் பெயர்:—சேதாம்பல், அரக்காம்மல், செங்குமுதம். (௩)

இதுவுமது.

371. செவ்வல்லி செவ்வாம்பல்.
ஷை செவ்வாம்பலின் பெயர்:—செவ்வல்லி. (க) ஆக (௪)

வெள்ளாம்பலின் பெயர்.

372. அல்லிவெள் ளாம்பல் கைரவ மாகும்.
வெள் ஆம்பலின் பெயர்:—அல்லி, கைரவம். (உ)

இதுவுமது.

373. வெள்ளல்லி வெள்ளாம்பல்.
ஷை வெள்ளாம்பலின் பெயர்:—வெள்ளல்லி. (க) ஷை (௩)

குமுதவகைப் பெயர்.

374. வெள்ளாம்பல் சேதாம்ப லென்றிரு விகற்பங்
கொள்ப மன்னோ குமுதப் பெயரே.
குமுத வகைப் பெயர்:—வெள்ளாம்பல், சேதாம்பல். (உ)

குமுதத்தின் பெயர்.

375. ஆம்பலு நெய்தலு மல்லியுங் குமுதம்.
குமுதத்தின் பெயர்:—ஆம்பல், நெய்தல், அல்லி. (ங)

செங்கழுநீரின் பெயர்.

376 கல்லார முற்பலஞ் செங்கழு நீரே.
செங்கழுநீரின் பெயர்:—கல்லாரம், உற்பலம். (உ)

சிகை மாலையின் பெயர்.

377. சிகழிகை படலிகை வாசிகை சிகைமாலை.
சிகை மாலையின் பெயர்:—சிகழிகை, படலிகை, வாசிகை. (ங)

மார்பிலணி மாலையின் பெயர்.

378. மஞ்சரி யிலம்பக மார்பிலணி மாலை.
மார்பில் அணி மாலையின் பெயர்:—மஞ்சரி, இலம்பகம். (உ)

தோளணி மாலையின் பெயர்.

379. தொடைய றாமந் தோளணி மாலை.
தோள் அணி மாலையின் பெயர்:—தொடையல், தாமம். (உ)

கொண்டை மாலையின் பெயர்.

380. கோதை தொங்கல் கொண்டை மாலை.
கொண்டை மாலையின் பெயர்:—கோதை, தொங்கல். (உ)

மயிர்ச் சூட்டு மாலையின் பெயர்.

381. வாசிகை யலங்கன் மயிர்ச்சூட்டு மாலை.
மயிர்ச் சூட்டு மாலையின் பெயர்:— வாசிகை, அலங்கல். (உ)

ஒன்பதாவது மரப்பெயர் வகை முற்றிற்று.

---

ஆகச் சூத்திரம் - ௩௦௩௦.

---

பத்தாவது

# ஒருசொற் பல்பொருள் வகை.

முதலாவது

## அகர வருக்கம்.

அகப்பா.

1. புரிசையு முள்ளுயர் நிலமு மகப்பா.

அகப்பா என்பது:—மதில், மதிலுண்மேடை. (௨)

அகம்.

2. மனமு முள்ளு மனையும் பாவமும்
புவியு மாப்பொதுப் பெயரு மகமே.

அகம் என்பது:—மனம், உள், வீடு, பாவம், பூமி, மாப்பொது. (௬)

அகலுள்.

3. ஊரு நாடு மகலு ளாகும்.

அகலுள் என்பது:—ஊர், நாடு. (௨)

அகி.

4. அரவு மிரும்பு மகியென லாகும்.

அகி என்பது:—பாம்பு, இரும்பு. (௨)

அக்காரம்.

5. ஆடையுஞ் சருக்கரையு மக்கார மாகும்.

அக்காரம் என்பது:—புடைவை, சருக்கரை. (௨)

அக்கு.

6. வளைமணி யேற்றின் முரிப்பிவை யக்கெனல்.

அக்கு என்பது:— சங்குமணி, எருத்துத்திமில். (௨)

அங்கணம்.

7. தூம்பு வாயிலு முன்றிலு மங்கணம்.

அங்கணம் என்பது:—சலதாரை, முன்றில். (௨)

அங்கதம்.

8. அரவு தோளணி வசையிவை யங்கதம்.

அங்கதம் என்பது:—பாம்பு, வாகுவலயம், வசைச்சொல். (௩)

அங்கம்.

9. யாக்கையு முறுப்புஞ் சயனமு மங்கம்.
அங்கம் என்பது:—உடல், அவயவம், கட்டில். (௩)

அங்கி.

10. அனலுஞ் சட்டையு மங்கி யாகும்.
அங்கி என்பது:—நெருப்பு, சட்டை. (உ)

அசனம்.

11. பசியுங் கொழுப்பும் பகுதியு மளவும்
வேங்கை மரமு முணவு மசனம்.
அசனம் என்பது:—பசி, கொழுப்பு, பகுதி, அளவு, வேங்கைமரம், உண்டி. (சு)

அச்சம்.

12. அகத்தியும் பயமு மச்ச மாகும்.
அச்சம் என்பது:—அகத்தி, பயம். (உ)

அஞ்சலி.

13. தொழுதலும் வாவற் பறவையு மஞ்சலி.
அஞ்சலி என்பது:—கும்பிடுதல், வாவல்பறவை. (உ)

அஞ்சனம்.

14. காள நிறனு மையுந் திசைகளின்
யானையி லொன்று மஞ்சன மாகும்.
அஞ்சனம் என்பது:—கரியநிறம், மை, மேற்றிசையானை. (௩)

அடல்.

15. வலியுஞ் செருவு மடலென் றுரும்.
அடல் என்பது:—வலி, பொருதல். (உ)

அடி.

16. முதலுங் காலு மொறுத்தலு மடியெனல்.
அடி என்பது:—ஆதி, கால், தண்டித்தல். (௩)

அடைப்பு.

17. தரும நாளுமுத் தானமு மன்றி
யச்சப் பெயரு மடைப்பெண லாகும்.
அடைப்பு என்பது:—பரணிநாள், அடைப்பு, பயம். (௩

அடை.

18 இலையுங் கனமும் விலையும் வழியு
மப்பமு மற்றிவை யடையென லாகும்.

அடை என்பது:—இலை, கனம், விலை, வழி, அப்பம். (ரு)

அணங்கு.

19. தெய்வமுந் தெய்வத் துவமைசொன் மாதரு
மைய னோயும் வருத்தமுங் கொலையு
மழகு மாசையு மணங்கென் றனமே.

அணங்கு என்பது:—தெய்வம், கொல்லியம்பாவையர், நோய், வருத்தம், கொலை, அழகு, ஆசை. (எ)

அணி.

20. படையின துறுப்புமொப் பனையு மழகும்
பெருமையுங் கலனு மன்பு மணியெனல்.

அணி என்பது:—படைவகுப்பு, அலங்காரம், அழகு, பெருமை, ஆபரணம், அன்பு. (சு)

அணு.

21. உயிரு நுண்மையு மணுவென லாகும்.

அணு என்பது:—உயிர், நுண்மை. (உ)

அணை.

22. விடயமுஞ் சேதுவு மெத்தையுஞ் சயனமு
மணையென மொழிப வறிந்திசி னோரே.

அணை என்பது:—புணர்ச்சி, செய்கரை, மெத்தை, படுக்கை. (ச)

அண்டசம்.

23. அரவு தவளை முதலை யாமை
யானை யுடும்பு மீ னோந்தியும் பறவையும்
பல்லியு மிப்பியு மண்டச மென்ப.

அண்டசம் என்பது:—பாம்பு, தவளை, முதலை, ஆமை, யானை, உடும்பு, மீன், ஓந்தி, பறவை, பல்லி, இப்பி. (கக)

அண்டம்.

24. அண்ட முட்டையு மாகா யமுமே.

அண்டம் என்பது:—முட்டை, ஆகாயம். (உ)

அண்டர்.

25. உயர்நிலை யும்ப ரொன்னல ருடனே
இடைய ரண்ட ரென்ன லாகும்.

அண்டர் என்பது:—தேவர், பகைஞர், இடையர். (௩)

அத்தம்.

26 ஒருநாண் மீனு மொள்ளிய பொன்னு
மருநெறி யுங்கண் ணாடியும் பாதியுங்
கரமும் பகர்சொற் பொருளு மத்தம்.

அத்தம் என்பது:—ஓர் நட்சத்திரம், பொன், அருநெறி, கண்ணாடி, பாதி, கை, சொற்பொருள். (எ)

அத்தி.

27. யானையு மொருமரப் பெயரு மென்பு
மார்கலிப் பெயரு மத்தியென் றாகும்.

அத்தி என்பது:—யானை, ஓர்மரம், எலும்பு, கடல். (௪)

அத்து.

28. அரைப்பட் டிகையுந் தன்னமு மசைச்சொலுஞ்
செந்நிற முமிவை தெரியிலத் தென்ப.

அத்து என்பது:—அரைப்பட்டிகை, தைப்பு, அசைச்சொல், செவப்பு. (௪)

அத்தை.

29. அசைநிலைச் சொல்லுங் குருவு மத்தை.

அத்தை என்பது:—முன்னிலையசைச்சொல், குரு. (உ)

அந்தம்.

30. அழகு மீறு மந்த மென்ப.

அந்தம் என்பது:—அழகு, கடை. (உ)

அந்தரம்.

31. அந்தர மேகந் தனியா காயம்
இறுதி திமிரங் கூட்ட மாகும்.

அந்தரம் என்பது:—தனிமை, தேவாலயம், ஆகாயம், முடிவு, இருள், கூட்டம். (௬)

அந்தரி.

32. அம்பிகைப் பெயருந் துர்க்கையு மந்தரி.

அந்தரி என்பது:—பார்ப்பதி, துர்க்கை. (உ)

அந்தி.

33. பாலை யாழ்த்திறத் தோரிசைப் பெயரு
மாலைக் காலமு மற்றிவை யந்தி.

அந்தி என்பது:—பாலை யாழ்த்திறத்தி லொன்று, மாலைக்காலம். (உ)

அபரம்.

34. நரகமும் பொய்யும் பிறகு மபரம்.

அபரம் என்பது:—நரகம், பொய், பிற்பக்கம். (௩)

அமரர்.

35. அடையலர் பெயருந் தேவரு மமரர்.

அமரர் என்பது:—பகைவர், தேவர். (உ)

அமலம்.

36. அமலமழுக் கின்மையு மறிவு மழகும்.

அமலம் என்பது:—அழுக்கின்மை, அறிவு, அழகு. (௩)

அமுதம்.

37. சுவைபா லீர்மை சோறு தெய்வ
வுணவுநீர் மோக்க முப்பு மமுதம்.

அமுதம் என்பது:—சுவை, பால், குணம், சோறு, தெய்வ உணவு, நீர், மோட்சம், உப்பு, (அ)

அமை.

38. அழகு மூங்கிலு மமைவு மமையே.

அமை என்பது:—அழகு, மூங்கில், அமைவு. (௩)

அம்பணம்.

39. அளவைகா லம்பி கதலி யம்பணம்.

அம்பணம் என்பது:—அளவை, மரக்கால், வாழை. (௩)

அம்பரம்.

40. அம்பரங் கடலுமா டையுமா காயமும்.

அம்பரம் என்பது:—கடல், சீலை, ஆகாயம். (௩)

அம்பல்.

41. சொரிந்து புறங்கூறலும் பழிமொழியு மம்பல்.

அம்பல் என்பது:—சொரிந்து புறங்கூறல், பழிமொழி. (உ)

அம்மை.

42. அழகும்வரு பிறப்புந் தாயு மம்மை.
அம்மை என்பது:—அழகு, வருபிறப்பு, தாய், (௩)

அயம்.

43. அயமென் கிளவி யாடு மிரும்புங்
குளமு நீருங் குதிரையுங் கூறுவர்.
அயம் என்பது:—ஆடு, இரும்பு, குளம், நீர், குதிரை. (௫)

அயிராவதம்

44. அயிரா வதந்திசை யானையி லொன்றும்
புரந்தரன் யானைப் பெயரும் புகலும்.
அயிராவதம் என்பது:—கீழ்த்திசை யானை, இந்திரன் யானை. (௨)

அயில்

45. வேலுங் கூர்மையு மயிலென விளம்புவர்.
அயில் என்பது:—வேல், கூர்மை. (௨)

அரணம்.

46 காடு மெயிலுங் கவசமு மரணம்.
அரணம் என்பது:—காடு, மதில், கவசம். (௩)

அரண்.

47. காவல்வேல் காவற் காடிவை யரணே.
அரண் என்பது:—காவல், வேல், காவற்காடு. (௩)

அரத்தம்.

48. கடம்புஞ் சுடுவனுங் கழுநீர்ப் பெயரு
மரக்குஞ்செந் நிறமு மரத்த மாகும்.
அரத்தம் என்பது:—கடப்ப மரம், உதிரம், செங்குவளை, அரக்கு, செவப்பு. (௫)

அரந்தை.

49. குறிஞ்சியா ழிசையுந் துன்பமு மரந்தை.
அரந்தை என்பது:—குறிஞ்சியாழிசை, வருத்தம். (௨)

அரம்பை.

50. அரம்பை தெய்வப்பெண் வாழையு மாகும்.
அரம்பை என்பது:—தெய்வப்பெண், வாழை. (௨)

அரலை.

51. கழலை வித்துங் கற்றுழை யரலை.

அரலை என்பது:—கழலை, விதை, ஓர்கற்றுழை.

அரவம்.

52. அரவநூ புரமும் பாம்புமோ சையும

அரவம் என்பது:—காற்சிலம்பு, பாம்பு, ஒலி.

அரற்றல்

53. அழுகையு மொலித்தலு மரற்ற லெ

அரற்றல் என்பது:—அழுதல், ஒலித்தல்.

அராகம்.

54. முடுகியல் செந்நிறம் பாலை யாழ்த்திற
மாடகந் தக்க ராக மராகம்.

அராகம் என்பது:—பாட்டிணோருறுப்பு, செவ
திறம், பொன், ஓர் பண்.

அரி.

55. கிண்கிணிப் பரலுங் கிளரொளியும் பக
மிந்திரனும் வண்டும் பாம்புங் குரங்கு
குதிரையுங் கிளியுந் தவளையு மூங்கிலு
கிகிரியு நிறமுஞ் சிங்கமுந் தேருந்
சயனமுங் கண்ணின் வரியுந் துயிலு
மியமனு நெருப்புங் காற்றும் புகையும
பகையுந் தேசும் பறையு மதுவு
மதியு ஞாயிறும் பஞ்சா யுதனும்
பொள்ளலும் பௌவமும் பொன்னுடம
வரையு மைம்மையுஞ் செந்நெற் கதிரு
சோலையும் படைக்கலப் பெயரும் விசி
மரிசியும் வரியு மரியென லாகும்.

அரி என்பது:—சதங்கையின் பருக்கைக்கல், ஒளி, ப
வண்டு, பாம்பு, குரங்கு, குதிரை, கிளி, தவளை,
ரம், நிறம், சிங்கம், தேர், படுக்கை, கண்வரி,
மன், நெருப்பு, காற்று, புகை, பகை, மரவய
சந்திரன், சூரியன், திருமால், உட்டொளை,
பச்சை, மலை, தகட்டுவடிவு, நெற்கதிர், சோலை
—ட்டமின்விசி, அரிசி, வரி.

அரிட்டம்.

56 காகமுங் கள்ளும் பிறவியின் குற்றமு
மரிட்ட மென்ப வறிந்திசி னோரே.

அரிட்டம் என்பது:—காக்கை, கள், பிறவிக்குற்றம். (௩)

அருணம்.

57. ஆடு மானு மருண மென்ப.

அருணம் என்பது:—ஆடு, மான். (௨)

அருணன்.

58. அருண னருக்கனு மவன்றேர்ப் பாகனும்
புதனு மென்னப் புகலப் பெறுமே.

அருணன் என்பது:—சூரியன், சூரியன் தேர்ப்பாகன், புதன். (௩)

அருப்பம்.

59. ஊர்ப்பொதுப் பெயரு மொருபெரும் பிணியு
மடவியின் பெயரு மருப்ப மென்ப.

அருப்பம் என்பது:—ஊர்ப்பொது, ஓர்பிணி, காடு. (௩)

அருவி.

60. மலையின்வீழ் புனலுந் தினைத்தாளு மருவி.

அருவி என்பது:—மலைச்சாரலாறு, தினைத்தாள். (௨)

அலகு.

61. பலகறையு நுளப்பு மளவு மலகெனல்.

அலகு என்பது:—பலகறை, கொதுகு, அளவு. (௩)

அலங்கல்.

62. பூவின் மாலையுந் தளிரு மசைவு
மிரங்கலு மொளிர்தலு மலங்க லாகும்.

அலங்கல் என்பது:—பூமாலை, தளிர், அசைவு, இரங்குதல், ஒளிசெய்தல். (௫)

அலரி.

63. அலரி மலருந் தபனனு மழகுங்
கண்வரி யோர்மரம் என்மனார் புலவர்.

அலரி என்பது:—பூப்பொது, சூரியன், அழகு, கண்வரி, ஓர்மரம். (௫)

அலர்.

64. பழிமொழி யும்பல ரறிந்தலர் தூற்றலு
மலரு மகிழ்வு மலரென் றாகும்.

அலர் என்பது:—பழிச்சொல், பலரறிந்து பழிதூற்றல், பூ, மகிழ்ச்சி. (ச)

அலை.

65. அலையே கொலையுந் திரையு மாகும். 
அலை என்பது:—கொலை, திரை. (உ)

அல்.

66. இரவு மிருளு மிவையல் லாகும். 
அல் என்பது:—இரவு, இருள். (உ)

அல்கல்.

67. அல்க லென்பது தங்கலு நாளும். 
அல்கல் என்பது:—தங்குதல், தினம். (உ)

அல்லி.

68. வெண்ணிற வாம்பலுங் காயா மரமு
மகவித ழும்மிவை யல்லியென் றாகும்.

அல்லி என்பது:—வெள்ளாம்பல், காயாமரம், அகவிதழ். (ங)

அவந்தி.

69. கிளியு முஞ்சைப் பதியு மவந்தி. 
அவந்தி என்பது:—கிளி, ஓர் நகர். (உ)

அவலை.

70. காடுங் கடுப்பு மவலையின் கண்ண. 
அவலை என்பது:—காடு, கடுப்பு. (உ)

அழனம்.

71. அழலும் பிணமு மழன மென்ப. 
அழனம் என்பது:—நெருப்பு, பிணம். (உ)

அழுக்காறு.

72. பொறாமையு மனத்தழுக்கு மழுக்கா றென்ப. 
அழுக்காறு என்பது:—பொறாமை, மனத்தழுக்கு. (உ)

அளகம்.

73. அளகம் புனலு மயிரு மாகும்.
அளகம் என்பது:—நீர், மயிர். (உ)

அளக்கர்.

74. கடலும் புவியுங் கார்த்திகை நாளு
மளமுஞ் சேறு மளக்க ரென்ப.
அளக்கர் என்பது:—கடல், பூமி, கார்த்திகைநாள், உப்பளம், சேறு. (ரு)

அளறு.

75. நரகமுஞ் சேறு மளறெனா நவில்வர்.
அளறு என்பது:—நரகம், சேறு. (உ)

அளி.

76. அறுபதமு மன்புங் கள்ளு மளியெனல்.
அளி என்பது:—வண்டு, அன்பு, கள். (ந)

அளித்தல்.

77 கொடுத்தலுங் காத்தலுஞ் செறித்தலு மளித்தல்.
அளித்தல் என்பது:—கொடுத்தல், காத்தல், செறித்தல். (ந)

அளை.

78. வளைதயிர் புற்று மளையா கும்மே.
அளை என்பது:—வளை, தயிர், புற்று. (ந)

அறல்.

79. அறுதியு மப்பு மறலெனா மொழிப.
அறல் என்பது:—அறுதல், நீர். (உ)

அறுவை.

80. ஆடை சித்திரை நாளிவை யறுவை.
அறுவை என்பது:—சீலை, சித்திரை நட்சத்திரம். (உ)

அனந்தம்.

81. அளவில் பொருளும் பொன்னு மனந்தம்.
அனந்தம்:—அளவின்மை, பொன்.

அனந்தன்.

82. நாலிரு தெய்வ வரவி லொன்றும்
நான்முக னருக னாதி யான்மால்
சேட னநந்த னென்றிசி னோரே.

அனந்தன் என்பது:—அட்டமா நாகத்தொன்று, பிரமன், அருகன், சிவன், திருமால், சேடன். (௬)

அனலி.

83 தினகரன் பெயருந்தீப் பெயரு மனலி.

அனலி என்பது:—சூரியன், நெருப்பு. (௨)

அன்றில்.

84. அசுர நாளுமோர் பறவையு மன்றில்.

அன்றில் என்பது:—மூல நட்சத்திரம், ஓர் பறவை. (௨)

அன்னம்.

85. அடிசிலு மெகினமு மன்ன மாகும்.

அன்னம் என்பது:—சோறு, அன்னப்புள். (௨)

அன்னை.

86 தாயு முன்பிறந் தாளு மன்னை.

அன்னை என்பது:—தாய், அக்காள். (௨)

ஆகம்.

87. யாக்கையு மார்பு மாகமென் றுரைப்பர்.

ஆகம் என்பது:—உடல், மார்பு. (௨)

ஆகாரம்.

88 அசனமு நெய்யும் படிவமுமா காரம்.

ஆகாரம் என்பது:—போசனம், நெய், வடிவு. (௩)

ஆகு.

89. எலியும்பெருச் சாளியு மாகு வாகும்.

ஆகு என்பது:—எலி, பெருச்சாளி. (௨)

ஆகுலம்.

90. வருத்தமுஞ் சத்த வொலியு மாகுலம்.

ஆகுலம் என்பது:—வருத்தம், ஆரவாரம். (௨)

ஆக்கம்.

91. ஆக்கஞ் செல்வமுந் திருமகளு மாகும்.
ஆக்கம் என்பது:—செல்வம், இலக்குமி. (உ)

ஆசாரம்.

92. ஆடையு மொழுக்கமு மருப்பெரு மழையு
மாசர்வாழ் கூடமு மாசார மாகும்.
ஆசாரம் என்பது:—சீலை, ஒழுக்கம், பெருமழை, அரசிருக்கை. (ச)

ஆசினி.

93. ஈரப் பலாமரச் சேகிவை யாசினி.
ஆசினி என்பது:—ஈரப்பலா, மரவயிரம். (உ)

ஆசு.

94. மெய்புகு கருவியுஞ் சடுதியுங் குற்றமு
மற்பமு மோர்கவி யுமாசென லாகும்.
ஆசு என்பது:—மெய்க்கவசம், சீக்கிரம், குற்றம், சிறுமை, ஓர் கவி. (ரு)

ஆசை.

95. ஆர்வமும் பொன்னுந் திசையு மாசை.
ஆசை என்பது:—அன்பு, பொன், திசை. (௩)

ஆடல்.

96 உரையுங் கூத்தும் வெற்றியு மாடல்.
ஆடல் என்பது:—சொல்லல், கூத்து, வெற்றி. (௩)

ஆடவர்.

97. ஆண்பெய ரிளையோ ரென்றிவ ராடவர்.
ஆடவர் என்பது:—ஆண்மக்கள், இளையோர். (உ)

ஆடி.

98. வாய்ந்தகண் ணாடியு மாதத் தொன்று
மாய்ந்தவுத் தாடமு மாடி யாகும்.
ஆடி என்பது:—கண்ணாடி, ஓர் மாதம், உத்தராடநாள். (௩)

ஆடு.

99. மேடமும் வெற்றியு மாடா கும்மே.
ஆடு என்பது:—மேடவிராசி, வெற்றி. (உ)

ஆணை.

100. ஏவன்மெய்ப் பாடே விறல்செய றடுத்தல்
குளூறவு மிலாஞ்சனையு மாணை யாகும்.

ஆணை என்பது:—ஏவல், மெய், வெற்றிசெயல், தடுத்தல், சபதம், அடையாளம். (சு)

ஆண்மை.

101. வலியும் வென்றியும் வாய்மையு மாண்மை.

ஆண்மை என்பது:—வலிமை, வெற்றி, உண்மை. (௩)

ஆதி.

102. ஆதி பழமையு மரனு மாலு
முதலுநே ரோட்டமு மொழியப் பெறுமே.

ஆதி என்பது:—பழமை, சிவன், திருமால், முதல், நேரோட்டம். (ரு)

ஆம்பல்.

103. இசையின் குழலுங் கள்ளு மூங்கிலு
மல்லியும் யானையு மாம்ப லாகும்.

ஆம்பல் என்பது:—இசைக்குழல், கள், மூங்கில், அல்லி, யானை (ரு)

ஆரம்.

104. சந்தன மணிவடந் தாளம் பதக்க
மாபரணப் பொதுவு மார மாகும்.

ஆரம் என்பது:—சந்தனமரம், மணிவடம், முத்து, கண்டிகை, ஆபரணப்பொது. (ரு)

ஆல்.

105. கார்த்திகை நாளு மொருமீன் பெயரு
மங்கா ரகனு மதிலு மாரல்.

ஆரல் என்பது:—கார்த்திகை நட்சத்திரம், ஆரான்மீன், செவ்வாய், மதில். (சா)

ஆரவாரம்.

106. ஆகுலமுந் துக்கமு மாரவார மாகும்.

ஆரவாரம் என்பது:—ஒலி, வருத்தம். (உ)

ஆரை.

107. புரிசைபுற் பாயோர் பூதலு மாரை.

ஆரை என்பது:—மதில், புற்பாய், ஓர் பூடு. (௩)

ஆர்.

108 ஆர்வுங் கூர்மையு மாத்தியு மாரெனல்.
ஆர் என்பது:—நிறைதல், கூர்மை, ஆத்திமரம். (ங)

இதுவுமது.

109. தேராழி யகத்திற் செறியுறுப்பு மாகும்.
ஷை ஆர் என்பது:—தேர்ப்பண்டியகவாய். (க) ஆக (ச)

ஆர்தல்.

110. அணிதலு நிறைதலு முண்டலு மார்தல்.
ஆர்தல் என்பது:—அணிதல், நிறைதல், புசித்தல். (ங)

ஆர்ப்பு.

111. அமருஞ் சிரிப்பு மார்ப்பென லாகும்.
ஆர்ப்பு என்பது:—போர், நகைப்பு. (உ)

ஆர்வம்.

112. ஆசையு நாகத் தொன்று மார்வம்.
ஆர்வம் என்பது:—ஆசை, ஓர் நாகம். (உ)

ஆர்வலர்.

113. காதலர் வேட்டோர் கனிந்தோ ரார்வலர்.
ஆர்வலர் என்பது:—நாயகர், மித்திரர், அன்புடையோர். (ங)

ஆலம்.

114. பூவு நீரு மொருமரப் பெயரு
மாழ்கடல் விடமு மால மாகும்.
ஆலம் என்பது:—பூ, நீர், ஆலமரம், விடம். (ச)

ஆலவன்.

115. அம்புலிப் பெயரு மாசையு மாலவன்.
ஆலவன் என்பது:—சந்திரன், ஆசை. (உ)

ஆலாலம்.

116 அலர்ந்த பூவு நீருமோர் மாமு
மலைகடல் விடமும்வா வலுமா லாலம்.
ஆலாலம் என்பது:—பூ, நீர், ஓர் மரம், விடம், வௌவால். (ரு)

ஆலி.

117. துளியு நீர்கோ ளாலங் கட்டியு
மழையு மாலி யெனவகுத் தனரே.

ஆலி என்பது:—மழைத்துளி, ஆலங்கட்டி, மழை. (௩)

ஆலயம்.

118 யானைக் கூடமு நகரமுந் தேவர்
கோட்டமு மாலய மென்னக் கூறும்.

ஆலயம் என்பது:—யானைக்கூடம், நகரம், தேவர்கோவில். (௩)

ஆவணம்.

119. உரிமையங் காடி தெருவுபுனர் பூச
மிவையொரு நான்கு மாவண மென்ப.

ஆவணம் என்பது:—உரிமை, கடைவீதி, தெரு, புனர்பூச நட்சத்திரம். (௪)

ஆவலர்.

120 காதலர் வேட்டோ ராவல ராகும்.

ஆவலர் என்பது:—நாயகர், மித்திரர். (உ)

ஆழி, நேமி.

121. சாகரந் தேர்க்கால் சக்கரம் வட்ட
மோதிர மென்ன மொழிந்தவை யைந்து
நேமியு மாழியு மெனநிகழ்த் தினரே.

ஆழி, நேமி என்பன:—கடல், தேருருள், சக்கராயுதம், வட்டவடிவு, மோதிரம். (௫)

ஆறு.

122. வழியு நதியுமோ ரெண்ணு மாறெனல்.

ஆறு என்பது:—வழி, நதி, ஓர் எண். (௩)

ஆற்றல்.

123. வலியும் வென்றியும் வாய்மையு மாண்மையு
மிகுதியும் பரித்தலு ஞானமும் பொறையுங்
கூட்டுத லும்மிவை யாற்ற லாகும்.

ஆற்றல் என்பது:—வலிமை, வென்றி, உண்மை, ஆண்மை, மிகுதி, பரித்தல், ஞானம், பொறை, கூட்டுதல். (௯)

ஆனி.

124. அழிவு மூலமு மானியென் றுகும்.
ஆனி என்பது:—கேடு, மூல நட்சத்திரம். (உ)

இகத்தல்.

125. பொறுத்தலு நடத்தலு மிகத்த லாகும்.
இகத்தல் என்பது:—பொறுத்தல், நடத்தல். (உ)

இகல்.

126. பகையும் வலியு மமரு மிகலெனல்.
இகல் என்பது:—பகை, வலி, போர். (ங)

இருளா.

127. சுற்றமுந் தோழியு மிருளா வென்ப.
இருளா என்பது:—சுற்றம், தோழி. (உ)

இசை.

128. இசையே புகழு மொழியு நாதமும்.
இசை என்பது:—புகழ், சொல், ஒலி. (ங)

இடக்கர்.

129. குடத்தின் பெயரு மறைமொழியு மிடக்கர்.
இடக்கர் என்பது:—குடம், மறைத்த சொல். (உ)

இடம்.

130. வீடும் வலியும் படுப்பது மிடமெனல்.
இடம் என்பது:—வீடு, வலி, படுத்தல். (ங)

இடி.

131. உறுதிமொழி பிண்டி யுருமு மிடியே.
இடி என்பது:—உறுதிச்சொல், நெல் முதலியவற்றின் மா, இடி
யேறு. (ங)

இடை.

132. இடமு நுசுப்பு நடுவு மிடையெனல்.
இடை என்பது:— இடம், நுசுப்பு, நடு. (ங)

இந்தளம்.

133. நெருப்பிடு கலனு மிசையு மிந்தளம். (௨)
இந்தளம் என்பது:—தூபக்கால், ஓர் பண்.

இபம்.

134. மரத்தின் கொம்பும் யானையு மிபமெனல். (௨)
இபம் என்பது:—மரக்கொம்பு, யானை.

இரசதம்.

135. அரைப்பட் டிகையும் வெள்ளியு மிரசதம். (௨)
இரசதம் என்பது:—அரைப்பட்டிகை, வெள்ளி.

இரதம்.

136. புணர்ச்சியுஞ் சூதமு மளியுந் தேரு
மரைஞாணுஞ் சுவையு மிரத மென்ப.
இரதம் என்பது:—புணர்ச்சி, சூதம், அளி, தேர், அரைஞாண், சுவை. (௬)

இரலை.

137. இரலைக் கிளவி மானி னேறுந்
தலைநாளு மூதுங் கொம்பு மாகும்.
இரலை என்பது:—ஆண்மான், அச்சுவினி நட்சத்திரம், ஊது கொம்பு. (௩)

இரவி.

138. மலையு மருக்கனும் வாணிகத் தொழிலு
மிரவி யாமென் றிசைக்கப் படுமே.
இரவி என்பது:—மலை, சூரியன், வாணிகத்தொழில். (௩)

இராகம்.

139. இசைநிறங் கீதஞ் செம்மையு மிராகம்.
இராகம் என்பது:—இசை, நிறம், கீதம், செவப்பு. (௪)

இருள்.

140. நரகமு மயக்கமுங் கருமையு மிருளெனல்.
இருள் என்பது:—ஓர்வகை நரகம், மயக்கம், கறுப்பு. (௩)

இரௌரவம்.

141. ஆகமத் தொன்று நரகு மிரௌரவம்.

இரௌரவம் என்பது:—சிவாகமம் இருபத்தெட்டில் ஒன்று, ஓர் நரகம். (௨)

இலஞ்சி.

142. மகிழ்மரங் கொப்பூழ் மடுவிவை யிலஞ்சி.

இலஞ்சி என்பது:—மகிழமரம், கொப்பூழ், ஏரி. (௩)

இலம்பகம்.

143. நுதலணி யத்தி யாய மிலம்பகம்.

இலம்பகம் என்பது:—நுதலணிமாலை, அத்தியாயம். (௨)

இலாங்கலி.

144. நாளிகே ரமுஞ்செங் காந்தளு மிலாங்கலி.

இலாங்கலி என்பது:—தெங்கு, செங்காந்தள். (௨)

இலயம்.

145 கூத்துங் கூத்தின் விகற்பமு மிலயம்.

இலயம் என்பது:—கூத்து, கூத்தின் விகற்பம். (௨)

இல்.

146. மனையுங் குடியு மில்லை யென்றலு
மிடமு மிராசியு மில்லென் றாகும்.

இல் என்பது:—மனைவி, வீடு, இல்லையெனல், இடம், இராசி. (௫)

இழுக்கு.

147. பிழைத்தல் பொல்லாங் கிவையிழுக் காகும்.

இழுக்கு என்பது:—தவறுதல், கேடு. (௨)

இளி.

148. யாழி னரம்புஞ் சிரிப்பு மிளியெனல்.

இளி என்பது:—யாழ்நரம்பு, சிரிப்பு. (௨)

இறப்பு.

149. மிருதியு மரணமும் போக்கு மிறப்பே.

இறப்பு என்பது:—மிருதி, சாவு, போதல். (௩)

இறல்.

150. எரிநா டேன்கூ டெருதுமீ னிறலே.

இறல் என்பது:—கார்த்திகை நாள், தேன்கூடு, எருது, இறன்மீன். (௪)

இறும்பு.

151. குன்றுங் காடு மிடைதூறு மிறும்பே.
இறும்பு என்பது:—சிறுமலை, குறுங்காடு, தூறு. (௩)

இதுவுமது.

152. தாமரை நறுந்தண் பூவுஞ் சாற்றும்.
ஷை இறும்பு என்பது:—தாமரைப் பூ. (௧) ஆ (௪)

இறை.

153. சிறந்தோன் பெயருஞ் செம்மையுஞ் சிறுமையுந்
தலைவனுந் தலைமையும் பெருமையுந் தங்கலு
மயனு மானு மாதியின் பெயரும்
புள்ளி னிறகுங் கடனும் வரையு
மில்லி னிறப்புங் கடமையு மிறையே.
இறை என்பது:—உயர்ந்தோன், நடுவுநிலைமை, அற்பம், அரசன், தலைமை, பெருமை, தங்கல், பிரமன், சிவன், கடவுள், பறவையின் இறகு, கடன், கையிறை, வீட்டிறப்பு, குடியிறை. (௧௫)

இறைவை.

154. ஏணியும் புட்டிலு மிறைவை யாகும்.
இறைவை என்பது:—ஏணி, கூடை. (௨)

ஈகை.

155. ஈங்கையுங் கொடுத்தலும் பொன்னு மீகை.
ஈகை என்பது:—இண்டங்கொடி, கொடுத்தல், பொன். (௩)

ஈழம்.

156. இரணியஞ் சிங்கள மீழ மாகும்.
ஈழம் என்பது:—பொன், சிங்கள தேசம். (௨)

உஞற்று.

157. உற்சாகமுந் தப்பு முஞற்றென மொழிப.
உஞற்று என்பது:—உற்சாகம், இழுக்கு. (௨)

உடல்.

158. யாக்கையு மாடக மும்முட லென்ப.
உடல் என்பது:—சரீரம், பொன். (௨)

உடு.

159. அம்பு மாடு மம்புத் தலையு
மொளிவான் மீனுங் கிடங்கு நாவா
யோட்டுங் கோலு முடுவென லாகும்.

உடு என்பது:—அம்பு, ஆடு, அம்புத்தலை, விண்மீன், அகழி, மரக்கலம் ஓட்டும் கோல். (சா)

உடை.

160 உடுக்கையுஞ் செல்வமுங் குடைவேலு முடையே.

உடை என்பது:—சீலை, செல்வம், குடை, வேலமரம். (ச)

உணர்வு

161. அறிவுந் தெளிவு மொழிவு முணர்வெனல்.

உணர்வு என்பது:—அறிவு, தெளிவு, நீங்கல். (ந)

உண்டை.

162. படையின் வகுப்புந் திரட்சியு முண்டை.

உண்டை என்பது:—படைவகுப்பு, திரளை. (உ)

உத்தரம்.

163. வடக்குமே லூழித்தீ வார்த்தையு முத்தரம்.

உத்தரம் என்பது:—வடக்கு, மேல், வடவாமுகாக்கினி, மறுமொழி. (ச)

உத்தி.

164. உரக படப்பொறி சுணங்குரை யாட
லோர்திரு வுறுப்பு முத்தி யாகும்.

உத்தி என்பது:—பாம்பின் படப்பொறி, தேமல், உரைத்தல், சீதேவி என்னுந் தலைக்கோலம். (ச)

உத்திரம்.

165. உத்திர மென்ப வோர்நா ளுடனே
சித்திர மாளிகை சேர்ந்ததோ ருறுப்பே.

உத்திரம் என்பது:—உத்திர நாள், மாளிகையின் ஓர் உறுப்பு. (உ)

உந்தி.

166 பேதையர் விரும்பி யாடலு நீரு
நீரின் சுழியுந் தேரின் றட்டு

நாபியுங் கடலு நதியும் யாழி
னேது முறுப்பு முந்தி யாகும்.

உந்தி என்பது:—மகளிர் விளையாட்டிலொன்று, நீர், நீர்ச்சுழி, தேர்த்தட்டு, கொப்பூழ், கடல், யாறு, யாழின் ஓர் உறுப்பு (அ)

உப்பளம்.

167 அளமுங் கழிநிலமு முப்பள மாகும்.

உப்பளம் என்பது:—உப்புவிளை நிலம், உப்பங்கழி நிலம். (உ)

உப்பு.

168. வேலையு மதனில் விளைவும்விளை யாட்டு
மோது முவரு மினிமையு முப்பே.

உப்பு என்பது:—கடல், இலவணம், மகளிர் விளையாட்டு, உவர்த்தல், இனிமை. (ரு)

உம்பர்.

169. உயர்நிலை யோரு மிசையு மும்பர்.

உம்பர் என்பது:—வானோர், மேல். (உ)

உம்பல்.

170. யானையும் விலங்கி னாண்பாற் பெயருங்
குடியும்வழித் தோன்றலு மும்ப லாகும்.

உம்பல் என்பது:—யானை, விலங்கேற்றின் பொது, குலம், மகன். (ச)

உயவை.

171. கான்யாற் றுப்பெயர் கருவிளை யுயவை.

உயவை என்பது:—காட்டாறு, காக்கணஞ்செடி. (உ)

உரம்.

172. வலிமார் பூக்க ஞானந் திடமுரம்.

உரம் என்பது:—வலி, மார்பு, ஊக்கம், ஞானம், திடம். (ரு)

உரை.

173 சத்தவொலி விருத்தி யுரைத்தலு முரையே.

உரை என்பது:—எழுத்தினொலி, சொற்பொருள், சொல்லல். (ங)

உலகம்.

174. உலகம் புவிதிசை யுயர்குண மாமே.

உலகம் என்பது:—பூமி, திசை, உயர்குணம். (ங)

உலகு.

175. அவனி திசையா காய முயர்ந்தோர்
குலமிவை யுலகெனக் கூற லாகும்.

உலகு என்பது:—பூமி, திக்கு, ஆகாயம், உயர்ந்தோர், குலம். (ரு)

உலக்கை.

176 ஓண நாளு முரோங்கலு முலக்கை.

உலக்கை என்பது:—திருவோண நட்சத்திரம், உலக்கை. (உ)

உலவை.

177. மாக்களின் மருப்பு மரமு மரத்தின்
கோடுங் காற்று முலவையின் கூற்றே.

உலவை என்பது:—விலங்கின் கொம்பு, ஒடைமரம், மரக்கொம்பு, காற்று. (ச)

உவளகம்.

178 பிரிதலு மிடையர் சேரியு மதிலு
மொருசிறை யிடமு மெயிலுறுப்பும் பள்ளமும்
வாவியும் விசாலமு முவளக மாகும்.

உவளகம் என்பது:—பிரிதல், இடைச்சேரி, மதில், ஒருபக்கம், மதிலுறுப்பு, பள்ளம், தடாகம், விசாலம். (அ)

உவா.

179 அறுமதி யானை யிளையோ னுவாவெனல்.

உவா என்பது:—பௌரணை, யானை, இளையோன். (ங)

உழை.

180. இடமும் மானும் யாழ்நரம் பும்முழை.

உழை என்பது:—இடம், மான், யாழின் ஓர் நரம்பு. (ங)

உளை.

181. ஆண்பான் மயிரு மஃறிணை மயிரும்
பரியின் கழுத்தணி மயிரு மிசையுஞ்
சத்த வொலியு முளையென லாகும்.

உளை என்பது:—உயர்திணை யாண்பால் மயிர், அஃறிணைப் பொருளின் மயிர், குதிரையின் பிடர் மயிர், எழிசையில் ஒன்று, பேசலால் எழும் ஒலி. (ரு)

உறுகண்.

182. துக்கமு நோயு முறுக ணென்ப.
உறுகண் என்பது:—துக்கம், நோய். (உ)

உறுவன்.

183. அசோகமர் கடவுளு முனிவனு முறுவன்.
உறுவன் என்பது:—அருகன், முனிவன். (உ)

உறை.

184. நீர்த்துளி முதலாந் துளியு நீணோய்
போக்கு மருந்தும் பொருளும் போர்வையும்
வெண்கலப் பெயரும் விழுமமும் பெருமையு
மெண்குறிப் பெண்ணிப் பொலிந்துழி யிடுவதும்
பாலுறு பிரையுங் காரமு முணவுங்
குறையுவர் நீரும் படையின் கூடு
மோரிடைச் சொல்லும் வாழ்நாளு முறையெனல்.
உறை என்பது:—நீர்த்துளி, மருந்து, பொருள், போர்வை, வெண்கலம், மேன்மை, பெருமை, இலக்கம் குறித்தற்கு இடும் ஓர் குறி, பாலிடுபிரை, உறைப்பு, உணவு, உவர்நீர், ஆயுதவுறை, ஓர் இடைச்சொல், வாழ்நாள். (கரு)

உறையுள்.

185. ஊர்ப்பொதுப் பெயரு மகாரமு முறையுள்.
ள் என்பது:—ஊர்ப்பொது, வீடு. (உ)

உன்னல்.

186. மனமு நினைவு முன்ன லாகும்.
ன்னல் என்பது:—மனம், நினைவு. (உ)

ஊக்கம்.

187. உற்சாகம் வலிமன மிகுதி யூக்கம்.
ஊக்கம் என்பது:—உற்சாகம், வலிமை, உள்ளக்கிளர்ச்சி. (ரு)

ஊழ்.

188 பழமையு மரபும் பகையு மூழெனல்.
ஊழ் என்பது:—பழமை, மரபு, பகை. (ரு)

ஊறு.

189. தீதுங் கொலையுந் தீண்டலு மூறெனல்.
ன்பது:—தீமை, கொலை, தீண்டல். (ரு)

ஊனம்.

190. பிணமுங் கேடு மூன மாகும்.
ஊனம் என்பது:—பிணம், கேடு. (உ)

எகினம்.

191. அன்னமுங் கவரிமாவு மாண்மரமு நாயும்
புளியும் புளிமாப் பெயரு மெகினம்.
எகினம் என்பது:—அன்னம், கவரிமா, ஆண்மரம், நாய், புளிமரம், புளிமா. (சு)

எக்கல்.

192. குவித்தலுஞ் சொரிதலு மெக்க லென்ப.
எக்கல் என்பது:—குவித்தல், சொரிதல். (உ)

எருவை.

193. கழுகுஞ் செம்புங் கொறுக்கையு மெருவை.
எருவை என்பது:—கழுகு, செம்பு, கொறுக்கை. (ங)

எலி.

194. ஆகுவு மறுவும் பூரநா ளும்மெலி.
எலி என்பது:—இல்லெலி, கள், பூர நட்சத்திரம். (ங)

எல்.

195. நல்லொளிப் பொருளு ஞாயிறும் பகலு
மெல்லியு மிகழ்ச்சியு மெல்லென வைப்பர்.
எல் என்பது:—பிரகாசம், சூரியன், பகல், இரவு, இகழ்ச்சி. (ரு)

எறுழ்.

196. தண்டா யுதம்வலி யெறுழா கும்மே.
எறுழ் என்பது:—தண்டாயுதம், வலி. (உ)

என்றூழ்.

197. விரிகதி ரவனும் வெயிலு மென்றூழ்.
என்றூழ் என்பது:—சூரியன், வெயில். (உ)

ஏதம்.

198. குற்றமுந் துன்பமு மேத மாகும்.
ஏதம் என்பது:—குற்றம், துன்பம்.

ஏதி.

199. ஆயுதமுந் துண்டமும் வாளு மேதி.
ஏதி என்பது:—ஆயுதப்பொது, துண்டு, வாள். (௩)

ஏந்தல்.

200. பெருமையு முயர்வுந் தலைவனு மேந்தல்.
ஏந்தல் என்பது:—பெருமை, உயர்ச்சி, அரசன். (௩)

ஏமம்.

201. இன்பமு நீறும் பொன்னுங் காவலு
மிரவுஞ் சேமமு மேமாப்பு மயக்கமு
மென்பன வேமப் பெயரன வாகும்.
ஏமம் என்பது:—இன்பம், விபூதி, பொன், காவல், இரவு, சேமம், களிப்பு, உன்மத்தம். (அ)

ஏரண்டம்.

202. ஆமணக் குஞ்சித் திரமுமே ரண்டம்.
ஏரண்டம் என்பது:—ஆமணக்கு, சித்திரம். (உ)

ஏல்வை.

203. மடுவும் பொழுது மேல்வையென் றாகும்.
ஏல்வை என்பது:—மடு, பொழுது. (உ)

ஏறு.

204. விடையு மெருதும் விலங்கினாண் பெயரு
மிடியு முதனா ளேறெனப் படுமே.
ஏறு என்பது:—பொலியெருது, எருது, புலி முதலிய விலங்கின் ஆண்பெயர், இடி, அச்சுவினி நாள். (ரு)

ஏனல்.

205. தினைப்புனமுந் தினையு மேன லாகும்.
ஏனல் என்பது:—தினைப்புனம், பைந்தினை. (உ)

ஏனாதியர்.

206. மந்திரிப் பெயருஞ் சேனைகாப் போரு
மறவரு மயிர்வினை ஞருமே னாதியர்.
ஏனாதியர் என்பது:—மந்திரியர், தந்திரியர், மறவர், நாவிதர். (சு)

ஐயம்.

207. பொழுதும் பிச்சையும் பிச்சைகொள் கலனு
மனுமா னமுமிவை யையமென் றுரைக்கும்.

ஐயம் என்பது:—பொழுது, பிச்சை, இரப்போர் கலம், அனுமானம். (ச)

ஐயன்.

208. வானோர் முனிவர் மறையவ ராசான்
சாத்தன் மூத்தோன் றகப்பனு மையன்.

ஐயன் என்பது:—வானோர், முனிவர், பார்ப்பார், குரு, சாத்தன், மூத்தோன், தந்தை. (எ)

ஐயை.

209. ஆரியை விந்தை யலகைக் கொடியா
ளாசா ரியன்பெரு மாட்டியு மையை.

ஐயை என்பது:—பார்வதி, துர்க்கை, காளி, ஆசாள். (ச)

ஒண்மை.

210. அழகு நன்று மறிவு மொண்மை.

ஒண்மை என்பது:—அழகு, நன்மை, அறிவு. (ங)

ஒலி.

211. ஓசையு முருமுங் காற்று மொலியே.

ஒலி என்பது:—சத்தம், இடி, காற்று. (ங)

ஒலியல்.

212. அதளு மாடையு மாலையு மாறு
மொலிய லென்னு மொண்பெயர் பெறுமே.

ஒலியல் என்பது:—தோல், சீலை, பூமாலை, நதி. (ச)

ஒழுக்கம்.

213. வழியுங் குலமுமா சாரமு மொழுக்கம்.

ஒழுக்கம் என்பது:—வழி, குலம், சீலம். (ங)

ஒளி.

214. ஆதவன் மதிபுகழ் விளக்குட னொளிப்பிட
மோதுங் கனலுங் கேட்டையு மொளியெனல்.

ஒளி என்பது:—சூரியன், சந்திரன், புகழ், விளக்கு, மறைவிடம், நெருப்பு, கேட்டை நாள். (எ)

ஒளிவட்டம்.

215. சக்கரங் கண்ணாடி தாமொளி வட்டம்.
ஒளிவட்டம் என்பது:—சக்கரம், கண்ணாடி. (௨)

ஓங்கல்.

216. மலையுந் தலைவனும் வலியோன் பெயரு
முயர்வு மேடு மூங்கிலு மோங்கல்.
ஓங்கல் என்பது:—மலை, தலைவன், வலியோன், உயர்ச்சி, மேடு, மூங்கில். (௬)

ஓடை.

217. நீர்நிலைப் பெயருமக ழுங்கிரி நெறியு
மாமும் பட்டமு மற்றிவை யோடை.
ஓடை என்பது:—நீர்நிலை, அகழி, மலைவழி, ஓடை என்னும் ஓர் மரம், நெற்றிப்பட்டம். (௫)

ஓட்டம்.

218. ஓட்டமே லுதடுந் தோல்வியு முரைக்கும்.
ஓட்டம் என்பது:—மேலுதடு, தோல்வி. (௨)

ஓணம்.

219. மாயோ னாளும் வருபுன லாறு
மோண மென்ப ருணர்ந்திசி னோரே.
ஓணம் என்பது:—திருவோண நாள், நதி. (௨)

ஓதம்.

220. ஈரமுங் கடலின் றிரையுங் கடலு
மோத மென்னும் பெயர்க்குரி யனவே.
ஓதம் என்பது:—ஈரம், கடற்றிரை, கடல். (௩)

ஓதனம்.

221. உணவுஞ் சோறு மோதன மென்ப.
ஓதனம் என்பது:—உண்டி, சோறு. (௨)

ஓதி.

222. மலையும் பெண்பான் மயிரும் பூசையு
மோதினவன் பெயரு மோதியென் றுரைப்பர்.
ஓதி என்பது:—மலை, பெண்மயிர், பூனை, கற்றோன். (௪)

ஓதை.

**223.** புரிசையு முள்ளுயர் நிலமு மகர
மாதியின் சத்தமு மொலியு மோதை.

ஓதை என்பது:—மதில், மதிலுண்மேடை, அகர முதலிய எழுத்தொலி, ஆரவாரம். (சு)

ஓரி.

**224.** அரிவையர் மயிரொழித் தெல்லா மயிரு
முதுநரியு முசுவும் விலங்கின் சேக்கையு
மோரி யென்பமோர் வள்ளலு முரைக்கும்.

ஓரி என்பது:—ஆண்மயிர், பிறமயிர், கிழநரி, ஆண்முசு, விலங்கின் படுக்கை, கடை எழு வள்ளலில் ஒருவன். (சு)

ஓரை.

**225.** மகளி ரீட்டமு மற்றவ ராடலு
மவர்விளை யாடுங் களமு மிராசியு
மோரிடைச் சொல்லுங் குரவையு மோரை.

ஓரை என்பது:—மகளிர் கூட்டம், மாதர் விளையாட்டு, மாதர் விளையாடும் களம், இராசிப்பொது, ஓர் இடைச்சொல், குரவை. (சு)

ஓலம்.

**226.** ஒலியும் பாம்பு மோல மென்ப.

ஓலம் என்பது:—ஒலி, பாம்பு. (உ)

ஓவியர்

**227.** கண்ணு ளருஞ்சித் திரரு மோவியர்.

ஓவியர் என்பது:—கண்ணுளர், சித்திரகாரர். (உ)

இரண்டாவது

## ககர வருக்கம்.

ககனம்.

**228** காடுஞ் சேனையும் வெளியுங் ககனம்.

ககனம் என்பது:—காடு, சேனை, ஆகாயம். (ங)

கங்கம்.

**229.** பருந்துஞ் சீப்புங் கங்க மென்ப.

கங்கம் என்பது:—பருந்து, சீப்பு. (உ)

கந்து.

230. கருந்தினை யுர்வாம் பினருகுங் கந்தெனல்.
கந்து என்பது:—கருந்தினை, வாம்பின் பக்கம். (௨)

கசடு.

231. குற்றமு மழுக்கு மையமுங் கசடே.
கசடு என்பது:—குற்றம், அழுக்கு, ஐயம். (௩)

கச்சம்.

232 கவடு மளவையுஞ் சாலுங் கச்சம்.
கச்சம் என்பது:—யானைக் கழுத்திடு கயிறு, அளவை, மரக்கால். (௩)

கச்சை.

233. கயிறு மெய்புகு கருவியுந் தழும்புங்
கச்சை யென்று கருதப் படுமே.
கச்சை என்பது:—கயிறு, கவசம், தழும்பு. (௩)

கஞறல்

234. சிறுமையும் பொலிவுங் கஞற லென்ப.
கஞறல் என்பது:—சிறுமை, பொலிவு. (௨)

கஞ்சம்.

235. தாளம் வெண்கலந் தாமரை குல்லை
கஞ்ச மென்ப ரப்பமுங் கழறுவர்.
கஞ்சம் என்பது:—கைத்தாளம், வெண்கலம், தாமரை, கஞ்சா, அப்ப வருக்கம். (௫)

கடகம்.

236 வட்டமு மதிலு மலையின் பக்கமுஞ்
சேனையு மூரு மோரா றெண்ணுங்
கங்கணப் பெயரும் பலகையுங் கடகம்.
கடகம் என்பது:—வட்டம், மதில், மலைப்பக்கம், படை, ஓர் ஊர், ஓர் ஆறு, ஓர் எண், கங்கணம், பலகை. (௯)

கடம்.

237. அருஞ்சுரப் பெயரும் யாக்கையுங் கயிறுங்
குடமுங் கானமுங் குஞ்சரத் திரளு
மற்றதன் கொடிறு மதமுங் கடமே.

கடம் என்பது:—அருநெறி, சரீரம், கயிறு, குடம், காடு, யானைக் கூட்டம், யானைக்கதுப்பு, யானை மதம். (அ)

கடல்.

238. மகரா லயமு மளவையுங் கடலெனல்.
கடல் என்பது:—சமுத்திரம், ஒரெண். (உ)

கடவை.

239. கவிறுக் கேணி குற்றமுங் கடவை.
கடவை என்பது:—கடவு மரம், ஏணி, குற்றம். (ங)

கடி.

240 விரைவு கூர்மை வெருவு கல் காவல்
வரைவு சிறப்பு மணங்கொ டாழில் விளக்கம்
புதுமை யைய மிகுதி கரிப்பு
நாற்றங் காலம் பேயிவை கடியே.
கடி என்பது:—சீக்கிரம், கூர்மை, பயம், காவல், நீக்கம், சிறப்பு, மணம் புரிதல், விளக்கம், புதுமை, சந்தேகம், மிகுதி, கரிப்பு, வாசனை, காலம், பிசாசம். (கரு)

கடிகை.

241. கடிகைக் கிளவி நாழிகை கபாடத்
திடுதாள் கண்டமுந் துண்டமு மிசைக்கும்.
கடிகை என்பது:—நாழிகை, கதவிடு தாள், எழுத்தாணி, துணிக்கை. (ச)

கடிப்பம்.

242. காதணி யணிகலச் செப்பிவை கடிப்பம்.
கடிப்பம் என்பது:—காதணி, ஆபரணச்செப்பு. (உ)

கடு.

243. ஒருமரப் பெயருங் விடமுங் கடுவெனல்.
கடு என்பது:— ஓர் மரம், நஞ்சு. (உ)

கடை.

244. இடம்வாயி லாவண மீறுங் கடையே.
கடை என்பது:—இடம், வாயில், அங்காடி, முடிவு. (ச)

கட்சி.

245. காடுங் கூடுங் கட்சி யாகும்.
கட்சி என்பது:—காடு, பறவைக்கூடு. (௨)

கட்டளை.

246. கட்டளை துலாமு நிறையறி கருவியு
முரையறி கருவியு மளவு மொப்புமாம்.
கட்டளை என்பது:—துலாம், நிறையறி கருவி, உரை கல், அளவு, உவமை. (௫)

கணம்.

247. கணமென் கிளவி கால நுட்பமுந்
திரளும்பே யுந்திப் பிலியு நோயு
முடுவும் வட்டமுங் கணமென லாகும்.
கணம் என்பது:—கால நுட்பம், திரட்சி, பிசாசம், திப்பிலி, ஓர் நோய், விண்மீன், வட்டம். (எ)

கணி.

248. வேங்கை மாமு மருதமுங் கணியெனல்.
கணி என்பது:—வேங்கை மரம், மருத நிலம். (உ)

கணிச்சி.

249. தோட்டியு மழுவுந் தறிகையுங் கணிச்சி.
கணிச்சி என்பது:—தோட்டி, மழு, தறிகை. (௩)

கணை.

250. அம்புந் திரட்சியும் பூராட ளுங்கணை.
கணை என்பது:—அம்பு, திரண்ட வடிவு, பூர நட்சத்திரம். (௩)

கண்டகம்.

251. காடு முள்ளுங் கண்டக மாகும்.
கண்டகம் என்பது:—காடு, முள். (உ)

கண்டம்.

252. கழுத்து மெய்புகு கருவியும் வாளு
நாடுமிடு திரையு நவிலுந் துண்டமுஞ்
சருக்கரைப் பெயரும் வெல்லமுங் கண்டம்.
கண்டம் என்பது:—கழுத்து, கவசம், வாள், காடு, திரைச்சீலை, துண்டம், சருக்கரை, வெல்லம். (அ)

கண்டிகை.

253 அணிகலச் செப்பு மக்க மணியும்
வாச்சியத் தொன்றும் பதக்கமுங் கண்டிகை.

கண்டிகை என்பது:—பணிச்செப்பு, அக்கமணி, வாச்சியத்தொன்று, பதக்கம். (௪)

கண்டூதி.

254. காஞ்சொறியுஞ் சொறியுங் கண்டூதி யாகும்.

கண்டூதி என்பது:—காஞ்சொறிச்செடி, தினவு. (௨)

கதலி.

255. வாழையுந் தேறுங் கதலி யென்ப.

கதலி என்பது:—வாழை, தேற்று மரம். (௨)

கதவு.

256 காவலுங் கபாடமுங் கதவென லாகும்.

கதவு என்பது:—காவல், கபாடம். (௨)

கதுப்பு.

257. ஆண்பெண் மயிரு மாவின் றிரளுங்
கொடிறுங் கதுப்பெனக் கூறப் படுமே.

கதுப்பு என்பன:—ஆண்மயிர், பெண்மயிர், பசுக்கூட்டம், கன்னம். (௪)

கதை.

258. காரணந் தண்டா யுதமொழி கதையெனல்.

கதை என்பது:—காரணச்சொல், தண்டாயுதம், சொல். (௩)

கந்தம்.

259. நாற்றமுங் கிழங்கு மணுவின் கூட்டமுங்
கழுத்தடியு மிந்திரியமுங் கந்த மென்ப.

கந்தம் என்பது:—வாசனை, கிழங்கு, அணுக்கூட்டம், கழுத்தடி, இந்திரியம். (௫)

கந்தரம்.

260. கழுத்து மலைமுழை முகிலுங் கந்தரம்.

கந்தரம் என்பது:—கழுத்து, மலைக்குகை, மேகம். (௩)

கந்தருவம்.

261. கானமுங் குதிரையுங் கந்தருவ மென்ப.

கந்தருவம் என்பது:—இசை, குதிரை. (௨

கந்து.

262. யாக்கையின் மூட்டு மாதார நிலையுங்
கம்பமும் பண்டியு ளிரும்புங் கந்தெனல்.

கந்து என்பது:—யாக்கையின் மூட்டு, பற்றுக்கோடு, தூண், பண்டியுள் இரும்பு. (௪)

கந்துகம்.

263. பந்துங் குதிரையுங் கந்துக மென்ப.

கந்துகம் என்பது:—பந்து, குதிரை. (௨)

கமலம்.

264. வனசமும் புனலுங் கமல மெனப்படும்.

கமலம் என்பது:—தாமரை, நீர். (௨)

கம்.

265. சலமும் வெளுப்புந் தலையின் பெயருங்
ககனமும் விதியுங் கம்மென லாகும்.

கம் என்பது:—நீர், வெண்மை, தலை, ஆகாயம், பிரமன். (௫)

கம்பம்.

266. நடுக்கமுந் தூணு நடுத்தறியுங் கம்பம்.

கம்பம் என்பது:—நடுக்கம், தூண், விளக்குத்தண்டு. (௩)

கம்பலை.

267. துன்பமுஞ் சத்த வொலியுங் கம்பலை.

கம்பலை என்பது:—துன்பம், பேசலால் எழும் ஒலி. (௨)

கயம்.

268. குளமு மாழமு நீருங் குறையுங்
களிறும் பெருமையு மேன்மையுங் கயமெனல்.

கயம் என்பது:—குளம், ஆழம், நீர், குறைபாடு, யானை, பெருமை, மேன்மை. (௭)

கயில்.

269. பிடர்த்தலை பூணின் கடைப்புணர்வு கயிலே.

கயில் என்பது:—பிடரி, ஆபரணக்கடைப் புணர்வு. (௨)

கயினி.

270. அத்த நாளும் விதவையுங் கயினி.

கயினி என்பது:—அத்த நட்சத்திரம், கைம்பெண். (௨)

கரகம்.

271. துளியு மாலாங் கட்டியுங் கங்கையுங்
கமண்டலமு நீருங் கரக மாகும்.

கரகம் என்பது:—நீர்த்துளி, மழைக்கட்டி, கங்கை, கமண்டலம், நீர். (ரு)

கரணம்.

272. காரணமுங் கூத்தின் விகற்பமு மனத்தின்
பகுதியுங் கணிதமுங் கரணமென லாகும்.

கரணம் என்பது:—காரணம், கூத்தின் ஓர் விகற்பம், மனம் முதலிய அந்தக்கரணம், கணிதம். (ச)

கரண்டம்.

273. அணிகலச் செப்புநீர்க் காக்கையுங் கரண்டம்.

கரண்டம் என்பது:—பணிச்செப்பு, நீர்க்காக்கை. (உ)

கரம்.

274. கழுதைகை கிரண நஞ்சிறை கரமெனல்.

கரம் என்பது:—கழுதை, கை, சூரியகிரணம், நஞ்சு, குடியிறை. (ரு)

கரிணி.

275. கரியும் பிடியுங் கரிணி யென்ப.

கரிணி என்பது:—யானை, பெண் யானை. (உ)

கரில்.

276. காழ்த்தலுங் குற்றமுங் கொடுமையுங் கரிலெனல்.

கரில் என்பது:—கார்ப்பு, குற்றம், கொடுமை. (௩)

கரீரம்.

277. அகத்தி மிடாவே யானைப் பல்லடி
கரீர மென்று கருதப் படுமே.

கரீரம் என்பது:—அகத்தி, மிடா, யானைப்பல்லடி. (௩)

கலாபம்.

278 மேகலை யும்மணிக் கோவையு மயிலின்
றோகையுங் கலாப மெனச்சொல் லப்படும்.

கலாபம் என்பது:—மேகலை, மணிக்கோவை, மயிற்றோகை. (௩)

கலாம்.

279. கொடுமையுஞ் சினமுங் கலாமென லாகும்.
கலாம் என்பது:—கொடுமை, வெகுளி. (உ)

கலி.

280. வலியு மொலியுங் கடலுமோர் பாவுங்
கடையுகப் பெயருங் கலியென் றுரைப்பர்.
கலி என்பது:—வலிமை, ஒலி, கடல், கலிப்பா, கலியுகம். (ரு)

கலிங்கம்.

281. வானம் பாடிப் புள்ளு மாடையு
மூர்க்குருவிப் பெயரு மோர்நாடுங் கலிங்கம்.
கலிங்கம் என்பது:—வானம்பாடி, சீலை, ஊர்க்குருவி, ஓர் தேயம். (ச)

கலை.

282. மகரமுந் துகிலு மரத்தின் கவடும்
பிறைநிரம் புதலு மாண்முசுப் பெயரு
மாணி மேனுங் கல்வியுஞ் சேருங்
கால நுட்பமு நூலுங் கலையெனல்.
கலி என்பது:—மகரமீன், சீலை, மரக்கொம்பு, பிறை நிரம்பல், ஆண் முசு, ஆண்மான், வித்தை, வயிரம், கால நுட்பம், நூல். (௰)

கல்.

283. அருவியி னோசையுஞ் சிலையுங் கல்லெனல்.
கல் என்பது:—அருவியின் ஒலிக்குறிப்பு, கல். (உ)

கவடு.

284. புரோசைக் கயிறுங் கப்புங் கவடு
கவடு என்பது:—யானைக்கயிறு, மரக்கொம்பு. (உ)

கவந்தம்.

285. புனலுஞ் செக்கும் புகன்றிடு கடியுந்
தலைக்குறைப் பிணமுங் கவந்த மாகும்.
கவந்தம் என்பது:—நீர், செக்கு, பிசாசம், தலைக்குறைப் பிணம். (ச)

கவலை.

286. கவர்நெறி யச்சஞ் செந்தினை கவலை.
கவலை என்பது:—கவர்வழி, அச்சம், செந்தினை. (௩)

கவனம்.

287. காடும் விரைவுங் கவன மென்ப.

கவனம் என்பது:—காடு, சீக்கிரம். (உ)

கவி.

288. குதிரை வாய்பெய் கருவியுங் குரங்கும்
புலமையி லொன்றும் வெள்ளியுங் கவியெனல்.

கவி என்பது:—கடிவாளம், குரங்கு, கவி, சுக்கிரன். (ச)

கவிகை.

289. குடையுங் கொடுத்தலுங் கூறுப கவிகை.

கவிகை என்பது:—குடை, ஈதல். (உ)

கவை.

290. எள்ளிளங் காயு மாயிலிய நாளுங்
கவருங் காடுங் கவையென லாகும்.

கவை என்பது:—எள்ளிளங்காய், ஆயிலிய நட்சத்திரம், மரக்கப்பு, காடு. (ச)

கழி.

291. நுகத்தொளை கோப்பது மிகுதிப் பெயருங்
கடற்புறத் தமர்வதுங் கழியென் ருகும்.

கழி என்பது:—நுகத்தொளைக்கழி, மிகுதி, உப்பளம். (௩)

கழிவு.

292. காலி மிகுதியுங் கழிவென லாகும்.

கழிவு என்பது:—கழிவு நாள், மிகுதி. (உ)

கழுது.

293. பேயும் வண்டும் பாணுங் கழுதே.

கழுது என்பது:—பிசாசம், வண்டு, பரண். (௩)

கழை.

294. கருப்பு மூங்கிலும் புனர்தமுங் கழையெனல்.

கழை என்பது:—கரும்பு, மூங்கில், புனர்பூச நாள். (௩)

களபம்.

295. களபமும் யானைக் கன்றுங் களபம்.

களபம் என்பது:—கலவைச்சாந்து, யானைக்கன்று. (உ)

களம்.

296. கருநிற முஞ்செருக் களமுங் கழுத்துங்
களரும் விடமு மிடமுங் களமே.

களம் என்பது:—கறுப்பு, போர்க்களம், கழுத்து, களர் நிலம், விடம், இடம். (௬)

களரி.

297 காடுஞ் செருச்செய் களமுங் களரி.

களரி என்பது:—காடு, போர்க்களம். (௨)

களிறு.

298. ஏனமுஞ் சுறாமுத லிவற்றி னேறும்
யானையு மத்த நாளுங் களிறே.

களிறு என்பது:—ஆண் பன்றி, ஆண் சுறா, ஆண் யானை, அத்த நட்சத்திரம். (௪)

கள்.

299. மதுவுந் தேனுஞ் சோர்வுங் கள்ளாம்.

கள் என்பது:—கள், தேன், களவு (௩)

கள்வன்.

300. கடகரிப் பெயருங் கருநிற மகனுங்
கர்க்கடக விராசியு ஞெண்டுங் கள்வன்.

கள்வன் என்பது:—யானை, கரியவன், கர்க்கடக இராசி, ஞெண்டு. (௪)

கறங்கு.

301. சத்த வொலியுஞ் சுழலுங் கறங்கே.

கறங்கு என்பது:—சத்தவொலி, சுற்றுதல். (௨)

கறுப்பு.

302. கருநிற முஞ்சினக் குறிப்புங் கறுப்பே.

கறுப்பு என்பது:—கருநிறம், சினக்குறிப்பு. (௨)

கறை.

303 உதிரமு மாசு முரலு நிறமுங்
கடுவு மிறையுங் கருமையுங் கறையே.

கறை என்பது:—இரத்தம், குற்றம், உரல், நிறம், விடம், குடியிறை, கறுப்பு. (௭)

கனம்.

304. பாரமு மேகமுங் கனமெனப் படுமே.
கனம் என்பது:—பாரம், மேகம். (உ)

கனலி.

305. தினகரனு மங்கியுங் கனலி யென்ப.
கனலி என்பது:—சூரியன், நெருப்பு. (உ)

கன்று

306. ஆன்கன் றினமுஞ் சிறுமையுங் கையின்
வளையு மிளைய மரமுங் கன்றே.
கன்று என்பது:—பசுவின் கன்று, சிறுமை, கைவளை, மரக்கன்று. (ச)

கன்னல்.

307. நாழிகையு நாழிகை வட்டிலுங் கட்டியுங்
காகமுங் கரும்புங் கன்னலென் றாகும்.
கன்னல் என்பது:—நாழிகை, நாழிகை வட்டில், சருக்கரை, காகம், கரும்பு. (ரு)

கன்னி.

308. அழிவின் மாதரு மழிவில் பொருளு
மிளமையு மத்த நாளு மிராசியுங்
கவுரியுந் துர்க்கையும் யாறுங் கன்னி.
கன்னி என்பது:—அழிவில் மாதர், அழிவில் பொருள், இளமை, அத்தநட்சத்திரம், ஓர் இராசி, பார்வதி, துர்க்கை, ஓர் யாறு. (அ)

கா.

309. சோலையுந் தோட்சுமையுந் துலாமுங் காவெனல்.
கா என்பது:—சோலை, தோள் சுமை, ஓர் நிறை. (ங)

காகுளி.

310. இசைமிடற் றோசை தவிசிவை காகுளி.
காகுளி என்பது:—இசை, மிடற்று எழும் ஓசை, ஆசனம். (ங)

காசு.

311. குற்றமு மணியுங் கோழையுங் காசே.
காசு என்பது:—குற்றம், மணிப்பொது, கோழை. (ங)

காசை

312. நாணல் புற்பிடி காசை யென்ப.
காசை என்பது:—நாணல், புற்பிடி. (உ)

காஞ்சி.

313. ஒருமரப் பெயரு மோரிசைப் பெயருங்
கச்சிப் பதியு மேகலையுங் காஞ்சி.
காஞ்சி என்பது:—ஓர் மரம், ஓர் இசை, கச்சிப்பதி, மேகலை. (ச)

காடு.

314. கானு மிடமுங் காடெனலாகும்.
காடு என்பது:—கானம், இடம். (உ)

காண்டம்.

315. இடுதிரைப் பெயரும் படலமுங் காண்டம்.
காண்டம் என்பது:—திரைச்சீலை, படலம். (உ)

காண்டை.

316 தவத்தோ ரிடமுங்கற் பாழியுங் காண்டை.
காண்டை என்பது:—முனிவர் வாசம், கற்பாழி. (உ)

காத்திரம்.

317. யாக்கையு முறுப்பும் யானைமுன் காலுஞ்
சீற்றமுங் கனத்தலுங் காத்திர மாகும்.
காத்திரம் என்பது:—உடல், உறுப்பு, யானையின் முன்கால், கோபம், பருமம். (ரு)

காந்தாரம்.

318. காடுமோ ரிசையுங் காந்தார மாகும்.
காந்தாரம் என்பது:—காடு, ஓர் இசை. (உ)

காப்பு.

319. புரிசையு முள்ளுயர் நிலமுங் காப்பெனல்.
காப்பு என்பது:—மதில், உள்ளுயர் நிலம். (உ)

காமரம்.

320. இசையிசைப் பொதுப்பெய ரடுப்புங் காமரம்.
காமரம் என்பது:—ஓர் இசை, இசைப்பொது, அடுப்பு. (ங)

காயம்.

321. காழ்த்தலும் யாக்கையுங் காய மென்ப.
காயம் என்பது:—கரிப்பு, உடல். (உ)

காரி.

322. வடுகக் கடவுளுஞ் சனியுஞ் சாத்தனுங்
கருமையு மொருபுள் ளுங்காரி யாகும்.
காரி என்பது:—வைரவன், சனி, ஐயன், கருமை, கரிக்குருவி, (ரு)

கார்.

323. கருதிய கருமங் கடைமுடி வளவுந்
தவிராச் சினமும்வெள் ளாடும் புனலு
நாகமு மேகமுந் தமமு மழைபடு
காலமுங் கருமையுங் காரெனுங் கட்டுரை.
கார் என்பது —கருதிய கருமம் முடியுங்காறும் கொள்ளும் கோபம், வெள்ளாடு, நீர், கருங்குரங்கு, மேகம், இருள், கார் காலம், கறுப்பு. (அ)

இதுவுமது.

324. ஆகு மயிரு மழகுமற் றதற்கே.
ஷ்டி கார் என்பது:—எலிமயிர், அழகு. (உ)

கார்த்திகை.

325. கொற்றவை யோர்நாண் மாதமுங் கார்த்திகை.
கார்த்திகை என்பது:—துர்க்கை, ஓர் நாள், ஓர் மாதம். (ங)

காலம்.

326. காலையும் விடியலுங் கால மாகும்.
காலம் என்பது:—பொழுது, விடியல். (உ)

கால்.

327. காலே வலிமையுங் காற்றுங் கூற்றுந்
தாளும் பொழுதுங் குறியும் வழியு
மளவையுந் தேரி னுருளு மாகும்.
கால் என்பது:—வலிமை, காற்று, காலன், பாதம், பொழுது, குறுந்தறி, வழி, அளவு, தேருருள். (கூ)

காவி.

328 கள்ளுங் குவளையு மோர் கல்லுங் காவி.
காவி என்பது:—கள், கருங்குவளை, காவிக்கல். (௩)

காழகம்.

329 கருநிறமும் புடைவையுங் கடாரமுங் காழகம்.
காழகம் என்பது:—கருமை, ஆடை, கடாரம் என்னும் ஊர். (௩)

காளம்.

330 காளங் கழுவுங் கறுப்பு நஞ்சும்
வாத்தியத் தொன்றும் வகுக்கப் படுமே.
காளம் என்பது:—கழுமரம், கருமை, விடம், ஓர் வாத்தியம். (௪)

காளை.

331 பாலைத் தலைவனுஞ் சிறுவனுங் காளை.
காளை என்பது:—பாலைநிலத் தலைவன், இளையோன். (௨)

கானம்.

332 காடு மிசையுங் கான மாகும்.
கானம் என்பது:—காடு, இசை. (௨)

கானல்.

333 கழிக்கரைச் சோலையு மலைப்புறச் சோலையுங்
கதிரவ னொளியுங் கழியும்பேய்த் தேரு
முவரு முரம்புமுப் பளமுங் கானல்.
கானல் என்பது:—கடற்கரைச் சோலை, மலைச்சார் சோலை, சூரிய கிரணம், கழி, பேய்த்தேர், உவர், களர் நிலம், உப்பளம். (அ)

கான்.

334 காடுங் கந்தமுங் கானென மொழிப.
கான் என்பது:—காடு, மணம். (௨)

கிஞ்சுகம்.

335 செந்நிற மும்முண் முருக்குங் கிஞ்சுகம்.
கிஞ்சுகம் என்பது:—செவப்பு, முண்முருக்கு. (௨)

கிடக்கை.

336 தராதலப் பெயருஞ் சயனமுங் கிடக்கை.
கிடக்கை என்பது:—பூமி, மக்கள் படுக்கை. (௨)

கிடுகு

337 பலகையுந் தேர்மரச் சுற்றுங் கிடுகெனல்.
கிடுகு என்பது:—கேடகம், தேர் மரச்சுற்று. (உ)

கிட்டி.

338. தாளமுந் தலையீற்றுப் பசுவுங் கிட்டி.
கிட்டி என்பது:—கைத்தாளம், தலையீற்றுப்பசு. (உ)

கிம்புரி.

339. முடியின துறப்புந் தாங்கியுங் கிம்புரி.
கிம்புரி என்பது:—முடியுறுப்பு, பூண். (உ)

கிழமை.

340. வாரமுங் குணமுங் காணியுங் கிழமை.
கிழமை என்பது:—வாரம், குணம், உரிமை. (ங)

கிளர்.

341. ஒளியுங்கோட் டின்மலர்த் தாதுங் கிளரும்.
கிளர் என்பது:—ஒளி, பூந்தாது. (உ)

கிளை.

342. கேளு மூங்கிலும் யாழிசை யுங்கிளை.
கிளை என்பது:—உறவு, மூங்கில், யாழிசை. (ங)

கிள்ளை

343. கிளியுங் குதிரையுங் கிள்ளை யெனப்படும்.
கிள்ளை என்பது:—கிளி, குதிரை. (உ)

கின்னரம்.

344. யாழின் பெயருநீர்ப் பறவையுங் கின்னரம்.
கின்னரம் என்பது:—வீணை, நீர்வாழ் பறவை. (உ)

கீசகம்.

345. குரங்கு மூங்கிலுங் கீசக மாகும்.
கீசகம் என்பது:—குரங்கு, மூங்கில். (உ)

கீரம்.

346 கிளியும் பாலுங் கீர மாகும்.
கீரம் என்பது:—கிளி, பால். (உ)

குக்குடம்.

347. கோழியும் பறவை நாகமுங் குக்குடம்.
குக்குடம் என்பது:—கோழி, பறவை நாகம். (உ)

குசலம்.

348. குணமுமாட் சிமையுங் குசல மென்ப.
குசலம் என்பது:— குணம், மாட்சிமை. (உ)

குஞ்சம்.

349. குறளு நாழியுங் குறளையுங் குஞ்சம்.
குஞ்சம் என்பது:—குறமை, நாழி, கோட்சொல்லல். (ங)

குஞ்சி.

350. குன்றியு மாண்பான் மயிருங் குஞ்சி.
குஞ்சி என்பது:— குன்றிக்கொடி, ஆண் மயிர். (உ)

குடம்.

351 பதினோ ராடலி லொன்றுங் கொட்டிக்கை குவித்த
கும்பமும் பசுவு நகரமுங் கரும்பின் [லுங்
கட்டியு மிடங்கருங் குடமெனக் கழறும்.
குடம் என்பது:—பதினொரு ருத்திரர் ஆடலில் ஒன்று, கைகொட்டிக் குவித்தல், கும்ப இராசி, பசு, நகரம், சருக்கரை, மடம். (எ)

குடம்பை.

352 குடம்பை முட்டையுங் கூடு மாகும்.
குடம்பை என்பது:—முட்டை, பறவைக்கூடு. (உ)

குடி.

353 ஊர்ப்பொதுப் பெயரும் புருவமு மன்றிக்
குலமுங் கோத் திரமுங் குடியென் றாகும்.
குடி என்பது:—ஊர்ப்பொது, புருவம், குலம், கோத்திரம். (ச)

குடிஞை.

354 கூகையும் புட்பொதுவும் யாறுங் குடிஞை.
குடிஞை என்பது:—கோட்டான், பறவைப்பொது, யாறு. (ங)

குடுமி.

355 கொற்றமு முச்சியு மயிருங் குடுமி.
குடுமி என்பது:—வெற்றி, உச்சி, ஆண் மயிர். (ங)

குணம்.

356. குடமு நிறமு நூலுங் குணமெனல்.
குணம் என்பது:—குடம், நிறம், நூல். (௩)

குணில்.

357. குறுந்தடியுங் கடிப்புங் கவணுங் குணிலே.
குணில் என்பது:—குறுந்தடி, பறையடிக்கும் தடி, கவண். (௩)

குணுங்கர்.

358. தோற்கருவி யோரும் புலைஞருங் குணுங்கர்.
குணுங்கர் என்பது:—தோற்கருவியாளர், சண்டாளர். (௨)

குண்டலம்.

359 குண்டலம் விசும்புங் குழையு மாகும்.
குண்டலம் என்பது:—ஆகாயம், காதணி. (௨)

குண்டு.

360. துலையுங் குதிரையு மாழமுங் குண்டெனல்.
குண்டு என்பது:—நிறை கல், ஆண் குதிரை, ஆழம். (௩)

குத்திரம்.

361 மலையின் பெயரும்வஞ் சனையுங் குத்திரம்.
குத்திரம் என்பது:—மலை, வஞ்சகம். (௨)

குமரி.

362. யாமளை விந்தை யழிவிலா மாத
ரேழ்மா தர்களி லெண்ணு மோரணங்
கோர்நதிப் பெயருங்கற் றாழையுங் குமரி.
குமரி என்பது:—காளி, துர்க்கை, கன்னி, சப்த மாதர்களில் ஒருத்தி, ஓர் நதி, கற்றாழை. (௬)

குமுதம்.

363. நெடுந்திசை யானையி லொன்று நெய்தலு
மடுப்பு மொலியுந் தருப்பையுங் குமுதம்.
குமுதம் என்பது:—தென்மேற்றிசை யானை, ஆம்பல், அடுப்பு, பேரொலி, தருப்பை. (௫)

கும்பம்.

364. வெஞ்சரி நெற்றியு மிக்கநீர்க் குடமுங்
கும்ப விராசியுங் கும்ப மாகும்.

கும்பம் என்பது:—யானை மத்தகம், குடம், ஓர் இராசி. (௩)

கும்பி.

365. யானையு நரகமுஞ் சேறுங் கும்பி.

கும்பி என்பது:—யானை, நரகம், சேறு. (௩)

குயம்.

366 கொங்கையு மரிவாளுங் குயமெனப் படுமே.

குயம் என்பது:—முலை, அரிவாள். (௨)

குயில்.

367 குறித்திடு முரையுங் கோகிலமுந் தொளையு
மெண்ணுமிம் மூன்றுங் குயிலென மொழிப.

குயில் என்பது:—வார்த்தை, ஓர் பட்சி, தொளையுடைப்பொருள். (௩)

குரல்

368 கிண்கிணி மாலையுங் கிளர்நெற் கதிரும்
யாழினோர் நரம்புங் கோதையர் மயிரும்
புள்ளின் சிறகுங் குரலென மொழிப.

குரல் என்பது:—கிண்கிணிமாலை, நெற்கதிர், யாழின் ஓர் நரம்பு, பெண் மயிர், பறவையின் இறகு. (௫)

குரவை.

369. கடலுங் கைகோத் தாடலுங் குரவை.

குரவை என்பது:—கடல், கைகோத்தாடல். (௨)

குரு.

370 குரவனு நோயு நிறமும் பாரமு
மரசனுங் குருவென லாகு மென்ப.

குரு என்பது:—ஆசாரியன், வேர்க்குரு, நிறம், பாரம், அரசன். (௫)

குருகு.

371 கொல்லுலை மூக்குங் குருக்கத்தி மரமும்
வெண்மையு மூல நாரு நாரையுங்
கோழியுங் கையின் வளையுங் குருகெனல்.

குருகு என்பது:—உலைமூக்கு, குருக்கத்தி மரம், வெண்மை, மூலநாள், நாரை, கோழி, கைவளை. (எ)

குருதி.

372. செவப்புங் குசனு முதிரமுங் குருதி.

குருதி என்பது:—செந்நிறம், செவ்வாய், இரத்தம். (௩)

குருந்து.

373. குருந்த முருந்துங் குருக்கத்தியும் பிள்ளையும்.

குருந்து என்பது:—வெண்குருந்து, குருக்கத்தி மரம், குழந்தை. (௩)

குலம்.

374. இரேவதி நாளும் வருணமும் விலங்கின்
கூட்டமுங் கோயிலுங் குலமென் றாகும்.

குலம் என்பது:—இரேவதி நாள், சாதி, விலங்கின் கூட்டம், அரசர் இல். (௪)

குவடு.

375 மலையுங் கணமுங் கவடுங் குவடே.

குவடு என்பது:—மலை, திரட்சி, மரக்கொம்பு. (௩)

குவலயம்.

376. குவளையும் புவியுங் குவலய மென்ப.

குவலயம் என்பது:—குவளை, பூமி. (௨)

குழல்.

377. இருபான் மயிரு மிசையின் கருவியுந்
தொளையுடைப் பொருளுங் குழலென் றாகும்.

குழல் என்பது:—ஆண் மயிர், பெண் மயிர், இசைக்கருவி, தொளையுடைப் பொருள். (௪)

குழை.

378 ககனமுஞ் சங்குஞ் சேறுங் காடுங்
குண்டலமுந் தளிருங் குழலுங் குழையே.

குழை என்பது:—ஆகாயம், சங்கு, சேறு, காடு, குண்டலம், தளிர், தொளையுடைப் பொருள். (எ)

குளகம்.

379 குற்றெழுத்துச் செய்யுளும் மரக்காலுங் குளகம்.

குளகம் என்பது:—குற்றெழுத்துச் செய்யுள், மரக்கால். (௨)

குளம்.

380. குட்டமு நுதலுஞ் சருக்கரை யுங்குளம்.
குளம் என்பது:—குளம், நெற்றி, சருக்கரை. (௩)

குளிர்.

381. இலைமூக்கரி கருவியுஞ் சீதமுங் கவணுங்
குடமுழவு ஞெண்டுங் குளிரென லாகும்.
குளிர் என்பது:—இலைமூக்கரியும் கத்தி, குளிர்ச்சி, கவண், குடமுழவு, ஞெண்டு. (௫)

குறிஞ்சி.

382. ஐவகை நிலத்தி லோர் நிலமு மோர் மரமு
மோரிசையும் யாழு மோர் பண்ணுங் குறிஞ்சி.
குறிஞ்சி என்பது:—குறிஞ்சி நிலம், குறிஞ்சி மரம், ஓர் இசை, மருத யாழ்த்திறம், ஓர் பண். (௫)

குறும்பொறை.

383. குறிஞ்சிநிலத் தூருங் குன்றுங் காடுங்
குறும்பொறை யென்று கூறப் படுமே.
குறும்பொறை என்பது:—குறிஞ்சிநிலத்து ஊர், சிறுமலை, காடு. (௩)

குன்று.

384. வருண நாளு மலையுங் குன்றே.
குன்று என்பது:—சதய நாள், மலை. (௨)

கூடம்.

385 மனையு மறைவுங் கொல்லன்சம் மட்டியுங்
குவட்டி னுச்சியுங் கூட மாகும்.
கூடம் என்பது:—வீடு, மறைவு, கொல்லன் சம்மட்டி, மலையின் உச்சி. (௪)

கூட்டம்.

386. குழாமு மலையின் முடியுங் கூட்டம்.
கூட்டம் என்பது:—கூட்டம், மலையின் உச்சி. (௨)

கூந்தல்.

387. கோதையர் மயிருமயிற் றோகையுங் கூந்தல்.
கூந்தல் என்பது:—பெண் மயிர், மயிற்றோகை. (௨)

கூரல்.

388. கோதையர் மயிர்புட் சிறகிவை கூரல்.

கூரல் என்பது:—பெண் மயிர், பறவையின் இறகு. (உ)

கூலம்.

389. அங்காடியும் வரம்பும் புனற்கரையும் பாகலும்
பசுவும் பண்ணி காரமும் விலங்கின்
வாலுங் கூல மாகு மென்ப.

கூலம் என்பது:—கடைவீதி, வரம்பு, நீர்க்கரை, பாகல், பசு, பண்ணிகாரம், விலங்கின் வால். (எ)

கூவிரம்.

390. கொடிஞ்சியுந் தேருங் கூவிளமுங் கூவிரம்.

கூவிரம் என்பது:—தேர்க்கொடிஞ்சி, தேர், வில்வ மரம். (ங)

கூழை.

391. பெண்ணின் மயிரும் புட்சிறகுங் கூழை.

கூழை என்பது:—பெண் மயிர், பறவையின் இறகு. (உ)

கூளி.

392. ஏறும் பேயு மிடபமு மீட்டமுங்
கூளி யென்பர் குடும்பமு மதற்கே.

கூளி என்பது:—பொலிஎருது, பிசாசம், எருது, கூட்டம், உறவு. (ரு)

கூளியர்.

393. குறவரும் வீரருங் கூளிய ராகும்.

கூளியர் என்பது:—குறவர், வீரர். (உ)

கூற்று.

394. கூற்றென் கிளவி யுரையுங் காலனும்.

கூற்று என்பது:—சொல், காலன். (உ)

கேசம்.

395. ஆண்பெ ணஃறிணை மயிரிவை கேசம்.

கேசம் என்பது:—ஆண் மயிர், பெண் மயிர், பிற மயிர். (ங)

கேசரம்.

396. மலரின் றாதுமகிழ் மரமுங் கேசரம்.

கேசரம் என்பது:—பூந்தாது, மகிழ் மரம். (உ)

கேடகம்.

397. பலகையுங் கேடிலூரும் பரிசையுங் கேடகம்.
கேடகம் என்பது:—பலகை, மலைசெறிந்த ஊர், கேடகம். (௩)

கேழ்.

398. ஒளியு நிறமு மொப்புங் கேழே.
கேழ் என்பது:—ஒளி, நிறம், ஒப்பு. (௩)

கை.

399. ஒப்பனை படையுறுப் பொழுக்கஞ் சிறுமை
காமும் பின்பிறந் தாளுங் கையே.
கை என்பது:—அலங்காரம், படைவகுப்பு, ஒழுக்கம், சிறுமை, கைத்தலம், தங்கை. (௬)

கொக்கு.

400. ஒருமரப் பெயரு மூல நாளுங்
குதிரையும் விருகமுங் குரண்டமுங் கொக்கெனல்.
கொக்கு என்பது:—மா மரம், மூல நாள், குதிரை, செந்நாய், ஓர் புள். (௫)

கொடி.

401. வல்லியுங் கேதுவும் படமுங் கொடியெனல்.
கொடி என்பது:—வல்லி, கேது, துகிற்கொடி. (௩)

கொடிறு.

402. கடைவாய்ப் புறமுங் கருவிப் பற்றுங்
குருமகிழ் பூசமுங் கொடிறென வகுக்கும்.
கொடிறு என்பது:—கபோலம், குறடு, பூச நட்சத்திரம். (௩)

கொண்டல்.

403. குணக்கெழு காற்று மேகமுங் கொண்டல்.
கொண்டல் என்பது:—கீழ்காற்று, மேகம். (௨)

கொண்டை.

404. இலந்தைக் கனிமயிர் முடியிவை கொண்டை.
கொண்டை என்பது:—இலந்தைக்கனி, மயிர்முடி. (௨)

கொண்மூ.

405. கொண்மூ மேகமா காய மிரண்டே.

கொண்மூ என்பது:—மேகம், ஆகாயம். (உ)

கொந்தளம்

406. மாதர் மயிரு மற்றவர் சுருளுங்
குழலின் கொத்துங் கொந்தள மாகும்.

கொந்தளம் என்பது:—பெண்மயிர், மயிர்ச்சுருள், குழற்கொத்து. (ந)

கொம்மை.

407. கொங்கையுங் கைகுவித்துக் கொட்டலு மழகும்
வலியு மார்புந் திடருங் கொம்மை.

கொம்மை என்பது:—முலை, கைகுவித்துக் கொட்டல், அழகு, வலி, மார்பு, திடர். (சு)

கொற்றி.

408 கோவிளங் கன்று மோடியுங் கொற்றி.

கொற்றி என்பது:—பசுவின் கன்று, காடுகாள். (உ)

கோன்.

409. ஓரிடைச் சொல்லும் வறிதும் பெருமையுங்
காலமு மச்சமுங் கொன்னெனுங் கட்டுரை.

கொன் என்பது:—ஓர் இடைச்சொல், பயனின்மை, பெருமை, காலம், பயம். (ரு)

கோ.

410. ஆவுந் தலைவனு மொளியு மண்டமும்
பாருஞ் சொல்லும் பகழியுங் கண்ணுங்
குலிசமுந் திக்குஞ் சலமுங் கோவே.

கோ என்பது:—பசு, அரசன், கிரணம், ஆகாயம், பூமி, சொல், அம்பு, கண், வச்சிராயுதம, திசை, நீர். (கக)

கோகிலம்.

411. குயிலுங் குரங்குங் கோகில மென்ப.

கோகிலம் என்பது:—குயில், குரங்கு. (உ)

கோசம்.

412. மதிலுறுப் பும்பண் டாரமு முட்டையு
மாணின் குறியும்புத் தகமுங் கோசம்.

கோசம் என்பது:—மதிலுறுப்பு, கருவூலம், முட்டை, ஆண்குறி, புத்தகம். (ரு)

கோசிகம்.

413. பட்டும் புடைவையுங் கோசிக மாகும்.
கோசிகம் என்பது:—பட்டு, புடைவை. (உ)

கோடகம்.

414. குதிரையும் புதுமையும் முடியுறுப்புங் கோடகம்.
கோடகம் என்பது:—குதிரை, புதுமை, முடியுறுப்பின் ஒன்று. (ங)

கோடரம்.

415. எட்டி யும்மரக் கொம்பும் பொதும்பருங்
குதிரையுந் தேரின் மொட்டுங் கோடரம்.
கோடரம் என்பது:—எட்டி மரம், மரக்கொம்பு, சோலை, குதிரை, தேர்மொட்டு. (ரு)

இதுவுமது.

416. குரங்கின் பெயருங் கூறுவ ரதற்கே.
கோடரம் என்பது:—குரங்கு. (க) ஆ (சு)

கோடிகம்.

417. பூவின் றட்டும் புடைவையுங் கோடிகம்.
கோடிகம் என்பது:—பூந்தட்டு, சீலை. (உ)

கோடு.

418. மலையதன் முகடும் வரம்புநீர்க் கரையு
மாக்களின் மருப்பு மூது கொம்புஞ்
சங்கு மரத்தின் கொம்புங் கோடெனல்.
கோடு என்பது:—மலையின் உச்சி, வரம்பு, நீர்க்கரை, விலங்கின் கொம்பு, ஊதுகொம்பு, சங்கு, மரக்கொம்பு. (எ)

கோடை.

419. வெயிலுங் காந்தளு மேற்றிசைக் காற்றுங்
குதிரையும் வேனிலுங் கோடை யாகும்.
கோடை என்பது:—வெயில், வெண்காந்தள், மேல்காற்று, குதிரை, வேனிற்காலம். (ரு)

கோட்டம்.

420. மருத நிலத்தூர் பாசறை யிடமே
நாடு நகர மானிரை படப்பை
குரவு வளைவு கோவி லெளளிய
நறும்புதலு முண்பனவுங் கோட்ட மாகும்.

கோட்டம் என்பது: — மருதநிலத்து ஊர், பகைமேற் சென்றோர் உறை இடம், நாடு, நகரம், பசுக்கூட்டம், தோட்டம், குராமரம், கோணல், கோவில், அழுக்காறு, ஓர் புதல், உண்பன. (கஉ)

கோட்டி.

421. கோட்டமும் வாயிலு மலைச்சலுங் கோட்டி.

கோட்டி என்பது:—கூட்டம், கோபுரவாயில், உலைவு. (௩)

கோணம்.

422. வளைவுந் தோட்டியுங் கூனிய வாளுங்
குதிரையு மூக்குங் கோண மாகும்.

கோணம் என்பது:—வளைவு, யானைத்தோட்டி, கூன்வாள், குதிரை, மூக்கு. (௫)

கோணல்.

423. கூனும் வளைவுங் கோண லென்ப.

கோணல் என்பது:—கூன், வளைவு. (௨)

கோதை.

424. மாலையு மாதருங் கைத்தோற் கட்டியு
முடம்புங் குழலுங் காற்றுஞ் சேரனு
மொழுங்கு மியமுங் கோதை யென்ப.

கோதை என்பது:—பூமாலை, பெண், கைத்தோற்கட்டி, உடம்பு, பெண் மயிர், காற்று, சேரன், ஒழுங்கு, மரக்காற்பறை. (௯)

கோத்திரம்.

425. குடியு மலையுங் கோத்திர மாகும்.

கோத்திரம் என்பது:—குடி, மலை. (௨)

கோரம்.

426. கொடுமையும் வட்டிலுங் குதிரையுங் கோரம்.

கோரம் என்பது:—கொடுமை, வட்டில், சோழன் குதிரை, (௩)

கோலம்.

427. அழகு மிலந்தையு மாங்கதன் கனியும்
பன்றியும் பீர்க்கும் பாக்குநீ ரோட்டமு
கோல மென்னுங் குறியின வாகும்.

கோலம் என்பது:—அழகு, இலந்தை, இலந்தைக்கனி,
க்கு, பாக்கு, நீரோட்டம்.

கோளி.

428. பூவாது காய்க்கு மரமு மத்தியுங்
கொழிஞ்சியு மென்றிவை கோளி யெ

கோளி என்பது :— பூவாதுகாய்க்கும் மரம், அத்தி
ஞ்சி.

கோள்.

429. அலர்கதிர் முதலிய கிரக மொன்பது
வலியுங் கொள்கையும் வல்லிடை யூறுந்
கொலையும் பிசினமுங் கோளென லாகும்

கோள் என்பது:—சூரியன் முதலிய ஒன்பது கிரகம், வ
பாடு, இடையூறு, கொலை, புறங்கூறல்.

கௌசிகம்.

430. மருதயா ழிசையுங் கூகையும் பட்டுஞ்
சுடர்நிலைத் தண்டுஞ் சொல்லிற் கௌசிக

கௌசிகம் என்பது:—மருதயாழிசை, கூகை, பட்டு
தண்டு.

கௌவை

431. கள்ளுந் துன்பமும் பழிமொழியுங் கௌ

கௌவை என்பது:—கள், துன்பம், பழிச்சொல்.

மூன்றாவது

சகர வருக்கம்.

சகடம்.

432. சகடும் பண்டியுஞ் சிகாமுஞ் சகடம்.

சகடம் என்பது:—உரோகிணி நாள், பண்டி, வட்டில்,

சகுந்தம்.

433. புட்பொதுப் பெயருங் கழுகுஞ் சகுந்தம்

சகுந்தம் என்பது:—புட்பொது, கழுகு.

சகுனம்.

434. புட்பொதுவு நிமித்தமுங் கிழங்குஞ் சகுனம்.

சகுனம் என்பது:—பறவைப்பொது, நிமித்தம், கிழங்கு. (௩)

சகுனி.

435. பறவை நிமித்தம் பார்ப்பவன் சகுனி.

சகுனி என்பது:—பறவை, நிமித்தம் பார்ப்போன். (௨)

சங்கம்.

436. சங்குமோ ரெண்ணுங் கணைக்காலுஞ் சவையு
நுதலுங் கவிஞருஞ் சங்க மென்ப.

சங்கம் என்பது:—சங்கு, ஓர் இலக்கம், கணைக்கால், சவை, நெற்றி, புலவர். (௬)

சசி.

437. சசியே யிந்திரன் றாரு மதியமும்.

சசி என்பது:—இந்திராணி, சந்திரன். (௨)

சடம்.

438. கொடுமையும் பொய்யு மெய்யுஞ் சடமெனல்.

சடம் என்பது:—கொடுமை, பொய், உடல். (௩)

சடை.

439. வேணியும் வேருங் கிடையுஞ் சடையெனல்.

சடை என்பது:—பின்னல் மயிர், வேர், நெட்டி. (௩)

சதம்.

440. எண்ணும் புள்ளி னிறகுஞ் சதமெனல்.

சதம் என்பது:—நூறு என்னும் எண், பறவையின் இறகு. (௨)

சதி.

441. தாள வொத்துமய ளுளும் வட்டமுங்
கற்பாட்டி யுஞ்சோறுஞ் சதியென லாகும்.

சதி என்பது:—தாளவொத்து, உரோகிணி நாள், வட்டம், கற்புடையாள், சோறு. (௫)

சத்தி.

442. ஓங்கிய வுமையும் வேலுங் குடையுங்
கான்றலும் வலியுஞ் சூலமுஞ் சத்தி.

சத்தி என்பது:—பார்வதி, வேலாயுதம், குடை, கக்கல், வலிமை, சூலம். (௬)

சத்திரம்.

443. அதிசயம் விடாப்படை குடையிரும் பூண்சாலை
வேள்வியும் வேலுஞ் சத்திர மாகும்.

சத்திரம் என்பது:—அதிசயம், கைவிடாப்படை, குடை, இரும்பு, அன்னசாலை, யாகம், வேல், (௭)

சந்தி.

444. அந்திப் பெயருங் கழையுந் தெருவின்
சந்தியு மிசைப்புஞ் சந்தி யாகும்.

சந்தி என்பது :—அந்திப்பொழுது, மூங்கில், நான்கு தெரு கூடும் இடம், இசைப்பு. (௪)

சமன்.

445. நடுவு நமனுஞ் சமனு மாமே.

சமன் என்பது:—நடு, நமன். (௨)

சமித்தல்.

446 பொறுத்தலு நடத்தலுஞ் சமித்த லென்ப.

சமித்தல் என்பது:—பொறுத்தல், நடத்தல். (௨)

சம்பு.

447. சங்கரனு மாலு மயனு மருகனு
நரியு நாவலுஞ் சம்பு வாகும்.

சம்பு என்பது:—சிவன், திருமால், பிரமன், அருகன், நரி, நாவல் மரம். (௬)

சரகம்.

448. தேனீப் பெயரும் வண்டுஞ் சரகம்.

சரகம் என்பது:—தேனீ, வண்டு. (௨)

சரணம்.

449. தாளு நகரமு மறைபுகலுஞ் சரணம்.

சரணம் என்பது:—கால், மருதநிலத்தூர், அடைக்கலம் புகுதல்.(௩)

சரபம்.

450. தனிவரை யாடுஞ் சிம்புள் சரபம்.

சரபம் என்பது:—மலையாடு, எண்காற்புள். (௨)

சரம்.

451. மணிவட மூங்கொறுக் கச்சியு மம்புந்
தனிமையு நடையுமோ ரிருதுவுஞ் சரமே.

சரம் என்பது:—மணிவடம், கொறுக்கை, அம்பு, தனிமை, நடை, ஓர் இருது. (சு)

சரி.

452. வழிதிரள் கைவளை சரியென லாகும்.

சரி என்பது:—வழி, கூட்டம், கைவளை. (௩)

சலாகை.

453. நாராசமுஞ் சவளமு நன்மணியுஞ் சலாகை.

சலாகை என்பது:—நாராசம், ஈட்டி, தெய்வ அகன்மணி. (௩)

சலாங்கு.

454. பொய்யாப் புள்ளு மசகமுஞ் சலாங்கே.

சலாங்கு என்பது—பொய்யாப்புள், ஒருவகைக் கொதுகு. (௨)

சல்லியம்.

455. சல்லியஞ் செஞ்சாந் தெய்யென்பு பாணம்.

சல்லியம் என்பது—செஞ்சந்தனம், முட்பன்றி, எலும்பு, அம்பு (௪)

சவட்டல்.

456. சுவைத்தலுங் கோறலுஞ் சவட்ட லாகும்.

சவட்டல் என்பது—மெல்லல், கொல்லல். (௨)

சவம்.

457. பிணமு மூங்கிலுஞ் சவமென லாகும்.

சவம் என்பது—பிணம், மூங்கில். (௨)

சவி.

458. அழகுமணிக் கோவையுஞ் சுவையுஞ் செவ்வையுஞ்
சாறுவுங் காந்தியுஞ் சவியென லாகும்.

சவி என்பது:—அழகு, சரமணிக்கோவை, சுவை, செவ்வை, திருவிழா, ஒளி. (சு)

சாகம்.

459. கொச்சை சிறுகீரை தேக்குச் சாகம்.

சாகம் என்பது:—வெள்ளாடு, சிறுகீரை, தேக்க மரம். (௩)

சாகினி.

460. கீரைத் திரளுஞ் சேம்புஞ் சாகினி.
சாகினி என்பது:—கீரை, சேம்பு. (உ)

சாடி.

461 சாடி கோண்மொழி தாழி புடைவையாம்.
சாடி என்பது:—புறங்கூறல், தாழி, சீலை. (௩)

சாதகம்.

462 பூதமும் வானம் பாடிப் புள்ளுஞ்
சாதக மென்பர் சனனமு மதற்கே.
சாதகம் என்பது:—பூதம், வானம்பாடி, சனனம். (௩)

சாதம்.

463. சாத மெய்யுஞ் சோறும் பிறப்புமாம்.
சாதம் என்பது:—உண்மை, அன்னம், பிறப்பு. (௩)

சாதி.

464. தேறலுங் குலமுஞ் சிறுசண் பகமுந்
தேக்கும் பிரம்புஞ் சாதி யென்ப.
சாதி என்பது:—கள், குலம், சிறுசண்பகம், தேக்கமரம், பிரம்பு. (௫)

சாபம்.

465. சபித்தலும் வில்லுஞ் சாப மென்ப.
சாபம் என்பது:—சபித்தல், வில். (உ)

சாமம்.

466. யாமமும் வேதமு மிரவும் பச்சையுஞ்
சாம மென்பர் கறுப்புஞ் சாற்றும்.
சாமம் என்பது:—யாமம், மூன்றாம் வேதம், இரவு, பசுமை, கருமை. (௫)

சாமி

467. குரவனும் பொன்னுந் தலைவனு முருகனு
மருகனு மிளமை யாட்டியுஞ் சாமி.
சாமி என்பது:—குரு, பொன், தலைவன், முருகக்கடவுள், அருகன், தலைவி. (௬)

சாம்பல்.

468. அடலையொடுங் கலபழம் பூவிவை சாம்பல்.
சாம்பல் என்பது:—சாம்பல், ஒடுங்கல், பழம்பூ. (௩)

சாரங்கம்.

469. சாதகப் புள்ளு மானுஞ்சா ரங்கம்.
சாரங்கம் என்பது:—சாதகப்புள், மான். (௨)

சாரம்.

470. அதக மினிமை மரச்சேகுஞ் சாரம்.
சாரம் என்பது:—மருந்து, இனிமை, மரவயிரம். (௩)

சாரல்.

471. மலையின் பக்கமு மருத யாழ்த்திறத்
தோரிசைப் பெயருஞ் சார லென்ப.
சாரல் என்பது:—மலைப்பக்கம், மருதயாழ்த்திறத்து ஓர் இசை. (௨)

சாரிகை.

472. மண்டில வரவுநா கணவாய்ப் புள்ளுஞ்
சுங்கமுஞ் சுழல்காற்றுஞ் சாரிகை யாகும்.
சாரிகை என்பது:—வட்டமாய் ஓடல், நாகணவாய்ப்புள், சுங்கம், சுழல்காற்று. (௪)

சார்ங்கம்.

473. மாயோன் றனுவொடு வில்லுஞ் சார்ங்கம்.
சார்ங்கம் என்பது:—மாயோன் வில், வில். (௨)

சாலம்.

474. மதிலாச் சாமரம் வலைசா லேகஞ்
சவையுங் குறளை மொழியுஞ் சாலம்.
சாலம் என்பது:—மதில், ஆச்சா மரம், வலை, சாளரம், சவை, குறளை மொழி. (௬)

சாலி.

475. நெற்பொது வேரி யருந்ததி சாலி.
சாலி என்பது:—நெற்பொது, கள், அருந்ததி. (௩)

சாலேகம்.

476. வாதா யனமு மலர்மொட்டுஞ் சாலேகம்.
சாலேகம் என்பது:—சாளரம், பூ அரும்பு. (௨)

சாலை.

477. கோயிலுங் குதிரைப் பந்தியுஞ் சாலை.
சாலை என்பது:—கோயில், குதிரைப்பந்தி. (உ)

சாறு.

478. விழவுங் குலையும் வேரியுஞ் சாறே.
சாறு என்பது:—திருவிழா, மாக்குலை, கள். (௩)

சானகி.

479. மூங்கிலுந் திருவுஞ் சானகி யென்ப.
சானகி என்பது:—மூங்கில், சீதை. (உ)

சானு.

480. மலையுமலைப் பக்கமு முழந்தாளுஞ் சானு.
சானு என்பது:—மலை, மலைச்சாரல், முழந்தாள். (௩)

சான்றோன்.

481. மிருகசீ ரிடமு மிக்கோன் பெயரும்
பெருகிய கதிரின் பெயருஞ் சான்றோன்.
சான்றோன் என்பது:—மிருகசீரிட நட்சத்திரம், அறிஞன், சூரியன். (௩)

சிகண்டி.

482. மயிலும் பாலையாழ்த் திறத்தோ ரோசையு
மலியுஞ் சிகண்டி யாமென விளம்புவர்.
சிகண்டி என்பது:—மயில், பாலையாழ்த்திறத்து ஓர் ஓசை, அலி. (௩)

சிகரி.

483. எலியுங் கருநா ரையுமிவை சிகரி.
சிகரி என்பது:—எலி, கருநாரை. (உ)

சிகழிகை.

484. மயிர்முடி வாசிகை கோவை சிகழிகை.
சிகழிகை என்பது:—மயிர்முடி, தொடுத்தமாலை, கோத்தமாலை. (௩)

சிகி.

485. கேதுவு மயிலு நெருப்புஞ் சிகியே.
சிகி என்பது:—கேது, மயில், தீ. (௩)

சிக்கம்.

486. குடுமியு மூறியுஞ் சீப்புஞ் சிக்கம்.
சிக்கம் என்பது:—குடுமி, உறி, சீப்பு. (௩)

சிதடன்.

487. குருடனு மறிவில் லோனுஞ் சிதடன்.
சிதடன் என்பது:—குருடன், அறிவில்லான். (௨)

சிதம்.

488. சிதம்வான் மீனும் வெளுப்பு ஞானமு
மாகுஞ் சயமுறப் படலு மாகும்.
சிதம் என்பது:—நட்சத்திரம், வெண்மை, ஞானம், ஜயம் அடையப்படல். (௪)

சிதர்.

489. துவலையும் வண்டுந் துணியுஞ் சிதரே.
சிதர் என்பது:—மழைத்துவலை, வண்டு, சீலைத்துணி. (௩)

சிதலை.

490. செல்லுந் துணியு நோயுஞ் சிதலை.
சிதலை என்பது:—கறையான், சீலைத்துணி, பிணி. (௩)

சித்திரம்.

491. அழகுங் காடோ மணக்குஞ் செய்கோல்
வடிவும் பொய்யை மெய்யாப் புணர்த்தலுஞ்
சிறப்புமவிம் மிதமுமோர் பாடலுஞ் சித்திரம்.
சித்திரம் என்பது:—அழகு, காடு, ஆமணக்கு, சித்திரம், மெய்போல் பொய்கூறல், சிறப்பு, அதிசயம், ஓர் கவி. (அ)

சிந்து.

492. நீருந் தேசமும் யாறும் கடலுங்
கூறுமுச் சீருங் குறளுஞ் சிந்து.
சிந்து என்பது:—நீர், ஓர் தேசம், ஓர் யாறு, கடல், முச்சீரடி, குறள் வடிவு. (௬)

சிந்தூரம்.

493. திலகமுஞ் செந்நிறமுஞ் செங்குடையும் புளியும்
யானையும் யானைமுக முஞ்சிந் தூரம்.

சிந்தூரம் என்பது:—திலதம், செவப்பு, செங்குடை, புளியமரம், யானை, யானை முகம். (௬)

சிமிலி.

494. சிள்வீடு முறியுங் குடுமியுஞ் சிமிலி.
சிமிலி என்பது:—சிள்வண்டு, உறி, குடுமி. (௩)

சிமையம்.

495. சிகரமு மலையுஞ் சிமைய மாகும்.
சிமையம் என்பது:—மலையுச்சி, மலை. (௨)

சிரகம்.

496. வட்டிலுந் தலைத்தி ராணமுஞ் சிரகம்.
சிரகம் என்பது:—கரகம், தலைச்சீரா. (௨)

சிலீமுகம்.

497. அம்பு முலைக்கண் ணு ளரியுஞ் சிலீமுகம்.
சிலீமுகம் என்பது:—அம்பு, முலைக்கண், வண்டு. (௩)

சிலை.

498. வின்மலை யோர்மரஞ் சிராவண முஞ்சிலை.
சிலை என்பது:—வில், மலை, ஓர் மரம், கல். (௪)

சில்லி.

499. தேருருளுங் கீரையும் வட்டமுஞ் சில்லி.
சில்லி என்பது:—தேருருள், சிறுகீரை, வட்டம். (௩)

சில்லை.

500. பகண்டையுஞ் சிள்வீடுங் கிலுகிலுப் பையுஞ்சில்லை.
சில்லை என்பது:—பகண்டை, சிள்வண்டு, கிலுகிலுப்பை. (௩)

சிவை.

501. கொல்லுலை மூக்குங் கோமா னிடத்துறை
செல்விப் பெயரும் வேருஞ் சிவையெனல்.
சிவை என்பது:—உலைமூக்கு, பார்வதி, வேர். (௩)

சிறுமை.

502. துக்கமு நோயு மற்பமுஞ் சிறுமை.
சிறுமை என்பது:—துக்கம், நோய், அற்பம். (௩)

சிறை.

503. புள்ளி னிறகுங் கரையின் பக்கமு
மேரியு மிடமுங் காவலுஞ் சிறையே.

சிறை என்பது:—பறவையின் இறகு, கரையின் பக்கம், ஏரி, இடம், காவல். (ரு)

சினை.

504. கருவின் பெயரு முட்டையு முறுப்புஞ்
செழுமரக் கோடுஞ் சினையென லாகும்.

சினை என்பது:—கருப்பம், முட்டை, உறுப்பு, மரக்கொம்பு. (சு)

சீகரம்.

505. மலையு மதன்சேண் முகடுஞ் சிரமுந்
திரையுந் துவலையுங் கரமுஞ் சீகரம்.

சீகரம் என்பது:—மலை, மலையுச்சி, தலை, அலை, மழைத்துவலை, கரகம். (அ)

சீதம்.

506. குளிரும் புனலு மேகமுஞ் சீதம்.

சீதம் என்பது:—குளிர்ச்சி, நீர், மேகம். (க)

சீப்பு.

507. கதவின் றாழுங் கங்கமுஞ் சீப்பே.

சீப்பு என்பது:—கதவின் தாழ், மயிர்சீவும் சீப்பு. (உ)

சீருள்.

508. செம்பு மீயமு மாக்கமுஞ் சீருள்.

சீருள் என்பது:—செம்பு, ஈயம், செல்வம். (ங)

சீர்.

509. தாளமுஞ் செல்வமுந் தண்டா யுதமுஞ்
சீர்த்தியுங் காவும் பாரமுஞ் சீரெனல்.

சீர் என்பது:—தாளவொத்து, செல்வம், தண்டாயுதம், மிகு புகழ், துலாம், கனம். (ச)

சீவனி.

510. செவ்வழி யாழ்த்திறத் தோரிசைப் பெயரு
முயிர்தரு மருந்துஞ் சீவனி யாகும்.

சீவனி என்பது:—செவ்வழி யாழ்த்திறத்தின் ஓர் ஓசை, உயிர்தரும் மருந்து. (உ)

சீவன்.

511. வியாழமு முயிருஞ் சீவ னென்ப.
சீவன் என்பது:—பிரகற்பதி, உயிர். (உ)

சுகம்.

512. இன்பமுங் கிளியுஞ் சுகமெனெ விளம்புவர்.
சுகம் என்பது:—இன்பம், கிளி. (உ)

சுக்கை.

513. மாலையும் வான மீனுஞ் சுக்கை.
சுக்கை என்பது:—பூ மாலை, நட்சத்திரம். (உ)

சுசி.

514. சுசியே சுத்தமுங் கோடையு மன்றி
யனலின் பெயர்க்கு மபிதா னம்மே.
சுசி என்பது:—சுத்தம், கோடைக்காலம், நெருப்பு. (ங)

சுடர்.

515. தழலும் விளக்குஞ் சந்திரா தித்தரு
மொளியுஞ் சுடரென் றுரைத்தனர் புலவர்.
சுடர் என்பது:—நெருப்பு, விளக்கு, சந்திரன், சூரியன், ஒளி. (ரு)

சுடிகை.

516. சுட்டி மணிமுடி யுச்சி சுடிகை.
சுடிகை என்பது:—நெற்றிச்சுட்டி, கிரீடம், உச்சி. (ங)

சுண்டன்.

517. சூரனுஞ் சதய நாளுஞ் சுண்டன்.
சுண்டன் என்பது:—மூஞ்சூறு, சதய நாள். (உ)

சுதை.

518. சுடுசுண்ணச் சாந்தும் புதல்வியு மமிழ்துங்
கறவாத் தேனுஞ் சுதையென லாகும்.
சுதை என்பது:—சுண்ணச்சாந்து, மகள், அமிழ்து, உதைகாற் பசு. (ச)

சுந்தரி.

519. சூானுஞ் சசியுந் துர்க்கையுஞ் சுந்தரி.
சுந்தரி என்பது:—மூஞ்சூறு, இந்திராணி, துர்க்கை. (௩)

சுபம்.

520. தரும நன்மை மோக்கமுஞ் சுபமே.
சுபம் என்பது:—தருமம், நன்மை, மோட்சம். (௩)

சும்மை.

521. ஊர்ப்பொதுப் பெயரு நாடுஞ் சுமையும்
மொலியு நெற்போரும் பொருஞ் சும்மை.
சும்மை என்பது:—ஊர்ப்பொது, நாடு, சுமை, சத்தம், நெற்போர். (௫)

சுரிகை.

522. மெய்புகு கருவி பத்திரஞ் சுரிகை.
சுரிகை என்பது:—கவசம், உடைவாள். (௨)

சுரியல்.

523. ஆண்பெண் மயிருஞ் சுழியுஞ் சுரியல்.
சுரியல் என்பது:—ஆண் மயிர், பெண் மயிர், நீர்ச்சுழி. (௩)

சுருங்கை.

524. நுழைவா யினுநீர்ப் போகியுஞ் சுருங்கை.
சுருங்கை என்பது:—நுழைவாயில், மதகு. (௨)

சுருதி.

525. ஒலியும் வேதமுஞ் சுருதி யென்ப.
சுருதி என்பது:—ஒலி, வேதம். (௨)

சுரை.

526. ஆவின் முலையு மலாபுக் கொண்டியு
முட்டொளைப் பெயருஞ் சுரையென வுரைப்பர்.
சுரை என்பது:—பசுவின்முலை, சுரைக்கொடி, கள், உட்டொளை. (௪)

சுவர்க்கம்.

527. தெய்வ லோகமு முலையுஞ் சுவர்க்கம்.
சுவர்க்கம் என்பது:—தெய்வலோகம், முலை. (௨)

சுவல்.

528. மேடும் பிடருந் தோளின் மேலுங்
குரகதக் குசையுங் கூறுஞ் சுவலே.

சுவல் என்பது:—மேடு, பிடர், தோளின் மேல், குதிரையின் பிடர் மயிர். (௪)

சுவவு.

529. புத்தே ளுடும் புள்ளின் மூக்குஞ்
சுண்டன் பெயருஞ் சுவவென் றுரும்.

சுவவு என்பது:—தேவலோகம், பறவைமூக்கு, மூஞ்சூறு. (௩)

சூதகம்.

530. தோற்றமும் வாலாமையு மூலைக்கண் ணுஞ் சூதகம்.

சூதகம் என்பது:—பிறப்பு, மகளிர் பூப்பு, மூலைக்கண். (௩)

சூரன்.

531. சூரனென் கிளவி சூரன் பெயருந்
தீரனு நாயுந் தெரிக்கப்படுமே.

சூரன் என்பது:—சூரபன்மன், வீரன், நாய். (௩)

இதுவுமது.

532. அருக்கனுந் தீயு மாகுமற் றதற்கே.

ஷை சூரன் என்பது:—சூரியன், தீ. (௨)

சூர்.

533. சூரென் கிளவி யச்சமுந் துன்பமும்
பிணியுந் தெய்வப் பெயரு மாகும்.

சூர் என்பது:—பயம், துன்பம், நோய், தெய்வம், (௪)

சூழி.

534. சுனையுங் கரிமுக படாமுஞ் சூழி.

சூழி என்பது:—சுனை, யானை முகபடாம். (௨)

செச்சை.

535. வெட்சி வெள்ளாட் டாண்பெயர் செச்சை.

செச்சை என்பது:—வெட்சி மரம், வெள்ளாட்டுக்கடா. (௨)

செடி.

536. பாவங் குணமின்மை நாற்றம் புதல்செடி.

செடி என்பது:—பாவம், குணமின்மை, நாற்றம், புதல். (௪)

செந்து.

537. ஓசையு நரகத் தொன்று நரியுஞ்
சீவனு மணுவுஞ் செந்து வாகும்.

*செந்து என்பது:—ஓசை, ஓர் நரகம், நரி, உயிர், அணு.* (ரு)

செப்பம்.

538. தெருவு நெஞ்சுநடு செம்மையுஞ் செப்பம்.

*செப்பம் என்பது:—வீதி, மார்பு, நடு, செவ்வை.* (சு)

செம்புலம்.

539. பறந்தலை பாலை நிலஞ்செம் புலமே.

*செம்புலம் என்பது:—போர்க்களம், பாலைநிலம்.* (உ)

செம்மல்.

540. பெருமையும் வலியும் பழம்பூவு மீசனுஞ்
சிறுவனுந் தலைவனுஞ் செம்ம லென்ப.

*செம்மல் என்பது:—பெருமை, வலி, பழம்பூ, ஈசன், புதல்வன், பெருமையில் சிறந்தோன்.* (சு)

செய்யல்.

541. சேறு மொழுக்கமுங் காவலுஞ் செய்யல்.

*செய்யல் என்பது:—சேறு, ஒழுக்கம், காவல்.* (௩)

செல்.

542. இடியு மேகமுஞ் சிதலையுஞ் செல்லெனல்.

*செல் என்பது:—இடி, மேகம், கறையான்.* (௩)

செவப்பு.

543. சினமுஞ் சினக்குறிப்புஞ் செந்நிறமுஞ் செவப்பே.

*செவப்பு என்பது:—கோபம், கோபக்குறிப்பு, செவப்பு நிறம்..* (௩)

செவிலி.

544. முன்பிறந் தாளுங்கோ டாயுஞ் செவிலி.

*செவிலி என்பது:—அக்காள், வளர்த்த தாய்.* (உ)

செவ்வி.

545. போதும் பருவமும் பொழுதுஞ் செவ்வி.

*செவ்வி என்பது:—மலரும்பருவத்து அரும்பு, சமயம், காலம்.* (௩)

சேழுமை.

546. வனப்புங் கொழுப்புமாட் சிமையுஞ் செழுமை.
செழுமை என்பது:—அழகு, கொழுப்பு, மாட்சிமை. (௩)

சேக்கை.

547. சயனமு முலையுஞ் சேக்கை யாகும்.
சேக்கை என்பது:—மக்கள் படுக்கை, முலை. (௨)

இதுவுமது.

548 விலங்கின் றுயிலிடப் பெயரும் விளம்புவர்.
ஃ சேக்கை என்பது:—விலங்கின் படுக்கை. (௧) ஆ (௩)

சேடன்.

549. இளையோன் பெயரு மடிமையும் பாங்கனு
மனந்தனுமோர் சாதிப் பெயருஞ் சேடன்.
சேடன் என்பது:—இளைஞன், அடிமை, தோழன், அனந்தன் என்னும் பாம்பு, ஓர் சாதியான். (௫)

சேடி.

550. சிலதியும் விஞ்சையர் சேரியுஞ் சேடி.
சேடி என்பது:—தோழி, வித்தியாதரர் உலகு. (௨)

சேடு.

551. திரட்சியழ குநன்று பெருமையுஞ் சேடே.
சேடு என்பது:—திரட்சி, அழகு, நன்மை, பெருமை. (௪)

சேண்.

552. உயரமு நீளமு மகலமுஞ் சேணே.
சேண் என்பது:—உயரம், நீளம், அகலம். (௩)

சேதகம்.

553. சேறுஞ்செந் நிறமுஞ் சேதக மென்ப.
சேதகம் என்பது:—சேறு, செவப்பு நிறம். (௨)

சேத்து.

554. செந்நிறப் பெயரு மொப்பு மசைச்சொலு
முறுப்புங் கருத்து மையமுஞ் சேத்தெனல்.

சேத்து என்பது:—செவப்பு, ஒப்பு, அசைச்சொல், உறப்பு, கருத்து, ஐயம். (சு)

சேய்.

555. குமரனுஞ் செவ்வாய்க் கோளுஞ் செவப்புஞ்
சிறுவனு நீளமுஞ் சேயென லாகும்.

சேய் என்பது:—முருகக்கடவுள், செவ்வாய், செவப்பு, புதல்வன், நீளம். (ரு)

சொல்.

556. நெல்லும் புகழுஞ் சொல்லுஞ் சொல்லே.

சொல் என்பது:—நெல், புகழ், வார்த்தை. (ங)

சோதி.

557 இரவியு மெனையா ளீசன் பெயரு
மொருநாண் மீனு மொளியுஞ் சோதி.

சோதி என்பது:—சூரியன், சிவன், சோதி நாள், பிரகாசம். (ச)

சோனை.

558. ஓண மீனு மொழியாது சொரியு
மாரியுஞ் சோனை யென்ன வகுப்பர்.

சோனை என்பது:—திருவோண நட்சத்திரம், விடாது பெய்யும் மழை. (உ)

சௌரி.

559. கன்னன் பெயருங் கார்வண்ணன் பெயருஞ்
சனியின் பெயரு மியமனுஞ் சௌரி.

சௌரி என்பது:—கன்னன், திருமால், சனி, இயமன். (ச)

இதுவுமது.

560. கருதிலோர் நதிக்குங் கருதப் படுமே.

ஷை சௌரி என்பது:—காளிந்தி என்னும் ஓர் நதி. (க)

நான்காவது

## ஞகர வருக்கம்.

ஞாட்பு.

561. சமரும் பாரமுங் களமு ஞாட்பே.

ஞாட்பு என்பது:—போர், பாரம், களம். (ங)

ஞாளி.

562. நாயுங் கள்ளு ஞாளி யென்ப. (உ)

ஞாளி என்பது:—நாய், கள்.

ஞெகிழி.

563. நூபுரந் தீயுறு விறகுதீக் கடைகோல்
ஞெகிழி யென்னு நெறிய வாகும். (ச)

ஞெகிழி என்பது:—சிலம்பு, தீயுறு விறகு, தீக்கடைகோல்.

ஞெள்ளல்.

564. பள்ளமுந் தெருவு மேன்மையு ஞெள்ளல். (௩)

ஞெள்ளல் என்பது:—பள்ளம், வீதி, மேன்மை.

ஐந்தாவது

## தகர வருக்கம்.

தகடு.

565 ஐமையு மிலையுந் தகடென லாகும். (உ)

தகடு என்பது:—ஐமை வடிவு, இலை.

தகை.

566. அருளுங் குணமுந் தளர்வுந் தகையே. (௩)

தகை என்பது:—அருள், குணம், தளர்வு.

தகைமை.

567. அழகும் பண்பும் பெருமையுந் தகைமை. (௩)

தகைமை என்பது:—அழகு, பண்பு, பெருமை.

தடம்.

568. தடாகப் பெயரு மலையடி யுந்தடம். (உ)

தடம் என்பது:— நீர் நிலை, மலைப்பக்கம்.

தடவு.

569 பகுதியும் வளைவும் பெருமையுந் தடவெனல். (௩)

தடவு என்பது:—பகுதி, வளைவு, பெருமை.

தடி.

570. தனுவு முலக்கையுந் தசையு மூடும்புந்
தண்டும் வயலு மின்னலுந் தடியே.

தடி என்பது:—வில், உலக்கை, ஊன், உடும்பு, தண்டாயுதம், வயல், மின்னல்.
(எ)

தட்டி.

571. நடுவட் டேருமொண் டிரிகையும் பரிசையும்
வட்டப் பெயருந் தட்டென லாகும்.

தட்டு என்பது:—தேர் நடு, திரிகை, கேடகம், வட்டம். (ச)

தட்டை.

572. காடிகை கிளிகடி கருவி சின்னந்
தினைத்தாண் மூங்கி லென்றிவை தட்டை.

தட்டை என்பது:—ஓர் வகைப் பறை, கிளிகடிகோல், தட்டு, தினைத்தாள், மூங்கில்.
(ஞ)

தண்டம்.

573. தந்திரமுங் கரிசெல் வழியுந் தண்டம்.

தண்டம் என்பது:—சேனை, யானை செல்லும் வழி. (உ)

தண்டு.

574. தடியுந் தானையுங் குழாயும் வீணையு
மிதுனமு முலக்கையுந் தண்டென லாகும்.

தண்டு என்பது:—தடி, சேனை, தொளையுடைப் பொருள், வீணை, மிதுன இராசி, உலக்கை.
(சு)

தண்ணடை.

575. நாடு மருதத் தூருந் தண்ணடை.

தண்ணடை என்பது:—நாடு, மருதநிலத்து ஊர். (உ)

தண்ணம்.

576. மழுவு மொருகட் பறையுந் தண்ணம்.

தண்ணம் என்பது:—மழுவாயுதம், ஒருகட்பறை. (உ)

தண்மை.

577. தாழ்வு மெளிமையுந் தண்மை யென்ப.

தண்மை என்பது:—தாழ்வு, எளிமை. (உ)

தத்தை.

578. முன்பிறந் தாளுங் கிளியுந் தத்தை.

தத்தை என்பது:—அக்காள், கிளி. (உ)

தமம்.

579 இராகுவு மிருளுந் தமமென விசைப்பர்.
தமம் என்பது:—இராகு, இருள். (உ)

தமிழ்.

580. இனிமையு நீர்மையுந் தமிழெனலாகும்.
தமிழ் என்பது:—இனிமை, நீர்மை. (உ)

தம்பம்.

581. கம்பமு மெய்புகு கருவியுந் தம்பம்.
தம்பம் என்பது:—தூண், கவசம். (உ)

தரணி.

582. தலமு மலையுந் தபனனுந் தரணி.
தரணி என்பது:—பூமி, மலை, சூரியன். (ங)

தவிசு.

583. மெத்தையுந் தடுக்கும் பீடமுந் தவிசே.
தவிசு என்பது:—மெத்தை, தடுக்கு, பீடம். (ங)

தழல்.

584. கிளிகடி கருவியு நெருப்புந் தழலே.
தழல் என்பது:—கிளிகடி கோல், நெருப்பு. (உ)

தளம்.

585. சாடியுஞ் சாந்துந் தளமா கும்மே.
தளம் என்பது:—சாடி, சாந்து. (உ)

தளிமம்.

586. சயனமு மழகு மெத்தையுந் தளிமம்.
தளிமம் என்பது:—படுக்கை, அழகு, மெத்தை. (ங)

தளை.

587. ஆண்பான் மயிர்தொடர்பு சிலம்புந் தளையே.
தளை என்பது:—ஆண் மயிர், கட்டு, காற்சிலம்பு. (ங)

தனஞ்சயன்.

588 எவ்வமின் மாருதத் தொன்று நெருப்புஞ்
சவ்விய சாசியுந் தனஞ்சய னாகும்.
தனஞ்சயன் என்பது:—தச வாயுவில் ஒன்று, தீ, அருச்சுனன். (ங)

தனம்.

589. கோவிளங் கன்றுமுத் திரையுங் கொங்கையுஞ்
சாந்தும் பொன்னுந் தனமென லாகும்.

தனம் என்பது:—பசுவின் கன்று, அடையாளம், முலை, சாந்து, பொன். (ரு)

தனு.

590. யாக்கையும் வில்லுஞ் சிறுமையுந் தனுவே.

தனு என்பது:—உடல், வில், சிறுமை. (ங)

தன்மம்.

591. புண்ணியமும் வேதமுந் தன்ம மாகும்.

தன்மம் என்பது:—புண்ணியம், வேதம். (உ)

தன்மை.

592. தன்மையும் பெருமையு நன்மையுந் தன்மை.

தன்மை என்பது:—குணம், பெருமை, நன்மை. (ங)

தாணு.

593. துங்க மலையுந் தூணு நிலையுஞ்
சங்கரன் பெயருந் தாணு வாகும்.

தாணு என்பது:—மலை, தூண், நிலைபேறு, சிவன். (ச)

தாண்டவம்.

594. தாவலு மாடலுஞ் செலுத்தலுந் தாண்டவம்.

தாண்டவம் என்பது:—தாவல், கூத்து, செலுத்தல். (ங)

தாதி.

595. அடிமையுஞ் செவிலியும் பரணியுந் தாதி.

தாதி என்பது:—அடியவள், செவிலித்தாய், பரணி நட்சத்திரம். (ங)

தாமம்.

596. மாலையு மலரு மணிவடப் பெயரு
நகாமு மொளியுங் கயிறுங் கொன்றையுந்
தாம மாகச் சாற்றினர் புலவர்.

தாமம் என்பது:—மாலை, பூ, மணிவடம், பட்டினம், ஒளி, கயிறு, கொன்றை மரம். (எ)

தாரம்.

597. வல்லிசைப் பெயரும் வாழ்க்கைத் துணைவியும்
யாழினரம் புமரும் பண்டமும்வெண் டாதுந்
தாரவு நாவுந் தார மென்ப.

தாரம் என்பது:—வல்லிசை, மனைவி, வீணையின் ஓர் நரம்பு, அரும் பண்டம், வெள்ளி, தாரா, நா. (எ)

தாரை.

598. வழியுங் கண்ணின் மணியுஞ் சுவடு
முடுவு நேரோ டுதலுங் கூர்மையும்
வாத்தியத் தொன்றும்வீழ் மழையுந் தாரை.

தாரை என்பது:—வழி, கண்மணி, சுவடு, விண்மீன், நேரோடல், கூர்மை, ஓர் வாத்தியம், மழை. (அ)

தார்.

599. மாலையு மலருங் கொடிப்படைப் பெயருங்
கிண்கிணி மாலையுந் தாரெனக் கிளத்துப.

தார் என்பது:—மாலை, பூ, கொடிப்படை, கிண்கிணி மாலை. (௯)

தாலம்.

600. ஞாலமுங் கூந்தற் கமுகு நாவுங்
கோலிய கலமும் பனையுந் தாலம்.

தாலம் என்பது:—பூமி, கூந்தற்கமுகு, நா, உண்கலம், பனைமரம். (௰)

தாழை.

601. நாளி கேரமுங் கைதையுந் தாழை.

தாழை என்பது:—தெங்கு, தாழை. (௨)

தாழ்மை.

602. இளிவுங் கீழ்மையு மெண்மையுந் தாழ்மை.

தாழ்மை என்பது:—இளிவு, கீழ்மை, எளிமை. (௩)

தாள்.

603. காலின் பெயரு முயற்சியுங் கபாடத்
தாளு நெல்லரி புல்லுந் தாளே.

தாள் என்பது:—கால், முயற்சி, கதவுறு தாள், நெல்லரி புல். (௪)

தாறு.

604. அளவுங் குலையுந் தாறென லாகும்.

தாறு என்பது:—அளவு, வாழை முதலியவற்றின் குலை. (௨)

தானம்.

605. தந்தியின் மதமும் வலியுங் கொடுத்தலுஞ்
சுவர்க்கமும் வேட்டலு மறமுந் தானம்.

தானம் என்பது:—யானை மதம், வலிமை, ஈகை, தேவலோகம், வேட்டல், தருமம். (சு)

தானை.

606. ஆடையும் படையு மாயுதமுந் தானை.

தானை என்பது:—வஸ்திரம், சேனை, ஆயுதப்பொது. (ந)

திகிரி.

607. மலையுஞ்சக் கரமும் வட்டப் பெயருந்
தேரு முருளையு மூங்கிலுந் திகிரி.

திகிரி என்பது:—மலை, சக்கராயுதம், வட்டவடிவு, தேர், தேருருளை, மூங்கில். (சு)

திதை.

608. திசையுஞ் சுணங்குந் திதையென லாகும்.

திதை என்பது:—திக்கு, தேமல். (உ)

திங்கள், மதி.

609. சந்திரன் பெயரு மாதமுஞ் சாற்றிற்
றிங்களு மதியமு மிரண்டுஞ் செப்பும்.

திங்கள், மதி என்பன:—சந்திரன், மாதம். (உ)

திட்டை.

610. மேடு முரலும்வே திகையுந் திட்டை.

திட்டை என்பது:—மேடு, உரல், திண்ணை. (ந)

திணை.

611. குலமு நிலமு மொழுக்கமுந் திணையே.

திணை என்பது:—சாதி, நிலம், ஒழுக்கம். (ந)

திதி.

612. பக்கமுங் காத்தலு நிலைபெறுந் திதியே.

திதி என்பது:—பிரதமை முதலிய திதி, காத்தல், நிலைபெறுதல். (ந)

திரு.

613. திருவிலக் குமியுஞ் செல்வமு மாகும்.

திரு என்பது:—இலக்குமி, செல்வம். (உ)

திலம்.

614. எள்ளுமஞ் சாடியுந் திலமெனப் படுமே.
திலம் என்பது:—எள், மஞ்சாடி மரம். (உ)

தீ.

615. தீங்கு நெருப்புந் தீயென லாகும்.
தீ என்பது:—தீங்கு, நெருப்பு. (உ)

தீங்கு.

616. தீமையுங் குற்றமுந் தீங்கென லாகும்.
தீங்கு என்பது:—தீமை, குற்றம். (உ)

துகள்.

617. தோமுநுண் பொடியுந் துகளென லாகும்.
துகள் என்பது:—குற்றம், தூளி. (உ)

துங்கம்.

618. அகலமும் பெருமையு முயரமுந் துங்கம்.
துங்கம் என்பது:—அகலம், பெருமை, உயர்ச்சி. (ந)

துஞ்சல்.

619. துஞ்சன் மரணமு நிலைபேறு முறக்கமும்.
துஞ்சல் என்பது:—சாவு, நிலைபேறு, நித்திரை. (ந)

துடி.

620. கால நுட்பமுங் குமா ரூடலு
மேலமுமேழ் மாதர் நிருத்தமுஞ் சிறுபறையுந்
துடியென் கிளவி சொல்லுவர் புலவர்.
துடி என்பது:—கால நுட்பம், குமாரூடல், ஏலம், சத்த கன்னிகை கள் ஆடல், பாலைப்பறை. (ரு)

துணங்கறல்.

621. இருளும் விழவுந் துணங்கற லென்ப.
துணங்கறல் என்பது:—இருள், திருவிழா. (உ)

துணி.

622 சோதியுஞ் சீரையுந் துண்டமுந் துணியெனல்.
துணி என்பது:—சோதி நாள், மரவுரி, சீலைத்துணி. (ந)

### துண்டம்.

623. துணிபடல் வதன மூக்குச் சாரை
துண்டம் புள்ளின் மூக்கு மாகும்.

துண்டம் என்பன:—துண்டு, முகம், மூக்கு, சாரைப்பாம்பு, பறவையின் மூக்கு. (ரு)

### துத்தம்.

624. யாழி னரம்பு மொருகல் விகற்பமும்
பாலுமோ ரிசையு முதரமுந் துத்தம்.

துத்தம் என்பது:—யாழின் ஓர் நரம்பு, ஓர் வகைக் கல், பால், ஓர் இசை, வயிறு. (ரு)

### துத்தி.

625. அரவின் பொறியு மாங்கொரு புதலுந்
தேமலுஞ் சுணங்குந் துத்தி யாகும்.

துத்தி என்பது:—பாம்பின் படப்பொறி, ஓர் செடி, தேமல். (ந)

### துப்பு.

626 அரக்கும் பவளமு மாயுதப் பொதுவுந்
துணையும் வலியும் பொலிவு நெய்யு
மனுபவமுந் தூய்மையுந் துப்பெண லாகும்.

துப்பு என்பது:—அரக்கு, பவளம், ஆயுதப்பொது, துணை, வலி, பொலிவு, நெய், அனுபவம், சுத்தம். (க)

### தும்பி.

627. சுரையும் யானையும் வண்டுந் தும்பி.

தும்பி என்பது:—சுரை, யானை, வண்டு. (ந)

### துருக்கம்.

628. குங்கும மரமுங் காடுந் துருக்கம்.

துருக்கம் என்பது:—குங்கும மரம், காடு. (உ)

### துருத்தி.

629. தோலும் யாற்றிடைக் குறையுந் துருத்தி.

துருத்தி என்பது:—தோல், யாற்றிடைக்குறை. (உ)

### துரோணம்.

630. சிம்புட் பறவையும் வில்லுங் காக்கையுந்
தும்பையும் பதக்குந் துரோண மாகும்.

துரோணம் என்பது:—எண்காற்புள், வில், காக்கை, தும்பைச்செடி, பதக்கு. (ரு)

துவக்கு.

631. தோலும் பிணக்குந் துவக்கெனமொழிப.

துவக்கு என்பது:—தோல், பிணக்கு. (உ)

துளி.

632. மழையு மாலியுஞ் சிதர்த லோடு
பெண்ணு மையுந் துளியெனப் பேசுவர்.

துளி என்பது :— மழை, மழைத்துளி, துளித்தல், பெண்ணுமை. (ச)

துனி.

633. துன்பமும் புலவி நீட்டலுந் துனியெனல்.

துனி என்பது:—துன்பம், புலவிநீட்டம். (உ)

தூ.

634. தூயது பற்றம் பகை தசையுந் தூவே.

தூ என்பது:—சுத்தம், பற்றுக்கோடு, பகை, தசை. (ச)

தூக்கு.

635. துலாமு முறியுங் கூத்தும் பாட்டு
முசாவுத லும்மிவை தூக்கென லாகும்.

தூக்கு என்பது:—துலாம், உறி, கூத்து, பாட்டு, உசாவுதல். (ரு)

தூங்கல்.

636. சோம்பு நிரம்பாத் துயிலுந் தூங்கல்.

தூங்கல் என்பது:—சோம்பல், நிரம்பாத்தூக்கம். (உ)

தூசு.

637. புடைவையும் யானைப் புரோசைக் கயிறும்
படையின துறுப்புந் தூசெனப் பகர்வர்.

தூசு என்பது:—புடைவை, யானைக்கழுத்திடு கயிறு, சேனையின் உறுப்பு. (ங)

தூபம்.

638. புகையின் பெயர்நீர்க் கடம்பிவை தூபம்.

தூபம் என்பது:—புகை, நீர்க்கடம்பு. (உ)

தூம்பு.

639. வாயிலு முட்டொளைப் பொருளு மூங்கிலு
மரக்கா லு மதகுந் தூம்பெனலாகும்.

தூம்பு என்பது:—வாயில், உட்டொளைப்பொருள், மூங்கில், மரக்கால், நீரோடி. (ரு)

தூரியம்.

640. துகில்பறை முரசு பே ரெருதுந் தூரியம்.

தூரியம் என்பது :— நல்லாடை, உவகைப்பறை, முரசு, பேரெருது. (௪)

இதுவுமது.

641. வாத்தியப் பெயர்ப்பொதி யெருதும் வரையார்.

ஷை தூரியம் என்பது:—வாத்தியப்பொது, பொதி எருது. (உ) ஆ (௪)

தெய்.

642. தெய்யென் கிளவி கோறலுந் தெய்வமும்.

தெய் என்பது:—கொல்லல், தெய்வம். (உ)

தெரிவை.

643. காரிகைப் பெயருங் கன்னி யிராசியுந்
தேருங் காலத் தெரிவை யாகும்.

தெரிவை என்பது:—பெண், கன்னி இராசி. (உ)

தெவ்.

644. கொள்கையும் பகையுந் தெவ்வென லாகும்.

தெவ் என்பது:—கொள்ளுதல், பகை. (உ)

தென்.

645. தென்னிசை வனப்புந் தெற்குமோர் பாடலும்.

தென் என்பது:—இசை, அழகு, தெற்கு, ஓர் பாடல். (௪)

தே.

646. தேயென் கிளவி கொளற்பாடுந் தெய்வமும்.

தே என்பது:—கொளற்பாடு, கடவுள். (உ)

தேசிகம்.

647. இசைச்சொலு மழகுங் காந்தியும் பொன்னுமோர்
கூத்தின் பெயருந் தேசிக மென்ப.

தேசிகம் என்பது:—அவ்வந்நாட்டுச்சொல், அழகு, ஒளி, பொன், ஓர் கூத்து. (ரு)

## தேசிகன்.

648. தேசாந் தரிகுரு வணிகன் றேசிகன்.

தேசிகன் என்பது:—தேசாந்தரி, குரு, வணிகன். (ங)

## தேம்.

649. தித்திப்புந் தேசமு நாற்றமுந் தேமெனல்.

தேம் என்பது:—தித்திப்பு, தேசம், வாசனை. (ங)

## தேயம்.

650. காயமு நாடுந் தேய மென்ப.

தேயம் என்பது:—உடல், நாடு. (உ)

## தேயு.

651. அனலு மருளுந் தேயு வாகும்.

தேயு என்பது:—தீ, மயக்கம். (உ)

## தேர்தல்.

652. ஆராய்தலுங் கொள்கையுந் தேர்த லாகும்.

தேர்தல் என்பது:—ஆராய்தல், கொள்ளுதல். (உ)

## தேள்.

653. விருச்சிக விராசியு மனுட நாளுந்
தெறுக்கா லதனொடு தேளென் றாகும்.

தேள் என்பது:—விருச்சிக இராசி, அனுட நாள், ஓர் செந்து. (ங)

## தொங்கல்.

654. மாலையும் பீலிக் குஞ்சமுந் தூக்கமு
மயிரின் றேகையு மயிருந் தொங்கல்.

தொங்கல் என்பது:—பூமாலை, பீலிக்குஞ்சக்குடை, ஆபரணத்தொங்கல், மயிற்றேகை, ஐம்பான்முடியில் ஒன்று. (ரு)

## தொடி.

655. கங்கணங் கைவளை யொருபலந் தொடியே.

தொடி என்பது:—கங்கணம், கைவளை, ஒரு பலம். (ங)

தோடு

656. மருத நிலமும் வஞ்சனைப் பெயருந்
தோட்டமு மென்றிவை தொடுவென லாகும்.
தொடு என்பது:—மருத நிலம், வஞ்சம், தோட்டம். (௩)

தொண்டை.

657. யானைத் துதிக்கையுங் கோவையுந் தொண்டை.
தொண்டை என்பது:—யானைத்துதிக்கை, கொவ்வை. (௨)

தொத்து.

658. தொழும்புமலர்த் திரளுந் தொத்தெனப் படுமே.
தொத்து என்பது:—அடிமை, பூங்கொத்து. (௨)

தொய்யல்.

659. இன்பமுஞ் சேறுந் தொய்ய லென்ப.
தொய்யல் என்பது:—இன்பம், சேறு. (௨)

தொழு.

660. தொழுவமு மிரேவதி நாளுந் தொழுவெனல்.
தொழு என்பது:—பட்டி, இரேவதி நாள். (௨)

தொறு.

661. தொழுவமா னிரையுந் தொகுதியுந் தொறுவெனல்.
தொறு என்பது:—தொழுவம், பசுக்கூட்டம், கூட்டம். (௩)

தோடு.

662. திரளும் பூவி னிதழுந் தோடெனல்.
தோடு என்பது:—கூட்டம், பூவிதழ். (௨)

தோட்டி.

663. கதவும் யானைச் சஞ்சியுந் தோட்டி.
தோட்டி என்பது:—கதவு, யானைத்தோட்டி. (௨)

தோணி.

664. இரேவதியும் வங்கமு மெயிலின துறப்பு
மம்புந் தோணியு மிதவையு மாகும்.
தோணி என்பது:—இரேவதி நாள், மரக்கலம், மதிலுறுப்பு, அம்பு,
மிதவை. (௫)

### தோல்.

665. யானையும் வனப்பு மதளுந் தோல்வியுந்
தோலென் றுரைப்பர் தோற்பலகை யுமாகும்.

தோல் என்பது:—யானை, அழகு, தோல், தோல்வி, தோற்பலகை. (ரு)

### தோள்.

666 புயமுங் கையுந் தோளெனப் புகல்வர்

தோள் என்பது:—புயம், கை. (உ)

### தோற்றம்.

667. வலியும் பிறப்புங் காண்டலுந் தோற்றம்.

தோற்றம் என்பது:—வலிமை, பிறப்பு, காட்சி. (ங)

### தோன்றல்.

668. சுதனுந் தலைவனுந் தோன்ற லாகும்.

தோன்றல் என்பது:—புதல்வன், தலைவன். (உ)

ஆறுவது

## நகர வருக்கம்.

### நகம்.

669. உகிரு மலையு நகமென லாகும்.

நகம் என்பது:—உகிர், மலை. (உ)

### நகை.

670. எயிறுஞ் சிரிப்பு மின்பமு மொளியு
நகையென் கிளவி நவிலப் பெறுமே.

நகை என்பது:—பல், சிரிப்பு, இன்பம், ஒளி. (ச)

### நடை.

671. வழியு மொழுக்கமும் போக்கு நடையே.

நடை என்பது:—வழி, ஒழுக்கம், செலவு. (ங)

### நந்தி.

672. ஏறு மீசனு நந்தி யென்ப.

நந்தி என்பது:—இடபம், சிவன். (உ)

நந்து.

673. பறவையு நத்தையுஞ் சங்கு நந்தெனல்.

நந்து என்பது:—பறவை, நத்தை, சங்கு. (௩)

நயந்தோர்.

674. காதலரும் வேட்டோரு நயந்தோ ராகும்.

நயந்தோர் என்பது:—கணவர், விரும்பப்பட்டவர். (௨)

நயம்.

675. நன்று மின்பமு நியாயமு நயமெனல்.

நயம் என்பது:—நன்மை, இன்பம், நீதி. (௩)

நரந்தம்.

676. நாரத் தையுங்கத் தூரியு நரந்தம்.

நரந்தம் என்பது:—நாரத்தை, கத்தூரி. (௨)

நரை.

677. வெண்ணிறமு மானேறுங் கவரி மாவும்
பலிதமும் பறவையி லொன்று நரையே.

நரை என்பது:—வெண்மை, இடபம், கவரிமா, நரைமயிர், நாரை. (௫)

நலம்.

678. சொல்லிய விருச்சிக விராசியுஞ் சுகமு
நல்லுப காரமு நலமென் றுரும்.

நலம் என்பது:—விருச்சிக இராசி, சுகம், உபகாரம். (௩)

நவம்.

679. ஒன்பதும் புதுமையு மொண்கார் காலமு
மென்பன மூன்று நவமா கும்மே.

நவம் என்பது:—ஒன்பது, புதுமை, கார் காலம். (௩)

நவியம்.

680. மழுவுங்கோ டாலியு நவிய மாகும்.

நவியம் என்பது:—மழு, கோடாலி. (௨)

நவிரம்.

681. மலையும் புன்மையு மயிலு முச்சியு
மயிரு நவிர மென்ன வகுப்பர்.

நவிரம் என்பது:—மலை, புன்மை, மயில், உச்சந்தலை, ஆண்மயிர். (ரு)

நவிர்.

682. ஆண்பான் மயிருந் தக்கேசி யிசையு
மருதயாழ்த் திறனும் வாளு நவிரெனல்.

நவிர் என்பது:—ஆண் மயிர், தக்கேசிப்பண், மருதயாழ்த்திறம், வாள். (ச)

நளி.

683. திரளும் பெருமையு நளியெனச் சிறக்கும்.

நளி என்பது:—கூட்டம், பெருமை. (உ)

நறவம்.

684. அனிச்ச மரமும் வேரியு நறவம்.

நறவம் என்பது:—அனிச்ச மரம், கள். (உ)

நற்றுடி.

685. நாக மரமும் வேரு நற்றுடி.

நற்றுடி என்பது:—நாக மரம், வேர். (உ)

நனை.

686. பூவின் மொட்டுங் கள்ளு நனையே.

நனை என்பது:—பூவின் அரும்பு, கள். (உ)

நாகம்.

687. நாகமென் கிளவி நல்லிழை யாடையும்
வேழமு மொருமரப் பெயரும் வெற்பும்
பாம்புங் குரங்கும் விசும்பும் புன்னையுங்
கடவுள ருலகுங் காரீயமு மாகும்.

நாகம் என்பது:—நற்புடைவை, யானை, ஞாழல் மரம், மலை, பாம்பு, குரங்கு, ஆகாயம், புன்னை மரம், தேவலோகம், காரீயம். (கo)

நாஞ்சில்.

688. கலப்பைப் படையெயி லுறுப்பிவை நாஞ்சில்.

நாஞ்சில் என்பது:—கலப்பை, மதிலுறுப்பு. (உ)

நாட்டம்.

689. நயனமும் பண்ணும் வாளு நாட்டம்.

நாட்டம் என்பது:—கண், ஓர் பண், வாளாயுதம். (௩)

நாப்பண்.

690. நடுவு நடுவட் டேரு நாப்பண்.

நாப்பண் என்பது:—இடை, தேர் நடு. (௨)

நாரி.

691. நறவுபெண் ணுணி பன்னுடை நாரி.

நாரி என்பது:—கள், பெண், வில் நாணி, பன்னுடை. (௪)

நாவிதன்.

692. கார்த்திகை நாளும் பூரமு நாவிதன்.

நாவிதன் என்பது:—கார்த்திகை நட்சத்திரம், பூர நட்சத்திரம். (௨)

நாழி.

693. பூரட் டாதி நாளுமுட் டொளையுஞ்
சேருங் கடிகையு மளவையு நாழி.

நாழி என்பது:—பூரட்டாதி நட்சத்திரம், உட்டொளைப்பொருள், நாழிகை, அளக்கும் நாழி. (௪)

நானம்.

694. அறிவும் பூசுவன வாசனையு நாற்றமும்
நரையுநீ ராட்டுங்கத் தூரியு நானம்.

நானம் என்பது:—அறிவு, பூசுவன, வாசனை, கவரிமா, குளித்தல், கத்தூரி. (௬)

நிசி.

695. காஞ்சன மஞ்சள் கங்கு னிசியே.

நிசி என்பது:—பொன், மஞ்சள், இரவு. (௩)

நிதம்பம்.

696. மலையின் பக்கமு மல்குனு நிதம்பம்.

நிதம்பம் என்பது:—மலைப்பக்கம், அல்குல். (௨)

நியமம்.

697. நீதியுங் கோவிலு நிச்சயமுந் தெருவு
நகரமும் வீதியு நியம மாகும்.

நியமம் என்பது:—நீதி, தேவர் கோவில், நிச்சயம், தெரு, பட்டினம், கடைவீதி. (சு)

நிரஞ்சனம்.

698. நிரஞ்சனம் வெளியு நிறைவு மோக்கமும்.
நிரஞ்சனம் என்பது:—வெளி, நிறைவு, மோட்சம். (௩)

நிரியாணம்.

699. யானையின் கடைக்கணு மரணமு நிரியாணம்.
நிரியாணம் என்பது:—யானைக்கடைக்கண், சாவு. (௨)

நிருமித்தல்.

700. படைத்தலு மாராய் தலுநிரு மித்தல்.
நிருமித்தல் என்பது:—படைத்தல், ஆராய்தல். (௨)

நிறை.

701. எடைபார்ப் பனவு மரிவையர் கற்பும்
நிகழ்துலா விராசியு நிறையா கும்மே.
நிறை என்பது:—நிறை, கற்பு, துலா இராசி. (௩)

நீபம்.

702. ஏதுவு முத்திரட் டாதி நாளு
நீர்க்கடம்பின் பெயரு நீப மென்ப.
நீபம் என்பது:—காரணம், உத்திரட்டாதி நட்சத்திரம், நீர்க்கடம்பு. (௩)

நீர்.

703. புனலுங் குணமும்பூ ராடமு நீரே.
நீர் என்பது:—சலம், பண்பு, பூராட நட்சத்திரம். (௩)

நீலி.

704. நீலியொரு மரமும் பாலைக் கிழத்தியுங்
கருமை நிறமு மவுரியு மாகும்.
நீலி என்பது:—ஓர் மரம், துர்க்கை, கறுப்பு, அவுரி. (௪)

நீவி.

705. புடைவையுங் கொய்சகப் பெயரு நீவி.
நீவி என்பது:—சீலை, கொய்சகம். (௨)

நுதல்.

706 புருவமு நெற்றியு நுதலா கும்மே.
நுதல் என்பது:—புருவம், நெற்றி. (௨)

நெறி.

707 நீதியும் வழியு மொழுக்கமு நெறியெனல்.
நெறி என்பது:—நீதி, வழி, ஒழுக்கம். (௩)

நெற்றி.

708 படையின துறுப்பு நுதலு நெற்றி.
நெற்றி என்பது:—சேனையுறுப்பு, நுதல். (௨)

நேத்திரம்.

709 பட்டு நயனமு நேத்திர மாகும்.
நேத்திரம் என்பது:—பட்டு, கண். (௨)

நேயம்.

710 நெய்யு மன்பு மெண்ணெயு நேயம்.
நேயம் என்பது:—நெய், அன்பு, எண்ணெய். (௩)

நொச்சி.

711 எயிலுமோர் மாமுஞ் சிற்றூரு நொச்சி.
நொச்சி என்பது:—மதில், நொச்சி மரம், சிற்றூர். (௩)

ஏழாவது

## பகர வருக்கம்.

பகடு.

712 பெருமை யானை பெருதிவை பகடெனல்.
பகடு என்பது:—பெருமை, யானை, பேரெருது. (௩)

பகல்.

713 பிரிவு நடுவும் பெரும்பகற் பொழுதும்
பகரு முகூர்த்தமும் பகலு நாளும்
பாகுநுகத் தாணியுந் தேசும்பக லென்ப.
பகல் என்பது:—பிரிதல், நடு, பகற்காலம், மூன்றேமுக்கால் நாழிகை, சூரியன், தினம், பகுத்தல், நுகத்தாணி, பிரகாசம். (௯)

பகவன்.

714. பட்டார கன்மால் பங்கயன் பரம
னிரவி யருகன் புத்தனும் பகவன்.

பகவன் என்பது:—குரு, திருமால், பிரமன், சிவன், சூரியன், அருகன், புத்தன். (எ)

பகழி.

715. அப்புக் குதையு மம்பும் பகழி.

பகழி என்பது:—அம்புக்குதை, அம்பு. (உ)

பக்கம்.

716 அருகுந் திதியு மிறகும் பக்கம்.

பக்கம் என்பது:—அருகு, பிரதமை முதலிய திதி, இறகு. (ங)

பங்கம்.

717. சேறுந் துகிலு மிடரும் பங்கம்.

பங்கம் என்பது:—சேறு, வஸ்திரம், ஈனம். (ங)

பங்கி.

718 ஆண்பா லஃறிணை மயிரும் பங்கி.

பங்கி என்பது:—ஆண் மயிர், புற மயிர். (உ)

பங்கு.

719 பகுதியுஞ் சனியு முடமும் பங்கே.

பங்கு என்பது:—பாதி, சனி, முடம். (ங)

பசு.

720. உயிரு மாவும் பசுவென வுரைப்பர்.

பசு என்பது:—உயிர், பசுமாடு. (உ)

பச்சை.

721. மாகதப் பெயரும் புதனுந் தோலும்
பரிமளப் புதலு மாலும் பச்சை.

பச்சை என்பது:—மாகதம், புதன், தோல், ஓர் வாசனைப்புதல், விட்டுணு. (ரு)

படங்கு.

722. பெருங்கொடி மேற்கட்டி வானி படங்கெனல்.

படங்கு என்பது:—பெருங்கொடி, மேற்கட்டி, கூடாரம். (ங)

படம்.

723. கொடியுங் கூரையுங் கோலக் கிழியும்
பணமும் யானைமுக படாமும் படமே.

படம் என்பது:—விருதுக்கொடி, சீலை, சித்திரப்படம், பாம்பின் படம், யானை முகபடாம். (ரு)

படலிகை.

724. படலிகை யென்பபூந் தட்டுங்கைம் மணியும்
வட்ட மும்பெரும் பீர்க்கும் வகுக்கும்.

படலிகை என்பது:—பூந்தட்டு, கைம்மணி, வட்ட வடிவு, பெரும் பீர்க்கு. (ச)

படலை.

725. படர்தலும் வாசிகைக் கோவையும் படலை.

படலை என்பது:—படர்தல், கோத்த மாலை. (உ)

படி.

726. அவனியு மங்க வடியுஞ்சோ பானமும்
பகையுங் குணமு நாழியும் படியே.

படி என்பது:—பூமி, குதிரையின் அங்கவடி, கற்படி, பகை, பண்பு, நாழி. (சு)

படிறு

727. பொய்யுஞ் சூதுங் களவும் படிறே.

படிறு என்பது:—பொய், சூது, களவு. (ங)

படு.

728. மரத்தின் குலையுநீர் நிலையு மதுவு
முகரிமைப் பெயரும் படுவென மொழிப.

படு என்பது:—மரக்குலை, நீர்நிலை, கள், பேரறிவு. (ச)

படை.

729. படைக்கலப் பெயரும் பரிமாக் கலணையும்
படுக்கையுஞ் சேனையுங் கலப்பையும் படையே.

படை என்பது:—ஆயுதம், குதிரைச் சேணம், படுக்கை, சேனை, கலப்பை. (ரு)

பட்டம்.

730. வழியு நல்ல பதவியு மோடையும்
விலங்குதுயி லிடமுங் கவரி மாவும்
பாரதி வகுப்பும் படங்கமும் பட்டம்.

பட்டம் என்பது:—வழி, பதவி, குளம், விலங்கு துயிலிடம், கவரிமா, மரக்கல வகை, பெருங் கொடி. (எ)

பட்டி.

731 இடமு நாயுந் தொழூவும் பட்டி.
பட்டி என்பது:—இடம், நாய், பசுக்கொட்டில். (ங)

பட்டு.

732. சிற்றூர்ப் பெயருந் துகிலும் பட்டே.
பட்டு என்பது:—சிற்றூர், பட்டாடை. (உ)

பணவை.

733. பரனுங் கழுகும் பணவை யென்ப.
பணவை என்பது:—பரண், கழுகு. (உ)

பணி.

734. தொழிலுந் தொழில்படு கருவியுஞ் சொல்லும்
பணிதலும் பாப்பு மணியும் பணியே.
பணி என்பது:—தொழில், தோற்கருவி, சொல், பணிதல், பாம்பு, ஆபரணம். (சு)

பணிலம்.

735. சலஞ்சலமு மொளிசேர் சங்கும் பணிலம்.
பணிலம் என்பது:—ஓர் வகைச் சங்கு, சங்கின் பொதுப் பெயர். (உ)

பணை.

736. முரசின் பெயரு மூங்கிலின் பெயரு
மரத்தின் கோடு மருத நிலமு
மந்நிலப் பறையும் புரவியின் பந்தியும்
பருத்தலு வயலு மரசும் பணையெனல்.
பணை என்பது:—பேரிகை, மூங்கில், மரக்கொம்பு, மருத நிலம், மருத நிலப்பறை, குதிரைப்பந்தி, பெருத்தல், வயல், அரச மரம். (கூ)

பண்.

737. பாட்டின் பெயரும் பரிமாக் கலணையு
நாட்டிய பண்ணும் பண்ணென நவில்வர்.
பண் என்பது:—இசைப்பாட்டு, குதிரைக்கல்லணை, இசை. (ங)

பண்டம்.

738. பண்ணி காரமு மாடகமும் பண்டம்.
பண்டம் என்பது:—பண்ணிகாரம், பொன். (உ)

பண்ணவன்.

739. பட்டார கன்முனி திறலோன் பண்ணவன்.
பண்ணவன் என்பது:—அருகன், இருடி, திண்ணியன். (ங)

பண்ணை.

740. மருத நிலமுநீர் நிலையும் வயலும்
விலங்கின் றுயி லிடமும் மகளிர்விளை யாட்டுங்
கூட்டமுஞ் சவையும் புதலும் பண்ணை.
பண்ணை என்பது:—மருதநிலம், நீர்நிலை, வயல், விலங்கின் படுக்கையிடம், மகளிர் விளையாட்டு, மகளிர்கூட்டம், சவை, ஓர் புதல். (அ)

பதங்கம்.

741. புட்பொதுப் பெயரும் விட்டிற் பறவையும்
பதங்க மென்று பகரப் படுமே.
பதங்கம் என்பது:—பறவைப்பொது, விட்டில். (உ)

பதம்.

742. வரிசையுஞ் சோறு மொழியும் வழியு
முணவுஞ் செவ்வியு மறையினோ ருறுப்பும்
பாதமும் பொழுது மவிழும் பதமெனல்.
பதம் என்பது:—வரிசை, சோறு, சொல், வழி, உண்டல், பக்குவம், வேதத்தின் ஓர் உறுப்பு, கால், பொழுது, அவிழ். (கo)

பதலை.

743. சைலப் பெயருஞ் சாடியு மோர்கட்
பகுவாய்ப் பறையும் பதலை யாகும்.
பதலை என்பது:—மலை, சாடி, ஒருகட்பகுவாய்ப்பறை. (ங)

பதி.

744. தலைவனு மூரும் பதியெனத் தகுமே.
பதி என்பது:—தலைவன், ஊர். (உ)

பதுக்கை.

745. பாறையு மேடுஞ் சிறுதூறும் பதுக்கை.
பதுக்கை என்பது:—பாறை, சிறுமேடு, சிறுதூறு. (ங)

பத்திரம்.

746. எழிலும் புள்ளி னிறகு மிலையும்
பகழியுஞ் சுரிகையும் பத்திர மென்ப.

பத்திரம் என்பது:—அழகு, பறவையின் இறகு, இலை, அம்பு, உடைவாள். (ரு)

பத்திரை.

747. பசுவுந் திதியுங் காளியும் பத்திரை.

பத்திரை என்பது:—பசு, திதி, காளி. (௩)

பந்தம்.

748. அழகுந் திரட்சியு மிழையுங் கிளையுந்
தளையுங்கைத் தீபமும் பந்த மென்ப.

பந்தம் என்பது:—அழகு, உண்டை, நூல், உறவு, கட்டு, கை விளக்கு. (சு)

பயசு.

749 பயசு நீரும் பாலு மாகும்.

பயசு என்பது:—நீர், பால். (உ)

பயம்.

750. பாலு நீரும் பயமென லாகும்.

பயம் என்பது:—பால், நீர். (உ)

பயம்பு.

751. பகடு படுங்குழி நீர்நிலை பயம்பெனல்.

பயம்பு என்பது:—யானை படுகுழி, நீர்நிலை. (உ)

பயல்.

752. பாதியுஞ்சிற் றூளும் பள்ளமும் பயலெனல்.

பயல் என்பது:—பாதி, பையல், பள்ளம். (௩)

பயிர்.

753. பைங்கூ ழும்புட் குரலும் பயிரெனல்.

பயிர் என்பது:—பைங்கூழ், பறவையொலி. (உ)

பயோதரம்.

754. முலையு மேகமும் பயோதர மெனப்படும்.

பயோதரம் என்பது:—முலை, மேகம். (உ)

பரசு.

755. மழுவு மூங்கிலும் பரசென வகுப்பர்.
பரசு என்பது:—மழு, மூங்கில். (உ)

பரதர்.

756. தனவை சியரும் கழிபரும் பரதர்.
பரதர் என்பது:—வணிகர், நெய்தல் நில மாக்கள். (உ)

பரம்.

757. மெய்யு மெய்புகு கருவியும் பாரமும்
பரிமாக் கலணையு முன்பும் பரமெனல்.
பரம் என்பது:—மெய், மெய்க்கவசம், பாரம், குதிரைக்கல்லணை, முன். (ரு)

பரவை.

758. பரவைக் கிளவி பரப்புங் கடலுந்
திருமக ளாடலு முப்புஞ் செப்பும்.
பரவை என்பது:—பரப்பு, கடல், இலக்குமி கூத்து, உப்பு. (ச)

பரி.

759. துலையு நொடியுந் துரகதப் பெயரும்
பெருமையுஞ் செலவு மாயமும் பரியெனல்.
பரி என்பது:—சுமை, விரைவு, குதிரை, பெருமை, செலவு, மாயம். (சு)

பரிகம்.

760. புரிசையுள் ளுயர்ந்த நிலமுங் கணையமும்
பரிக மென்று பகரப் படுமே.
பரிகம் என்பது:—மதிலுண்மேடை, வளைதடி. (உ)

பரிதி.

761. இரத வுருளு மிடுபரி வேடமும்
பகலவன் பெயரும் வட்டமும் பரிதி.
பரிதி என்பது:—தேருருள், பரிவேடம், சூரியன், வட்டவடிவு. (ச)

பருவம்.

762. பக்குவமும் பொழுதும் பருவ மாகும்.
பருவம் என்பது:—பக்குவம், பொழுது. (உ)

பலம்.

763. பழமுங் கிழங்குங் காயுஞ் சேனையு
நிறையும் பேறும் பலமென் றுரைப்பர்.

பலம் என்பது:—பழம், கிழங்கு, காய், சேனை, ஓர் நிறை, பயன். (சு)

பலாசம்.

764. பச்சை நிறமும் புரசும் பலாசம்.

பலாசம் என்பது:—பசுமை, புரசை மரம். (உ)

பலி.

765. பலிதமுங் காகமும் பலியெனப் பகர்வர்.

பலி என்பது:—பலிப்பது, காகம். (உ)

பலிதம்.

766. நரையுங் காய்க்கு மரமும் பலிதம்.

பலிதம் என்பது:—நரைமயிர், காய்க்கும் மரம். (உ)

பவனம்.

767. பார்காற் றிராசி மனையும் பவனம்.

பவனம் என்பது:—பூமி, காற்று, இராசி, வீடு. (சு)

பழங்கண்.

768. துன்பமு மெலிவு மொலியும் பழங்கண்.

பழங்கண் என்பது:—துன்பம், மெலிவு, ஒலி. (௩)

பளிங்கு.

769. பளிங்கே கல்லும் புகரும் பகரும்.

பளிங்கு என்பது:—படிகம், சுக்கிரன். (உ)

பள்ளி.

770. தவத்தோ ரிடமுஞ் சயனமுந் துயிறலு
நகரமுஞ்சிற் றூரும் விலங்குதுயி லிடமும்
பள்ளி யென்பர் கோயிலும் பகரும்.

பள்ளி என்பது:—முனிவர் இருப்பிடம், மக்கள் படுக்கை, நித்திரை, ஊர், சிற்றூர், விலங்கின் படுக்கையிடம், தேவர் கோவில். (எ)

பறம்பு.

771. மலையு மடந்தையர் முலையும் பறம்பெனல்.

பறம்பு என்பது:—மலை, முலை. (உ)

பறை.

772. முரசுபுள் ளிறகு மொழியிவை பறையெனல்.
பறை என்பது:—முரசு, பறவையின் இறகு, சொல். (௩)

பனி.

773. துன்பமு நோயுந் துகினமுஞ் சீதமு
மச்சமு நடுக்கமும் பனியென் றுரைப்பர்.
பனி என்பது:—துக்கம், நோய், பெய்யும் பனி, குளிர்ச்சி, பயம், நடுக்கம். (௬)

பாகம்.

774. பாதியும் பிச்சையும் பாக மென்ப.
பாகம் என்பது:—பாதி, பிச்சை. (௨)

பாகல்.

775. பலாவுங் கார வல்லியும் பாகல்.
பாகல் என்பது:—பலா மரம், பாகற்கொடி. (௨)

பாகு.

776. சருக்கரைப் பெயருங் குழம்பும் பாகே.
பாகு என்பது:—சருக்கரை, குழம்பு. (௨)

பாசம்.

777. பசாசும் பற்றுந் துன்னமும் பாசம்.
பாசம் என்பது:—பேய், அன்பு, ஊசித்தொளை. (௩)

பாசனம்.

778. தமருந் தளிகையும் பாசன மென்ப.
பாசனம் என்பது:—சுற்றம், உண் கலம். (௨)

பாடி.

779. முல்லைநிலத் தூரும் பாசறையும் படையு
நாடு நகரமும் பாடி யாகும்.
பாடி என்பது:—முல்லைநிலத்தூர், பாசறை, சேனை, நாடு, நகரம். (௫)

பாடு

780. கேடுஞ் சத்த வொலியு மருகும்
பாடென் றுரைக்கும் பெருமையும் பகரும்.
பாடு என்பது:—கேடு, ஓசை, பக்கம், பெருமை. (௪)

பாணம்.

781. மழைவண்ணக் குறிஞ்சியு மம்பும் பாணம்.

பாணம் என்பது:—மழைவண்ணக் குறிஞ்சி, அம்பு. (உ)

பாணி.

782. பதியொடு சேர்ந்த பைம்பொழிற் பெயரு
மழகுங் கானமு மப்பும் பண்டமும்
வழுவில் பற்று நாடுங் கையும்
பொழுதி னீட்டமு மியமும் பாணி.

பாணி என்பது:—ஊர்சூழ் சோலை, அழகு, இசை, நீர், பலபண்டம், அன்பு, நாடு, கை, நெடுநேரம், வாச்சியப்பொது. (க0)

பாண்டில்.

783. வட்டந் தகழி மஞ்ச மூர்தி
கஞ்சஞ் சிரீட மெருதும் பாண்டில்.

பாண்டில் என்பது:—வட்டம், அகல், கட்டில், பரிபூண்டவூர்தி, கைத்தாளம், வாகை மரம், எருது. (எ)

பாதிரி.

784. ஒருமரப் பெயரு மூங்கிலும் பாதிரி.

பாதிரி என்பது:—ஓர் மரம், மூங்கில். (உ)

பாத்தி.

785. பகுத்தல் சிறுசெ யில்லமும் பாத்தி.

பாத்தி என்பது:—பங்கு, சிறுசெய், வீடு. (ஈ)

பாம்பு.

786. பன்னகப் பெயரும் வரம்பும் பாம்பெனல்.

பாம்பு என்பது:—சர்ப்பம், வரம்பு. (உ)

பாரதி.

787. பாரதி வங்கமும் பனுவலாட் டியுமாம்.

பாரதி என்பது:—மரக்கலம், சரஸ்வதி. (உ)

பாரா வாரம்.

788. மகரா லயமு மதன்கரைப் பெயரும்
பகரிற் பாரா வார மாகும்.

பாராவாரம் என்பது:—கடல், கடற்கரை. (உ)

பாரி

789. காதலி பெயருநல் லாடையும் புவியும்
பரியங்கமும் வள்ளலும் பாரி யென்ப.

பாரி என்பது:—மனைவி, நல்லாடை, பூமி, கட்டில், கடை எழு வள்ளலில் ஒருவன். (ரு)

பார்.

790. தேரின் பரப்பும் புவியும் பாரெனல்.

பார் என்பது:—தேர்ப்பரப்பு, பூமி. (உ)

பாலிகை.

791. வதுவைமுளை வட்டம் வாயிதழ் பாலிகை.

பாலிகை என்பது:—முளைப்பாலிகை, வட்டம், உதடு. (ந)

பால்.

792. பாதியு மிடமும் பயசுங் குணமும்
பக்கமுந் திசையு மியல்பும் பாலே.

பால் என்பது:—பங்கு, இடம், பால், குணம், பக்கம், திக்கு, இயல்பு. (எ)

பாழி.

793. தாபத ரிருப்பும் விலங்குதுயி லிடமு
மகலமும் வலியு நகரும் பாழுங்
கல்லின் முழையும் பாழி யென்ப.

பாழி என்பது:—முனிவர் வாசம், விலங்கின் படுக்கை இடம், அகலம், வலி, நகரம், பாழ், குகை. (எ)

பாளிதம்.

794 கண்டசருக் கரையுஞ் சோறுங்கர்ப் பூரமும்
பட்டு வருக்கமும் பாளித மென்ப.

பாளிதம் என்பது:—கண்டசருக்கரை, சோறு, கர்ப்பூரம், பட்டு வருக்கம். (ச)

பானல்.

795. கருநிறக் குவளையும் வயலும் பானல்.

பானல் என்பது:—கருங்குவளை, வயல். (உ)

பானு.

796. நல்லொளிப் பெயரு ஞாயிறும் பானு.

பானு என்பது:—ஒளி, சூரியன். (உ)

## பிசி.

797. பொய்யுஞ் சோறு மரும்பொருளும் பிசியே.
பிசி என்பது:—பொய், சோறு, அரும்பொருள். (௩)

## பிசிதம்.

798. விடக்கு நீறும் வேப்பும் பிசிதம்.
பிசிதம் என்பது:—இறைச்சி, விபூதி, வேம்பு. (௩)

## பிச்சம்.

799. ஆண்பான் மயிரும் வெண்குடைப் பெயரும்
பீலிக் குடையும் பிச்ச மாகும்.
பிச்சம் என்பது:—ஆண்மயிர், வெண்குடை, பீலிக்குஞ்சக்குடை. (௩)

## பிணிமுகம்.

800. புட்பொதுப் பெயரு மயிலும் பிணிமுகம்.
பிணிமுகம் என்பது:—பறவைப்பொது, மயில், (உ)

## பிணை.

801. விருப்பமான் விலங்கின் பெண்டொடர் பும்பிணை.
பிணை என்பது:—ஆசை, மான், (நாய், பன்றி, புல்வாய் இவற்றின்) பெண். (௩)

## பிண்டம்.

802. பிச்சையுந் திரட்சியும் பிண்ட மெனப்படும்.
பிண்டம் என்பது:—பிச்சை, உண்டை. (உ)

## பிண்டி.

803. பிண்ணாக்கு மாவு மசோகமும் பிண்டி.
பிண்டி என்பது:—பிண்ணாக்கு, இடித்த மா, அசோக மரம். (௩)

## பிதா.

804. சங்கரன் பெயரு மயனுந் தாதையும்
பெருநாரைப் பெயரும் பிதாவா கும்மே.
பிதா என்பது:—சிவன், பிரமன், தந்தை, பெரு நாரை. (௪)

## பிதிர்.

805. துவலையு நொடியுங் கதையும் பிதிரே.
பிதிர் என்பது:—திவலை, கால நுட்பம், கதை. (௩)

பித்திகை.

806 கருமுகை யுஞ்சுவர்த் தலமும் பித்திகை.
பித்திகை என்பது:—சிறு சண்பகம், சுவர். (உ)

பிரசம்.

807. தேனீப் பெயருந் தேனும் பிரசம்.
பிரசம் என்பது:—தேனீ, தேன். (உ)

பிள்ளை.

808. காரிப் புள்ளுங் காரிக் கடவுளும்
பேசின் மகவும் பிள்ளை யாகும்.
பிள்ளை என்பது:—கரிக்குருவி, வைரவன், குழந்தை. (ங)

பிறங்கல்.

809 மிகுதியு முயர்வும் பெருகலும் பிறங்கல்.
பிறங்கல் என்பது:—மிகுதி, உயர்வு, பெருக்கம். (ங)

இதுவுமது.

810. மலையின் பெயரு மன்னு மதற்கே.
ஷ்டி பிறங்கல் என்பது:—மலை. (ச)

பிறப்பு.

811. அச்சமும் பவமுஞ் செறிவும் பிறப்பெனல்.
பிறப்பு என்பது:—அச்சம், உற்பத்தி, நெருக்கம். (ங)

பீடிகை.

812. பீடமுந் தட்டமோ வணமும் பீடிகை.
பீடிகை என்பது:—ஆசனம், பூந்தட்டு, கடைவீதி. (ங)

பீதகம்.

813. பொன்னிரு வேலி பொன்மை பீதகம்.
பீதகம் என்பது:—பொன், இருவேலி, பொன்னிறம். (ங)

பீதம்.

814. பொன்மையுஞ் சாந்தும் பொன்னும் பீதம்.
பீதம் என்பது:—பொன்னிறம், நால்வகைச் சா
பொன்.

பீரு.

815. அச்சமுற் றோனும் புருவமும் பீரு.
பீரு என்பது:—அச்சமுள்ளோன், புருவம். (உ)

பீலி.

816. சயிலமு மயிலின் கலாபமுஞ் சவளமுஞ்
சின்னமுஞ் சிற்றால வட்டமும் பீலி.
பீலி என்பது:—மலை, மயிற்றோகை, பெருஞ்சவளம், சிறு சின்னம், சிற்றாலவட்டம். (ரு)

புகர்.

817. புற்கெனு நிறம்வெள்ளி குற்றமும் புகரே.
புகர் என்பது:—கபில நிறம், சுக்கிரன், குற்றம். (ங)

புகல்

818 யாக்கைசொல் வெற்றி குதிரும் புகலே.
புகல் என்பது:—சரீரம், சொல், வெற்றி, தானியக்குதிர். (ச)

புங்கம்.

819. அம்புக் குதைதுகி லுயர்ச்சியும் புங்கம்.
புங்கம் என்பது:—அம்புக்குதை, புடவை, உயர்ச்சி. (ங)

புட்டம்.

820. புடவையுங் காக்கையும் புட்ட மென்ப.
புட்டம் என்பது:—புடவை, காக்கை. (உ)

புணரி.

821. புணரி கடலுங் கடற்றிரை யும்மே.
புணரி என்பது:—கடல், கடற்றிரை. (உ)

புணர்ச்சி.

822. கலவியு மியைபும் புணர்ச்சி யென்ப.
புணர்ச்சி என்பது:—சையோகம், இணக்கம். (உ)

புண்டரீகம்.

823. கமலமுந் திசையின் கரிகளி லொன்றும்
புலியும் வண்டும் புண்டரீ கம்மே.
புண்டரீகம் என்பது:—தாமரை, தென்கீழ்த்திசை யானை, புலி, வண்டு. (ச)

பதவு.

824. கதவுமொரு விகற்பப் புல்லும் புதவே.
புதவு என்பது:—கதவு, ஓர் வகைப் புல். (உ)

புத்தன்.

825. போதிக் கிறைவனு மாயனும் புத்தன்.
புத்தன் என்பது:—போதி வேந்தன், திருமால். (உ)

புத்தேள்.

826 புதுமையுந் தெய்வமும் புத்தே ளாகும்.
புத்தேள் என்பது:— புதுமை, தெய்வம். (உ)

புந்தி.

827 புதனு மறிவுஞ் சிந்தையும் புந்தி.
புந்தி என்பது:—புதன், அறிவு, சிந்தை. (௩)

புரத்தல்.

828 வண்மையுங் காத்தலும் வணங்குதலும் புரத்தல்.
புரத்தல் என்பது:—ஈகை, காத்தல், வணங்குதல். (௩)

புரவலன்.

829. பூபா லனுங்கொடை யோனும் புரவலன்.
புரவலன் என்பது:—அரசன், ஈகையாளன். (உ)

புரை.

830. உவமை குற்ற முயர்வே யுட்டொளைப்
பொருளென் றின்னவை புரையென லாகும்.
புரை என்பது:—உவமை, குற்றம், உயர்ச்சி, உட்டொளைப் பொருள். (ச)

புலம்பு.

831. தனிமையு மச்சமுஞ் சத்தமும் புலம்பே.
புலம்பு என்பது:—தனிமை, அச்சம், சத்தம். (௩)

புலவர்.

832. அறிஞருஞ் சளுக்கியர் பெயரு மண்டருங்
கவிஞருங் கூத்தருங் கலைவல் லாளரும்
புரந்தர ருங்கண் ணாளரும் புலவர்.

புலவர் என்பது:—அறிஞர், சளுக்கியர், தேவர், கவிவாணர், கூத்தர், புலமையோர், இந்திரர், கம்மாளர். (அ)

புலி.

833 சிங்க விராசியு நால்வகைச் சாந்தத்
தொன்றும் வியாக் கிரமு மூரைப்பர் புலியே.

புலி என்பது:—சிங்க இராசி, நால்வகைச் சாந்தில் ஒன்று, புலி என்னும் மிருகம். (௩)

புலிங்கம்.

834 பொறியுமூர்க் குருவியும் புலிங்க மாகும்.

புலிங்கம் என்பது:—தீப்பொறி, ஊர்க்குருவி. (உ)

புல்.

835 அநுடமோர் புதலும் புற்கெனு நிறமும்
மொருசார் மரமும் பனையும் புலியும்
புணர்ச்சியும் புல்லெனப் புகலப் பெறுமே.

புல் என்பது:—அநுட நட்சத்திரம், புதல், புன்மை நிறம், புறக்காழ் மரம், பனை மரம், புலி, புணர்ச்சி. (எ)

புவனம்.

836 புவன முலகும் புனலும் புவியுமாம்.

புவனம் என்பது:—உலகின் பொது, நீர், பூமி. (௩)

புளகம்.

837 கண்ணாடியுங் குமிழ்த்தலு மன்னமும் புளகம்.

புளகம் என்பது:—கண்ணாடி, மயிர் சிலிர்த்தல், சோறு. (௩)

புள்.

838 பகரிசை வண்டும் பறவைப் பெயரும்
புகலு மவிட்ட நாளும் புள்ளெனல்.

புள் என்பது:—வண்டு, பறவைப்பொது, அவிட்ட நட்சத்திரம். (௩)

புறணி.

839 குறிஞ்சி நிலமு முல்லையின் புறமுந்
தோலுமரப் பட்டையும் புறணி யென்ப.

புறணி என்பது:—குறிஞ்சி நிலம், முல்லை நிலம், தோல், மரப்பட்டை. (௪)

புறம்பணை.

840. குறிஞ்சி நிலமு முல்லையின் புறமும்
புறம்பணை யென்று புகலப் பெறுமே.

புறம்பணை என்பது:—குறிஞ்சி நிலம், முல்லை நிலம். (உ)

புறவணி.

841. குறிஞ்சி நிலமு முல்லையும் புறவணி.

புறவணி என்பது:—குறிஞ்சி நிலம், முல்லை நிலம். (உ)

புறவம்.

842. முல்லை நிலமுங் காடும் புறவம்.

புறவம் என்பது:—முல்லை நிலம், காடு. (உ)

புனை.

843 பொலிவு மழகுமொப் பனையும் புனையெனல்.

புனை என்பது:—பொலிவு, அழகு, அலங்காரம். (ந)

புன்கண்.

844. துன்பமு நோயும் புன்கணென்ப.

புன்கண் என்பது:—துன்பம், நோய். (உ)

பூ.

845. அவனியும் வனப்பு மலருங் கூர்மையும்
பொலிவும் பிறப்பும் பூவென லாகும்.

பூ என்பது:—பூமி, அழகு, மலர், கூர்மை, பொலிவு, பிறப்பு. (சு)

பூகம்.

846 கமுகுந் திரட்சியுங் கழுகும் பூகம்.

பூகம் என்பது:—கமுகு, திரட்சி, கழுகு. (ந)

பூக்கம்.

847 பூகமு மருத வூரும் பூக்கம்.

பூக்கம் என்பது:—கமுகு, மருத நிலத்து ஊர். (உ)

பூட்கை.

848. யானை யாளிப் பெயரும் யானையு
மேற்கோ ளும்மிவை பூட்கை யென்ப.

பூட்கை என்பது:—யானை யாளி, யானை, மேற்கோள். (ந)

பூதம்.

849. பரணி நாளும் பல்லுயிர்ப் பெயரும்
பாரிடமு மிறந்த காலமு மாலும்
புனிதமும் புவிமுத லைந்தும் பூதம்.

பூதம் என்பது:—பரணி நட்சத்திரம், உயிர், பூத கணம், இறந்த காலம், ஆல மரம், சுத்தம், பிருதிவி முதலிய ஐம்பூதம். (௭)

பூதி.

850. நீறுஞ் செல்வமு நிகழ்துர்க் கந்தமும்
பூதி யென்பர் நரகும் புகலும்.

பூதி என்பது:—திருநீறு, செல்வம், துர்க்கந்தம், நரகம். (௪)

பூதியம்.

851. புவியு முடம்புஞ் செல்வமும் பூதியம்.

பூதியம் என்பது:—பூமி, உடம்பு, செல்வம். (௩)

பூரணம்.

852. நிறைவுமோர் திதியும் பூரண மென்ப.

பூரணம் என்பது:—நிறைவு, பௌர்ணமி திதி. (௨)

பூருவம்.

853. முதுமையுங் கிழக்கு முன்பும் பூருவம்.

பூருவம் என்பது:—பழமை, கிழக்கு, முன்பு. (௩)

பூவை.

854. நாகணவாய்ப் புள்ளுங் காயாவும் பூவை.

பூவை என்பது:—நாகணவாய்ப்புள், காயா மரம். (௨)

பூழ்தி.

855. கொடுமையுந் தசையு நுண் பொடியும் பூழ்தி.

பூழ்தி என்பது:—கொடுமை, தசை, நுண்பொடி. (௩)

பூளை.

856. பொருப்பின்கண வாயுமோர் புதலும் பூளை.

பூளை என்பது:—மலைக்கணவாய், ஓர் செடி. (௨)

பேடு.

857. அலியு மூருமத னாடலும் பேடு.

பேடு என்பது:—அலி, ஊர், மன்மதன் ஆடல். (௩)

பேதை.

858. அறிவி லோனு மெளியனும் பேதை.
பேதை என்பது:—அறிவிலான், தரித்திரன். (உ)

பேராளன்.

859. மிக்கோன் பெயரு மிருகசீ ரிடமும்
பெற்றி யுரைக்கிற் பேரா ளன்னே.
பேராளன் என்பது:—மிக்கோன், மிருகசீரிட நட்சத்திரம். (உ)

பை.

860. படமும் பச்சையு மழகும் பையே.
பை என்பது:—பாம்பின் படம், பச்சை நிறம், அழகு. (ங)

பொகுட்டு.

861. சேற்றெழு மொக்குளு மலையும் பங்கயப்
பொன்னிறக் கொட்டையும் பொகுட்டெனலாகும்.
பொகுட்டு, என்பது:—சேற்றில் எழும் குமிழி, மலை, தாமரைக் கொட்டை. (ங)

பொங்கர்.

862. பொருப்பு மரத்தின் கொம்பும் பொங்கர்.
பொங்கர் என்பது:—மலை, மரக்கொம்பு. (உ)

இதுவுமது.

863. இலவின் பெயரு மியம்பல் வேண்டும்.
ஷ்ஷ் பொங்கர் என்பது:—இலவ மரம். (க) கூ (ங)

பொங்கல்.

864. பொலிவு மிகுதியுங் கொந்தலும் பொங்கர்.
பொங்கல் என்பது:—பொலிவு, மிகுதி, கொதித்துக் கிளர்தல். (ங)

பொம்மல்.

865. பொலிவுஞ் சோறும் பொருமலும் பொம்மல்.
பொம்மல் என்பது:—பொலிவு, சோறு, பொருமல். (ங)

பொருநன்.

866. கொற்றவன் பெயருந் தலைவனுங் கூத்தனும்
வீரனுந் திண்ணி யோனும் பொருநன்.

பொருநன் என்பது:—அரசன், தலைவன், நாடகன், படைவீரன், திண்ணியோன். (ரு)

பொழில்.

867 புவியுஞ் சோலையும் பெருமையும் பொழிலே.
பொழில் என்பது:—பூமி, சோலை, பெருமை. (ங)

பொறி.

868 எழுத்துச் செல்வ மிலாஞ்சனை திருமகள்
மரக்கலம் யந்திரம் வரியிந் திரியம்
பொடிக்கெழு நுண்சிறு கனலிவை பொறியே.
பொறி என்பது:—எழுத்து, செல்வம், அடையாளம், இலக்குமி, மரக்கலம், யந்திரம், இரேகை, இந்திரியம், தீப்பொறி. (கூ)

பொறை.

869 புவனமுந் துறுகலும் பொருப்பும் பொறையெனல்.
பொறை என்பது:—பூமி, துறுகல், மலை. (ங)

பொற்பு.

870 பொலிவு மழகுமொப் பனையும் பொற்பெனல்.
பொற்பு என்பது:—பொலிவு, அழகு, அலங்காரம். (ங)

பொன்.

871 அழகு மைவகை யுலோகமு மிரும்புந்
திருவும் வியாழமும் பொன்னெனச் செப்புவர்.
பொன் என்பது:—அழகு, பஞ்சலோகப்பொது, இரும்பு, இலக்குமி, பிரகஸ்பதி. (ரு)

போகி.

872 பொன்னுல காளியும் பாம்பும் போகி.
போகி என்பது:—தேவேந்திரன், பாம்பு. (உ)

போகில்.

873 பூமொட்டு நாபியும் புட்பொதுவும் போகில்.
போகில் என்பது:—பூவரும்பு, கொப்பூழ், பறவைப்பொது. (ங)

போக்கு.

874 வழியு மிளமைக் கன்றுங் குற்றமும்
புகலிற் போதலு நடையும் போக்கே.

போக்கு என்பது:—வழி, இள மரக்கன்று, குற்றம், போதல், நடை. (௫)

போதகம்.

875. அப்ப வருக்கமும் யானைக் கன்று
மிளமையு மரத்தின் கன்றும் போதகம்.

போதகம் என்பது:—அப்ப வருக்கம், யானைக் கன்று, இளமை, மரக் கன்று. (௪)

போந்து.

876. பல்லியும் பனையும் போந்தெனலாகும்.

போந்து என்பது:—பல்லி, பனை. (௨)

போர்.

877. சமரமு நென்முதற் சும்மையுஞ் சதயமும்
புகலுங் காலைப் போரென லாகும்.

போர் என்பது:—யுத்தம், நெற்போர், சதய நட்சத்திரம். (௩)

போர்வை.

878. தோலுமீக் கோளும் போர்வை யாகும்.

போர்வை என்பது:—தோல், மேற்போர்வை. (௨)

எட்டாவது

மகர வருக்கம்.

மகரம்.

879. மலரின் றாதுஞ் சுறவும் மகரம்.

மகரம் என்பது:—பூந்தாது, சுறு மீன். (௨)

மஞ்சரி.

880. மலரின் றிரளுந் தளிரு மஞ்சரி.

மஞ்சரி என்பது:—பூங்கொத்து, தளிர். (௨)

மஞ்சு.

881. எழிலும் பனியு மிளமையு மேகமும்
வலியும் யானையின் முதுகு மஞ்சே.

மஞ்சு என்பது:—அழகு, பனி, இளமை, மேகம், வலி, யானையின் முதுகு. (௬)

மடங்கல்.

882 மடங்கலென் கிளவி மறலியு மிடியு
மடங்கலு நோயும் யாளியு மூழியு
மடங்கலும் வடவையு முடிவு மென்ப.

மடங்கல் என்பது:—இயமன், இடி, சிங்கம், நோய், யாளி, யுக முடிவு, மடங்குதல், வடவாமுகாக்கினி, இறுதி. (௯)

மடி.

883. பொய்யு நோயும் புடைவையுஞ் சோம்பும்
புலம்பும் கேடு மடக்கமுந் தாழையும்
வயிறு மடங்கலு மடியென லாகும்.

மடி என்பது:—பொய், வியாதி, புடைவை, சோம்பல், புலம்பு, கேடு, அடக்கம், தாழை, வயிறு, மடங்குதல். (௧0)

மடு.

884. மடுவுநீர் நிலையு மடுவென வகுப்பர்.

மடு என்பது:—மடு, நீர் நிலை. (௨)

மடை.

885. பூண்கடைப் புணர்வுஞ் சோறு மடையே.

மடை என்பது:—பூண்கடைப்புணர்வு, அன்னம். (௨)

மட்டு.

886 மதுவு மளவு மட்டென லாகும்.

மட்டு என்பது:—கள், எல்லை. (௨)

மணி.

887. வனப்புநவ மணியு மௌத்திகமு நீலமுங்
கருநிறமு நன்மையுங் கண்டையு மணியே.

மணி என்பது:—அழகு, நவமணிப் பொது, முத்து, நீலம், கருமை, நன்மை, கண்டை மணி. (எ)

மண்டலி.

888. ஒருபெரும் பாம்பும் பூசையு மண்டலி.

மண்டலி என்பது:—ஓர் பாம்பு, பூனை. (௨)

மண்டிலம்.

889. வட்டமு நாடுங் குதிரையு மண்டிலம்.

மண்டிலம் என்பது:—வட்டம், நாடு, குதிரை. (௩)

மதலை.

890. மைந்தனுங் கொன்றை மரமுந் தூணு
மரக்கலமுங் கொடுங்கையு மதலை யாகும்.

மதலை என்பது:—பிள்ளை, கொன்றை மரம், தூண், மரக்கலம், கொடுங்கை. (இ)

மதன்.

891. வலியு மழகு மலர்க்கணை வேளு
மாட்சிமைப் பெயரு மதனென லாகும்.

மதன் என்பது:—வலிமை, அழகு, மன்மதன், மாட்சிமை. (ச)

மதி.

892. முன்னிலை யசைச்சொலு முடிபதியு முணர்வு
மன்னிய மாதமு மதியென லாகும்.

மதி என்பது:—முன்னிலை அசைச்சொல், சந்திரன், புத்தி, மாதம். (ச)

மதியம், திங்கள்.

893. சந்திரன் பெயரு மாதமுஞ் சாற்றிற்
றிங்களு மதியமு மெனச்சிறந் தனவே.

மதியம், திங்கள் என்பன:—சந்திரன், மாதம். (உ)

மது.

894. மதுவிள வேனிலுந் தேனுங் கள்ளுமாம்.

மது என்பது:—இளவேனில், தேன், கள். (ங)

மதுகம்.

895. அட்டியு மதுரமு மிருப்பையுந் தாாவும்
வண்டு மழகு மதுக மாகும்.

மதுகம் என்பது:—அதிமதுரம், இனிமை, இலுப்பை மரம், தாா, வண்டு, அழகு. (கா)

மத்திகை.

896. மாலையுஞ் சம்மட்டியு மத்திகை யாகும்.

மத்திகை என்பது:—பூ மாலை, குதிரைச்சம்மட்டி. (உ)

மந்தரம்.

897. மந்த வோசையு மேருவு மந்தரம்.

மந்தரம் என்பது:—மந்த ஓசை, ஓர் மலை. (உ)

மந்தாரம்.

898. தெய்வ மரத்தி லொன் றுஞ்செம் பரத்தையு
மந்தார மென்று வழங்கப் பெறுமே.

மந்தாரம் என்பது:—தெய்வமரத்தில் ஒன்று, செம்பரத்தை. (௨)

மந்தி.

899. மந்திபெண் குரங்கும் வண்டு முசுவுமாம்.

மந்தி என்பது:—பெண் குரங்கு, வண்டு, பெண் முசு. (௩)

மந்திரம்.

900. கோவிலுங் குதிரைப் பந்தியு மெண்ணமு
மதுவும் வீடு மறையு மந்திரம்.

மந்திரம் என்பது:—கோவில், குதிரைப்பந்தி, எண்ணம், கள், வீடு, வேதம். (௬)

மயல்.

901. ஆவாவின் பெயரு மலகைப் பெயரு
மயலென் றறைந்தனர் வாய்மொழிப் புலவர்.

மயல் என்பது:—ஆசை, பிசாசம். (௨)

மயிலை.

902. மீனின் பொதுவு மீனவி ராசியு
மலரிரு வாட்சியு மயிலை யாகும்.

மயிலை என்பது:—மீன் பொது, மீன இராசி, இருவாட்சி. (௩)

மரக்கால்.

903 அளவையு மாயவ னாடலு மன்றி
வளவிய சோதியு மரக்கா லாகும்.

மரக்கால் என்பது:—முகந்து அளக்கும் கருவியில் ஒன்று, திருமால் கூத்து, சோதி நட்சத்திரம். (௩)

மருள்.

904. பேயுங் குறிஞ்சி யாழின் றிறனு
மாலு மோர் புதலு மருளென் றாகும்.

மருள் என்பது:—பிசாசம், குறிஞ்சி யாழ்த்திறம், மயக்கம், ஓர் புதல். (௪)

மல்.

905. மாயோ னாடலும் வலியு மல்லெனல்.

மல் என்பது:—திருமால் கூத்து, வலி. (௨)

மல்லிகை.

906. மாலதி சுடர்நிலைத் தண்டிவை மல்லிகை.

மல்லிகை என்பது:—ஓர் பூஞ்செடி, விளக்குத்தண்டு. (உ)

மழை.

907. மழையே குளிர்ச்சியும் வருடமு மேகமும்.

மழை என்பது:—குளிர்ச்சி, மாரி, மேகம். (௩)

மள்ளர்.

908 செருமலை வீரருந் திண்ணி யோரு
மருதநில மாக்களு மள்ள ரென்ப.

மள்ளர் என்பது:—வீரர், திண்ணியோர், மருத நில மாக்கள். (௩)

மறம்.

909. சினமும் பாவமும் பிணக்குங் கூற்றும்
வலியுஞ்சே வகமும் வப்பு மறமே.

மறம் என்பது:—சினம், பாவம், பிணக்கு, நமன், வலி, வீரம், சண்டை. (எ)

மறலி.

910. அயர்ப்புங் கூற்று மழுக்கா று மறலி.

மறலி என்பது:—மறதி, நமன், பொறாமை. (௩)

மறவர்.

911. வேடர்தம் பெயரும் வீரரு மறவர்.

மறவர் என்பது:—வேடர், படை வீரர். (உ)

மறவி.

912. மறப்புமழுக் கா று மறவி யாகும்.

மறவி என்பது:—மறப்பு, பொறாமை. (உ)

மணவு.

913. மணிப்பெயரு மக்கு மணியு மணவே.

மணவு என்பது:—மணிப்பொது, சங்கு மணி. (உ)

மன்.

914. மறையு முத்திரட் டாதியு மரசனு
நிலையு மிகுதியு மாக்கமு மொழிவு
முரைசெயி விடைச்சொலு மன்னென் றுரைக்கும்.

மன் என்பது:—மந்திரம், உத்திரட்டாதி நட்சத்திரம், அரசன், நிலை
பேறு, மிகுதி, ஆக்கம், ஒழிவு, இடைச்சொல். (அ)

மன்றம்.

915. வாய்மைவெளி வாசம் பொதுவு மன்றம்.
மன்றம் என்பது:—உண்மை, வெள்ளிடை, மணம், சபை. (ச)

மன்றல்.

916. பாலையா ழிசையுங் கடிப்பரி மளமும்
வதுவையு மென்றிவை மன்ற லாகும்.
மன்றல் என்பது:—பாலை யாழிசை, மிக்க பரிமளம், கலியாணம். (ந)

மன்னல்.

917. பீடும் வலியு மடுப்பது மன்னல்.
மன்னல் என்பது:—பெருமை, வலிமை, அடுத்தல். (ந)

மன்னன்.

918. அரசனு முத்திரட் டாதியு மன்னன்.
மன்னன் என்பது:—அரசன், உத்திரட்டாதி நட்சத்திரம். (உ)

மா.

919. ஒருமரப் பெயரு மழைத்தலுங் கறுப்புங்
குதிரையும் விலங்குந் திருவும் வனப்பும்
வலியும் வண்டும் பிண்டியுஞ் செல்வமு
நிறனும் பெருமையு நிலனுமோ ரிலக்கமு
மருவிய பெயரு மாவென லாகும்.
மா என்பது:—மாமரம், அழைத்தல், கறுப்பு, குதிரை, விலங்கின்
பொது, இலக்குமி, அழகு, வலிமை, வண்டு, தென்மா, செல்
வம், நிறம், பெருமை, பூமி, ஓர் எண். (கரு)

மாசு.

920 குற்றமு மேகமு மழுக்கு மாசே.
மாசு என்பது:—குற்றம், மேகம், அழுக்கு. (ந)

மாடம்.

921. மனையு முழுந்து மாட மாகும்.
மாடம் என்பது:—வீடு, உழுந்து. (உ)

மாதர்.

922. அரிவையரு மழகுங் காதலு மாதர்.

மாதர் என்பது:—பெண்கள், அழகு, ஆசை. (௩)

மாதவம்.

923. மதுவுநற் றவமு மிளவேனிலு மாதவம்.

மாதவம் என்பது:—கள், தவம், வசந்த காலம். (௩)

மாதா.

924. வாணியுங் கௌரியு மன்னையு மாதா.

மாதா என்பது:—நாமகள், பார்வதி, தாய். (௩)

மாதிரம்.

925. மலையுந் திசையும் யானையு மாதிரம்.

மாதிரம் என்பது:—மலை, திசை, யானை. (௩)

மாந்தல்.

926 உண்டலுங் குடித்தலு மிறத்தலு மாந்தல்.

மாந்தல் என்பது:—உண்டல், குடித்தல், இறத்தல். (௩)

மாரி.

927. மழையு முகிலு மரணமு மதுவும்
வடுகியு நோயுமோர் புள்ளு மாரி.

மாரி என்பது:—மழை, மேகம், சாவு, கள், காடுகாள், ஓர் வியாதி, ஓர் பறவை. (௭)

மார்க்கம்.

928. வழியுஞ் சமயமுந் தெருவு மார்க்கம்.

மார்க்கம் என்பது:—வழி, சமயம், வீதி. (௩)

மாலதி.

929. மாலதி சுடர்நிலைத் தண்டுநிரு வாணமும்.

மாலதி என்பது:—விளக்குத்தண்டு, நிருவாணம். (௨)

மாலை.

930 இரவுந் தொடுத்த தொடையலு மந்தியும்
வான்முறை யொழுக்கமு மியல்பு மாலை.

மாலை என்பது:—இரா, தொடுத்த மாலை, அந்திப்பொழுது, வான்முறை, ஒழுக்கம், இயல்பு. (௬)

மால்.

931. வாயு கருமை பெருமை மதிமகன்
மாயோன் மேக மயக்கம் வேட்கை
மாலென் றுரைப்பர் கண்ணோணியு மாகும்.

மால் என்பது:—காற்று, கருமை, பெருமை, புதன், திருமால், மேகம், மயக்கம், வேட்கை, கண்ணேணி. (கூ)

மாழை.

932. அழகு திரட்சி யாடக மாமர
மோலை மடமை யுலோகக் கட்டி
புளிமா மாழை யாகு மென்ப.

மாழை என்பது:—அழகு, திரட்சி, பொன், மா மரம், ஓலை, அறிவின்மை, உலோகக்கட்டி, புளிமா. (அ)

மான்.

933 விலங்கின் பெயரும் வெற்புங் குதிரையு
மகர விராசியு முழையு மானெனல்.

மான் என்பது:—விலங்கின் பொது, மலை, குதிரை, மகர இராசி, மான். (இ)

மிசை.

934. மேடு மொழியு மிசையென விளம்புவர்.

மிசை என்பது:—மேடு, மேல் என்னும் சொல். (உ)

மிச்சை.

935 மிச்சை பொய்த்தலஞ் ஞானமு மிடித்தலும்.

மிச்சை என்பது:—பொய்யாதல், அஞ்ஞானம், வறுமையுறல். (டூ)

மீளி.

936 பெருமையும் வலியுந் தலைவன் பெயரும்
விறலோன் பெயரு மீளி யாகும்.

மீளி என்பது:—பெருமை, வலிமை, பாலைநிலத்தலைவன், திண்ணியன். (சு)

மீன்.

937 மச்சப் பெயரும் வானத் துடுவுஞ்
சித்திரை நாளு மீனெனச் செப்புவர்.

மீன் என்பது:—மச்சம், விண் மீன், சித்திரை நட்சத்திரம். (கூ)

முகில்.

938 திரனு மேகமு முகிலென லாகும்.
முகில் என்பது:—திரன், மேகம். (உ)

முடங்கல்.

939 மூங்கிலுந் தாழையு முடங்க லென்ப.
முடங்கல் என்பது:—மூங்கில், தாழை. (உ)

முடலை.

940 உண்டையுந் திரட்சியும் பெருமையு முடலை.
முடலை என்பது:—உண்டை, திரட்சி, பெருமை. (ங)

முண்டகம்

941 தாமரைப் பெயருந் தாழையுங் கள்ளு
முள்ளுடை முள்ளியு நெற்றியு முண்டகம்.
முண்டகம் என்பது:—தாமரை, தாழை, கள், முள்ளிச் செடி, நெற்றி. (ரு)

முதலை.

942 முதலைசெங் கிடையு முருந்து மிடங்கரும்.
முதலை என்பது:—செங்கெட்டி, இறகின் அடிக்குருத்து, நீர்வாழ் முதலை. (ங)

முதுமை

943 முற்றுதற் பெயரும் பழமையு முதுமை.
முதுமை என்பது:—முற்றுதல், பழமை. (உ)

முரசு.

944 உத்திரட் டாதியும் பறையு முரசெனல்.
முரசு என்பது:—உத்திரட்டாதி நட்சத்திரம், வாச்சியப்பொது. (உ)

முரண்.

945 பகையும் வலியு முரணெனப் பகர்வர்.
முரண் என்பது:—பகை, வலிமை. (உ)

முரம்பு.

946 பாலடுத்த நிலமும் பாறையு முரம்பே.
முரம்பு என்பது:—பாலடுத்து உயர் நிலம், பாறை. (உ)

முருகு.

947. இளமையு நாற்றமுங் கள்ளும் விழவு
முருக வேளு மழகு முருகே.

முருகு என்பது:—இளமை, வாசனை, கள், திருவிழா, குமரன், அழகு. (சு)

முளரி.

948. கமலமு நட்பமுங் காடு நெருப்பு
முளரி யென்ன மொழிந்திசி னோரே.

முளரி என்பது:—தாமரை, நுண்மை, காடு, தீ. (ச)

முளை.

949 மூங்கிலுஞ் சுதனுமங் குரிப்பு முளையே.

முளை என்பது:—மூங்கில், மகன், அங்குரம். (௩)

முறம்.

950. விசாகமுஞ் சுளகும் விளம்புவர் முறமே.

முறம் என்பது:—விசாக நட்சத்திரம், சுளகு. (உ)

முறிகுளம்.

951. அணைமுறி குளமும்பூ ராடமு முறிகுளம்.

முறிகுளம் என்பது:—உடைகுளம், பூராட நட்சத்திரம். (உ)

முறுவல்.

952 பல்லுஞ் சிரிப்பு முறுவ லென்ப.

முறுவல் என்பது:—பல், சிரிப்பு. (உ)

முறை.

953 கோசமும் பழமையு மூழுங் கூட்டு
மார்ப்பு முறைமையு முறையென லாகும்.

முறை என்பது:—புத்தகம், பழமை, நீதி, கூட்டு, கட்டு, முறைமை. (சு)

முனி.

954. இருடியும் வில்லும் யானைக் கன்று
முனியென் றுரைப்ப வகத்திய மொழிப.

முனி என்பது:—இருடி, வில், யானைக்கன்று, அகத்தி மரம். (ச)

முனை.

955. பகையும்வெறுப் பாமையும் வினையு முனையே.

முனை என்பது:—பகை, வெறுப்பு, வினை. (௩)

முன்னம்.

956. சீக்கிரி மாமுமுற் காலமுஞ் சிங்கமு
முன்ன மென்று மொழியப் பெறுமே.

முன்னம் என்பது:—சீக்கிரி மாம், முற்காலம், சிங்கம். (௩)

மூசல்.

957 மொய்த்தலு மாணமு மூச லென்ப.

மூசல் என்பது:—மொய்த்தல், சாதல். (௨)

மூரல்.

958 முறுவலும் பல்லுஞ் சோறு மூரல்.

மூரல் என்பது:—சிரிப்பு, பல், சோறு. (௩)

மூரி.

959. எருமையு மெருதும் பெருமையுஞ் சோம்பும்
வலியு முரணு நெரிவு மூரி.

மூரி என்பது:—எருமை, எருது, பெருமை, சோம்பல், வலிமை, முரண், நெரிவு. (எ)

மூலம்.

960 ஒருநாண் மீனு மேதுவுங் கிழங்கு
மூல மென்று மொழியப் பெறுமே.

மூலம் என்பது:—மூல நட்சத்திரம், காரணம், கிழங்கு. (௩

மெத்தை.

961. சட்டை யணைபிவை மெத்தை யாகும்.

மெத்தை என்பது:—சட்டை, அமளி. (

மெய்

962 யாக்கையும் வாய்மையு மெய்யென லாகும்.

மெய் என்பது:—உடல், உண்மை. (௨)

மேடம்.

963. மெய்புகு கருவியு் யாடு மேடம்.

மேடம் என்பது:—கவசம், யாடு. (௨

மேடு.

964. உயரமும் பெருமையு வயிறு மேடே.
மேடு என்பது:—உயரம், பெருமை, வயிறு. (௩)

மேதை.

965. புதனு மறிஞனு நரம்பு மேதை.
மேதை என்பது:—புதன், அறிஞன், நரம்பு. (௩)

மேல்.

966 மேற்கு மும்பரு மேன்மையு மேலே.
மேல் என்பது:—மேற்கு, ஆகாயம், மேன்மை. (௩)

மை.

967 அஞ்சனங் குற்றங் கருநிற மலடு
மஞ்சும் யாடு மையென லாகும்.
மை என்பது:—அஞ்சனம், குற்றம், கருமை, மலடு, மேகம், யாடு. (௬)

மொக்குள்.

968 பூவின் மொட்டுங் குமிழியு மொக்குள்.
மொக்குள் என்பது:—பூ வரும்பு, நீர்க்குமிழி. (௨)

மொய்.

969. திரளும் யானையுஞ் செருக்கள மும்மொய்.
மொய் என்பது:—கூட்டம், யானை, போர்க்களம். (௩)

மொய்ம்பு.

970 வலியுந் தோளு மொய்ம்பென லாகும்.
மொய்ம்பு என்பது:—வலிமை, தோள். (௨)

மோடு.

971. உயரமும் பெருமையும் வயிறு மோடெனல்.
மோடு என்பது:—உயரம், பெருமை, வயிறு. (௩)

மௌவல்.

972. வனமல்லிகை யுங்குளிர் வாரமு மௌவல்.
மௌவல் என்பது:—வன மல்லிகை, குளிர்வாரம். (௨)

ஒன்பதாவது

## யகர வருக்கம்.

யாணர்.

973 கண்ணுளர் பெயரும் புதுமையு மழகு
நன்றும் யாண ரெனும்பெயர் நவில்வர்.

யாணர் என்பது:—கம்மாளர், புதுமை, அழகு, நன்மை. (௪)

யாமம்.

974. இரவுஞ் சாமமுந் தெற்கும் யாமம்.

யாமம் என்பது:—இரவு, சாமம், தெற்கு. (௩)

யாழ்.

975. மிதுன விராசியும் வீணைக் கருவியு
பசுபதி நாளும் யாழெனலாகும்.

யாழ் என்பது:—மிதுன இராசி, வீணை, அச்சுவினி நாள். (௩)

யூகம்.

976. உடற்குறை கருங்குரங் கோர்தல் கோட்டா
னுட்பொரு டருக்கம் யூக மாகும்.

யூகம் என்பது:—கவந்தம், கருங்குரங்கு, ஆராய்தல், கோட்டான், அகப்பொருள் அறிதல், தருக்கம். (௬)

யூபம்.

977. வேள்வித்தறி கவந்தம் படையுறுப்பும் யூபம்.

யூபம் என்பது:—வேள்வித்தம்பம், உடற்குறை, படை வகுப்பு. (௩)

பத்தாவது

## வகர வருக்கம்.

வங்கம்.

978. வழுதுணைப் பெயரும் வெள்ளியு மீயமும்
வங்க மென்பநா வாயு மாகும்.

வங்கம் என்பது:—கத்திரிச்செடி, வெள்ளி, ஈயம், மரக்கலம். (௪)

வசதி.

979. நகரமு மனையுந் தாவும் வசதி.

வசதி என்பது:—நகரம், வீடு, நல்லிடம். (௩)

### வசந்தம்.

980. வசந்தஞ்சல் லாபமுஞ் சித்திரை மாதமும்.
வசந்தம் என்பது:—சல்லாபம், சித்திரை மாதம். (௨)

### வசி.

981. வசியே கூர்மை வசிவாள் வடுவுமாம்.
வசி என்பது:—கூர்மை, வசியம், வாள், தழும்பு. (௪)

### வசு.

982. தேவர் கோதனந் தீபொன் னும்வசு.
வசு என்பது:—அட்ட வசுக்கள், பசுவின் கன்று, நெருப்பு, பொன். (௪)

### வஞ்சம்.

983. வாளும் பொய்யுங் கொடுமையும் வஞ்சம்.
வஞ்சம் என்பது:—வாள், பொய், கொடுமை. (௩)

### வஞ்சனை.

984. மாயையும் பெண்ணும் பொய்யும் வஞ்சனை.
வஞ்சனை என்பது:—மாயை, தெய்வப்பெண், பொய். (௩)

### வஞ்சி.

985. போரின்மேற் செலவும் புதலுமங் கையரும்
பாவினோர் பாவு மோர்ப்திப் பெயரு
மாற்றருங் குடையும் வஞ்சி யாகும்.
வஞ்சி என்பது:—பகைவர்மேல் செல்லல், ஓர் கொடி, பெண்கள், ஓர் பா, கருவூர், குடை. (௬)

### இதுவுமது.

986 மருதயாழ்த் திறத்தோ ரோசையும் வகுப்பர்.
ஷை. வஞ்சி என்பது:—மருதயாழ்த்திறத்து ஒன்று. (க) ஆ. (எ)

### வடகம்.

987. அத்தவா ளப்பட்டு மதனும் வடகம்.
வடகம் என்பது:—அத்தவாளம், தோல். (௨)

### வடவை.

988 வடவா வனலு மடநடைப் பிடியு
மெருமைப் பெயருங் குதிரையும் வடவை.

வடவை என்பது:—ஊழித்தீ, பெண் யானை, எருமை, பெண் குதிரை. (௪)

வடு.

989. தழும்புஞ் செம்புந் தவறும் வண்டும்
வடுவென வுரைக்கு மரபா கும்மே.

வடு என்பது:—தழும்பு, செம்பு, குற்றம், வண்டு. (௪)

வடுகு.

990. மருதயா ழோர்குல மிந்தள மும் வடுகே.

வடுகு என்பது:—மருதயாழ்த்திறம், ஓர் சாதி, இந்தள இராகம். (௩)

வட்டம்.

991. பரிசை பாரா வளையங் கைம்மணி
திரிகை வலயஞ்சா லூர்கோள் வட்டம்.

வட்டம் என்பது:—கேடகம், வளைதடி, கைம்மணி, திரிகை, வாகு வலயம், நீர்ச்சால், பரிவேடம். (௭)

வண்டு.

992. குருநாளுங் குற்றமு மளியுங்கை வளையு
நூலு மம்புஞ் சங்கும் வண்டெனல்.

வண்டு என்பது:—பூச நாள், குற்றம், வண்டு, கைவளை, நூல், அம்பு, சங்கு. (௭)

வண்ணம்.

993. வனப்புஞ் சந்தமுங் குணமும் வண்ணம்.

வண்ணம் என்பது:—அழகு, சந்தம், குணம். (௩)

வண்மை.

994. வலிவளங் கொடை வாய்மை வண்மை.

வண்மை என்பது:—வலிமை, வளமை, ஈகை, உண்மை. (௪)

வதுவை.

995. வதுவைகலி யாணமு மணமு மாகும்.

வதுவை என்பது:—கலியாணம், வாசனை. (௨)

வம்பு.

996. மணமுநிலை யின்மையும் பாடும் புதுமையு
முலையின் கச்சும் படிறும் வம்பே.

வம்பு என்பது:—வாசனை, நிலையின்மை, புதுமை, முலைக்கச்சு, வஞ்சனை. (௫)

வயம்.

997. வலியு நீரும் புள்ளும் வயமெனல்.
வயம் என்பது:—வலிமை, நீர், பறவைப்பொது. (௩)

வயல்.

998. வெளியுஞ் செய்யும் வயலென் றாகும்.
வயல் என்பது:—வெளி, கழனி. (௨)

வயவன்.

999. திண்ணியோன் பெயரும் வேட்டோன் பெயரும்
வலியோன் பெயரும் வயவ னென்ப.
வயவன் என்பது:—வீரன், தலைவன், வலியன். (௩)

வயா.

1000. வருத்தமுங் கருவும் விருப்பமும் வயாவே.
வயா என்பது:—வருத்தம், கருப்பம், ஆசை. (௩)

வயிரம்.

1001. தணியா முனிவுங் கூர்மையு மணியும்
வச்சிரப் பெயருங் காழும் வயிரம்.
வயிரம் என்பது:—சினம், கூர்மை, நவமணியில் ஒன்று, வச்சிராயுதம், மா வயிரம். (௫)

வரி.

1002. இசையும் பாட்டு மெழுத்து மிறையு
நெல்லுங் கடலு நிறமுஞ் சுணங்குஞ்
சந்தித் தெருவுங் கடனும் வரியே.
வரி என்பது:—இசை, இசைப்பாட்டு, எழுத்து, குடியிறை, நெல், கடல், நிறம், தேமல், சந்தித்தெரு, கடன். (௧௦)

வருடம்.

1003. மழையு மாண்டும் வருட மாகும்.
வருடம் என்பது:—மழை, வருடம். (௨)

வருணம்.

1004. குலமு நீரு மழகும் வருணம்.
வருணம் என்பது:—குலம், நீர், அழகு. (௩)

வரை.

1005. அளவுங்கை யிறையு மலையு மூங்கிலும்
வரைவு மெழுத்தும் வரையென லாகும்.

வரை என்பது:—அளவு, விரலிறை, மலை, மூங்கில், வரைவு, எழுத்து. (௬)

வலம்புரி.

1006 நந்தியா வர்த்தமுஞ் சங்கும் வலம்புரி.

வலம்புரி என்பது:—நந்தியாவர்த்தம், வலம்புரிச்சங்கு. (௨)

வலவை.

1007 வஞ்சப் பெண்ணும் வல்லோனும் வலவை.

வலவை என்பது:—காளி ஏவற்பெண், வல்லவன். (௨)

வலி.

1008 வலியே யொலியும் வலியோனும் வஞ்சமும்.

வலி என்பது:—ஒலி, வலியோன், கபடம். (௩)

வலித்தல்.

1009. வலித்த லென்பது நிணத்தலும் பேசலும்.

வலித்தல் என்பது:—கொழுத்தல், பேசல். (௨)

வழங்கல்.

1010 வண்மையு முலாவுதலும் வழங்க லென்ப.

வழங்கல் என்பது:—ஈகை, உலாவல். (௨)

வழி.

1011 மரபு மொழுக்கமுந் திரட்சியு மகாரு
மிடமும் பின்னு முறைமையும் வழியே.

வழி என்பது:—பழமை, ஒழுக்கம், திரட்சி, மக்கள் பன்மை, இடம், பின், முறைமை. (எ)

வளம்.

1012 மாட்சிமையுங் கொழுப்புந் தகுதியும் வளமெனல்.

வளம் என்பது:—மாட்சிமை, கொழுப்பு, தகுதி. (௩)

வள்.

1013 வலிப்பற் றிரும்பும் வாளுங் காதும்
வலியுங் கூர்மையும் வள்ளென லாகும்.

வள் என்பது:—பற்றிரும்பு, வாள், காது, வலிமை, கூர்மை. (௫)

வறிது.

1014 சிறுமை பயனில்சொ லறியாமை வறிதே.

வறிது என்பது:—சிறுமை, பயனில்சொல், அறியாமை. (௩)

இதுவுமது.

1015. இனிமையிய லாமையும் வறிதெனல் லாகும்.

ஷ. வறிது என்பது:—குறைவு, இயலாமை. (உ) ஆ (இ)

வன்னி.

1016. ஒருமரப் பெயருங் கிளியு நெருப்பும்
பிரம சாரிப் பெயரும் வன்னி.

வன்னி என்பது:—வன்னி மரம், கிளி, நெருப்பு, பிரமசாரி. (ச)

வாசம்.

1017. வாசமிருப் பிடமு மலரின் மணமும்
புள்ளி னிறகும் புடைவையும் புகலும்.

வாசம் என்பது:—இருப்பிடம், பூ மணம், பறவையின் இறகு, சீலை. (ச)

வாசி.

1018. வங்கியங் குதிரை வாசி யென்ப.

வாசி என்பது:—இசைக்குழல், குதிரை. (உ)

வாடை.

1019. வடகாற்றுஞ் சேரியுமோர் மருந்தும் வாடை.

வாடை என்பது:—வடகாற்று, இடைச்சேரி, ஓர் மருந்து. (ங)

வாணி.

1020. பாரதிப் பெயரும் பகழிப் பெயரும்
வார்த்தையுமோர் கூத்தும் வாணி யாகும்.

வாணி என்பது:—சரச்சுவதி, அம்பு, சொல், ஓர் கூத்து. (ச)

வாமனம்.

1021. குறளுந் திசைநிலைக் குஞ்சரத் தொன்றும்
வருமொரு நூலு மாலும் வாமனம்.

வாமனம் என்பது:—குள்ளம், தென்திசை யானை, ஓர் புராணம், திருமால். (ச)

வாயில்.

1022. வாய்புலந் திறங்காரணந் துவாரமும் வாயில்.

வாயில் என்பது:—ஐம்பொறி, திறம், காரணம், துவாரம். (ச)

வாரணம்.

1023. யானையுங் கோழியுஞ் சங்கும் வாரணம்.

வாரணம் என்பது:—யானை, கோழி, சங்கு. (ங)

இதுவுமது.

1024. தடைகடன் மெய்புகு கருவியுஞ் சாற்றுவர்.

இஃது வாரணம் என்பது:—தடை, கடல், கவசம். (௩) ஆ௨ (௬)

வாரம்.

1025. ஆர்கலி கிழமைக் கூறுயா டன்பு
புனற்கரை மலையடி பகுதியும் வாரம்.

வாரம் என்பது:—கடல், ஏழு கிழமை, அன்பு, நீர்க்கரை, மலைச்சாரல், பங்கு. (௬)

வாரி.

1026 கடலும் வெள்ளமும் பகுதியும் விளைவுஞ்
சுற்றுங் கதவும் வருவாயு நீரும்
வட்டையு மதிலும் வாரி யாமே.

வாரி என்பது:—கடல், வெள்ளம், பகுதி, விளைவு, மதிற்சுற்று, கதவு, வருவாய், நீர், வழி, மதில். (௧௦)

வாருணம்.

1027. மறிகடற் பெயரு மேற்கும் வாருணம்.

வாருணம் என்பது:—கடல், மேற்கு. (௨)

வால்.

1028. வெண்ணிறம் பெருமைதூய் தோகையும் வாலே.

வால் என்பது:—வெண்மை, பெருமை, சுத்தம், தோகை. (௪)

வாள்.

1029. வசியு மொளியும் வாளென லாகும்.

வாள் என்பது:—வாளாயுதம், ஒளி. (௨)

வானம்

1030. வான மழையு மரத்தின் கனியு
மாகமு முலர்மரப் பெயரும் வரையார்.

வானம் என்பது:—மழை, மரக்கனி, ஆகாயம், உலர் மரம். (௪)

வானி.

1031. வானியோர் நதியும் வளர்துகிற் கொடியுஞ்
சேனையு மேற் கட்டியுஞ் செப்பல் வேண்டும்.

வானி என்பது:—ஆன்பொருந்நதி, துகிற்கொடி, படை, மேற்கட்டி. [ஆன்பொருந்நதி=ஞதநதி] (௪)

வான்.

1032. வானெனன் கிளவி வலியும் பெருமையு
மேகமுமா காயமும் பெருமழையு மிடைச்சொலு
மோர்மரமு மென்று ஓதுவர் புலவர்.

வான் என்பது:—வலி, பெருமை, மேகம், ஆகாயம், மழை, இடைச்சொல், ஓர் மரம். (எ)

விசும்பு.

1033. விண்ணுஞ் சுவர்க்கமு மேகமும் விசும்பே.

விசும்பு என்பது:—ஆகாயம், தேவ லோகம், மேகம். (௩)

இதுவுமது.

1034. திசையின் பெயருஞ் செப்புவ ரதற்கே.

ஷெ விசும்பு என்பது:—திசை. (க) ஆ (ச)

விசையம்.

1035. சருக்கரைப் பெயருந் தபனமண் டிலமும்
வெற்றிப் பெயரும் விசைய மாகும்.

விசையம் என்பது:—சருக்கரை, சூரிய மண்டிலம், வெற்றி. (௩)

விடங்கம்.

1036. வீதிக் கொடியும் வீட்டின் முகடு
மழகுங் கொடுங்கையு மாண்மையும் விடங்கம்.

விடங்கம் என்பது:—வீதிக்கொடி, முகடு, அழகு, கொடுங்கை, ஆண்மை. (ரு)

விடம்.

1037. மரப்பொதுப் பெயரு நஞ்சுந்தே ளும்விடம்.

விடம் என்பது:—மரப்பொது, நஞ்சு, தேள். (௩)

விடர்.

1038. கல்வளைப் பெயருங் கமரும் விடரே.

விடர் என்பது:—கற்புழை, நிலப்பிளப்பு. (உ)

விடலை.

1039. திண்ணி யோனுந் தலைவனும் பாலை
யிறைவனுங் காமத் துறைவனும் விடலை.

விடலை என்பது:—திண்ணியோன், பெருமையிற் சிறந்தோன், பாலைத்தலைவன், காமத்துறைவன். (ச)

விடை.

1040. ஏறு மெருது மெதிர்மொழி யும்விடை.
விடை என்பது:—இடப இராசி, இடபம், உத்தரம். (௩)

விண்டு.

1041. மாயவன் காற்று மலையே மூங்கின்
மேகமிவ் வைந்தும் விண்டுவென லாகும்.
விண்டு என்பது:—திருமால், காற்று, மலை, மூங்கில், மேகம். (௫)

விதப்பு.

1042. விபரமு நடுக்கமு மிகுதியும் விதப்பே.
விதப்பு என்பது:—விபரம், நடுக்கம், மிகுதி. (௩)

விதவை.

1043. சோறுங் கைம் பெண்ணும் விதவை யாகும்.
விதவை என்பது:—சோறு, கைம்பெண். (௨)

விதிர்ப்பு.

1044. மிகுதியு நடுக்கமும் விதிர்ப்பென விளம்புவர்.
விதிர்ப்பு என்பது:—மிகுதி, நடுக்கம். (௨)

விபுலம்.

1045. விரிவும் பெருமையும் விபுல மென்ப.
விபுலம் என்பது:—விரிவு, பெருமை. (௨)

விபூதி.

1046. நிரயத்தி லொன்று நீறுங் கொடுமையுந்
தசையுங் குற்றமுஞ் செல்வமும் விபூதி.
விபூதி என்பது:—ஓர் நரகம், திருநீறு, கொடுமை, தசை, குற்றம், செல்வம். (௬)

விம்மல்.

1047. பொருமலு மழுதலு மொலித்தலும் விம்மல்.
விம்மல் என்பது:—இரங்கல், அழுதல், ஒலித்தல். (௩)

வியப்பு.

1048. சினமுஞ் சினக்குறிப்பு மதிசயமும் வியப்பே.
வியப்பு என்பது:—சினம், சினக்குறிப்பு, அதிசயம். (௩)

### வியல்.

1049. அகலமும் பெருமையுங் காடும் வியலே. (௩)
வியல் என்பது:—அகலம், பெருமை, காடு.

### விலோதம்.

1050. மங்கையர் மயிர்சுருள் பதாகையும் விலோதம்.
விலோதம் என்பது:—பெண் மயிர், மயிர்ச்சுருள், துகிற்கொடி. (௩)

### வில்.

1051. மூல நாளொளி கோதண்டம் வில்லெனல். (௩)
வில் என்பது:—மூல நட்சத்திரம், ஒளி, வில்.

### விழவு.

1052. மிதுன விராசியு முற்சவமும் விழவே. (௨)
விழவு என்பது:—மிதுன இராசி, திருவிழா.

### விழைச்சு.

1053. இளமையுங் கலவியும் விழைச்சென லாகும். (௨)
விழைச்சு என்பது:—இளமை, புணர்ச்சி.

### விழைந்தோர்.

1054. வேட்டோருங் காதலோரும் விழைந்தோர். (௨)
விழைந்தோர் என்பது:—கணவர், விரும்பினோர்.

### விளர்.

1055. இளமையுங் கொழுப்பும் விளரென் றிசைக்கும். (௨)
விளர் என்பது:—இளமை, நிணம்.

### விள.

1056. விளாமர மிளமை கமரிவை விளவெனல். (௩)
விள என்பது:—விளா மரம், இளமை, கமர்.

### விறப்பு.

1057. அச்சமும் பலமுஞ் செறிவும் விறப்பெனல். (௩)
விறப்பு என்பது:—அச்சம், பலம், செறிவு.

### விறல்.

1058. வென்றியும் வலிமையும் விறலா கும்மே. (௨)
விறல் என்பது:—வென்றி, வலிமை.

வீ.

1059. பூவு மொழிவு நீக்கமு மடிவும்
புள்ளின் பெயருஞ் சாவும் வீயே.
வீ என்பது:—மலர், ஒழிவு, நீக்கம், கேடு, பறவை. (௫)

வீசல்.

1060. கொடுத்தலு மெறிதலும் வீச லென்ப.
வீசல் என்பது:—ஈதல், எறிதல். (௨)

வீதி.

1061. நேரோ டுதலுந் தெருவும் வீதி.
வீதி என்பது:—நேரோடல், தெரு. (௨)

வீரை.

1062. ஒருமரப் பெயரு முறுதுயர்ப் பெயரும்
விரிகடற் பெயரும் வீரை யாகும்.
வீரை என்பது:—ஓர் மரம், துன்பம், கடல். (௩)

வெடி.

1063. நறைபடு புகையு மச்சமு மன்றி
வெளியின் பெயரும் வெடியென் றாகும்.
வெடி என்பது:—நறும்புகை, அச்சம், வெளி. (௩)

வெதிர்.

1064. செவிடு மூங்கிலும் வெதிரென மொழிப.
வெதிர் என்பது:—செவிடு, மூங்கில். (௨)

வெளில்.

1065. யானைத் தறியு மணிலும் பாடையுந்
தயிர்கடை தறியும் வெளிலெனச் சாற்றும்.
வெளில் என்பது:—யானைத்தறி, அணில், பாடை, தயிர் கடை மத்து. (௪)

வெள்ளம்

1066 ஈரமுங் கடலுங் கடலின் றிரையு
நீரின் பெருக்குமோ ரெண்ணும் வெள்ளம்.
வெள்ளம் என்பது:—ஈரம், கடல், கடல் திரை, நீர்ப்பெருக்கு, ஓர் எண். (௫)

வெள்ளி.

1067. புகரு மிரசதமும் புகலும் வெள்ளி. (உ)
வெள்ளி என்பது:—சுக்கிரன், வெண் பொன்.

வெள்ளை.

1068. பலதேவனும்வெண் பாவும் வெளிறும்
வெள்ளைவெள் ளாட்டு மறியு மதுவுஞ்
சங்கும் வெள்ளை யென்றுஞ் சாற்றும்.
வெள்ளை என்பது:—பலபத்திரன், வெண்பா, அறிவின்மை, வெண்மை, வெள்ளாட்டு மறி, கள், சங்கு. (எ)

வெறி.

1069. அணங்காட்டும் வட்டமு மச்சமும் பேயு
மணக்கு நாற்றமு மாற்றருங் கலக்கமும்
விளம்பிய நோயும் யாடும் வெறியெனல்.
வெறி என்பது :—தேவர்க்கு ஆடும் கூத்து, வட்ட வடிவு, அச்சம், பிசாசம், வாசனை, கலக்கம், வியாதி, யாடு. (அ)

வெறுக்கை.

1070. செல்வமும் பொன்னும் வெறுக்கை யாகும். (உ)
வெறுக்கை என்பது:—செல்வம், பொன்.

வேங்கை.

1071. புலியுமோர் மரமும் பொன்னும் வேங்கை. (ங)
வேங்கை என்பது:—புலி, ஓர் மரம், பொன்.

வேசரி.

1072. கழுதையுங் கோவேறு கழுதையும் வேசரி. (உ)
வேசரி என்பது:—கழுதை, கோவேறு கழுதை.

வேட்டுவன்.

1073. மகமோர் குளவி மறவனும் வேட்டுவன். (ங)
வேட்டுவன் என்பது:—மக நட்சத்திரம், ஓர் குளவி, வேடன்.

வேணி.

1074. வேணி சடையு நதியும் விசும்புமாம். (ங)
வேணி என்பது:—சடை, நதி, ஆகாயம்.

வேணு.

1075. உட்டொளைப் பொருளு மூங்கிலும் வேணு. (உ)
வேணு என்பது:—உட்டொளை, மூங்கில்.

வேதிகை.

1076. பலகையுங் குறடுந் திண்ணையும் வேதிகை.
வேதிகை என்பது:—கேடகம், குறடு, திண்ணை. (௩)

வேய்.

1077. ஒற்று மூங்கி லுட்டொளையும் வேயே.
வேய் என்பது:—ஒற்று, மூங்கில், உட்டொளைப்பொருள். (௩)

வேய்தல்.

1078. வேயுளுஞ் சூடுதலும் வேய்த லென்ப.
வேய்தல் என்பது:—வீடு, சூடுதல். (௨)

வேலன்.

1079. வெறியாட் டாளனுங் குமரனும் வேலன்.
வேலன் என்பது:—வெறியாட்டாளன், குமரன். (௨)

வேலி.

1080. ஊரு மரணுங் காவலு நிலமு
மேவிய வயலும் வேலி யாகும்.
வேலி என்பது:—ஊர், மதில், காவல், நிலம், வயல். (௫)

வேலை.

1081. கடலுங் கடலின் கரையும் பொழுதும்
வினையுங் காலையும் வேலையென் றுரும்.
வேலை என்பது:—கடல், கடற்கரை, பொழுது, தொழில், காலம். (௫)

வேல்.

1082. படைக்கலமு ஞாங்கரு மோர்மரமும் வேலே.
வேல் என்பது:—ஆயுதப்பொது, வேலாயுதம், ஓர் மரம். (௩)

வேழம்.

1083. குஞ்சர மூங்கொறுக் கைச்சிப் பெயரு
மிசையுங் கரும்பு மூங்கிலும் வேழம்.
வேழம் என்பது:—யானை, கொறுக்கை, இசை, கரும்பு, மூங்கில். (௫)

வேளாண்மை.

1084. மெய்ம்மையுங் கொடையும் வேளாண்மை யாகும்.
வேளாண்மை என்பது:—உண்மை, கொடுத்தல். (௨)

வேளாளர்.

1085. சதுர்த்தருங் கொடைவள் ளலும்வே ளாளர்.
வேளாளர் என்பது:—சூத்திரர், கொடையாளர். (௨)

வேள்.

1086. தார காரியுஞ் சளுக்கியர் வேந்தனும்
வேனி லாளனும் வேளென லாகும்.

வேள் என்பது:—குமரன், சளுவன், மன்மதன். (ங)

வேள்வி.

1087. அருச்சனை யளித்த லாதி யெழுஞ்சனி
வேள்வியுங் குண்டமும் யாகமும் வேள்வி.

வேள்வி என்பது:—பூசனை, கொடுத்தல், மக நட்சத்திரம், ஓம குண்டம், யாகம். (ரு)

வேனில்.

1088. பொலிவுங் கொடையுமோ ரழகுமொப் பனையும்
பேயின் றேரும் வேனி லாகும்.

வேனில் என்பது:—பொலிவு, கொடை, அழகு, ஒப்பனை, பேய்த் தேர். (ரு)

வை.

1089. வைக்கோலுங் கூர்மையும் பகுதியும் வையெனல்.

வை என்பது:—வைக்கோல், கூர்மை, பகுதி. (ங)

வைகல்.

1090. தினமுந் தங்கலுந் தெரியின் வைகல்

வைகல் என்பது:—நாள், தங்கல். (உ)

வையம்.

1091. உரோகிணி நாளும் பாருந் தேரு
மேறு மூர்தியும் வைய மெனப்படும்.

வையம் என்பது:—உரோகிணி நாள், பூமி, தேர், எருது, வாகனம். (ரு)

பத்தாவது
ஒருசொற் பல்பொருள்வகை முற்றிற்று.

---

[ஆகச் சூத்திரம் 4121.]

பிங்கலந்தை என்னும்
**பிங்கல நிகண்டு முற்றிற்று.**

---

உ

சிவமயம்.

## பிங்கல நிகண்டின்

# பெயரகராதி.

## இ

பிங்கலநிகண்டின் பெயரகராதி முற்றிற்று.

---